உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருமயிலைத்தலபுராணம்.

இவை

ஸ்ரீகைலாயபரம்பரைத்திருவண்ணாமலை ஆதீனம்

ஸ்ரீ அமுர்தலிங்கத்தம்பிரான் சுவாமிகளியற்றிய

மூலமும்,

உரையாசிரியர், மகாவித்வான்-காஞ்சீபுரம்

சபாபதிமுதலியாரவர்களாலியற்றிய

பொழிப்புரையும்,

ஷையார் மாணாக்கர், புரசை-அஷ்டாவதானம்-

சபாபதிமுதலியாரவர்களால் பார்வையிட்டு,

பையூர்க்கோட்டம்

பெ - சுந்தரமுதலியாரவர்கள் குமாரர்

இராமசாமிமுதலியாரவர்களால்

சென்னை

பால்குரிகி - சிவலிங்கையரவர்களது

ஸ்ரீகலாநிதி அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன.

கலியுகாதி௵ சகூகூரு - க்கு

நந்தன௵ மீனரவி.

## விளம்பரம்.

---

திருமயிலைத்தலப்புராணம் வேண்டியர்கள், சென்னை தங்கசாலைவீதியில் 324 - வது நெம்பருடைய விக்டோரியாஜூபிலி அச்சுக்கூடத்தலைவர் ம-ா-ா-ஸ்ரீ திருமயிலை - **வி.** சுந்தரமுதலியாரவர்களிடத்திலும், சென்னை கோமளீச்சுரன்பேட்டை நாகப்பமுதலியார் தெருவில் 28 - வது நெம்பருடைய வீட்டிலும் விலை ரூபா - க - ச - ο-கொடுத்துப் பெற்றுக்கொள்ளலாம்.

இப்படிக்கு,

பெ. இராமசாமிமுதலியார்.

# புராண அட்டவணை.

# படத்தின் அட்டவணை.



திருமயிலைத்தலவிநாயகர், கூத்தாடும்விநாயகர்.

உ

கணபதி துணை.

# திருமயிலைப் புராணம்.

## பாயிரச்சருக்கம்.

காப்பு.

கஞ்சரானனத்தவர் கதிர்பொங்காழிகால்
நஞ்சரானனத்தவர் நாளும்வாழ்த்துறுங்
குஞ்சரானனப்பெருங் கோவின்பொற்சரண்
வஞ்சரானனற்கவி வழாதுவாழ்த்துவாம்.

(இதன் பொருள்.) கஞ்சர்—பிரமதேவனும், ஆன—அவர்க்கு மேலாகிய, நத்தவர்—பாஞ்சசன்னியமென்னுஞ் சங்கினையேந்திய விஷ்ணுவும், கதிர்பொங்கு—பிரகாசமிக்க, ஆழி—பாற்கடலானது, கால்—கக்கிய, நஞ்சர்—விஷத்தையுண்ட பரமசிவத்திற்கு, ஆன—ஒப்பாகிய, நத்தவர்—மேலான தவத்தையுடைய அகத்தியமுனிவர் முதலாகிய மகாரிஷிகளும், நாளும்—நாள்தோறும், வாழ்த்திடும்—தோத்திரஞ்செய்யும், குஞ்சர் ஆனனம்—யானை முகத்தினையுடைய, பெருங்கோவின்—பெரிய கடவுளாகிய விநாயகரது, பொன்—பொலிவாகிய, சரண்—திருவடிகளை, வஞ்சரால்—அழுக்காறுள்ளவர்களாலும், நம்—எம்முடைய, நற்கவி—நல்லபாடல்கள், வழாது—குற்றங்களைப் பொருந்தாதவண்ணம் கிருபை பாலித்தருளவேண்டுமென்று, வாழ்த்துவாம்—வாழ்த்துதல் செய்வாம் என்றவாறு.

## கபாலீசர் துதி.

பொன்பூத்த கமலமலர்ப் புத்தேளும் பூவைவண்ணப் புனிதனாதி தென்பூத்த கடவுளருஞ் சதுர்மறையும் பரவவருட் டிமிலேற்றண்ணல், கொன்பூத்த மயிலைநகர்ப் பூம்பாவை யீசனெனுங் குழகன்ஞான, மின்பூத்த திருவடித்தா மரையையன்பின் வணங்கியென்றும் வியந்துவாழ்வாம்.

(இ - ள்.) பொன்னிறமுள்ளதாகிய செந்தாமரைமலரின்கண் வீற்றிருக்கும் பிரமதேவனும், காயாம்பூவினிறமுள்ள மாயவன் முதலாகிய அழகுபொருந்திய பலதேவர்களும் நான்கு வேதங்களுந் துதிசெய்ய அருள்மயமாகிய முசிப்புள்ள ரிஷபவாகனத்தையுடைய பெருமைபொருந்திய திருமயிலையில் வீற்றிருந்தருளும் பூம்பாவையீசனென்கிற கபாலிநாதருடைய அருளொளி தயங்கிய திருவடித் தாமரைமலர்களை யன்புடனே நாள்தோறும் பணிந்து துதிசெய்து மோக்ஷசாம்பிராச்சியத்தை அடைந்து வாழ்ந்துகொண்டிருப்பாம். எ - று.

## கற்பகவல்லித்தாயார் துதி.

கொங்குலா மலர்க்குழலும் பிறைநுதலுங் கயல்விழியுங் குமுதவாயுஞ், சங்கமா மணிமிடறுங் கழைப்புயமு மலர்க்கரமுந் தரளமாலைத், துங்கமா கிரிமுலையுங் கொடியிடையும் பதுமவடித் துணையுமுள்ள, வெங்கணு யகியையெழின் மயிலையிற்கற் பகக்கொடியையிறைஞ்சிவாழ்வாம்.

(இ - ள்.) இயல்பான வாசனைதங்கிய அளகபாரமும், இளந்திங்களையொத்த திருநுதலும், சேல்மீனையொத்த கிருபாநோக்கமும், செவ்வல்லிமலரையொத்த திருவாயும், வலம்புரிச் சங்கினை யொத்ததாகி அழகுபொருந்திய கண்டமும், பசுமையாகிய இளமூங்கிலையொத்த புயமும், செந்தாமரை மலர்களையொத்த கரங்களும், மலர்களையுடைய மாலையணிந்து பரிசுத்தமுள்ள பொன்மலையாகிய மகமேருவையொத்த ஸ்தனங்களும், பூங்கொடிபோன்ற இடையும், செந்தாமரைமலரையொத்த இரண்டு திருவடிகளுமுள்ள எங்கள் நாயகியாகிய அழகுபொருந்திய திருமயிலையில் வீற்றிராநின்ற கற்பகவல்லித்தாயாரை வணங்கி வாழ்வோம். எ - று.

ஈண்டுக் கொங்குலாமலர்க்குழல் என்பதற்கு, இயல்பான வாசனைதங்கிய அளகபாரமென்றதனல் திருமகள் முதலிய தேவமாதர்களுடைய அளகபாரங்கள், செயற்கைவாசனையுள்ளதென்பது கருத்தாம். பார்வதிதேவியார்

நோக்கத்தைச் சேற்கெண்டைக்கு ஒப்பிடுவதற்குக் காரணம் யாதெனில், சேல்மீன் நீரினிடத்து முட்டையிட்டுக்கொண்டுபோய்க் கடைசியில் திரும்பிப்பார்க்குமளவில் அப்பார்வை தங்கினமாத்திரத்தில் அந்த முட்டைகளெல்லாம் உயிர்பெற்றுத் தாயினுருவம் அடைதல்போலப் பார்வதிதேவியாருடைய கிருபா நோக்கம், அடியார்களிடத்தில் பதியுமாகில் ஞானசொரூபம் பெற்றுச் சிவமாவார்கள். மீனாட்சி என்பதற்கும் இதுவே பொருளாமாறுகாண்க.

## கூத்தாடும் விநாயகர் துதி.

நல்வளஞ்சே ரருட்புலவ ரிருசெவிகட் கமிர்தெனவெந் நாளுமோங்கச், சொல்வளமும் பொருள்வளமு மளித்திந்நூற் கிடையூறு தொலைத்தாளென்றே, பல்வளமும் பெரும்புகழும் படைத்திலகு மயிலைநகர் பதியாய்வாழும், வெல்வளஞ்சேர் கூத்தாடு மைங்கரக்குஞ் சரத்திருதாள் வியந்துவாழ்வாம்.

(இ - ள்.) நன்மைபொருந்திய கல்விச்செல்வ வளமுடையவர்களாய்க் கடவுளருள்பெற்று விளங்கும் வித்துவான்களுடைய இரண்டு செவிகளுக்கும் அருமையாகிய அமுதம்போல் எந்நாளும் இப்புராணம் விருத்தியாகும்படி சொல்வளமும் பொருள்வளமும் அருளிச்செய்து இந்நூலுக்கு இடையூறு வராமல் நீக்கி ஆட்கொண்டருள்வாயாகவென்று பல வளங்களும் அளவிடப்படாத புகழும்பெற்று விளங்காநின்ற திருமயிலை யென்னும் ஸ்தலமே தமக்கு வாசஸ்தலமாக வாழ்ந்துகொண்டிருக்கும் கஜமுகாசுரனை வென்றவெற்றியாகிய வளப்பமும் ஐந்து கரங்களும் யானைமுகமுமுள்ள கூத்தாடும் விநாயகருடைய இரண்டு திருவடிகளையும் தரிசித்து ஆனந்தமடைந்துவாழ்வாம். எ - று.

முதலில் விநாயகர் துதி சொல்லி மறுபடியும் விநாயகர் துதி சொல்லியதற்குக் காரணம் என்னவெனில், விநாயகர் திருவவதாரஞ் செய்தபோது பரமசிவம் மகிழ்ந்தருளி அவருக்குக் கணங்களுக்கெல்லாம் பதியாயிருக்கும் முதன்மைத்தன்மை கற்பித்தருளி, இனித் தேவர்முதலானவர்கள் யாதொருகாரியஞ்செய்யத் தொடங்கினும் உன்னைப்பிரார்த்திக்காவிடில் அந்தக் காரியம் இடையூறுபட்டுப்போவதென்று கட்டளையிட்டிருக்கு முறைமைப்படி, முதலில் இந்நூலாசிரியர் கணபதி துதிகூறி, தந்தை, தாய், மைந்தர்கள் பரமசிவம், பார்வதியார், விநாயகர், சுப்பிரமணியர் ஆகிய தந்தை, தாய் மைந்தர்கள் என்னுங் கிரமத்தினாலும், அன்றியும் கூத்தாடும் விநாயகர், ஸ்தலத்துக்குரியவராதலாலும் இவர்கள் துதிகூறவேண்டுதல்பற்றி மீட்டும் விநாயகர் துதி கூறினர் என்றறிக.

## சிங்காரவேலர் துதி.

நீர்பூத்த சடாமகுடத் தெம்மானீன் றளித்தவொரு நேயன்றன்னைச், சீர்பூத்த குருமணிமா மகுடமணிந் திதண்மணிப்பாற் சென்றதேவை, வார்பூத்த முலையுமையா டிருமுலைப்பால் பருகியவாய் மணியைஞான, வீர்பூத்த சிங்கார வேலனெனுங் கண்மணியை யிறைஞ்சிவாழ்வாம்.

(இ - ள்.) கங்காநதி பொருந்திய சடாமகுடத்தையுடைய பரமசிவம் ஈன்றருளிய ஒப்பற்ற நேசமுள்ளவரும், சிறப்புப்பொருந்திய நிறந்தங்கிய பெரிய இரத்தினங்கள் பதித்துள்ள கிரீடமணிந்து தினைப்புனத்துப் பரண்மேற் கிளிகள் முதலிய பறவைகளை யோட்டிக்கொண்டிருந்த மணிபோன்ற வள்ளிநாச்சியாரை விவாகஞ்செய்துகொள்ள விருப்பமடைந்து சென்றவரும் கச்சணிந்தஸ்தனங்களையுடைய பார்வதிதேவியாருடைய திருமுலைப் பாலமிர்தமுண்ட வாயினையுடைய மணிபோன்றவரும், ஞானசொரூபியுமாகிய அழகுபொருந்திய சிங்காரவேலனென்று சொல்லப்பட்ட எங்கள் கண் மணிபோன்ற சுப்பிரமணியசுவாமியை வணங்கி வாழ்வாம். எ - று.

## திருஞானசம்பந்தசுவாமிகள் துதி.

வீழியிதழ் மடந்தைதன்மெய் யத்தியைப்பெண் ணரசாக்கும் வேந்தைவாவு, மாழிபுடை சூழ்மதுரை யமணிருள்கீண் டெழுந்தசுடரவனையவ்வூர், வாழிறைவன் வெப்பகல வருளமுதம் பொழிந்தவியன்மழையைஞானக், காழிநகர் மறையோனைக் கவுணியர்தங் குலக்கொழுந்தைக் கருதிவாழ்வாம்.

(இ - ள்.) வீழிக்கனிபோன்ற அதரத்தையுடைய ஒரு பெண்ணின் சரீரத்தெலும்பை முன்போலப் பெண்ணுருவமாகச்செய்த இறைவரும் அலைகள் தாவிவரும்படியான சமுத்திரஞ்சூழ்ந்த மதுரையிலிருந்த சமணர்களாகிய இருளைக்கிழித்து உதயமாகிய ஞானசூரியரும், அந்த மதுரைப்பட்டணத்தில் அரசு செய்துகொண்டிருந்த கூன்பாண்டிய ராஜனுக்குச் சம்பவித்த சுரநோய் தீரும்படி அருளமிர்தமாகிய மழையைப்பொழிந்த பெரியமேகம் போன்றவரும், மெய்ஞ்ஞானிகள் நிறைந்துள்ள சீர்காழியென்னும் ஸ்தலத்தில் திருவவதாரஞ்செய்த பிராமண புத்திரரும், கவுணியர் குலக்கொழுந்தாயிருப்பவருமாகிய திருஞானசம்பந்த சுவாமிகளைத் தியானித்து வாழ்வாம். எ - று.

திருமயிலையிலிருந்த சிவநேச செட்டியார் புத்திரி விஷதிருஷ்டியினுல் இறந்துபோக, அந்த உடலைத் தகனஞ்செய்து எலும்பையும், சாம்பலையும் ஒரு தோண்டியில் அடக்கஞ் செய்துவைத்திருந்து, திருஞானசம்பந்தசுவாமிகள் அங்கெழுந்தருளினபோது செட்டியார் தனக்குச் சம்பவித்த காரியத்தை விண்ணப்பஞ்செய்துகொண்டு அந்தத்தோண்டியைத் திருஞானசம்பந்தசுவாமிகள் கட்டளையின்படி எதிரில் கொண்டுவந்து வைக்க, கபாலீசரைத் தியானஞ்செய்து,

"மட்டிட்ட புன்னையங் கானன் மடமயிலைக்
கட்டிட்டங் கொண்டான் கபாலீச்சரமமர்ந்தா
ஞெட்டிட்ட பண்பி னுருத்திரபல்கணத்தார்க்
கட்டிட்டல் காணுதே போதியோ பூம்பாவாய்."

என்னும், இந்தப்பதிகத்தையோதி எலும்பு பெண்ணுருவாகும்படி யருள்செய்தனர். அங்கமென்பது - எலும்பு. அந்த எலும்பானது, மலர்மகளாகிய திருமகளது உருவம்போல் திருவுரு வமைந்தபடியால், அப்பெண்ணிற்கு அங்கம்பூம்பாவையெனப் பெயர் உண்டாயிற்று. திருஞானசம்பந்தசுவாமிகள் திருக்கூட்டத்துடன் மதுரைக்கெழுந்தருளி ஒரு மடத்தில் வீற்றிருக்கும்போது, சமணர்கள் பொருமையால் அம்மடத்தைக் கொளுத்திவிட்டதுகண்டு திருக்கூட்டத்தார் சுவாமிக்கு விண்ணப்பஞ்செய்ய, இத்தகாத காரியம் அரசனுடைய குற்றமென்று திருவுளத்திற்கொண்டு அந்தத் தீ அவியும்படி,

"செய்யனேதிரு வாலவாய்மேவிய
வையனேயஞ்ச லென்றருள்செய்யெனைப்
பொய்யராமம ணர்கொளுவுஞ்சுடர்
பையவேசென்று பாண்டியற்காகவே."

என்னும் பதிகம் ஓதியருள, அந்தத்தீயானது போய்ப்பாண்டியராஜன் சரீரத்தில் சுரநோயாய்ச் சம்பவித்தது. அவருடைய பத்தினியாராகிய மங்கையர்க்கரசியார் கருதி, மந்திரியாராகிய குலச்சிறைநாயனுர் வந்து நடந்தகாரியங்களை விண்ணப்பஞ்செய்ய, அங்கெழுந்தருளி,

"மந்திரமாவது நீறு வானவர்மேலது நீறு
தந்திரமாவது நீறு சமயத்திலுள்ளது நீறு
சுந்தரமாவது நீறு துதிக்கப்படுவது நீறு
செந்துவர்வாயுமைபங்கன் திருவாலவாயான் திருநீறே."

என்னுந் திருநீற்றுப் பதிகம் ஓதி அரசன் சரீரத்தின்மேல் விபூதியணிந்து அந்தச் சுரநோயுடன், அரசனுடைய கூனும் நிமிரும்படி அனுக்கிரகஞ் செய்தனர். இதை விரித்தெழுதப்புகின் பெருகுமாதலால் சுருக்கமாகக் கூறப்பட்டது.

## திருநாவுக்கரசுசுவாமிகள் துதி.

இற்றூணின் மரகதத்தி னொளிபகலு மிருள்காட்ட வெழுந்துகாமன், விற்றூணி மலரெடுத்து விளையாடுந் திருவாமூர் விளங்கவந்தோன், கற்றூணைப் பிடித்துவளை கடல்கடந்தோ னிருடாத கமலமென்னும், பொற்றூணைப் பிடித்துநமக் கிடராழி கடந்துமுத்தி புகுதலாமே.

(இ-ள்.) வீடுகளிற் பொருந்திய தூண்களிற் பதிக்கப்பட்டிருக்கும் மரகதரத்தினங்களின் பிரகாசமானது பகற்காலத்திலும் இருளைக்காட்டுதலால், மன்மதன் எழுந்து கருப்புவில்லும், அம்பறுத்தூணியும், புட்பபாணங்களும் எடுத்துக்கொண்டு அங்கிருக்கும் வீடுகள்தோறும் ரதியுடன் உல்லாசமாய் விளையாடும்படியான திருவாமூர் என்னுந் திவ்வியக்ஷேத்திரமானது உலகமெங்கும் பிரகாசிக்கும்படி அதில் திருவவதாரஞ்செய்தவரும், கற்றூண் தெப்பமாய் மிதப்ப அதைப்பற்றிக்கொண்டு சமுத்திரத்தைக் கடந்தவருமாகிய திருநாவுக்கரசு சுவாமிகளுடைய அழகிய பொன்னிறம் வாய்ந்த இரண்டு திருவடித் தாமரைமலர்களாகிய அழகுள்ள தூண்களைப் பற்றிக்கொண்டு நம்முடைய பிறவித்துன்பமாகிய சமுத்திரத்தைக் கடந்து மோக்ஷமென்கிற கரையைச் சேர்வாம் எ-று.

துணை—தூணையென்பது நீட்டல் விகாரம்.

திருநாவுக்கரசு சுவாமிகள் சமண சமயத்தைச் சார்ந்திருந்து மறுபடி சைவ சமயத்தில் வந்துவிட, அச்சமணர்கள் மனம்பொறுல் அவரை நீற்றறையிலிட்டும், விடமுண்ணச் செய்தும், மிதிக்கும்படி யானையையேவியும் சுவாமிகளுக்கு ஒரு பழுதும் நேரிடாமையால், கற்றூணிற்கட்டிப் படகிலேற்றிக்கொண்டுபோய் நடுச்சமுத்திரத்திற் போட்டுவிட்டார்கள். அப்போது திருநாவுக்கரசுசுவாமிகள் பரமசிவத்தைத் தியானஞ்செய்து,

"சொற்றுணைவேதியன் சோதிவானவன்
பொற்றுணைதிருந்தடி பொருந்தக்கைதொழக்
கற்றுணைபூட்டியோர் கடலிற்பாய்ச்சினு
நற்றுணையாவது நமச்சிவாயவே."

என்னும் பஞ்சாக்ஷரப் பதிகம் ஓதி, திருப்பாதிரிப்புலியூருக்குச் சமீபத்திலிருக்குங் கெடிலநதியின் முகத்துவாரத்திற் கரையேறினர்.

## சுந்தரமூர்த்திசுவாமிகள் துதி.

அறைகழலா ரூரர்தமை மணிமறுகிற் றூதுவிடுத் தருளினானை நிறைவழுவாப் பரவைபடிந் துயர்ந்தமுலைக் கிரிசார்ந்து நிலமேலோங்க, முறைதவறுத் திருப்பதிக மாரிபொழிந்திடும்புயலை முதியஞான மறையவனை யெமையாளுஞ் செந்தமிழ்ச்சுந் தரனையாம் வணக்கஞ் செய்வாம்.

(இ-ள்.) ஒலிக்காநின்ற வீரகண்டையணிந்த திருவடிகளையுடைய திருவாரூர் வீதிவிடங்கப்பெருமானை இரத்தினங்கள் நிறைந்துள்ள திருவீதியில் நடந்தருளும்படி பரவைநாச்சியாரிடத்துக்குத்தூதுபோக அனுப்பினவரும், நிறைகுறையாத பரவையிடத்துப்படிந்து உயர்ந்த தனமாகிய மலையில் சார்ந்து பூமியில்உள்ளார் உயர்வையடையும்படி முறைமைதவறுத தேவாரப் பதிகமாகிய மழைபொழிந்தருளும் மேகம்போன்றவரும், மெய்ஞ்ஞானம் நிறைந்த ஆதிசைவப் பிராமணருமாகிய எமை அடிமையாகக்கொண்டருளும் செந்தமிழுணர்ந்த சுந்தரமூர்த்திசுவாமிகளை வணக்கஞ்செய்வாம். ()

திருநாவலூர் என்னும் க்ஷேத்திரத்தில் ஆதிசைவப்பிராமணர்களில் ஒருவராகிய சடையநாயனருக்குத் திருமைந்தராய் அவதரித்துத், தமக்குத் திருமணம் நடக்குங்காலத்திற் கைலாசபதியானவர் ஒரு முதிய பிராமணராய் எழுந்தருளி அந்த மணத்தை விலக்கித்தடுத்து ஆட்கொண்டு வன்றொண்டனென்னுந் திருநாமங்கொடுத்துக் கற்பித்தருளியபடி திருவாரூருக்கு எழுந்தருளிப் பரவைநாச்சியாரை மணம்புரிந்திருந்தார்.

சிவபெருமான் சுந்தரமே இவரது திருவுருவாதலால் சுந்தரமுதல் என்றார்.

## மாணிக்கவாசகசுவாமிகள் துதி.

மாதுபா கனுக்குமெய் வாசகத்தமி
ழோதியே மூகையை யோதுவித்தருள்
சீதவார் பொழிறிகழ் சேண்டொடுந்திரு
வாதவூரடிகளை வணக்கஞ் செய்குவாம்.

(இ-ள்.) பார்வதிதேவியாரை இடப்பாகத்திலுடைய பரமசிவத்துக்குத்தோத்திரமாக உண்மைப்பொருள் நிறைந்த திருவாசகமென்னுந் தமிழ் வேதத்தைப் பாடித் துதித்து ஊமைப்பெண்ணைப்பேசும்படி செய்தருளிய குளிர்ச்சிபொருந்தியதாய் உயர்ந்து விளங்காநின்ற ஆகாயத்தையளாவும்படியான சோலைகள் சூழ்ந்த திருவாதவூரென்னும் க்ஷேத்திரத்தில் திருவவதாரஞ்செய்தருளிய மாணிக்கவாசகசுவாமிகளை வணங்குவாம். எ-று.

## நந்திதேவர் துதி.

வடகயிலைத் திருவாயிற் காவலனைச் சிலாதரன்றன் மகவைத்துத்திப், படவரவை யரைக்கசைத்த பரமனைச்செஞ் சடையின்மதி பதித்தகோவைத், தடவரைக்கைச் சிலையெம்மான் திருமுன்னர் நெருங்குமலர்த் தவிசோனாதிக், கடவுளர்மேற் படும்பிரம்பொன் றுடையதிரு நந்திதனைக் கருத்துள்வைப்பாம்.

(இ-ள்.) கயிலாசகிரியில் பரமசிவம் திருவோலக்கமாக எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலின் சிறப்புள்ள முதற்கோபுரவாயிற் காவலாயிருப்பவரும், சிலாதரமுனிவருடைய திருமைந்தரும்,பொறிகள்பொருந்திய சர்ப்பத்தை அரையினிடத்துக் கச்சாக அணிந்திருப்பவரும், செம்மைநிறமுள்ள சடாமகுடத்தில் இளந்திங்களையணிந்த இறைவரும், பெரிய மகமேருவை வில்லாக வளைத்தேந்திய திருக்கரத்தையுடைய எமது பெருமானுருமாகிய கயிலாசபதியின் அழியாச்செல்வமுள்ள சந்நிதானத்தில் தரிசனஞ்செய்ய வந்து நிறைந்திருக்கும் தாமரைப்புஷ்பமாகிய ஆசனத்தையுடைய பிரமதேவன் முதலான தேவர்கள் முடியின்மேற் படத்தக்க ஒரு வெள்ளிப் பிரம்பைக் கையிலேந்தியவருமான திருநந்திதேவரை நமது கருத்துள் வைத்துத் தியானஞ் செய்வாம். எ-று.

தென்கயிலையென்று ஒருதலமிருப்பதினால், வடகயிலையென்றார். நந்திதேவர் திருவையாறென்னுந்தலத்திலிருந்த சிலாதரமுனிவருடைய தவத்தினால் அவருக்குப் புத்திரராகத் திருவவதாரஞ்செய்து, பரமசிவத்தை நோக்கித் தவஞ்செய்து முதற்கோபுரவாயிற் காவற்றொழிலும், வெள்ளிப்பிரம்பும், சுரிகையும் பரமசிவம் பிரசாதித்தருளப் பெற்றுக்கொண்டதுமன்றிச் சாரூப்பியமும் பெற்றுக்கொண்டனர்.

வேறு.

## பைரவமூர்த்தி துதி.

செயிரவச்சூழ்ச்சிசெய் சீயச்சோரியை
யயிரவத்தனின்வர மருளுமையனைக்
கயிரவப்பழனஞ்சூழ் காழிமாநகர்
வயிரவக்கடவுளை வணக்கஞ்செய்குவாம்.

(இ-ள்.) குற்றம்பொருந்திய பயனில்லாததாகிய உபாயத்தைச்செய்த நரசிம்மத்தினுடைய உதிரத்தை யுண்ணும்படி பரமசிவம் இனிதாகிய வரமருளப் பெற்றுக்கொண்ட கடவுளாகிய செவ்வல்லிகள் மலர்ந்திராநின்ற

கழனிகள்சூழ்ந்த பெருமைதங்கிய சீகாழியென்னுந் தலத்தில் வீற்றிருந்தருளும் பைரவமூர்த்தியை யாம் வணங்குதல்செய்வாம். எ - று.

இரணியனைக்கொல்ல நேராகநின்று யுத்தஞ்செய்து கொல்லாமல் சடிதியில் ஒருதூணினின்றும்புறப்பட்டுக்கொன்றமையால் செயிரவச்சூட்சிசெய்சீயமெனவும் பரமசிவம் பைரவனை உண்டாக்கி நரசிங்கத்தை அடக்கும்படி வரமருளப்பெற்றுக்கொண்டு, அந்தநரசிங்கத்தைக் கொன்றமையால், அத்தனின் வரமருளுமையனை யெனவுங்கூறினர். அந்தப்பைரவமூர்த்திசீகாழியென்னுஞ்க்ஷேத்திரத்தில் திருக்கோயில்கொண்டுவீற்றிருந்தருளுகின்றார். அவர் அந்தநரசிம்மத்தை மர்த்தனஞ்செய்து அதன்தோலினைச்சட்டையாகப் போர்த்துக்கொண்டமையால் அவருக்குச்சட்டநாதரென்றும், ஒருபெயர்வழங்குகின்றது.

## சரசுவதி துதி

நிலமுதற்படைத்தவனேயநாவினின்
றிலகுதன்றுணைவியாமெழில்கொள்பாரதி
யுலவும்வெண்கமலமேலுறையும்வாணிதன்
மலரடிமுடிமிசைவணக்கஞ்செய்குவாம்.

(இ - ள்) ஆதியில் பூலோகத்தைப்படைத்தருளிய பிரமதேவனுடைய மனைவியும் அவன்நாவிலிருப்பவளும், அழகுள்ளபாரதி என்றும், நீரினிடத்து அசைந்துகொண்டிருக்கத்தக்க வெண்டாமரைப்பூவினிடத்து வாசமாயிருக்கும், வாணி என்றும் பேருள்ள சரஸ்வதியினுடையதிருவடிகளை வணங்குதல்செய்வாம். எ - று.

## காரைக்காலம்மையார் கண்ணப்பநாயனார் மங்கையர்க்கரசியார் மற்றுமுள்ள திருத்தொண்டர்கள் துதி.

சங்கரற்கன்பாய்ப்பாடல்சமைத்தபேயம்மைதாளும்
அங்கரற்கம்பாற்கண்ணையகழ்ந்தப்பினேன்பொற்றாளு
மங்கையர்க்கரசிபாதவனசமுமற்றுமுள்ள
துங்கமெய்த்தொண்டர்பாதத்துகளுநந்தலைமேற்கொள்வாம்.

(இ-ள்) பரமசிவனிடத்தில்அன்புடையவராய், அற்புதத்திருவந்தாதி, திருவிரட்டை., மணிமாலை, என்னும்பிரபந்தமோதித்துதித்துபேயுருவம்பெற்ற காரைக்காலம்மையாருடைய திருவடித்தாமரைமலர்களையும்,திருக்காளத்திநாதருக்கு அம்பினாலேதங்கண்ணைப்பெயர்த்து அப்பியகண்ணப்பசுவாமிக

ளுடைய பொலிவுள்ளதிருவடிகளையும், மங்கையர்க்கரசியாரென்னும் பாண்டிமாதேவியினுடைய திருவடித்தாமரைமலர்களையும், மற்றுமுள்ளபரிசுத்தர்களாகிய திருத்தொண்டர்களுடைய பாததூளிகளையும், எம்முடையசிரசில் தரித்துக்கொள்வாம், எ - று.

காரைக்காலம்மையார்மிகுந்தசிவநேசமுள்ளவராய்க்கணவருடன்வாழ்ந்துகொண்டிருக்கும்போது, தினந்தோறும் ஒருசிவனடியாருக்கு அன்னம்படைத்துக்கொண்டிருந்தனர். அப்படியிருக்கையில் ஒருநாள் தம்முடையகணவர் இரண்டு மாம்பழங்கொடுத்தனுப்பினர். அதைவாங்கிவைத்திருந்தபோது ஒருசிவனடியார் மிகுந்தபசியுடையவராய்வர, அவருக்கு அன்னம்படைத்துமற்றப்பதார்த்தங்கள் அத்தருணத்தில்அமையாமலிருந்தபடியால் முன்வைத்திருந்த மாம்பழமிரண்டில் ஒன்றுகொண்டுவந்துபடைத்து உபசரிக்கச்சிவனடியார் அமுதுசெய்து மகிழ்ந்துசென்றனர். பின்புகணவராகியசெட்டியார் போசனத்துக்குவர, அவருக்கு அன்னம்படைத்து, அங்கிருந்தமற்றொரு மாம்பழத்தைப்படைத்தனர். அந்தப்பழம்மதுரமுள்ளதாயிருந்தபடியால், மற்றொருபழத்தையுங்கொண்டுவந்துபடைக்கவென்ன, கொண்டுவருவாராய் உள்ளேபோய்ச்சுவாமியைப்பிரார்த்தித்தார்.அவர்கிருபையினால்தங்கைக்குஒருபழம்வர, அதைக்கொண்டுவந்துபடைத்தார். அதுமுன்னையபழத்திலும், அதிகமதுரமாயிருந்தபடியால் கணவனார் தம்மனைவியைநோக்கிஇது முன்பழத்திற்சேர்ந்ததல்ல, ஆதலால் இது ஏதென்றுகேட்க, அம்மையார் உண்மையைச்சொல்லச்சற்றுயோசித்து, ஆகிலுங்கணவனாரிடத்தில்உண்மையைச்சொல்வதே தருமமென்று நிச்சயித்துப் பழம்வந்தகாரணத்தைச்சொல்ல,அவர்கேட்டு அப்படியானால், இன்னொருபழங்கொண்டுவந்துபடையென்ன, அம்மையார், மிகவும் மனவருத்தமுற்று, உள்ளேபோய்,சுவாமியைக்குறித்து, ஐயனே இன்னொருபழங்கட்டளையிடாவிட்டால்,என்வார்த்தைபொய்யாய்விடுமேயென்று பிரார்த்தித்தார். இறைவன்கிருபைகூர்ந்துமீட்டும்ஒருபழங்கொடுத்தருள,அதையுங்கொண்டுவந்துபடைத்தார்.கணவனார் அதை உண்ணும்படிவாயின்சமீபத்திற்கொண்டுபோக, அதுமறைந்துபோகவே, அதைக்கொண்டுஇவர்நமக்குத்தெய்வமேயல்லதுமனைவியல்லர்.ஆதலால்இவர்நமக்குஊழியஞ்செய்வதுதகாதென்று தமக்குள்ளேவைத்துக்கொண்டுவர்த்தகஞ்செய்யப்போகின்றவர்போல், கப்பலேறித் தென்தேசம்போய்அங்கே ஒருவிவாகஞ்செய்துகொண்டிருக்க அதைக்கேள்விப்பட்டுஅம்மையாரை,அவர்சுற்றத்தார்அவரிடத்துக்குஅழைத்துக்கொண்டுபோனார்கள்.இவர்கள்வந்ததைக்கேள்வியுற்றுசெட்டியார்எதிர்கொண்டுவந்து அம்மையாரைச்சாஷ்டாங்கமாகச்சேவித்துக்கொண்டார். அவர் பரமசிவத்தைக்குறித்து ஐயனேஇந்தச்சரீரத்தை இவர்பொருட்டுத்தாங்கிக் கொண்டிருந்தேன்.இனி இதுவேண்டுவதில்லை அடியேனுக்குப்பேயுருவம் பாலித்தருளவேண்

மென்றுபெற்றுக்கொண்டதால் பேயம்மையென்று கூறினர். சுந்தரமூர்த்திசுவாமிகளும் "பேயார்க்குமடியேன்" என்று திருத்தொண்டத்தொகையில்திருவாய்மலர்ந்தனர். மங்கையர்க்கரசியார்தன்பதியாகியகூன்பாண்டியராஜன் சமணசமயத்துக்குட்பட்டவனாகவிருக்கவும் தான் அச்சமயத்துக்கு உட்படாமலிருந்து அந்தப்பாண்டியனுக்குத்தெரியாதவண்ணம்விபூதிருத்திராட்சதாரணங்கொண்டிருந்து திருஞானசம்பந்த சுவாமிகளை எழுந்தருளச்செய்துஅவரால்சமணசமயம்ஒழியச்செய்து, பாண்டியராசன்முதலாக அத்தேசத்திலுள்ளவர்யாவரும்விபூதிதரித்துக்கொண்டு சைவசமயத்தாராகும்படி செய்வித்தசிவனேசமுள்ளவராதலால் மங்கையர்க்கரசிபாதவனசமும் என்றார். அந்தம்மாளுடைய சிவனேசத்தின்பெருமையைக்கண்டு திருஞானசம்பந்தசுவாமிகளும்தம்முடையதிருவாக்கால் "மங்கையர்க்கரசி வளவர்கோன்பாவை வரிவளைக்கைம்மடமானி-பங்கயச்செல்வி பாண்டிமாதேவி" எனத்திருவாலவாய்ப்பதிகத்துப்புகழ்ந்து கூறினார்.

## சண்டேசர் துதி.

மண்ணியெனுநதிநடுவின்மணல்குவித்துச்சிவலிங்கவடிவமாக்கித்தண்ணியவான் பான்முடிமேலாட்டுதலுந்தாதைசினந்தலைமேற்கொள்ளத், துண்ணெனவேயெழுந்துசுடர்மழுவாலேயவன்றாளைத்துணித்தவீரத், திண்ணியனைச்சண்டேசன்றனைப்பாதம்பணிந்தன்பாற்சிந்தைசெய்வாம்.

(இ - ள்.) மண்ணியென்கிறநதிநடுவில் மணலைக்குவித்துச் சிவலிங்கவடிவமாகச்செய்து குளிர்ச்சிபொருந்திய பசுவின்பாலைச்சிவலிங்கப்பெருமான் திருமுடியின்மேல் திருமஞ்சனஞ்செய்யுமளவில் முன்னமேவந்து மறைந்திருந்த தம்முடைய பிதாக்கண்டுமிகுந்தசினமுள்ளவராய் திருமஞ்சனதிரவியங்களைத் தங்காலால்தள்ளிவிட அங்கிருந்ததாற்றுக்கோல் கோடாலிபோலாக அதைக்கைக்கொண்டு அவர்காலறும்படி வெட்டியஞானவீரமுள்ள சிவனேச உறுதிப்பாடுள்ளவராகிய சண்டேசநாயனாருடைய திருவடிகளை அன்புடனே பணிந்து தியானஞ்செய்வாம். எ - று.

இவர் திருவவதாரஞ்செய்ததலம் திருச்சேய்ஞ்ஞலூர். இவர் காசிபகோத்திரத்துவைதிகப்பிராமணர். பூசைசெய்ததலம்திருஆய்ப்பாடி. திருமண்ணியாற்றின் கரையோரத்திலேயுளது. இந்த இரண்டுஸ்தலமும் கும்பகோணத்துக்குச் சமீபத்திலிருக்கின்றன.

## ஆதிசைவர் துதி.

புத்தமுதமனையதமிழ்ப்பொலியுமிசைவளர்மயிலாபுரியென்றோது
முத்திநகரத்தினமுநான்மறையாகமந்தெரிந்தமூதூர்வைகுஞ்

சுத்தசிவவேதியனைப்பரசிவகாரியபரராய்த்துகளற்றோங்கு [பாம்.
முத்தமசைவத்தவனைத்தொழுதவர்தாட்கமலமெமதுளத்தில்வைப்

(இ - ள்) புதியவமுதம்போன்ற தமிழ்ப்பாடல்களால் விளங்கும் புகழ் வளருகின்ற மயிலாபுரி என்றுசொல்லப்பட்டமுத்திக்ஷேத்திரத்தை, நான்கு வேதங்களையும் இருபத்தெட்டாகமங்களையும் உணர்ந்துவாசஞ்செய்யும் பரிசுத்தமுள்ளசிவப்பிராமணர்களையும்பரசிவத்தை ஆராதிக்குங்காரியபரராய்க் குற்றமற்றுமேலாகியஉத்தமசைவசமயமுநிவர்களும்ஆகிய ஆதிசைவப்பிராமணர்களையும் பணிந்து, அவர்களுடைய திருவடித்தாமரைமலர்களை எமது உள்ளத்தில்வைத்துக்கொண்டு தியானஞ்செய்வாம். எ - று.

ஆதிசைவர்களுக்கு நிருவாணதீக்ஷைசெய்யும்போது தத்துவசோதனை முதலானவைநிகழ்தலில சந்நியாசத்துவமென்கிற சாம்பிரதாயத்தை பற்றி அவர்களைச்சைவத்தவரென்றார். தமிழ்ப்பாடலென்றது தேவாரப்பதிகங்களை.

## அவையடக்கம்.

செப்புமியற்றமிழ்களெலாமரியயனேமுதலாயதேவர்க்கோதி, யொப்புவிக்கவறியாமலரனிடத்தேவலைத்துவலைத்துரையாநின்றேன், மைப்பரவைதரும்விடமுநீடுமென்புமாடரவும்வனப்பாய்க்கொண்டா, ரப்பொறுமையுடையவரென்புன்கவியும்பொறுப்பரெனவறிந்துதானே.

(இ-ள்.) என்னால்சொல்லப்படுகின்ற இலக்கணக்குற்றமில்லாததமிழ்ப்பாடல்களெல்லாம் திருமால் பிரமதேவன் முதலாகிய தேவர்களுக்குச் சொல்லி ஒப்புவிப்பதற்கு உணர்ச்சியில்லாமல், பரமசிவத்தைக் குறித்தே மீட்டு மீட்டும், சொல்லித்துதிசெய்து கொண்டிருக்கிறேன். அதேனென்றால் பாற்கடல்கொடுத்த விஷத்தையும்தேவர்களுடைய பெரிய எலும்புகளையும் படம்விரித்தாடாநின்ற சர்ப்பங்களையும் விருப்பத்துடன் அணிந்து கொண்டவராகிய அந்தப்பொறுமையையுடைய பரமசிவம் கல்வியுணர்ச்சி சிறிதுமில்லாத அடியேன் கூறுகின்ற புன்கவிகளையும் ஏற்றுக்கொள்வாரென்கிற துணிவினையறிந்து. எ-று.

செழுமதியுமென்கவியுங்கலைகுறைந்துகளங்குறைந்துசிறப்பின்றேனும், வழுவில்புகழ்ப்புலவரெலாமின்னமிர்தமெனநுகர்ந்துமகிழ்வர்சோர்விற், றழுவுவர்க்கும்விரகியர்க்குஞ்செந்தழலாய்த்தோன்றுமதிசலதிசூழ்ந்த, முழுதுலகென்கவியழுக்காறுடையவர்க்குமிழுதையர்க்குமுதிர்ப்பெய்தாதே.

(இ-ள்.) மிகுந்தபிரகாசமுள்ள சந்திரன்களங்கத்தைப்பொருந்தியும் அபரபக்ஷத்தில் கலைகள்குறைந்துஞ்சிறப்பில்லாததாயிருந்தாலும் மாறுபடாத புகழையுடைய தேவர்களெல்லாம் தங்களுக்கு இனிய அமிர்தமாக உண்டுமகிழ்ச்சியடைவார்கள். அந்தச்சந்திரனைக்கலவிப்புணர்பவர்களுக்கும் விரகதாபமுள்ளவர்களுக்கும் செம்மைநிறமான தீத்தன்மையுள்ளதாகத் தோன்றும். சமுத்திரஞ்சூழ்ந்த வுலகமுழுவதிலும் நிறைகின்ற புலவர்கள் என்னுடைய பாடல்கள் கல்வித்திறங்குறைந்தும், இலக்கணக்குற்றங்கள் பொருந்தியும் சிறப்பில்லாதவைகளாயிருந்தாலும், தங்களுக்கு இனிய அமிர்தமாக ஏற்றுக்கொண்டு, மகிழ்ச்சியடைவார்கள். பொறாமையுள்ளவர்களுக்குஞ் சற்றேனுங்கல்வியுணர்ச்சியில்லாதவர்களுக்கும் முதிர்ந்ததன்மையைப் பொருந்தாவாம். எ-று.

மெய்வளர்ந்திடவேந்தருமவாழ்ந்திடத்
தெய்வமாமறைநீதிசிறந்திட
மைவழாதுமலியப்பொழிந்திடச்
சைவமோங்குகதாரணியெங்குமே.

(இ-ள்.) இவ்வுலகமெங்குஞ் சத்தியமென்பது விர்த்தியடையக்கடவது; அரசர்வாழக்கடவர்; தெய்வத்தன்மையுடையதாய பெருமைபொருந்திய வேதங்களாற்சொல்லப்படுகிற நீதியானது சிறப்படையக்கடவது; மேகங்கள்காலந்தப்பாமல் வளங்கள்நிறையும்படி மழையைப்பொழியக்கடவன; சைவசமயமானது மேன்மையை அடையக்கடவது. எ-று.

நற்பரஞ்சுடராகியகுமரவேணளினப்
பொற்பதங்கடன்னுளங்கொடன்னவன்
சிற்பரன்றருநூல்வகையாவையுங்கொண்ட
கற்பகந்திகழ்பொதியமாமுனிவனைக்கலந்தே

(இ-ள்.) எல்லாநன்மையுநிறைந்தமேலான சோதிசொரூபமாகிய சுப்பிரமணிய சுவாமியினுடைய செந்தாமரைமலர்போன்ற பொலிவுள்ள திருவடிகளைத் தனது உள்ளத்திற்கொண்டுதொழுது, அந்தச்சுப்பிரமணியக்கடவுள் உபதேசித்தருளியசைவபுராணங்களையெல்லாம் உணர்ந்து தம்முள்ளத்தினிறைந்துள்ள பொதியமலைவாசராகிய அகத்திய முனிவரரிடத்தில் சனற்குமாரமுனிவர்முதலாகிய சிலமுனிவர்கள்சேர்ந்து.

முனிவரன்பொடுதொழுதவன்புகழெலாமொழிந்தே
யினியதோர்தலமியம்பெனவிரசிதகிரிமேற்
புனிதன்வீற்றிருந்துமைக்கவண்புகன்றவப்படியே
நனியுணாத்ததுமயிலைமாநகர்த்தனிநிலனே.

(இ-ள்) அந்தமுனிவர்கள் அன்புடன்வணங்கி அகஸ்திபருடைய புகழையெல்லாமெடுத்துச்சொல்லி ஆயிரத்தெட்டுச்சிவஸ்தலங்களுக்குள் மூர்த்திவிசேஷமும்,தலவிசேஷமும்,தீர்த்தவிசேஷமும்உள்ளதாகிய,ஒருஸ்தலம் எதுவோ அதனை எங்களுக்குச்சொல்லியருளவேண்டுமென்றுவிண்ணப்பஞ்செய்ய,வெள்ளிமலையினிடத்தில் பரமசிவம்வீற்றிருந்து பார்வதிதேவியாருக்கு அருளிச்செய்தமுறைமைப்படி திருமயிலையென்னுந்தலத்தின் மான்மியம் அவராற்சொல்லப்பட்டது. எ-று.

இத்தலவிசிட்டமுன்னேபொழிப்பதாயிசைத்தவாறு
மித்தலத்துண்மைதன்னையிரசிதகிரியின்பாங்கோர்
சித்திரமணியின்றெற்றிச்சிகரமீதிருந்துநாத
னுத்தமிபணிந்துகேட்பவுரைத்திடத்துணிந்தவாறும்.

(இ-ள்) இந்தஸ்தலத்தினுடைய மான்மியத்தை முற்காலத்தில் பொழிப்பாய்ச் அருளியமுறையும் இந்தஸ்தலத்தினுடைய உண்மைத்தன்மையை வெள்ளிமலையாகியகயிலாயத்தின் ஓரிடத்தில் விசித்திரமாகியமணிகள் பதித்துள்ளமண்டபத்தில் வீற்றிருந்து பார்வதிதேவியார் வணங்கிக்கேட்கப் பரமசிவம் திருவாய்மலர்ந்தருளத் துணிந்தமுறைமையும். எ-று.

முன்னரித்தலத்தினுண்மைமுழுவதுமொழிந்தவாறு
மன்னவாகனன்மலைப்பேராட்டிசெவ்வேளார்வேதம்
பன்னியமழைக்கோள்சீர்த்திபகர்தருமயோத்திராமன்
றுன்னியமுனிவராதிதொழுதரிச்சித்தவாறும்

(இ-ள்) ஆதிகாலத்தில் இந்தத்தலத்தினுடையமேன்மை முழுவதையுஞ் சொல்லியமுறைமையும், அன்னவாகனமுள்ள பிரமதேவனும், பர்வத்ராஜன்புத்திரியாகியபார்வதிதேவியாரும், சுப்பிரமணியசுவாமியும், வேதங்களும், சுக்கிரனும், யாவராலுஞ்சொல்லப்படுகிறகீர்த்தியுடைய அயோத்திமாநகரத்தில் அரசாக்ஷிசெய்த ராமரும், நிலைபெற்றிராநின்ற முனிவர்கள் முதலாகிய சிலபேருந்தொழுது அருச்சித்தமுறைமையும். எ-று.

வரந்தருகபாலிதீர்த்தம்வனப்புடன்பரிசித்தாலும்
பரந்தனையளிக்குந்தீர்த்தப்பான்மைகளிசைத்தவாறும்
துரந்தவல்வினையைநீக்குந்தொன்மையோர்தலத்தைச்சூழத்
திரம்பெறச்சிவாலயங்கள்செய்துபேறுற்றவாறும்.

(இ-ள்.) இஷ்டகாமியமுதலாகிய வறங்களைத்தருகின்ற கபாலிதீர்த்தத்தினுடையவும் பரிசுத்தமுடன் பரிசித்தாலும் முத்திநிலையைக்கொடுக்கும்படியான மற்றுமுள்ள தீர்த்தங்களினுடையவும் பெருமையைச்சொல்



திருமயிலைத்தலம்.



நைமிசாரண்ணிய வாசிகள் (48000) இருடிகள் பொதிகையிலெழுந்தருளிய கும்பமுனிவரைப்பணிந்து திருமயிலைப் புராணமான்மியத்தை விரிவாகக் கூறவேண்டுமெனப் பிரார்த்திக்க அகஸ்தியர் திருவாய்மலர்ந்தருளினது.

லீய முறைமையையும் உறுதியாகிய வினைகளைத் துரத்திமீட்டுஞ் சோர தவண்ணம்நீக்குகின்ற பெரியோர்கள் அந்தத் தலத்தைச்சூழ அழியாமலி ருக்கும்படி சிவாலயங்களைக்கட்டுவித்துப் பேறுபெற்றமுறைமையும். எ-று.

வாமனமிலிங்கங்கூர்மம்வராகமேமச்சங்காந்த
மேமமில்பவுடிகம்பிரமாண்டமார்க்கண்டஞ்சைவ
மாமிவைசிவபுராணமையிரண்டரிக்குநான்கு
நாமம்பாகவதம்விண்டுநாரதீயங்காருடம்.

(இ-ள்.) வாமனம், இலிங்கம், கூர்மம், வராகம், மச்சம், காந்தம், மறை ப்பில்லாத பவுடிகம், பிரமாண்டம், மார்க்கண்டம், சைவம், ஆகிய இப்பத் தும்சிவபுராணங்களாம். விட்டுணுவுக்குநான்குபுராணங்களாம்; அவைகளின் பேர்கள் பாகவதம், வைணவம், நாரதீயம், காருடம். எ-று.

பாரதிகொழுநன்காதைபதுமமேபிரமமென்றுங்
கோரிருவகையவங்கிக்கொன்றென்பவாக்கினேயம்
பேரெழிலிரவிக்கொன்றுபிரமகைவர்த்தமென்றே
ஏருறுபுராணமூவாறென்பவையிவையிவற்றுள்.

(இ-ள்.) சரஸ்வதியினுடைய கணவனாகிய பிரமதேவன் புராணம் ப த்மம் பிரமம் என்றுசொல்லப்படுகிற விரண்டுவகையினை யுடையது. அக் கினிதேவனுக்கு ஒருபுராணமென்று பெரியோர்கள் சொல்லுவார்கள். அத ன்பேர் ஆக்கிநேயம். மிகுந்தபிரகாசத்தையுடைய சூரியனுக்கு ஒரு புரா ணமாம். அதன்பேர் பிரமகைவர்த்தமென்று சொல்லுவார்கள். இவ்வாறு அ ழகுபொருந்தியபுராணம் பதினெட்டாம். இந்தப்பதினெட்டனுள். எ-று.

பொய்வைத்தவுளத்திற்கெட்டாப்புனிதனூர்புராணம்பத்திற்
சைவத்திற்காந்தந்தன்னிற்றனித்தனிபுகலுஞ்சீர்த்தி
மைவைத்தகண்டன்பாதவலிமையான்மொழிபெயர்த்தே
மெய்வைத்தவுளத்தர்காணவிளம்புவன்றமிழினாலே.

(இ-ள்) பொய்யன்புள்ளவர்கள் மனதுக்கெட்டாத பரமசிவனுடைய புராணம்பத்துக்குள்ஸ்ரீசைவபுராணத்திலுங்காந்தபுராணத்தினுந்தனித்தனி யே சொல்லப்படுகின்ற திருமயிலை என்னும்ஸ்தலமான்மியத்தைக்கருமைத ங்கியகண்டத்தையுடைய பரமசிவனது திருவருட்பிரசாத உறுதியால் வட மொழியினின்றும்மொழிபெயர்த்து மெய்யன்புள்ளவர்கள் கண்டு மகிழும் படி தமிழினாலேசொல்லுகிறேன். எ-று.

வேறு.

பாயிரநாட்டுடனகரம்பொதியமேலோர்பகர்தருநற்றலவிசிட்டப் பொழிப்புனாயேகயிலை, யேயதலத்துமைசாபமுமைபூசைவேதமெ

ழிற்குமரவேள்விளங்குகலைமடந்தைகேள்வன், மேயபுகழ்முனிவர்களுஞ்சுரரும்மாடும்லியன்றீர்த்தமான்மியமேனுயிர்களுய்யுந், ᵞதூயதிருவிழாச்சிறப்புச்சருக்கமீருச்சொல்சருக்கம்பதின்மூன்ருய்த்தொகுத்திந்நூலே.

(இ-ள்.) பாயிரத்துடன் நாட்டுச்சிறப்பு,நகரச்சிறப்பு, பொதியமலையில் வாசமாயிராநின்ற அகஸ்தியமுனிவரால் சொல்லப்படுகின்ற தலமான்மியசருக்கம், கயிலாயகிரியினிடத்து பார்வதிதேவியாருக்குச் சம்பவித்த சாபச்சருக்கம், பார்வதியார் அந்தத்தலத்தில் வந்துபூசைசெய்தசருக்கம், வேதங்கள்பூசித்தசருக்கம், அழகுபொருந்திய சுப்பிரமணிய சுவாமிபூசித்தசருக்கம், பிரகாசியாநின்ற சரஸ்வதி கணவனுகிய பிரமதேவன் பூசித்தசருக்கம், தவத்தால் கீர்த்திபொருந்திய முனிவர்களுந் தேவர்களும் ஸ்நாஞ்செய்த தீர்த்தவிசேடச்சருக்கம், என்னுமிவைமுதல் உலகத்திலுயிர்கள் பிழைக்கும்படியான பரிசுத்தமாகிய திருவிழாச்சருக்கமீருகச்சொல்லுநின்ற சருக்கங்கள் பதின்மூன்ருக இப்புராணத்தைத்தொகுத்து. எ-று.

என்னிலமுந்தொழுமயிலைப்புனிதன்சீர்த்தியாவையுமோர்நூலாக்கியந்நூறன்னின், மன்னுபாயிரச்சருக்கமுதலாய்ஞானம்வளர்திருவிழாச்சிறப்புச்சருக்கமீருய்த், துன்னியசீர்ப்பெருஞ்சருக்கம்பதின்மூன்ருகத்தூயசருக்கங்கடனிற்ரேய்ந்தயாவும்,பன்னுமறுநூற்றறுபானுக்கிவைக்கப்பகர்ந்தனமிந்நூற்பெயரும்பகர்வாங்கேண்மோ

(இ-ள்.) எந்த உலகத்தாருந்தொழுகின்ற திருமயிலை வீற்றிருக்கும் கபாலீசருடைய மான்மியங்களையெல்லாம் ஒருபுராணமாக்கி அப்புராணத்தில் பொருந்தியபாயிரச்சருக்கமுதலாக மெய்ஞ்ஞானம் வளர்தற்கேதுவான திருவிழாச்சிறப்புக்கூறுஞ் சருக்கமீருகக்கீர்த்திபொருந்திய பதின்மூன்றுசருக்கமாகவும்,அவ்வாறுபொருந்திய சருக்கங்களிலே அடங்கியபாடல்கள் அறுநூற்றறுபதாகவும் செய்தமைத்தோம். இந்நூற்பெயரும்சொல்லுகிறேம் கேண்மின். எ-று.

இதிலெதுகைநோக்கிப்பொதுநகரஞ்சிறப்பாக்கப்பட்டது.

வேறு.

கூறரும்பொருளிதென்றேகுறுமுனிபுகலச்சான்ருேர்
தேறியவடனூறன்னைத்தென்னூலதாகச்செய்த
வேறுசீர்க்காதைக்கிங்ஙனெவன்பெயரென்னிலென்றும்
வீறுசேர்மயிலைமூதூர்ப்புராணமாய்விளம்புமாதோ.

(இ-ள்.) யாவருக்குஞ்சொல்லுதற்கரிய பொருள் இதுவென்று அகஸ்தியமுனிவர் சொல்ல அதை முனிவர்கள்கேட்டுத் தெளிந்த சமஸ்கிருத

பாஷையிலிருக்கும் புராணத்தைத்தமிழ்ப்புராணமாகச்செய்தபெருமைமி குந்த இந்தச்சரித்திரத்திற்கு என்னபெயரென்றால் எந்நாளும் புகழ்விள ங்கிக்கொண்டிருக்குந் திருமயிலைப்புராணமென்றுசொல்லப்படும். எ-று.

பூமருவுயிர்க்கும்வாசப்பொதும்பர்விண்டொடவிளங்கு
மாமயிலைப்புராணம்வகுத்தயாப்பிலக்கணத்தி
னேமமாம்பாவினத்துணலம்பொருந்துறுப்பிற்சொல்லு
மேமமாம்விருத்தந்தன்னுலிசைத்தனன்றகைமைத்தாயே.

(இ-ள்) மலர்கள் தேனைப்பொழிகின்ற வாசனையுள்ள சோலைகள் ஆகாயத்தையளாவும்படி விளங்காநின்ற பெருமைதங்கிய திருமயிலையின் புராணத்தை இலக்கணங்களி லொன்றாகவகுத்த செய்யுளிலக்கணத்தில் வழங்கும் பெயரையுடையவாகிய பாவினங்களில் நன்மைமிகுந்து உறு திப்பாட்டுடனே சொல்லுகின்ற இன்பமுள்ளதான விருத்தப்பாவினாலே தகுதியுடையதாகக் கூறினேன். எ-று.

வேறு.

முன்சொலாயினும்வடசொலைத்தென்சொலாய்மொழிந்த
லென்சொலாயினுமப்பொருள்கிடைத்தலாலிகழார்
நன்சொலாயினும்பொருள்பழுதாயிடினவையாம்
புன்சொலாயினுநற்பொருள்சேர்ந்திடிற்புகழே.

(இ-ள்) முன்னோர்கள் வாக்கியமாயிருந்தாலும் சமஸ்கிருதபாஷை யைத்தமிழ்ப்பாஷையாகச்சொல்லுதல் என்னுடைய சொல்லாயிருந்தாலும் இதில் அந்தச்சமஸ்கிருதபாஷையில் அமைந்திருக்கும் அப்பொருள்கிடைப் பதனாலே இகழமாட்டார்கள். நல்லமொழிகளாயிருந்தாலும் அவைகளால் சொல்லப்படுகிறபொருள்குற்றமுள்ளதாயிருந்தால் அந்தச்சொற்களுங்குற்ற முள்ளசொற்களேயாம். அற்பமான சொற்களாயிருந்தாலும் அவற்றில் நல்லபொருள்கள் சேர்ந்திருக்குமானால் புகழுள்ள சொற்களேயாம். எ-று

பாயிரம்முற்றும்.

ஆகதிருவிருத்தம்-௧௬.

## நாட்டுச்சருக்கம்.

இண்டைவார்சடையெம்பிராற்கன்பரா
யண்டர்போலுமறிஞர்சிறந்திட
விண்டமாமலர்மேவுதண்சோலைசூழ்
தொண்டைநாட்டணிசொல்லத்தொடங்குவாம்.

(இ-ள்.) இண்டைமாலையைத்தரித்த நீண்டசடையினையுடைய எமது கடவுளாகிய பரமசிவத்துக்கு அன்பர்களாகிய தேவர்களையொத்த சான்றோர்கள் நிறைந்திருக்க மலர்ந்தபுட்பங்கள் பொருந்திய குளிர்ச்சியுள்ள சோலைகளால் சூழப்பட்ட தொண்டைநாட்டின் சிறப்பினை இனிச்சொல்லத்தொடங்குவாம்- எ-று. (க)

வேறு.

மேவுநாவினைப்பற்பலபடைப்பினும்விளங்கத்
தாவில்கண்செவிபற்பலவுறினுமத்தனிநாட்
டோவிலாவணிசொற்றிடக்கண்டுகேட்டுருக
யாவராயினுமிசையுமோமுழுவதுமிசையா.

(இ-ள்.) வசனிக்கும்படிபொருந்தியநாக்களை அனேகமாகப்படைத்தாலும்பொருள்களெல்லாநன்றாகத் தெரியும்படிபழுதற்றஅனேகங்கண்களைப்படைத்தாலும் சத்தங்கள்கேட்கும்படி அனேகஞ்செவிகளைப்படைத்தாலும் அந்தலைப்பில்லாத நாட்டினுடைய நீங்குதலில்லாத அலங்காரங்களையெல்லாம் சொல்லவும்காணவும் கேட்டுமனமுருகவும் எவர்களாயினுங் கூடுமோ முழுவதுங்கூடாது. எ-று. (உ)

முந்தநாட்டியவருணையைநினைத்திடின்முயங்கும்
பந்தநாட்டினையொழிந்தருளுட்டினிற்படர்வா
ரெந்தநாட்டினுமில்லதோரதிசயமினைய
தந்தநாட்டினிலுண்டதன்பெருமையாரறிவார்.

(இ-ள்.) முதன்மையாகச்சொல்லப்பட்ட அருணசலத்தைநினைத்தவர்கள்பாசபந்தத்தைக்கூடியமாயாபிரபஞ்சத்தை யொழிந்துமோக்ஷநாட்டினிற் சேர்வார்கள். எந்தநாட்டிலுமில்லாத இப்படிக்கொத்த அற்புதங்கள் அந்தத்தொண்டைநாட்டினிலுண்டு, ஆதலால் அதனுடைய பெருமையை யாவரறியத்தக்கவர்கள். எ-று. (௩)

பூமகட்கொருகோயிலாயருந்தவம்புரியு
நாமகட்கொருகழகமாய்க்கலையெலாநடாத்தச்
சேமமுற்றவராயினுந்தெரிசிக்கின்முத்தி
யாம்வடப்பெயர்வனமுமந்நாட்டிலுண்டறையில்.

(இ-ள்.) திருமகட்கு ஒப்பற்ற ஆலயமாகியும் அருமையாகியதவத்தைச்செய்யும் சரஸ்வதிதேவி சாத்திரங்களையெல்லாம் ஆராய்ச்சிசெய்யக்கல்விச்சாலையாகியும் சிற்றின்பத்தைப்பொருந்தினவர்களாயினும் தரிசித்தால் முத்திகிடைக்கும்படியான திருவாலங்காடென்னுந்தலமும் சொல்லுமிடத்து 'அந்தத்தொண்டைநாட்டிலுண்டு.' எ-று, (௪)

சித்தர்கின்னரர்கிம்புருடேசர்கள்சிறந்த
முத்தர்வானவர்மொய்த்துளகயிலைபோன்முன்ன
மத்தர்வேடனுக்களித்ததென்காளத்தியருள்சேர்
நித்தர்தென்கயிலாயமந்நாட்டிடைநிகழும்.

(இ-ள்.) சித்தர்கள்கின்னரர்கிம்புருடேசர்கள் சிறப்புற்றமுத்தாத்மாக்கள் தேவர்கள் என்னும் இவர்கள் யாவரும் ஸ்ரீ கண்டமூர்த்தியைத்தரிசிக்கும்பொருட்டுவந்து நெருங்கியிருக்கிறகயிலாயகிரிபோல்வதாய்ப்பரமசிவம்ஆதியில்வேடுவராகியகண்ணப்ப சுவாமிகளுக்குமோக்ஷசாம்பிராச்சியம் பிரசாதித்தருளிய ஸ்ரீகாளத்திமலையாகிய அருட்சத்திவடிவங் கொண்ட பரமசிவம்வீற்றிருக்கும் தென்கயிலாயமும் அந்ததொண்டைநாட்டினிடத்தில் விளங்கிக்கொண்டிருக்கும். எ-று. (௫)

காணிற்போகமாம்பதமெலாம்வழங்கிடுங்கலந்தே
பேணிற்கூறருமுத்தியையளித்திடும்பெரிதுஞ்
சேணிற்போய்நிமிர்ந்தயில்கொடுகெந்தவேடிகழ்ந்த
வாணிக்கோர்பதிதணிகைமாமலையுமங்கமரும்.

(இ-ள்.) தரிசனமாத்திரத்தில் போகம்நிறைந்துள்ள சொர்க்கபதவி முதலாகியபதவிகளைக்கொடுப்பதாயும் அவ்விடத்தில்வாசமாயிருந்துதொண்டுசெய்துகொண்டிருந்தால் சொல்லுதற்கரிய மோக்ஷசாம்பிராச்சியத்தைத்தந்தருளுவதாயும் மிகவும் ஆகாயவரையில்போய் உயர்ச்சியையுடையதாயும் வேலாயுதமேந்திக்கொண்டு சுப்பிரமணியக்கடவுள் விளங்கிக்கொண்டிருக்கும் உறுதிப்பாட்டினுக்கு இசைந்ததாயுமிருக்கின்ற பதியாகிய திருத்தணிகைமலையென்னும் க்ஷேத்திரமும் அந்தத்தொண்டைநாட்டிலிருக்கின்றது. எ-று. (௬)

ஆனநான்மறைபுகழ்தரத்தாண்டவமாடு
ஞானநாயகன்சுந்தரற்காகவேநயந்த
வானமோங்கியமகிழடிசேவையான்மருவு
மேனலந்திகழொற்றிமாநகரமும்விளங்கும்.

(இ-ள்) பரமசிவம்போல நித்தியத்துவமுள்ளதாகிய நான்குவேதங்களும்புகழ்ந்து துதிசெய்யும்படி பத்மதாண்டவம் செய்தருளும் ஞானசொரூபமுள்ளவராகிய தியாகராஜசுவாமியார் சுந்தரமூர்த்திசுவாமிகளின் பொருட்டு விருப்பமுற்றமர்ந்த ஆகாயத்தளவுமோங்கிய மகிழடிசேவையுடனேபொருந்தி மேன்மையமைந்த எல்லாநன்மைகளுமுடைய திருவொற்றியூர் என்னுந்தலமும் அந்தத்தொண்டைநாட்டில் விளங்கிக்கொண்டிருக்கின்றது. எ-று. (௭)

விளங்குமூவருந்தேவருமுனிவரும்வியந்தே
யுளங்கொளன்புடன்வழுத்துவரத்தலத்துறையிற்
களங்கவல்வினைத்தொகையெலாம்பறித்திடுங்கணிப்பில்
வளங்களீந்திடுந்திருமுல்லைவாயிலுமருவும்.

(இ-ள்.) பிர்ம, விஷ்ணு, ருத்திரர்கள், என்றுசொல்லப்பட்ட மும்மூர்த்திகளும் மற்றுமுள்ள தேவர்களும் முனிவர்களும் சந்தோஷித்து உள்ளத்திற்கொண்ட அன்புடனே துதிசெய்யத்தக்கதும் அந்தத்தலத்தில் வாசமாயிருந்தால் குற்றமுள்ள வலியவினைக்கூட்டத்தைத் தீர்க்கத்தக்கதும் அளவில்லாதவளங்களை அருளிச்செய்யத்தக்கதுமாகிய திருமுல்லைவாயிலென்னுந்தலமும் அந்தத்தொண்டைநாட்டில் பொருந்தி யிருக்கின்றது. எ-று.

வேறு.

அங்குமாயவன்போல்விளங்கியகுடக்கலைகுணக்கலைதனைப் பொரவே, யிங்கெழுவதுபோலுலகெலாமொடுங்கவிறுதிநாள்வருபுனலதுபோற், றுங்கமால்வரையின்வேங்கைமாவரைகள்சுமந்திருள் போலொளிதரவே, பொங்குவெண்டிரைகளண்டமேல்வருடப்பொலிவதுபாலிமாநதியே.

(இ-ள்.) அந்ததொண்டைநாட்டில் விஷ்ணுவைப்போல் பிரகாசித்துக்கொண்டிராநின்ற மேற்குத்திசைக்கடலானது அலைகின்றநீரையுடைய கீழ்க்கடலைப்போர்செய்து வெல்ல எழுகின்றது போலவும் உலகங்களெல்லாம் ஒடுங்கும்படி ஊழிக்காலத்தில் வருகின்றபிரளயப்போலவும் அசைதலில்லாதபெரியமலையில் சஞ்சரிக்கும்புலிகளையும் யானைகளையுஞ்சுமந்துகொண்டு இருள்போல்விளங்கிப்பொங்குகின்ற வெண்மைநிறமுள்ள அலைகள் ஆகாயத்தினளவும்புரளும்படி பாலிமாநதியானது விளங்கிக்கொண்டிருக்கும். எ-று. (௫)

பந்தனைமறுக்கும்வசிட்டமாமுனிவன்பகர்தரும்யூபவான்றேனுத், தந்திடுசுரப்பின்மடைதிறந்தூற்றுந்தணப்பில்பால்பொலிந்துவானேங்கு, நந்திமால்வரைமேற்றிகழ்ந்தகிற்றுணியுநறுவியகோழரைச்சாந்து, முந்தவாழுயிர்களுய்ந்திடவொழுகியுவரிசேர்ந்திடும்புகழுரைக்கின்.

(இ-ள்) ஆணவமலபந்தங்களை நிக்கிரகித்த பெருமைபொருந்தியவசிட்டமுனிவருடைய யாகத்துக்கு உதவியாகிய காமதேனுவின் சுரப்புமடியாகியமடைதிறந்தூற்றுகின்ற ஒழிவில்லாதபாலானது ஆறுகப்பெருகிஆகாயமளவுமுயர்ந்த நந்திமலையினிடத்திலே விளங்கி அகிற்கட்டைகளையும் வாசனைபொருந்தியகோழரையையுடைய சந்தனமரங்களையும் தள்ளிக்கொ

ண்டு அவ்விடத்தில்வாழ்கின்ற உயிர்களெல்லாம்பிழைக்கும்படி சென்று சமுத்திரத்தில்சேர்ந்திடும்: அதன்புகழைச்சொல்லுமிடத்து எ-று.

பால், தயிர், நெய், சாணம், கோசலம், இவைகளைக்கொடுத்தலால்காமதேனுயாகத்துக்கு உதவியாகின்றது. (கo)

உறைந்திருப்பிடமொல்லையினில்விட்டகன்றங்கோடியம்பரத்தினையடைய, நிறைந்துவந்திடலாலலைதருமதனுனித்தலுமலர்பலைசுமந்தே, மறைந்தழுக்கறுத்தவன்பருக்கெளிதாம்வள்ளன்மேனிகடனைக்கரைவா, யிறைஞ்சுமன்பதனுற்றீவிரதரர்போலிருந்ததுபாலிமாநதியே.

(இ-ள்) வாசமாயிருந்த இருப்பிடத்தைவிட்டு விரைவில் நீங்கிச்சென்று அழகுள்ள பரமசிவத்தையடையப் பரிபூரணத்திற்கலந்துமகிழ்ச்சியடைவதனாலும் உண்மைநிலைஎப்போதுகிடைக்குமென்றுமனம் அலைவினைப்பொருந்தி யிருப்பதனாலும்நித்தியமும்மலர்ந்தபுட்பங்களை புட்பக்கூடையில் வைத்துஏந்திக்கொண்டுஇவர்களித்தன்மையுடையவர்களென்று தங்கள்பெருமை பிறருக்குத்தெரியாவண்ணம் மறைந்தும்மலங்களைநீக்கியஅடியார்க்கெளிதாகிய பரமசிவனுடைய திருமேனியாகிய சிவலிங்கமூர்த்தங்களை உள்ளமுருகி வணங்குகின்ற அன்பினாலும் தீவிரதரபக்குவமுள்ள ஜீவன்முத்தர்கள்போலிருந்தது அந்தப்பாலிமாநதியானது.தானிருந்தஇருப்பிடமாகிய மலையைவிட்டு நீங்கிவிரைவினில் முல்லை, மருதம், நெய்தலென்னும், நிலங்களிற்சென்று ஆகாயத்தையளாவும்படி நிறைந்துவருவதனாலும் அலைகளை வீசுவதனாலும் தினந்தோறும் மலர்ந்தபுட்பங்களை மலைபோலேந்திக்கொண்டு காமதேனுவின் பாலென்னுந்தன்சொரூபத்தை யாவருக்குங் காணுதற்கரிதாய் மறைந்து தன்னிடத்தில் ஸ்நானஞ்செய்கிறவர்களுடைய பாபங்களையொழித்துநல்லவர்கள்காணவெளிதாகும்கரையிலிருபக்கத்திலும்திருக்கோயில்கொண்டு வீற்றிராநின்றசிவலிங்கமூர்த்திகளை வணங்குவதனாலும் எனச்சிலேடையாகக்கொள்க. எ-று. (கக)

அம்பரத்தை என்னும்பதத்துக்குதீவரதரபக்குவரைக்குறிக்கும்போது அழகியபரத்தை என்றும் ஆற்றைக்குறிக்கும்போது ஆகாயத்தைஎன்றும் பொருள்கொள்க.

அணையவந்துவந்தாடியேதொழுமவர்க்கக்கணத்தழுக்கறுத்திடலா,லிணையிலாதவத்தேசத்திலிடுதலாலிருமையுமின்பளித்திடலாற், றுணைமுலைக்குவடுரிஞ்சியேகுழுதவாய்த்தோகையர்குடைந்துநின்றாடக்,கணையின்மீச்செலும்பாலியங்குடிஞையுட்கருணைசேர்குரவர்போன்றுளவே.

(இ-ள்.) தம்மைச்சேரவந்து வந்து ஆனந்தக்கூத்தாடி வணங்குகின்ற அடியாருக்கு அப்பொழுதே ஆணவமலத்தைநீக்குவதனாலும் ஒப்பில்லாததான அந்தமோக்ஷ இடத்தில் சேர்ப்பதனாலும் இம்மை மறுமைப்பயன்களைத்தருவதனாலும் (வீதியில்திருவோலக்கமாக எழுந்தருளும்போது) மலைபோன்றதங்களிரண்டு ஸ்தனங்களும் ஒன்றோடொன்று நெருங்கபபட்டுச் செவ்வல்லிபோன்ற வாயையுடைய மாதர்கள் மூழ்கிநின்றாடும்படி கணைபொருந்திய சிவிகையின்மேல் செல்லுகின்றதிருவுள்ளக்கருணையுடையபெரியோர்கள் போலிருந்தது அந்தப்பாலாறானது.

தம்மிடத்தில்பலதரம்வந்து ஸ்நானஞ்செய்து வணங்குகின்றவர்களுக்கு அப்பொழுதேமாயாமலத்தை நீக்குவதனாலும் (ஸ்நானஞ்செய்யப்பலதேசத்திலிருந்துவந்தவர்களை) ஒப்பில்லாதஅந்தநாட்டினிடத்தே யிருக்கும்படிவைப்பதனாலும் இருமைப்பயனைக்கொடுப்பதனாலும் மாதர்கள்வந்து ஸ்நானஞ்செய்துவிளையாடும்படி கரையின்மேற்புரண்டு வருகின்றபாலாறு எனச்சிலேடையிற்பொருளுரைத்துக்கொள்க. எ-று. (கஉ)

குறிஞ்சியாகியமால்பொருப்பகப்பொருட்கொடுபொருங்கோவைநாடுதலா, னிறைந்தசங்கமுத்தமிழ்ச்செய்யுடோய்தலானீணிலத்தவர்செயுஞ்சிறப்பா, லெறிந்துவெண்டிரைக்கரங்களாலிரவியையிந்துவோவிரவியோவெனவே, செறிந்துவார்கடற்புகுந்திடும்பாலியஞ்சிறந்துநற்கவிஞர்போன்றதுவே.

(இ-ள்.) குறிஞ்சிநிலமாகிய பெரியமலையைச்சார்ந்த அகப்பொருளைக்கொண்டு விளங்கும்பெரியகோவை யென்னும்பிரபந்தத்தை விரும்புவதனாலும் மதுரையில்நிறைந்திருந்த சங்கப்புலவரால் கூறப்பட்ட இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழ்ச்செய்யுளிடத்தில் கருத்துப்படிவதனாலும் நெடிய இந்தப்பூவுலகத்திலிருப்பவர்கள் செய்யுஞ்சிறப்பினைப் பொருந்தியிருப்பதனாலும் இராக்காலத்திலுதிக்கும் சந்திரனோ சூரியனோ என்று கண்டார்களெல்லாம் பரிசுத்தமும் நீட்சியுமுள்ளதங்கள் தங்கள் கைகளைத்தட்டிப் புகழும்படி பொருந்தியிருப்பதனாலும் கவிவாணரைப்போலிருக்கின்றது பாலியாறு. குறிஞ்சிமரங்கள் வளர்ந்திராநின்ற பெரியமலையினிடத்துண்டாகிய பொருள்களைக்கவர்ந்துகொண்டு பெரியஆகாயத்தையளாவுதலாலும் நிறைந்தசங்குகளீன்ற முத்துகள் அமிழ்ந்திருக்கும் கழனிகளிடத்துப்படிவதனாலும் உலகத்தவர்கள் செய்யும் சிறப்பினையுடையதாயிருப்பதனாலும் வெண்மைநிறமுள்ள அலைகளாகிய கைகளால்மோதி அந்தச் சூரியனும்சந்திரனும்தங்களையுந்தள்ளிக்கொண்டுபோ

ய்விடும்படியான இதனுடைய பெருக்கத்தைக்கண்டஞ்சி ஓவென்று கூவும்படி நீட்சியுள்ள சமுத்திரத்தினிடத்தில் சேருகின்ற பாலிநதினைச்சிலேடையிற்பொருளுறைத்துக்கொள்க. எ-று. (கஈ)

குறிஞ்சிமரமானது இவ்விடத்தில்தேன்மரமெனவழங்கப்படுகின்றது. கோ என்னும் ஆகாயத்துக்குரிய பெயர் ஈண்டு இரண்டாம் உருபேற்று கோவையென நின்றது. அமிழ்ச்செய்யுள் என்னுமிடத்தில் சகரவொற்று விகாரவகையால் வந்தது. செய் என்பது கழனி. இவ்வுலகத்தவர் நதிக்குச்செய்யுஞ்சிறப்பாவது இக்காலத்தில் நடந்து வருவதைக்கண்டுகொள்க.

மெல்லியார்சுவைத்தமிழினைப்பசுங்கிளிமிழற்றியவொலிசெவிப்புகுத,லொல்லையிற்பதம்பெயர்த்துடனடித்துநின்றுருகுமாயூரங்களதுகண், டெல்லைதீர்ந்தமாமணிமழைபுடைதொறுமெறிதிரைக்கரங்களாற்பொழியு, மல்லற்பாலிமாநதியிந்தநாட்டிரவலர்க்கருண்மாந்தர்போன்றதுவே.

(இ-ள்.) மாதர்கள்கற்பிக்கின்றமதுரமுள்ளவார்த்தைகளைப்பசுமைநிறம்பொருந்திய கிள்ளைகள் வசனிக்குமோசையானது செவியினிடத்திற்பொருந்தியமாத்திரத்தில்விரைவுடனே கால்களைத்தூக்கி வைத்து மயில்கள்கூத்தாடிமனமுருகும். அதைஇந்தப்பாலிநதியானதுகண்டு அளவில்லாதபெரியரத்நங்களை மழைபொழிவதுபோல மிகுதியாகக் கரைகள்தோறும் வீசுகின்ற அலைகளாகியகைகளாலே பொழிகின்றது, அதனால் வளப்பம்அமைந்தஅந்தப்பாலிநதியானது அந்தத்தொண்டைநாட்டில்வருகின்ற இரவலர்க்குத்தியாகங்கொடுக்கும் வள்ளல்கள்போலிருக்கின்றது. எ-று. (கச)

வேறு.

குரும்பையொத்தணிதாங்கியகொள்கையாற்
சுரும்புநீள்குழைகான்மலர்தோய்தலால்
வரும்பயோதரவாரியின்பாலிதான்
கரும்பையன்னசொற்கன்னியர்போன்றதே.

(இ-ள்) தென்னங்குரும்பைகளையும் ஓரீடாகியரத்னபரணங்களையும் ஏந்திக்கொண்டுவருவதனாலும்வேய்ங்குழல்போலிசைபாடுகின்ற வண்டுகள் பொருந்தியவாசனையுள்ள புஷ்பங்கள்நிறைந்திருப்பதனாலும் மேகம்பொழிகின்ற வெள்ளத்தையுடைய பாலிநதியானது கரும்பையொத்தமதுரமுள்ள வசனத்தையுடைய கன்னியர்களை யொத்திருந்தது. எ-று. (கரு)

கன்னியர்களைக்குறித்துச் சொல்லும்போது தென்னங்குரும்பையொத்து ஆபரணங்களையும் புட்பங்களையும் அணிந்துகொண்டிராநின்ற தனங்

களையுடையகன்னியர்களெனப்பொருள் படுதல்காண்க. குழலென்பது வேய்ங்குழலுக்கும் அளகத்துக்கும் பெயர். பயோதரமென்பது மேகத்துக்கும் தனத்துக்கும்பெயர். ஆதலால் ஆற்றினைக்குறிக்கும்போது குழல்வேய்ங்குழலென்றும், கன்னியர்களைக்குறிக்கும்போது அளகமென்றும், பயோதரம் மேகமென்றும் தனங்களென்றும்பொருள்வகுத்துக்கொள்க. ஒத்த அணியெனற்பாலது ஒத்தணியெனநின்றமையால் அது எச்சத்திரிபு.

இந்தமானிலமேவியபர்விதான்
சந்துகாரகிலாரங்கடாங்கியே
யெந்தைதாண்மருங்கேத்திவயறொறும்
வந்துலாயதுமள்ளர்களார்க்கவே.

(இ-ள்.) பெருமைபொருந்திய இந்தத் தொண்டைநாட்டில் பெருகும்பாலிநதியானது சந்தனவிருக்ஷங்கள் அகில்விருக்ஷங்கள் முத்துகள் என்னும் இவைகளை ஏந்திக்கொண்டு இரண்டுகரைகளிலும் திருக்கோயில்கொண்டுவீற்றிராநின்ற பரமசிவனுடைய திருவடிகளைத் துதிசெய்துகொண்டு வயல்கள்தோறும் உழவர்கள் ஆரவாரிக்கும்படி சென்று உலாவியது. எ-று.

துய்யநந்தியெனுமால்வரைதொடுத்
தொய்யெனச்சென்றுலாவுதல்காண்குறீஇச்
செய்யுண்மள்ளர்குழீஇக்குழீஇச்சென்றுசென்
றுய்யவேத்தொலியும்பரிற்சேருமால்.

(இ-ள்.) பரிசுத்தமுள்ள பெரியநந்திமலையைத்தொடங்கி ஓசையுடனேபாலிநதிசென்றுலாவுதலைக்கண்டு மள்ளர்கள் கூட்டங் கூட்டமாய் வயல்களிற்போய்ப்போய் யாவரும்பிழைக்கும்படி தேவேந்திரனையும் பூமிதேவியையும் துதிசெய்தலா லுண்டாகின்ற ஓசை தெய்வலோகத்தளவுஞ் சேரும். எ-று. (கஎ)

காரின்மேயதன்சாயையைக்காண்கினும்
போரிழைக்கும்பகடுகள்பூண்டபல்
லேரினோதையெழுந்தங்கெழுவகை
வாரியோதையுண்டோங்கிவளருமால்.

(இ-ள்.) நீருண்டமேகத்தையொத்ததன்நிழலைக்கண்டாலும் அதனோடுபோர்செய்யக்கருதுகின்ற இறுமாப்பினையுடைய எருமைக்கடாக்களைப் பூட்டியபல ஏர்களைச்செலுத்துதலால் உண்டாகும் ஓசையானது தோன்றி அவ்விடத்துஏழுசமுத்திரத்தினுடையவோசையையும் தனக்குள்ளடக்கிக்கொண்டு மேலோங்கிவளருகின்றது. எ-று. (கஅ)

வேறு.

சேறுசெய்குநர்சிலர்தெய்வம்போற்றியே
நாறுசெய்குநர்சிலர்நடுனருஞ்சில
ரூறுசெய்குநர்சிலருற்பலாதிநீர்க்
காறுசெய்குநர்சிலராண்டமெள்ளரே.

(இ-ள்.) இவ்வண்ணம்பாலாற்றின்வெள்ளம் மருதநிலமெங்கும்பரவக்கண்டு அங்கிருக்குமள்ளர்களெல்லாருஞ்சென்று சிலர்கழனிகளைச்சேறுசெய்கின்றவர்களும் சிலர் இந்திரதெய்வம்வாழ்த்தி நாற்றுவிடுகின்றவர்களும் சிலர் அந்தநாற்றைப்பிடுங்கி நடுகின்றவர்களும் சிலர் இன்னமும் நாறுநடுதற்கு நிலத்தை யுழுகின்றவர்களும் நீலோற்பல முதலாகிய புட்பங்களையுடைய ஏரிநீர் அந்தப்பயிர்களுக்குச் செல்லும்பொருட்டு கால்கள் ஏற்படுத்துகின்றவர்களும் ஆனார்கள். எ-று. (கக)

வளைசொரிதரளங்கண்மாற்றுவார்சிலர்
களையெனக்குமுதங்கள்களைகுவார்சில
ரளைதருதேறலுண்டாடுவார்சில
ரிளைஞரோடுழத்தியரெண்ணிலார்களே.

(இ-ள்.) அங்கிருக்கும் எண்ணில்லாத உழத்தியர்கள் தத்தங்கணவர்களுடன்கூடிக்கொண்டு சிலர்கழனிகள்தோறும் சங்குகளால்சொரியப்பட்டிருக்கும்முத்துக்களைவாரிவரப்புகளில்குவித்துவிடுவார்கள்சிலர் அல்லிகளைக்களைகளென்றுபறித்தெறிவார்கள் சிலர் அங்குபொருந்தியிருக்கும் மதுவையுண்டு குரவைக்கூத்தாடுவார்கள். எ-று. (உ0)

வேறு.

காவியுண்கட்கடைசியர்செய்தொறு
மேவிமெல்லடிபேர்த்திடுமென்னடைக்
காவிசோர்ந்திவைதோகையர்க்காயதென்
னேவென்றன்னங்கடுண்ணெனநோக்குமால்.

(இ-ள்.) நீலோற்பலபுட்பம்போல மையுண்ட கண்களையுடைய உழத்தியர்கள் கழனிகள்தோறுஞ்சென்று மிருதுவாகிய தங்கள் பாதங்களைப் பேர்த்துவைக்கும் மெத்தென்றநடையைக் குறித்து அன்னங்கள் ஆவிசோர்ந்துஇந்தநடைகள் இந்தஉழத்தியர்களுக்குண்டாகிய காரணம்யாதோவென்று அச்சத்துடன்நோக்கும். எ-று. (உக)

வேறு.

கோல்வளைக்கணிகையர்கொண்கர்வந்துழீஇ
பாலுறுமளியெனப்பயனில்வான்கதி

ரேனுமெய்யுவகையாலிசையுங்கற்பினோர்
மேலுறுபரிசெனவிளைந்துசாய்ந்தவே.

(இ-ள்.) வளைகள்கோத்தகையினையுடைய கணிகைமாதர்கள் கணவர்தங்களிடத்திற்குவந்தபோது அவர்களிடத்திற்பொருந்திய பொய்யானவிசுவாசத்தைப்போலப்பயனில்லாதபால்முதிராத பெரியகதிர்கள் மெய்யான சந்தோஷத்துடன் தங்கள்கணவர்களிடத்தில் இசைந்திருக்கும் கற்புள்ள மாதர்களுடைய மேன்மைபொருந்திய நல்வணக்கம்போலக் கதிர்கள்முதிர்ந்து சாய்ந்தன. எ-று. (உ௨)

வேறு.

தொண்டரன்பெனுந்தூய்நிலத்துள்ளொழா
மண்டுஞானம்வளர்ந்திடுங்காட்சிபோற்
புண்டரீகவயலிற்பொலிந்திதழ்
விண்டசாலிவிளைந்துவளர்ந்தவே.

(இ-ள்.) அடியார்களுடைய அன்பாகிய பரிசுத்தமுள்ள நிலத்தினிடத்து முளைத்துநிறைந்த ஞானமானது விர்த்தியாகுந் தோற்றம்போலத்தாமரைகள் நிறைந்துள்ள வயல்களில் விளங்கி இதழ்விரிந்த சம்பாப் பயிர்கள் செழுமையாகவிளைந்துவளர்ந்தன. எ-று. (உ௩)

வேறு.

வம்புலாவுநறவுமிழ்கோதைசூழ்மன்னுதோளிணைமள்ளர்குழீஇக்குழீஇ, யும்பர்தெய்வதம்போற்றியவான்றொடவோங்குசாலியைக்கூன்குயத்தொய்யெனத், தம்பதங்கண்மேலாரம்பெயப்பெயத்தடிந்துபோர்செய்ததன்மைகளெண்ணிலாச், செம்பொன்மேருத்திசைகடொறுந்தொறுஞ்சேணளந்துயர்ந்துற்றதுபோன்றவே.

(இ-ள்.) தேனைப்பொழிந்து வாசனைபொருந்திய பூமாலைகள் சூழ்ந்த உறுதியுள்ளவைகளான புஜங்களையுடைய மள்ளர்கள் கூட்டங்கூட்டமாகச் சேர்ந்து இந்திரதெய்வத்தைத்தோத்திரஞ்செய்து ஆகாயத்தையளாவும்படியோங்கிய சம்பாநெற்பயிர்களை ஒய்யென்கிற ஒருவகையோசையுடனே தங்கள்கால்களின்மேல் முத்துக்களைச்சொரியும்படிவளைந்த அரிவாட்களினாலே அறுத்துப்போர்படுத்தியதன்மைகள் அளவில்லாதமாற்றுயர்ந்தபொன்னாகிய மகம்மேருமலைகள் திக்குகள்தோறும் ஆகாயத்தையளந்து பொருந்தியதன்மைபோன்றிருந்தன. எ-று. (உ௪)

முத்துக்கள் ஜனிக்குமிடங்களில் நெற்பயிரும் ஒன்றாம். செம்பொன் பைம்பொன் என்னும்மொழிகளுக்கு மாற்றுயர்ந்தபொன்னென்று நச்சினார்க்கினியார் பொருள் கூறியிருக்கின்றனர்.

வேறு.

வான்முகட்டளவுயருநெற்பெரும்போர்மள்ளர்சாய்த்துவெம் பாண்டில்கடுரந்தே, கான்மிதித்தவைசுலவிடச்சுலவக்கடிதிஞேச்சி வைகைகளாற்கடிந்தே, மேன்மைபெற்றநெற்பண்டியிற்பொழிந்தே வேந்தர்கூறுறவிந்தறம்வளர்க்கும், பான்மையுற்றுளோர்பதிபல நெருங்கிப்பதுமைநாட்டினும்புதுமைகாட்டிடுமே.

(இ-ள்.) ஆகாயமுகடளவும் உயர்ந்த பெரிய நெற்போரைமள்ளர்கள் சரித்து கடாக்களைக்கட்டியடித்து அந்தக்கடாக்கள் கால்களால்மிதித்துச் சூழ்ந்துவரச்சூழ்ந்துவர விரைவாகநெற்ருள்களை மேலோச்சிப்பூமியில்கை களாலும் அடித்து அடித்துத்தூற்றிய மேன்மைபொருந்திய நெற்களை அம்பாரங்குவித்துப்பிச்சைமுதலானவைகள் கிரமப்படி கொடுத்துவிட்டு மற்றமிகுதிநெற்களையளந்து அரசர்களுக்கு ஆறிலொருகடமைகொடுத்து ஐந்துபங்கு நெற்களைப்பண்டியில் சொரிந்துகொண்டுபோய் பிதிர்களுக்கொருபங்கும் கடவுளுக்கொருபங்கும் விருந்தினர்க்கொருபங்கும் சுற்றத்தார்க்கொருபங்கும் தமக்கொருபங்குமாகவகுத்து இல்லறம்வழுவாமல் நடக்குந்தன்மையையுடையவர்கள் வாழும் ஊர்கள்பலநெருங்கி மகாலட்சுமிவாசமாயிருக்கும்நாட்டினைப்பார்க்கிலும் மிகுந்தவற்புதத்தைக் காட்டிக்கொண்டிருக்கும். எ-று. (உரு)

நறவுயிர்த்திடுமெருமலர்ப்பொதும்பரேநண்ணியெங்கணும்விண்ணடைந்தோங்கிடு, மறமுதற்பொருளுன்கையுங்கிளிகளோடளிகள்பாடியவிசைதிசைதேங்கிடு, மறமியற்றியபொருநர்வாள்விதிர்த்தெனவானம்வாவிடுமீனினமேவிடு, நிறைமலர்க்கழுநீர்த்தடமெங்கணுநிலமகட்கெணில்விழிகளாய்நிகழும்.

(இ-ள்.) தேனைச்சொரிகின்ற வாசனைபொருந்திய புட்பங்களையுடைய சோலைகள் விளங்கி ஆகாயத்தை யளாவியிருக்கும். அந்தச்சோலையில் அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்குபொருளையும் கிள்ளைகளுடனே வண்டுகள்பாடுகின்ற இசையானது திக்குகளெங்கும் பரவும். போர்செய்யச் சுத்தவீரர்கள் வாளாயுதத்தை விதிர்த்ததுபோல் வாளைமீன்கூட்டம் ஆகாயத்தில் தாவும். தடாகங்களெங்கும் வரிசைவரிசையாகப் பொருந்திய செங்கழுநீர் மலர்கள் பூமிதேவிக்கு அளவில்லாத நேத்திரங்கள் போலப்பிரகாசித்துக்கொண்டிருக்கும். எ-று. (உசு)

மேவும்வெண்டாளமுகுத்துவிண்டடவும்வியன்கழைக்காட்டினைக்கடிந்து, தூவுமென்னறவப்பூமலர்ப்பொதும்பர்சூழலிற்பற்பலதொ

குத்தே, யோவிடாச்சுவைத்தீஞ்சாருறநெருக்கியுறவடும்புகையெழ
வதனை, வாவுவிண்முகில்களினமெனக்கருதிமயில்கள்வந்துறையிட
மனந்தம்.

(இ-ள்.) யாவராலும் விரும்பப்பட்ட வெண்மைநிறம்பொருந்திய மு
த்துக்களைச்சொரிந்துகொண்டு ஆகாயத்தைத்தடவும்படியான பெரியகருப்
பஞ்சோலையைவெட்டிமேன்மையுள்ள தேனைப்பொழிகின்ற பொலிவினையு
டையபுட்பங்கள் நிறைந்திராநின்ற சோலைகளினிடத்தில் அனேகமாகக்கொ
ண்டுவந்து சேர்த்துநீங்காத மதுரத்தையுடைய சாறுகள் ஒழுகும்படி ஆலை
யில்வைத்தாடி அந்தச்சாறுகளைக்காய்ச்சுதலாலுண்டாகும்புகையானது மே
லோங்கியெழ அதை ஆகாயத்தில் தாவுகின்ற மேகக்கூட்டங்களினினமெ
ன்றுகருதிமயில்கள்வந்து எப்போதும் நீங்காமலிருக்கும் இடங்களும் அனந்
தம் உண்டு. எ-று. (உஎ)

வேறு.

மண்டுபெருங்காதலினலளிபாடமயிலாடிமகிழுங்காலை, யெண்டி
சையுமணங்கமழும்புன்னைகளிற்றுதிமத்திலிருங்கான்மோத, விண்
டரும்புஞ்செங்கனியும்வீழ்வதுமேற்கட்டிகளும்விளங்காநிற்குந், த
ண்டரளமாலிகையுஞ்சிரக்கம்பம்பண்ணியதுதந்தாலொக்கும்.

(இ-ள்.) நிறைந்து மிகுந்துள்ள பேரவாவினால் வண்டுகளிசைபாட
அதைக்கேட்டு மயில்கள் கூத்தாடிச்சந்தோஷித்திருக்குங்காலை அஷ்டதிக்
களவும் மணம்வீசும்படியான மலர்கள்நிறைந்துள்ள புன்னைமரங்களினும்
மாதுளைமரங்களினும் பெரியகாற்றுவீசுவதனால் வெடித்து அதில்நின்று
உதிர்ந்தபுன்னையரும்புகளும் சிவந்தமாதுளம்பழங்களும் வீழ்வது உயர்ந்த
வெல்லக்கட்டிகளையும் பிரகாசியாநின்ற முத்துமாலைகளையும் சிரக்கம்ப
ஞ்செய்துஅந்தபுன்னைமரங்களும் மாதுளைமரங்களும் ஆடுகிறமயில்களுக்கு
க்கொடுப்பதுபோலிருக்கும். எ-று. (உஅ)

புன்னைமரங்களிலிருந்து அரும்பும் மாதுளைமரங்களிலிருந்து பழங்க
ளும் உதிர்வது மயில்கள் ஆடுவதைக்கண்டு சந்தோஷித்து புன்னைமரங்கள்
முத்துமாலையையும் மாதுளைமரங்கள் வெல்லக்கட்டியையுங் கொடுப்பது
போலிருந்தது,

வேறு.

இங்குமண்டலைகள்கொண்டிலங்குகடலென்றிடுங்கமலவோடை
சேர், கொங்குதங்குபுனலுண்டுபின்புமொலிகும்பியங்கதனைவாரி
ப,யங்கைகொண்டுகடதுங்கவெங்கரிகளண்டரண்டமுறவீசுருன்,
குல்சிந்துவினின்மொண்டுகொண்டுபுவிவந்துசிந்துவதைமானுமே

(இ-ள்.) இவ்வுலகத்தில் நெருங்கிய அலைகளைக்கொண்டு விளங்காநின்ற சமுத்திரமென்று சொல்லத்தக்க தாமரைத்தடாகத்திற் பொருந்தியவாசனையுள்ள சலத்தைக் கர்ச்சிக்காநின்ற யானைகள் உண்டு பின்னும்மதத்தைப்பொழியும். உயர்ந்தகொடிய அந்தயானையானது அந்தசலத்தைத் துதிக்கையினால் வாரி அண்டரண்டத்திலே பொருந்தும்படிவீசுவது மேகங்கள்சமுத்திரத்திலே நீரைமொண்டுக்கொண்டு ஆகாசமார்க்கமாய்வந்து பூமியினிடத்து மழைபொழிவதை யொப்பாகும். எ-று. (உகூ)

கொங்குசிந்திநறவஞ்சொரிந்துவரிகொண்டவெண்கமலவாவிசேர், பங்கயங்களொருசங்கமங்கணுறுபண்புகொண்டுநிறைபான்மைதான், மங்குல்வந்துசுதைபொங்குவெண்சுடர்கள்மண்டியெண்டிசையுமாசில்சீர், தங்குமிந்துபலவெண்டவிர்ந்தவொளிதந்தபந்திநிரைபோன்றவே.

(இ-ள்.) வாசனையைவீசித்தேனைச்சொரிந்து வண்டுகள் இசைபாடப்பொருந்திய வெள்ளைத் தாமரைத் தடாகத்திலுள்ள வெள்ளைமலர்கள் ஒருகூட்டமாயிருக்கும் தன்மையானது இராத்திரியில் உதயமாய்வந்த அமிர்தநிறமாய் விளங்குகின்ற வெண்மைநிறமுள்ள கிரணங்கள் நெருங்கிய அஷ்டதிக்குகளிலும் நிறைந்துகுற்றமில்லாதபுகழ்பொருந்திய பலசந்திரர்கள் ஓரிடத்தில் வந்து அளவுநீங்கிய பிரகாசத்தைத்தந்த வரிசைபோலிருக்கின்றது. எ-று. (ந.0)

வேறு.

செம்பொன்மாநிதிக்கோபுரமெங்கணுஞ்சேணுரிஞ்சுபொற்கோபுரமெங்கணும், வம்புலாமலரோடைகளெங்கணுமதங்கொள்சிந்துரவோடைகளெங்கணு, மும்பர்மேவிரதங்களேயெங்கணுமுவந்துசெய்விரதங்களேயெங்கணு, நம்பனூர்திருநாட்டிசையெங்கணுநவில்வதத்திருநாட்டிசையெங்கணும்.

(இ-ள்.) மாற்றுயர்ந்த பொன்முதலாகிய திரவியங்கள் நிறைந்துள்ள இராஜநகரங்கள் அந்தநாட்டிலெங்குமிருக்கும். ஆகாயத்தை யளாவுகின்ற பொன்னாலாகிய கோபுரவாயில்கள் எங்குமிருக்கும். வாசனையைவீசுகின்ற தாமரைமலர்கள் நிறைந்துள்ள நீரோடைகளெங்குமிருக்கும். மதநீரைப்பொழிகின்றயானைகளின் நெற்றிகளில் கட்டியிராநின்றபொன்பட்டங்கள் எங்கும்பிரகாசித்துக்கொண்டிருக்கும். தேவர்கள்செல்லுகின்ற விமானங்கள் எங்கணுமிருக்கும். அங்கிருப்பவர்கள் சந்தோஷித்து அநுஷ்டிக்கும் விரதங்களின்சடங்குகள் எங்குமிருக்கும். சிவபிரான் மகோற்சவச்சிறப்பு அஷ்டதிக்குகளிலும்பிரகாசித்துக்கொண்டிருக்கும். செல்வநிறைந்துள்ள அந்தத்தொண்டைநாட்டின்பெருமை எங்குஞ் சொல்லப்படுவது. எ-று (நக)

வேறு.

கோலமாமறைக்கிடைகளேயெங்கணுங்குலவுமானிரைக்கிடைக ளேயெங்கணுஞ், சிலமாதவர்சங்கமேயெங்கணுஞ்செய்யுலாவருசங் கமேயெங்கணுங், கூலஞ்சாடியகட்பலவெங்கணுங்குழைகிழித்திடு ங்கட்பலவெங்கணுங், காலகாலன்வாழ்க்கைத்தலமெங்கணுங்கனக மாரிபெய்கைத்தலமெங்கணும்.

(இ-ள்.) அழகுள்ளவைகளாய்ப்பெருமைபொருந்திய அந்தநாட்டினி டமுழுதும் வேதப்பள்ளிக்கூடமெங்குமிருக்கும். அந்தநாட்டிலுள்ளகழ னிகளெங்கும்கிடைகட்டிய பசுக்கூட்டமேயிருக்கும். அந்தநாடெங்கும்ந ல்லொழுக்கமுள்ளதவசிகளுடையகூட்டமேயிருக்கும். கழனிகளெங்கணு ம் ஊர்கின்றசங்குகளே யிருக்கும். குளக்கரைகளையுடைக்கும்படியான தேனைப்பொழிகின்ற பலாமரங்களெங்குமிருக்கும். காதையுருவிச்செல்லு ம்படியான நேத்திரங்கள்பலவிருக்கும் அந்தநாடெங்கும். காலசங்கார மூர்த்தியாகிய சிவபிரான் திருக்கோயில்கொண்டு வீற்றிருக்குந் தலங்களெ ங்குமிருக்கும். பிராமணர்களுக்குச் சொர்னமழைதானமாகக் கொடுக்கா நின்ற கைத்தலங்களெங்குமிருக்கும். எ-று. (௩௨)

குழைகிழிக்கும்கட்பலவென்றதனால் மிகுந்த அழகுள்ளமாதர்களிருப் பார்களென்றும் கனகமாரிபெய்கைத்தலமென்றதனால் தானங்கொடுக்கு ம்கைகளையுடைய தருமவான்கள் அநேகர் இருப்பார்களென்றும் அறிந்து கொள்க.

வெறு.

வேதமோர்ந்துமகங்களியற்றியேவேதரென்னவாழ்விப்பிரரெ ங் ஙணு,மாதவங்களாலைம்புலன்காய்ந்தருண்மன்னிவாழ்சைவமன்ன வரெங்கணுங், காதன்மங்கையர்வேட்குனர்வேட்கையின்காட்சிம ல்குகளிவிழாவெங்கணுங், கோதில்பங்கயத்துள்ளலர்காவிகள்கொ ண்டுலாயகொடிகளேயெங்கணும்.

(இ-ள்.) வேதங்களையோதியுணர்ந்து அந்தவேதவிதிப்படி யாகங்க ள்பலசெய்து பிரமதேவன்போலவாழ்கின்ற பிராமணர்கள் அந்தநாட்டி லெங்கும் இருக்கின்றார்கள். பெருமைபொருந்திய தவங்களினாலே பஞ் சேந்திரியங்களையும் வென்றுஞானத்தையுடைய அழியாதவாழ்விலே வாழ்கின்றசைவசமயத்தலைவர்கள் அந்தநாடெங்குமிருப்பார்கள். தங்களிட த்தில் ஆசையுள்ளமாதர்களைக்கல்யாணஞ்செய்துகொள்ளுகின்றவர்களுடை யவேட்கையின்காட்சிபொருந்திய சிறப்புள்ளமணக்கோலங்கள் எங்குமிருக்

கும்.குற்றமில்லாததாமரைமலருக்குள்மலர்ந்திருக்கும்நீலோற்பலமலர்களைக் கொண்டுசஞ்சரிக்கும் பூங்கொடிகள் அந்தநாடெங்குமிருக்கும். எ-று. (௩௩)

பஞ்சேந்திரியங்களாவன:—மெய் வாய் கண் மூக்கு செவி என்பவைகளாம். வேதர்போலென்பதனால் ஒவ்வொருவிப்பிரரும் ஒவ்வொருபிரமன்போலிருக்கிறார்களென்றதுகருத்து. கோகில்பங்கயத்துள்ளலர்காவிகள் கொண்டுலாயகொடிகளே யெங்கணும் என்றதற்குக் குற்றமில்லாத செந்தாமரைமலரையொத்தமுகத்தினிடத்தில் விளங்குகின்ற நீலோற்பலமலர்கள்போன்ற கண்களைப்பெற்றுக்கொண்டு பூங்கொடிநிகர்த்தமாதர்கள் சஞ்சரிப்பார்களெனப்பொருள்படுதல்காண்க.

அளித்திடப்புன்பிறப்பாகும்பாலையாமடவிவெங்கனலங்கவைமாழ்கியே, யொளித்திடச்சுகப்பேரின்பமூழ்கவேயுமதுதாள்சரணென்றடைந்தோரெலாங்,களித்திடப்பரமானந்தவாரிதிகாட்டிநீவிர்கரிசகன்றேடவே,குளித்திடுங்களென்றீயுமெய்ஞ்ஞானமார்குரவர்வாழுங்குகைமடமெங்கணும்.

(இ-ள்.) அளிக்கக்கீழ்ப்பட்டபிறப்பாகிய பாலைநிலக்காட்டுத்தீக்குள் அகப்பட்டுக்கொண்டு தங்களைரட்சிக்கும்படி துக்கித்து அது ஒழியவும் சுகமாகியபேரின்பத்தில் மூழ்கவும் உமது திருவடிகளே அடைக்கலமென்று அடைந்தசீடர்களெல்லாம் களிக்கும்படி பரமானந்தசமுத்திரத்தைக்காண்பித்து நீங்கள் குற்றமானதுநீங்கி ஒடும்படி இதில்மூழ்குங்களென்றுதந்தருளுகின்ற மெய்ஞ்ஞானம் நிறைந்த ஆசாரியர்கள் வாழ்கின்ற குகைகளும்மடங்களும் அந்தநாடெங்குமிருக்கும். எ-று. (௩௪

கழிந்தபேரழகாலவண்யாவருங்காமன்றேவியுங்காமுறமேவுவா, ரொழிந்துநல்குரவெண்வளமுற்றலாலோங்குமாநிதிக்கோனெனவாழ்குவார், பொழிந்தகல்விப்புலமைவளத்தினற்பொதியமாமுனிபோலவிளங்குவார், செழுந்திருத்தொண்டைநாட்டின்வளமியாஞ்சேரவோதுந்திறமெங்ஙனுமரோ.

(இ-ள்.) அங்கிருப்பவர்யாவரும் மிகுந்தசவுந்தரிய முள்ளவர்களாயிருப்பதனால் மன்மதன்தேவியாகிய இரதியும் ஆசைகொள்ளும்படி வாழ்வார்கள். வறுமைநீங்கியஅஷ்டசம்பத்துக்களையும்பொருந்தியிருப்பதனாலே நிதியினாலுயர்ந்தகுபேரன்போலவாழ்வார்கள்.மிகுந்த கல்விப்பயிற்சியின்வண்மையினாலேபொதியமலையிலிருக்கும் அகஸ்தியர்போல விளங்குவார்கள். செழுமையுள்ள திருத்தொண்டைநாட்டின் வளப்பங்கள் ஒன்று ஒழியாமல் சேரச்சொல்லுதற்கு எவ்வாறுமுடியும். எ-று. (௩௫)

காமமுறஎன்னுஞ்சொல்காமுற எனநின்றது. அஷ்டசம்பத்தாவன:— இராசச்சம்பத்து மக்கட்சம்பத்து பந்துசம்பத்து கனகச்சம்பத்து இரத்தினச்சம்பத்துதானியச்சம்பத்து வாகனச்சம்பத்து அடிமைச்சம்பத்து என்பவைகளாம்.

நாட்டுச்சருக்கம் முற்றும்.

ஆக சருக்கம் உ-க்கு-திருவிருத்தம்-௬௮.

வடக்கு காளத்தி தெற்கு பெண்ணையாறு மேற்கு பவளமலை கிழக்கு சமுத்திரம் என்னும் இந்தநாலு எல்லைக்குட்பட்டு இருபது காதம் சுற்றளவுடையது தொண்டைநாடாம்.



## நகரச்சருக்கம்.

துங்கமாகியதொண்டைநன்னாட்டிடைப்
பொங்கும்வெள்ளிப்பொருப்பிலிருந்தருண்
மங்கைபாகன்மகிழவெக்காலமுந்
தங்குமோர்தலமுண்டதுசாற்றுவாம்.

(இ-ள்.) ஊழிதோறும் ஓங்குகின்ற வெள்ளிமலையாகிய கைலாயகிரியில் திருவோலக்கமாக வீற்றிருந்தருளும் பார்வதிபாகராகிய ஸ்ரீ நீலகண்டமூர்த்தியானவர் மகிழ்ச்சியடையும்படி எக்காலமும் வீற்றிருந்தருளும் ஒருதலம் இப்போதுநாம் சொல்லிவந்தபரிசுத்தமாகிய தொண்டைநாட்டினிடத்தில் இருக்கின்றது. அந்தத்தலத்தின் வளப்பத்தை இனிச்சொல்லுவாம். எ-று. (க)

வேறு.

புன்னாகவனத்தெழில்சேர்கயிலைமலையுமைமயிலாய்ப்பூசைசெய்யு
நன்னமத்தான்மயிலையெனவிளங்குமூதூரந்நகரைக்காணிற்
பொன்னருந்திருமார்பன்முதலாயதேவருமத்தேவர்காதன் [தோ
மின்னாருங்கற்பகப்பூமழைபொழிந்துதுதிப்பர்நின்றேவிசும்பின்மா

(இ-ள்.) அழகுபொருந்திய கைலாயகிரியில் வீற்றிருக்கும் பார்வதிதேவியார் மயிலாகவந்துசுரபுன்னைவிருக்ஷங்கள் நிறைந்தவனத்தில் பூசைசெய்தநல்லகாரணத்தினாலே பழமையாகிய திருமயிலாபுரியென வழங்குகின்ற அந்தத்தலத்தைத்தரிசித்தவளவில் திருமகள்வாசமாயிராநின்ற மார்பினையுடைய மாயவன்முதலாகியதேவரும் அவர்கள் விரும்புகின்ற மனைவியர்களும் ஆகாயத்திலிருந்து கற்பகப்பூமழைபொழிந்து துதிசெய்வார்கள்,

அவிரொளியினிறமெல்லாஞ்சுடிகையின்மேன்மணிகொழிக்கு மரவின்வேந்தும், புவிபுகழுந்திருமயிலாபுரியினியல்வளங்களெல்லா ம்புகழ்ந்துகூறிற், கவின்முழுதுஞ்சொலிமுடியாதொருசிறிதுபுகல்வ னெனக்கணித்தென்னுவா, னவிலுமொருசிறுவன்யான்புகல்வதரு ட்புலவர்முனகையாமன்றே.

(இ-ள்) பிரகாசியாநின்ற சோதியின் நிறத்தையெல்லாம் விளக்கிக் கொண்டிருக்கும் மாணிக்கங்களைத்தன்னுச்சிக்கொண்டையில் வைத்துக்கொ ண்டிராநின்ற ஆதிசேஷன் உலகத்தாராற்புகழப்பட்ட திருமயிலையென்னும் நகரத்திற்பொருந்திய வளப்பங்களையெல்லாம்புகழ்ந்து சொல்லுவானுனல் அவனுலும்சொல்லிமுடியாது,அங்ஙனமிருக்க, அதில் ஒருசிறிதுசொல்லுவே னென்று நிச்சயித்து யாவராலுஞ்சொல்லப்படுகிற கல்வியுணர்ச்சியில்லாச் சிறியவனுகிய நான்என்னுவிலுலேகிருபைகுடிகொண்டபுலவர்கள்முன்சொ ல்வதுநகைப்புக்கிடமாகும். எ-று. (கூ)

வாசவனுமப்பதியின்வளங்காணிற்பொன்னகரின்மருவானுள்ள த், தேசவனுமயன்காணின்மனோவதியின்மேற்காதல்சிறிதும்வையா ன், கேசவன்கண்டாற்படரான்வைகுந்தந்தனிலெனவேகிளக்கில் யார்க்கும், பேசவரியதுவன்றேசெழிக்குமயிலாபுரியின்பெருமை யம்மா.

(இ-ள்.) திருமயிலையென்னும்நகரத்தின்வளப்பத்தைத்தேவேந்திரனு ம் காண்பானுகில் பொன்னுலகத்தில்வாசஞ்செய்யான்.நிர்மலமனதையுடை யவனுகிய பிரமதேவன் காண்பானுகில் மனோவதியென்னுந் தன்னகரத்திற் சிறிதும் விருப்பம்வையான். மாயவன்கண்டால் இதைவிட்டு வைகுந்தத்திற் சேரானென்றுசொன்னுல் நாள்தோறுஞ்செழிப்புள்ளதாயிராநின்ற மயிலா புரியின்பெருமையானதுயாவருக்கும் சொல்லுதல் அருமையல்லவா? எ-று.

வேறு.

இரும்புனற்பழனமயிலைமாநகரிலெண்ணிலாமணிவெயிலெறிக்கு மரும்பொனினெயிலுமரவுலகிறுத்தவகழியுங்குழீஇயதைத்தெரிக்கிற் பெரும்புறச்சலதிசக்கரவாகப்பிறங்கலோடமர்செயவுடைந்தே வருந்திவந்தரனைவழுத்தியதிறனும்வந்ததுவளைத்ததும்போலாம்.

(இ-ள்,) மிகுந்தநீர்வளமுள்ள வயல்கள்சூழ்ந்த பெருமைபொருந்திய திருமயிலையினுடைய அளவில்லாதரத்தினங்கள்ஒளியைவீசுகின்ற கிடைத் தற்கரிய பொன்னுலாகிய திருமதிலும் நாகலோகத்தளவும் ஆழ்ந்திராநின்ற நீரையுடைய அகழியும்கூடியிருப்பதைச்சொல்லுமிடத்திற் பெரும்புறக்கட

லானதுசக்கரவாளகிரியுடனேபோர்செய்ய அந்தசக்கரவாளகிரியானதுதோற்றுவருத்தமடைந்துகபாலீசுவரரைத் தோத்திரஞ்செய்யுந்தன்மையும் பெரும்புறக்கடலானதுவந்து அந்தசக்கரவாளகிரியை வளைத்துக்கொண்டதன்மையும் போலிருக்கின்றது. எ-று. (௫)

விண்ணிலெணவரிதாய்த்தனித்தனியுதித்தேவிளங்கியவருக்கரிற்சிறந்தே, மணிவெயில்கொழிக்குங்கனகநொச்சியின்மேல்வதிந்திடும்விடைக்கொடித்துளக்க,மணியெலாந்திரண்டவிமானங்கள்செலுத்திவானவர்மயிலையிலரனைப், பணியவந்திடுங்கான்மேனிவேர்புலரப்பண்ணுறும்விசிறியாயினவே.

(இ-ள்) தங்கள்பெருமையை யாரும் எண்ணுதற்கரிதாய் தனித்தனி ஆகாயத்தில் உதயமாய்விளங்கிய பனிரெண்டுசூரியர்களைப்பார்க்கிலும் சிறந்தரத்தினங்கள் ஒளிவீசிக்கொண்டிருக்கும் பொன்னாலாகிய மதிலின்மேல் பொருந்தியிருக்கிற ரிஷபக்கொடியினுடைய அசைவானது ரத்தினங்களெல்லாம் திரண்டு பதிக்கப்பட்டிருக்கிற விமானங்களைச் செலுத்திக்கொண்டு தேவர்கள் திருமயிலையில் வீற்றிருந்தருளுங்கபாலீசுரரைத்தொழும்படிவரும்போது அவர்களுடைய சரீரத்திலுண்டாகியவியர்வையுலரும்படி வீசப்படுகிறவிசிறியின் அசைவுபோலிருக்கின்றது. எ-று. (௬)

கான்றுபேரொளிகடமமகன்றொடக்களங்கறுங்கனகராசிகளாற், றோன்றுசோதியின்மாமணிகளாற்றுளங்குஞ்சோமகாந்தத்தினாற்றெருத்தே, யான்றநூல்வல்லோர்தரைத்தலைச்சமைத்தேயந்தரமுகடுளைந்திடவே, யீன்றுநின்றிடுமாமண்டபத்திரள்கள்கெழுமுவீதிகளையாரளப்பார்.

(இ-ள்) உலகத்திலே சூழும் இருளானது நீங்கியோடும்படி மிகுந்தபிரகாசங்களை வீசக்களங்கமற்றிராநின்ற பொன்கூட்டத்தினாலும் எங்கும் விளக்கும்படி தோன்றுகிற சோதியினையுடைய பெரியரத்தினங்களினாலும் விளங்குகின்ற சந்திரகாந்தக்கற்களினாலும் சிற்பசாஸ்திரத்தில் வல்லவர்களால் இப்பூமியினிடத்துக் கட்டப்பட்டு ஆகாயமுகடு உடையும்படி கிழித்துக் கொண்டிராநின்ற பெரியமண்டபக்கூட்டங்கள் பொருந்தியிருக்கிறதிருவீதிகளை யாவர் அளவிடத்தக்கவர் எ-று. (௭)

வேறு.

எண்டிசையும்புகழ்விரிக்குமப்பதியிற்கனகநிலவெறியாவெங்கு,மண்டபெருங்கோபுரத்தினுனியினிளஞ்சிகண்டியுளமகிழ்ந்துலாவ, றெண்டிரைசூழுலகிலிலகிமையபருப்பதத்தினுயர்சிகரமீதி, லண்டமெலாங்கடந்தவடன்பாங்கியரோடன்பின்விளையாடன்மானும்.

(இ-ள்.) அஷ்டதிக்குகளிலும் தன்புகழைப் பரப்புகிற திருமயிலை யென்னுந்தலத்தில் எங்கும் பொன்மயமாய்ப் பிரகாசத்தை வீசிக்கொண்டு நெருங்கி யிராநின்ற கோபுரச்சிகரங்களில் இளமைதங்கிய மயில்கள் மன மகிழ்ந்து உலாவிக்கொண்டிருப்பது தெளிவாகியசமுத்திரஞ்சூழ்ந்த இவ்வுலகத்தில் விளங்கும் இமயமலையினுடைய சிகரத்தின்மேல் பல்லாயிரம்அண்டங்களையெல்லாங் கடந்தபராசத்தியானவள் தன்பாங்கியருடன் கூடி அன்புடன் அவ்விடத்தில் விளையாடுவதையொப்பாகும். எ-று. (அ)

அங்கியெனப்பிரபைவிடும்வித்துருமத்தூணிறுத்தியதன்கீழ் மேலும், பொங்குமொளிமுழுநீலமணிபரப்பிநித்திலமும்பொதிந்திவ் வாறு, தங்குமணிமாடங்கடம்மெழினும்பகரின்முன்னாட்சபதங்கூறிப், பங்கயனுநெடுமாலுந்தேடவரனன்றுநின்றபண்பாமன்னே.

(இ-ள்.) அக்கினியைப்போற் பிரகாசத்தைவீசுகின்ற பவளத்தூணிறுத்தி அந்தத்தூணின்கீழே ஒளிமிகுந்த பெரிய இந்திரநீலமணிகளைப்பரப்பி மேற்புறத்தில்முத்துக்களைப்பரப்பி இவ்வண்ணம் மணிகள்தங்கிய வீடுகளினுடைய அழகை நாம்சொல்லுமிடத்து ஆதிகாலத்தில்சபதங்கூறிக்கொண்டுபிரமதேவனு மகாவிஷ்ணுவும் திருமுடியையும்திருவடியையும் தேடும்படி சிவபிரான் நின்ற அக்கினிஸ்தம்பம்போலாம். எ-று. (கூ)

அடியில் நீலரத்தினங்களையும் மேலேமுத்துகளையும் பதித்துப் பவளத்தால் வைத்திருக்கப்பட்ட தூண்கள், திருமுடியைக்காணப் பிரமதேவன் அன்னப்பக்ஷியாய் மேலேசெல்லவும் திருவடிகளைக் காணமகாவிஷ்ணுவானவர் பன்றிவடிவமாய்ப் பூமியைப்பிளந்துகொண்டு போகவும் மத்தியில் நின்ற அக்கினிஸ்தம்பத்தையொத்திருந்தது என்பது தாற்பரியம்.

வேறு.

வெண்ணிலாமணிமேடையின்வாழ்மினார்
தண்ணுலாவதனஞ்சாளரந்தொறு
மண்ணிலாடவர்மாமதியேயிவ
ணெண்ணிலாமதியென்னவிளங்குமால்.

(இ-ள்.) வெண்மைநிறமுள்ள சந்திரகாந்தக்கற்களாலாகிய உப்பரிகைகளின்மேலுலாவும்மாதர்களுடையகுளிர்ச்சிபொருந்தியமுகங்களைப்பலசாளரவாயில்கள்தோறும் அந்தநகரத்திலிருக்கும்ஆடவர்கள்கண்டுஇவைகள்விண்ணில் சஞ்சரிக்குஞ் சந்திரனே இவ்விடத்தில் அளவில்லாத சந்திரனாகவந்திருக்கின்றதென்று சொல்லத்தக்கதாகப் பிரகாசிக்கும். எ-று. (௰)

வேறு.

ஆரணமுழங்குந்தெய்வவந்தணர்மறுகின்வான்போல்
வாரணமுழங்குமன்னர்மன்னுமாவணத்தினம்பொற்

ஞேரணம்வணிகர்வீதிசூழுமிந்நகரமொன்றே
நாரணனளகைவேந்தன்வளமெலாநல்குமாதோ.

(இ-ள்.) தெய்வத்தன்மையுள்ள பிராமணர்களிருக்கின்ற வீதிகளெங்கும் வேதங்களொலித்துக்கொண்டிருக்கும். அரசர்கள் வாசமாயிருக்கிற வீதிகளெங்கும் மேகம்போலயானைகள் முழங்கிக்கொண்டிருக்கும் வைசியர்கள் வாசமாயிருக்கிற வீதிகளில் அழகியபொன்னாலாகிய தோரணங்கள் சூழ்ந்திருக்கும். இந்த ஒருநகரமே மகாவிஷ்ணுவினுடைய வைகுந்த்திலிருக்கும் வளப்பங்களையும் குபேரன்பட்டணமாகிய அளகாபுரியின் வளப்பங்களையுங்கொடுக்கும். எ-று. (கக)

வேதியர்முத்தீயாற்றும்விழுத்தகுதூமத்தாலு
மாதர்பூங்குழற்செருக்கின்மருங்ககிற்றூமத்தாலுஞ்
சோதிவான்கதிரின்றேவைத்தோய்ந்தசூளிகையினுச்சி
மீதுகண்படுக்கும்வெள்ளைமேகங்கார்மேகமாமால்.

(இ-ள்.) பிராமணர்கள் மூன்று அக்கினிவளர்த்துச் செய்யும் ஓமத்திலுண்டாகிய மேன்மையமைந்த புகையினாலும் அந்நகரத்திலிருக்கும் மாதர்களுடைய பொலிவாகிய அளகச்செருக்கிற் கூட்டும் அகிற்கூட்டின்புகையினாலும் மிகுந்த பிரகாசத்துடன் ஆகாயத்தில்செல்லுகின்ற சூரியதேவனைப் பொருந்திய உயரமுள்ள மண்டபங்களினுச்சியிலே நித்திரைசெய்துகொண்டிருக்கும் வெண்மை நிறமுள்ள மேகமும் கருமை நிறமுள்ளமேகம்போற்காணப்படும். எ-று. (கஉ)

முத்தீயாவது:—காருகபத்தியம், ஆகவனீயம், தக்ஷணாக்கினியம் என்பவைகளாம்.

மாநிலங்காக்குமன்னர்வாழ்மணிமறுகினுற்றே
வானுறைமுகிலைக்கோட்டாற்புடைத்திடுமத்தவேழத்
தானம்வல்லிகள்பூண்டாளாற்றரணியுற்றூருந்தன்மை
நீனிறப்பொற்றைமீதினின்றிழியருவியரமால்.

(இ-ள்.) இந்நிலவுலகத்தைக்காக்கும் அரசர்கள்வாழ்கின்ற ரத்தினங்கள் நிறைந்துள்ள வீதிகளில் மேவி ஆகாயத்திற்சஞ்சரிக்கும் மேகத்தைத் தம்முடையகொம்புகளினாலே குத்துகின்றமத்தகத்தையுடையயானைகளின் மதநீரானது சங்கிலிகள் பூண்டிருக்குங் காலின்வழியாகப் பூமியினிடத்திற்பொருந்தி ஆறுபோலப்பெருகுந்தன்மை கருமைநிறமுள்ள சிறுகுன்றுகளின் மேலிருந்து இழிகின்ற அருவிபோலாகும். எ-று. (கந)

ஏருழவோர்கள்வாழுமெழிறருமணிவீதிக்கண்
சீருறுசெந்நெற்குன்றஞ்செழுங்கழைக்கட்டிக்குன்றம்
பாருறுசெம்பொற்குன்றம்பன்மணிக்குன்றம்போன்றே
தேருதற்கரிதாய்த்தோன்றச்சிறந்திடுமுழவர்வீதி.

(இ-ள்.) ஏர்பூட்டியுழுகின்ற உழவர்கள்வாழும் அழகுவாய்ந்த ரத்தினங்களால் அலங்காரஞ்செய்யப்பட்டிருக்கும் வீதிகளினிடத்தில் சிறப்பமைந்த செந்நெற்போர்களுஞ்செழுமையுள்ளகரும்பின்கட்டியாகிய வெல்லக்குவியல்களும் பூமியினிடத்திற் பொருந்திய செம்பொன்மலையினையும் பலரத்தினங்களின்குவியல்களையும் ஒத்து இன்னதென்று தெளிவதற்கு அரிதாய்த்தோன்றும்படி அவ்வுழவர்வீதிகள்உயர்வடைந்திருக்கும். எ-று. ()

விரிகதிர்விடும்பொன்மாடவியன்மணிமுன்றிறோறு
மரியபூங்கதலிசேர்த்தியாரமாலிகைகளுாற்றி
யெரிமணித்தீபமேற்றியிலகுசெஞ்சாந்தமூற்றிப்
பரிவுடன்பனிநீர்க்கும்பம்பாவையரமைப்பாரெங்கும்.

(இ-ள்.) பரந்தகதிர்களைவிடுகின்ற பொன்னாலாகிய வீடுகளின் பெரிய ரத்தினங்கள் நிறைந்திராநின்ற முன்றில்கடோறும் யாவர்க்குங் கிடைத்தற்கரிய பொலிவுள்ள வாழைமரங்கள் நாட்டியும் முத்துமாலைகளைத் தொங்கவிட்டும் பிரகாசியாநின்ற இரத்தினதீபமேற்றியும் விளங்குகின்ற செஞ்சந்தனக்குழம்புகளையூற்றியும் விருப்பத்துடன்குளிர்ச்சிபொருந்திய நீர்நிறைந்த பூரணகும்பங்களை வீதிகளில் மாதர்கள்வைப்பார்கள். எ-று. (கரு)

தளர்ந்துநுண்ணிடைகளாடச்சரிகுழலளிகள்பாட
வளந்தருவதனசீதமதியமுத்திறைப்பமின்னிற்
றுளங்கிடவிலகுமேனிசூழ்ந்துமின்னார்களாட
விளங்குபல்லியங்களார்க்கும்விழாவணிமறுகுதோறும்.

(இ-ள்.) நுண்ணிய இடைகள் ஒசிந்து ஆடவும் சரிந்த அளகபாரத்தில் வண்டுகள் இசைபாடவும் வளப்பம்பொருந்திய முகங்களாகிய குளிர்ந்த சந்திரர்கள் முத்துப்போல் வியர்வைகளைச்சிந்தவும் மின்னலைப்போற் பிரகாசிக்கும்படிவிளங்குகின்ற மேன்மையையுடைய மாதர்கள்பலர்கூடிக்கொண்டுஆடவும்பலவாத்தியங்கள் ஒலிக்காநின்ற மணக்கோலங்கள்வீதிகள்தோறும் நிறைந்திருக்கும். எ-று. (கசு)

விழாவணி என்பதற்கு ஒருபுறம் மணக்கோலச்சிறப்பும் மற்றொருபுறம் திருவிழாச்சிறப்பும் நிறைந்திருக்கு மெனினுமமையும்.

புதுமதுமழைபோற்சிந்தப்பொதியவிழ்பாளைப்பூக
முதுபழத்தெங்கின்சோலைமொய்த்துவிண்ணருந்தலாலே
விதுவொளிதபனன்சோதிமேவாவங்கரின்மாடக்
கதிர்மணியொளியுமுத்தின்சோதியுங்காய்வதம்மா.

(இ-ள்.) புதியதேனைமேகம்வருஷிப்பதுபோற்சொரியஅரும்புகள்அவிழ்ந்த பாளைகளையுடைய கமுகமரங்களும் முதிர்ந்த பழங்களையுடைய தென்னமரச் சோலைகளும் நெருங்கி ஆகாயத்தை விழுங்கி மறைப்பதினால் சந்திரப்பிரகாசமும் சூரியப்பிரகாசமும் விளங்காத அந்தநகரத்திலுள்ள வீடுகள்தோறும் பதித்திருக்குங் கிரணங்களுள்ள மாணிக்கத்தினொளியும்முத்தின்பிரகாசமும் இருள்சூழவொட்டாமல்பிரகாசித்துக்கொண்டிருக்கும். எ-று. (கஎ)

சீரணிமயிலைவாழுஞ்சிவன்றனைத்தொழுதங்குள்ளா
ராரணன்பதம்வேட்டாலுமன்பொடுவாக்கிறந்த
காரணன்பதம்வேட்டாலுங்கட்கடையதனுலீயும்
பூரணஞானச்செல்வப்புண்ணியத்தவரனேகர்.

(இ-ள்.) சிறப்புப்பொருந்திய திருமயிலையில் திருக்கோயில்கொண்டிராநின்ற கபாலீசுரரைப்பணிந்து அந்தக்ஷேத்திரத்தில் வாசமாயிருக்கும் அன்பர்கள் பிரமதேவனுடைய பதவியைவிரும்பினாலும் மனவாக்குக்கெட்டாத உலககாரணனாகிய சிவபிரான்பதவியை அன்பொடுவிரும்பினாலும் கடாக்ஷத்தினாற் பாலித்தருளும் பூரணமாகியஞானச்செல்வத்தை யுடைய புண்ணியதவசிகள் அனேகர் இருக்கின்றார்கள். எ-று. (கஅ)

வேறு.

வித்தகநின்மலனுரைத்தவேதமுமாகமவிதியும்விளங்கவாய்ந்தே, பொத்தையுடலினைப்பொருளன்றெனவெண்ணிப்புலனைந்தும் வென்றனுதி, மூத்தனடிகண்டிதையமுளரியதுதனிலேற்றுமோகநீங்கிச், சித்திரமேயெனவிருக்குஞ்சிவயோகர்திருமடமுந்திகழுமெங்கும்.

(இ-ள்.) ஞானசொரூபனும் நின்மலனுமாகிய சிவபிரான் அருளிச்செய்த வேதவிதிகளையும் ஆகமவிதிகளையுந் தங்களுணர்ச்சியிற் பூரணமாய் விளங்கும்படி ஆராய்ச்சிசெய்து பருத்த இவ்வுடலானது பொய்யேயன்றி நிலையானபொருளல்ல வென்றுகருதிஐம்புலன்களையும் வென்று அனுதி முத்தனென்னும் சிவபிரானுடையதிருவடிகளைத் தரிசித்துத் தங்கள் இதயதாமரைமலரில் வைத்துக்கொண்டு மோகநீங்கி எழுதிய சித்திரம்போல நிஷ்டையிலிருக்கும் சிவயோகிகளுடைய திருமடங்களும் அந்தநகரத்தில் எங்கணும் இருக்கும். எ-று. (கக)

புத்திரனையில்லார்க்குப்பூதலத்தும்பயனிலைபொன்னுலகின்கண்ணு, மெத்தலத்தும்பயனிலையென்றெண்ணிமலமில்லாதவிறைவன்றாளைச், சித்தமுறவைத்தவன்றன்றிருவருளாற்றும்பயந்தசிறுவர்தம்மை;முத்தனையமூரலினார்பாராட்டுமிசைபுகுந்துமுழங்கும்வானும்

(இ-ள்) புத்திரனில்லாதவர்களுக்கு இந்தப்பூலோகத்திலும் பயனில்லை சொர்க்கலோகத்தினிடத்தும் மற்ற எந்தலோகத்தினிடத்தும் பயனில்லையேயென்றுகருதி அந்தப்புத்திரனைப் பெறும்நிமித்தம் நிருமலனாகிய சிவபிரானுடைய திருவடிகளைத்தங்கள் இருதயத்தில் பொருந்தும்படிவைத்துக்கொண்டுவிரதங்களையனுஷ்டித்து அவருடையதிருவருளினாலே தாம்பெற்ற புத்திரர்களை முத்துக்களையொத்த தந்தங்களையுடைய மாதர்கள்கொஞ்சிச்சீராட்டுகின்ற ஓசையானதுசென்றுசொர்க்கலோகத்திலும் ஒலித்துக்கொண்டிருக்கும். எ-று. (உ0)

அரியதவமுன்முயன்றேமாதலினாலமலேசன்கோயில்புக்கே
யுரிமையுறத்தரிசிக்குமுடலெடுத்தோமென்றுளத்தினுகையுந்றே
கரதலத்தான்மலர்தூவிக்கடவுளடிக்கமலவிணைபணிந்துகையாற்
பரிவுறவேதொண்டுசெயுமகத்தடியார்வாழ்மனைகள்பலவேபாங்கால்.

(இ-ள்.) முன்சென்மத்தில் அருமையாகியதவஞ்செய்தோமாகையால் நிருமலனாகிய கபாலீசுரருடைய திருக்கோயிலிற் சென்று ஆட்சிபொருந்தத்தரிசிக்கும்படியான இந்தச்சரீரத்தைப் பெற்றோமென்று மனதிற்சந்தோஷத்தையடைந்து திருப்பள்ளித்தாமங்கொய்து வந்து அந்தசிவபிரானுடைய திருவடிகளில் தம்முடையகைகளால் அருச்சித்துப்பணிந்து ஒழுங்காகத்திரிகரணங்களினாலும் அன்போடு தொண்டுசெய்யும்படியான சித்தமுள்ளதொண்டர்கள் நன்மையுடன்வாழ்கின்ற திருமாளிகைகளும் அனேகமுண்டு. எ-று. (உக)

அறுத்தாசையுடலகத்துமமலனுக்கன்பாய்விமலவுருத்திராக்கம்
பொறுத்தாரமெனப்புதியசாந்தமெனவெண்ணீறுபொலியப்பூசி
யொறுத்தாறுவகைக்குறும்புமுயிர்க்குயிராய்நின்றவற்றிற்குரியபோக
நிறுத்தானைப்பூசிக்குஞ்சிவநேசர்திருமடங்கணிகழுமெங்கும்.

(இ-ள்.) இந்த உடலினிடத்திலிருக்கும் ஆசையினையும் நிவிர்த்திசெய்து சிவபிரானிடத்தில் அன்புள்ளவர்களாய்ப் பரிசுத்தமுள்ள ருத்திராக்ஷங்களை ஆபரணம்போலாக அணிந்தும் புதியசந்தனக்குழம்புபோலச்சரீரத்தில்

விளங்கும்படி விபூதிபூசிக்கொண்டும் அறுவகைக்குறும்புகளையுங் கெடுத்து விட்டும் உயிர்க்குயிராயிருந்து அந்த உயிர்களுக்குரியபோகங்களை நியமித்திருக்கும் சிவபிரானைப்பூசிக்குஞ் சிவநேசர்கள்வாழ்கின்றதிருமடங்களும் எங்கும் விளங்கிக்கொண்டிருக்கும். எ-று.

உருத்திரனுடைய திரிநேத்திரத்திலிருந்து சிந்தின நீரிடத்து உற்பத்தியாகிய காரணத்தைப்பற்றி உருத்திராக்கமெனப் பெயர்பெற்றது. அக்ஷ மென்பது கண்ணுக்குரிய வடமொழிப்பெயர், தமிழில் அக்கமெனநின்றது. அறுவகைக்குறும்புகளாவன:—காமம், குரோதம், மதம்,மோகம், அழுக்காறு மாச்சரியம் என்பவைகளாம்.

ஓதிமறையொருநான்குமிருமூன்றுமெழுநான்குமுணர்ந்தெல்லோர்க்கும், பேதமறநிறைந்துறையுஞ்சிவனேயெம்பெருமானென்றுளத்துட்பேணிச், சோதிதனைச்சின்மயனைப்பூம்பாவையீசனெனுந்தூயோனம்பொற், பாதமலரருச்சிக்குஞ்சிவமறையோராலயங்கள்பலவுமெங்கும்.

(இ-ள்.) நான்குவேதங்களையும் ஆறுசாஸ்திரங்களையும் இருபத்தெட்டாகமங்களையும் ஓதியுணர்ந்தும் யாவரிடத்தும்பேதமில்லாமல் உயிர்க்குயிராய் நிறைந்திருக்கிற சிவபிரானே எங்கள்பெருமானென்று தங்கள் உள்ளத்தில் விரும்பிச்சோதிசொரூபனும் சின்மயனுமாகிய பூம்பாவையீசனென்னுங்கபாலீசுரருடைய அழகியபொன்னிறமுள்ள திருவடித்தாமரைகளை எப்பொழுதும் அருச்சனைசெய்யும் ஆதிசைவப்பிராமணர்கள் வாழ்கின்ற திருமாளிகைகளும் எங்கும்விளங்கிக்கொண்டிருக்கும். எ-று. (உங)

மண்டபமுங்கோபுரமுமதிதவழுந்திருமதிலும்மவளத்தாலோங்கப்
புண்டரிகத்தவன்முதலோர்பூசித்துச்சிவலிங்கமதனிற்போற்றித்
திண்டிகழச்செய்வித்தவாலயங்கணிறைந்திலங்கத்திசைகடோறும்
பண்டிகழுமறையொலியுமூவர்தமிழ்ப்பாவொலியும்பரவுமெங்கும்.

(இ-ள்.) மண்டபங்களும் கோபுரங்களும் சந்திரன்தவழும்படியான மதில்களும் வளப்பத்துடன் மேன்மையடையும்படி தாமரைப்பூவில் வீற்றிருக்கும் பிரமதேவன்முதலாகிய தேவர்கள்சிவலிங்கஸ்தாபனஞ்செய்து அதனிடமாகப் பூசித்துத்துதிசெய்து உறுதியாகவிளங்கும்படி கட்டிவைத்த ஆலயங்கள் அந்தஇடங்கள்தோறும் பிரகாசித்துக்கொண்டிருப்பதினாலே சந்தையுடன் விளங்கிக்கொண்டிருக்கும் வேதவோசையும் திருஞானசம்பந்தசுவாமி முதலாகிய மூவர்முதலிகள் அருளிச்செய்த தேவாரப்பதிகங்களோசையும் திசைகளெங்கும் விளங்கிக்கொண்டிருக்கும். எ-று. (உச)

வேறு.

உண்ணெகிழ்கருணைச்செல்வத்துயர்தவமுனிவர்க்காணிற்
றுண்ணெனவெழுந்துதாளிற்றொழுதெழுந்தெம்பாற்சேர்தற்
கெண்ணருந்தவஞ்செய்துள்ளேமென்றுதம்மனைகட்கேகி
யண்ணறனடியார்பூசையளிப்பரந்நகரில்வாழ்வார்.

(இ-ள்.) அந்நகரத்தில்வாழ்கின்றவர்கள்சருவ ஆத்துமாக்களிடத்திலு ங்கிருபைவைத்துள்ள ஞானத்தில் நிறைந்ததபோபலத்தையுடையமுனிவர் களைக்கண்டவளவில் அதிகவிரைவாக எழுந்து அவர்திருவடிகளிற் பணிந்து எழுந்து கைகட்டிநின்று சுவாமிகள் அடியேங்களிடத்தில் எழுந்தருளுத ற்கு அளவற்றதவஞ்செய்திருக்கின்றோமென்று உபசாரவசனங்கூறித் தங்கள்வீட்டுக்குள் அழைத்துக்கொண்டுபோய்ச்சிவனடியார்களாகிய அவர் களுக்குப் பூசைசெய்வார்கள். எ-று. (உரு)

சங்கரன்றனையேபோற்றுஞ்சைவமன்னவரனேகர்
கொங்கலர்கூந்தற்செவ்வாய்க்குவிமுலைவடமீன்கற்பின்
மங்கையரனேகர்வெள்ளிமலைமிசையிருந்துவாழும்
புங்கவனுமையாள்போலப்புண்ணியநகரின்வாழ்வார்.

(இ-ள்.) சிவபிரானையே துதிசெய்யாநின்ற சைவசிரேஷ்டர்கள் அ நேகரும் வாசனைபரந்த அளகபாரத்தையும் சிவந்தவாயினையும் குவிந்தத னங்களையும் உடையவர்களாய் அருந்ததிபோலப்பதிவிரதாதருமத்தில்மிகுந் தவர்களாகிய சைவசமயசிரேஷ்ட மாதர்பலரும் கைலாய மலையினிடத்தில் வாழ்கின்ற பார்வதி பரமேசுவரர்போல் அந்நகரத்தில் வாழ்வார்கள் எ-று. (உசு)

அருந்ததியென்னும் வசிஷ்டருடைய பத்தினியானவள் வடதிசையில் நக்ஷத்திரரூபமாகத் தோன்றப்படுகிற சப்தரிஷிகளுக்குள் ஒருவராயிருக்கிற வசிஷ்டருக்குச் சமீபத்தில் காணப்படுவதனால் அந்த அருந்ததிக்கு வடமீ னென்று ஒருபெயர். மற்ற ஆறுரிஷிகளுடைய பத்தினிகளுக்குச் சாபம் நேரிட்டுத் தத்தம் கணவர்களைவிட்டு நீங்கிவிட்டார்கள், ஆதலால் அந்த ஸ்திரீகள் நக்ஷத்திரங்களாகத் தெரிவதில்லை.

இன்னசீர்படைத்துமேவுமெழின்மயிலையில்வாழ்சைவ
மன்னவர்மறையோரெம்மூர்வளர்கதையதனைத்தேர்ந்தே
யன்னதைத்தமிழினாலேயறைமெனவவர்கள்பாதப் [ன்.
பொன்னலரெனதுட்கொண்டேபுகலுவான்றொடங்கிப்புக்கே

(இ-ள்.) இத்தன்மையுள்ள சிறப்பினைப்பெற்று அழகுபொருந்தியதிருமயிலையில் வாழ்கின்ற சைவசமயசிரேஷ்டர்களும், பிராமணர்களும் எங்கள்ஸ்தலமாகிய திருமயிலையின் விசேஷித்த சரித்திரத்தை ஸமஸ்கிருதபுராணத்திலிருந்து ஆராய்ந்து தெளிந்து அந்தச்சரித்திரத்தைத்தமிழ்ப்பாஷையினாலே சொல்லென்றுகட்டளையிட்டபடியால் அவர்களுடையபொன்னிறமுள்ள தாமரைமலரையொத்ததிருவடிகளை என்னுள்ளத்தில்வைத்துக்கொண்டு புராணம்பாடத்தொடங்கினேன். எ-று. (உஎ)

மருவுபூம்பாவையீசன்மயிலையம்புராணந்தன்னி
னொருதிருவிருத்தங்கேட்கினொழியுமெப்பவமுமென்றாற்
பொருவிலாப்புராணமுற்றும்புகலுவோர்கேட்போர்க்கின்னே
வருபெரும்பேற்றையாரேவகுத்துரைசெய்யவல்லார்.

(இ-ள்.) அடியார்க்கருள்செய்யும்பொருட்டுத் திருக்கோயில் கொண்டு வீற்றிராநின்ற பூம்பாவை யீசனென்னுங் கபாலீசருடைய மான்மியமாகிய திருமயிலைப்புராணத்திருவிருத்தங்களுக்குள் ஒருதிருவிருத்தத்தையன்புடன் சிரவணஞ்செய்தாலும் எவ்வகைப்பாவங்களும் நீங்கிவிடும் என்றால் ஒப்பில்லாதபுராணமுழுவதுஞ் சொல்லுகின்றவர்களுக்குங் கேட்பவர்களுக்கும் அப்போதேவருகின்ற பெரும்பயனையார்தான் அளவிட்டுச்சொல்லவல்லவர். எ-று. (உஅ)

நகரச்சருக்க முற்றிற்று.

ஆக-சருக்கம்-ங-க்கு, திருவிருத்தம் கங.

---

## பொதியமாமலைச்சருக்கம்.

நிதியுமாரமுநிறைதருக்களு
நதியுமேவிநன்னலமிகுத்துமேன்
மதியுலாவரும்வயினுமுற்றுநீள்
பொதியமாமலைப்புகழ்நவிற்றுவாம்.

(இ-ள்.) சொர்ணமும் முத்துக்களும் மலர்நிறைந்தவிருக்ஷங்களும் தாம்பிரபர்ணிமுதலியநதிகளும் பொருந்தி விசேஷித்தநன்மைமிகுந்துசிகரங்களில் சந்திரன் உலாவும்படியான இடத்தையு முடையதாயுயர்ந்திராநின்றபொதியமாமலையினுடைய பெருமையைச்சொல்லுகின்றோம். எ-று.(க)

விந்தமும் பிலம்புகுதமெய்ந்நெறி
தந்தவன்பெருஞ்சலதியுண்டவ
னிந்தவெற்பையேயிடங்கொண்டானெனி
னந்தவெற்பணியறையற்பாலதோ.

(இ-ள்.) விந்தகிரியும் பாதலத்தில் அழுந்திவிடும்படி அழுத்திச் சந்திரசூரியர்கள் முதலானவர்கள் சஞ்சரிக்கும்படி நல்லமார்க்கத்தை ஏற்படுத்தினவரும் பெரிய ஏழுசமுத்திரநீரையும் உள்ளங்கையிலேற்று உட்கொண்டவருமாகிய அகஸ்தியமுனிவர் இந்தமலையினையே தமக்குஇடமாகநியமித்துக்கொண்டாரென்றால் அந்தமலையினுடைய சிறப்பு சொல்லும்பகுதியினையுடையதோ. எ-று. (உ)

ஒருகாலத்தில் நாரதமுனிவர் விந்தகிரியினிடத்தில் சென்று அதை நோக்கி மகமேருவானது தனக்குச் சரியாயுயர்ந்த மலைகள் இந்த உலகத்தில்லையென்றுசொல்லிக்கொண்டிருக்கின்றதென்ன, அதைக்கேட்டவிந்தகிரியானது, அப்படியா இதோநான் உயர்ந்திருக்கின்றேன் பாரென்று சந்திரசூரியர்கள் சஞ்சரிப்பதற்கு மார்க்கமில்லாமல் வளர்ந்திருக்க, அப்போது அகஸ்தியர் வந்து அந்தவிந்தகிரியைப் பூமியளவாக அழுத்திவிட்டார். விருத்திராசுரனென்னும் அசுரன், தேவேந்திரனுடன் போர்செய்து தோற்றுச் சமுத்திரத்திற்குள் ஒளித்துக்கொள்ள அவனைக்கண்டு பிடிக்கும் பொருட்டுத் தேவேந்திரனும் கடலுக்குள்போய்த் தேடியும் அவன் அகப்படாமையால் அகஸ்தியரைப் பிரார்த்திக்க,அவர்சென்று எழுகடல் நீரையும் உண்டுவிடவே அந்த அசுரன் இருந்ததைத் தேவேந்திரன்கண்டு தன் வச்சிராயுதத்தினால் அவனைக்கொன்றுவிட்டான். பொதியமலையானது, தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் பொதுவான இடத்தையுடையதா யிருப்பதால், பொது இல் எனப்பேர்பெற்றுப் பொதியில், பொதியம், பொதிகையென வழங்கப்படுகின்றது.

வேறு.

விண்டனையுண்டெண்டிசையுமருவுயிர்க்குஞ்செஞ்சாந்தமிடையுஞ்சூழல், வண்டளிகள்கிளிகள்பசுந்தேன்பொருவமிழற்றுமறையொலியும்பூவி,லெண்டவிருமிடங்கடோறுந்தண்ணிறைக்கும்விண்ணிறைக்குமின்பமீயு,மண்டுமென்சிதளவசந்தவொலியுமுண்டவ்வரைவளமார்வகுக்கவல்லார்.

(இ-ள்.) ஆகாயத்தைத் தனக்குள் அடக்கிக்கொண்டு அஷ்டதிசைகளிலும் பரவும்படி வாசனைவீசுகின்ற செஞ்சந்தனவிருக்ஷங்கள் நிறைந்துள்ளசோலையில்வண்டென்னும் உத்தமசாதிவண்டுகளும் மற்றசாதிவண்

டுகளும் கிள்ளைகளும் பசியதேனைப்போலப் பாடும் வேதஓசையும் பூமியினிடத்தில் அளவில்லாத இடங்கள்தோறுங் குளிர்ச்சியை நிறைப்பதாயும் தேவேந்திரனுக்கும் இன்பத்தைக் கொடுப்பதாயும் மிகவும் மிருதுவானசீதள வசந்தகாலத்துக்குரிய ஓசைகளும் அவ்வரையில் உண்டு ஆகையால் அந்த பொதிய மலையினுடைய வளப்பத்தை வகுத்துச்சொல்ல வல்லவர்கள்யாவர். எ-று. (ரு)

வேறு.

துங்கமாதவர்பாழிமேலிருத்தலாற்சுகமே
யங்கமாகியகொள்கையாலருளமர்தலினாற்
கொங்குலாவியகோதையால்வல்லிமென்கொடியே
தங்கலாலரனிகர்ப்பதுசந்தனசலமே.

(இ-ள்.) பரிசுத்தமுள்ள முனிவர்களுடைய பாழியென்னும் மடங்கள் அம்மலையினிடத்திலிருப்பதனாலும் (சிவபிரானிடத்தும் பாழியென்னும் பெருமையிருப்பதனாலும்) சுகமாகியநன்மையே அம்மலைக்கங்கமாயிருத்தலினாலும் (சிவபிரானுக்கும்சுகமென்னும் தருமமேசொரூபமாயிருப்பதனாலும்) வாசனைபரந்தமாலைக்காலத்தையம்மலையுடைமையினாலும்(சிவபிரானும் வாசனைபரந்த கொன்றைப்பூமாலையுடைமையாலும்) மிருதுவாகிய பூங்கொடிகள் அனேகம் அம்மலையில் தங்கியிருப்பதனாலும்(சிவபிரானிடத்தும் மிருதுவாகிய பூங்கொடிபோன்ற உமாதேவி வீற்றிருக்கின்றமையாலும்) அப்பொதியமலையானது சிவபிரானையொத்திருக்கின்றது. எ-று. (சு)

வனசமாதங்கமேவலாலிரதிகோன்வளமார்
தனதுகாலெனப்படைத்தலாற்றரையளந்திடலான்
மினகவான்றொடவளர்தலால்விளங்குவேல்விழியாள்
சனகிராதனைநிகர்ப்பதுசந்தனசலமே.

(இ-ள்.) இப்பொதியமலையில் தாமரைமலர்களும் யானைகளுமிருப்பதனாலும் (திருமாலிடத்தும் வனசமாதாகிய இலக்குமிமார்பினிலிருப்பதனாலும்) இரதிகேள்வனாகிய மன்மதன் இம்மலையினிடத்துண்டாகும்தென்றலைத்தனதுதேராகக்கொண்டிருப்பதனாலும் (திருமாலும்அவ்விரதிகேள்வனைத்தனது அழகியபுத்திரனாகப்படைத்ததனாலும்) இம்மலைபூமியையளப்பதுபோன்று ஆழ்ந்திருத்தலினாலும் (திருமாலும் மாபலியினிடத்து மூன்றடிமண்தானம்வாங்கியபோது இந்தப்பூமியை ஓரடியால் அளந்திருத்தலினாலும்) இம்மலைபிரகாசியாநின்ற இடத்தையுடையஆகாயத்தையளாவும்படி உயர்ந்திருத்தலினாலும் (திருமால்மாபலியினிடத்துச் சென்றபோது ஆகாயத்

தையளாவும்படி விஸ்வரூபமெடுத்ததனாலும்) விளக்கமடைந்த வேல்போலும் விழியையுடையவளாகிய ஜானகிமணாளனான திருமாலையொத்திருக்கின்றது இந்தப்பொதியமலை. எ-று. (ரு)

சந்தனவிருட்சங்கள் நிறைந்திருப்பதனால் பொதிகைக்குச் சந்தனாசலமென்றுபெயர். சந்தன அசலம் சந்தனாசலமென நீண்டது.

கலைநன்மானுடன்றழீஇக்கொடுவிளங்கியகவினாற்
றுலைவிலாதபல்வளமெலாம்படைத்திடுந்துணிபான்
மலைவிலாமலேபூவின்மேலிருத்தலான்மறையோர்
தலைவனாமயனிகர்ப்பதுசந்தனாசலமே.

(இ-ள்.) இம்மலையில் கலைமானானது நல்லபெண்மானைக் கலந்துகொண்டு வாசமாயிருக்கின்ற அழகினாலும் (பிரமனும் கலைமானாகியசரஸ்வதியுடன் தழுவிக்கொண்டு விளங்கும் அழகினாலும்)இம்மலை அழிவில்லாத பலவளங்களைப்பெற்றிருக்கும் துணிவினாலும் (பிரமனும் பலவஸ்துக்களை யெல்லாம்சிருட்டிக்குந் திறத்தினாலும்) இம்மலை மறைந்துவிடாமல் பூமியின்மீதி லிருத்தலினாலும், (பிரமனும் யாதொருமயக்கமுமில்லாமல் தாமரை மலரின்மேலிருத்தலினாலும்) மறையோர்க்குத்தலைவனாகிய பிரமனைப்போலவிருப்பது இப்பொதியமலை. எ-று. (சு)

இலங்கவெண்கரியேறியங்குலாவியவெழிலா
னலஞ்செய்நாடகத்தியருறைபொற்பதினலனாற்
றுலங்குவச்சிரவாட்சிகைக்கோடலாற்சுரர்கோ
னலங்கல்வாசவனிகர்ப்பதுசந்தனாசலமே.

(இ-ள்) விளங்கும்படி கரடியும் சிங்கமும் இம்மலையிலேறி உலாவிக்கொண்டிருக்கும் அழகினாலும் (இந்திரனும் வெள்ளையானைமீதேறி அத்தேவலோகத்தில் உலாவிக்கொண்டிருக்கும் அழகினாலும்) நன்மையைத்தரும் அந்நாட்டிலுள்ள பெண்கள் அம்மலையினிடத்து வந்து வசிக்கின்ற அழகின்மேன்மையினாலும் (இந்திரனுலகத்தில் இன்பத்தைத்தருகின்ற பரதநாட்டியமாடும் அரம்பை மாதர்கள் வசிக்கும் அழகின்மேம்பாட்டாலும்) மலையில்விளங்குகின்றசதுரக்கள்ளிகள்அங்குநிலைபெற்றிருக்கும்தன்மையை உறுதியாகக்கொண்டிருப்பதனாலும்(இந்திரனும்பிரகாசியாநின்ற முனையினையுடையவச்சிராயுதத்தைக் கையில்வைத்துக்கொண்டிருப்பதனாலும்) தேவாதிபனாகிய கற்பகமலர்மாலையைத்தரித்த இந்திரனைப்போலிருப்பதுபொதியமலை. எ-று. (எ)

துய்யவாறுமாமுகனும்பறனைத்தருதுணிபால்
வையமியாவையுங்குளிர்ப்புறுங்காலுளவனப்பால்
வெய்யகேசரிமேவலாற்சங்கரன்விழைவாற்
சைவநாயகியனையதுசந்தனுசலமே.

(இ-ள்.) இம்மலையினிடத்துப் பரிசுத்தமான ஆற்றின்முகமான துயானைகளை இழுத்துக்கொண்டுவருந்துணிவினாலும் (உமாதேவியும் பரிசுத்தமான ஆறுமுகக் கடவுளையும் யானைமுகக்கடவுளையும் பெற்றதுணிவினாலும்) இம்மலை உலகத்திலுள்ள உயிர்களெல்லாம் குளிர்ச்சியடையும்படியான இளந்தென்றற்காற்றையுடைய அழகினாலும் (உமாதேவியும் உலகத்துள்ள உயிர்களெல்லாம்தீவினையாகிய வெப்பம்நீங்கி ஆனந்தத்தைப்பொருந்தும்படிஅருளிச்செய்கின்ற திருவடிகளையுடைய அழகினாலும்) இம்மலை வெய்யதாகிய ஆகாயத்தை அளாவியிருப்பதனாலும் (உமாதேவியும்கொடியசிங்கத்தை வாகனமாகக் கொண்டிருப்பதனாலும்) இம்மலையைச்சிவபிரான் விரும்பித்திருக்கோயில்கொண்டிருப்பதனாலும் (உமாதேவியையும் சிவபிரான்விழைவுற்றிருப்பதனாலும்) உமாதேவியையொத்திருக்கின்றதுஇப்பொதியமலை. எ-று. (அ)

புனிதவெங்கடமாதவன்மேற்றிகழ்புகழா
லினியசிரிலக்கணமெலாம்விளங்கிடுமியல்பா
னனிமிகுந்தவெண்வளமடைந்தவர்க்கருணலனாற்
றனிமலர்த்திருவனையதுசந்தனுசலமே.

(இ-ள்.) இம்மலையினிடத்துப்பரிசுத்தமாகியமிகுந்தமதஜலத்தைப்பொழியும்யானைகள்விசேஷமாய்விளங்கும்புகழ்ச்சியினாலும் (இலக்ஷுமியும்தூய்மையுடைய எங்கள்மகாவிஷ்ணுவின் மார்பின்மேல்விளங்கும் புகழ்ச்சியினாலும்)இம்மலையில் இனியதாய்ச்சிறப்பமைந்தபஞ்சவிலக்கணங்களும் விளங்கிக்கொண்டிருக்குந் தன்மையினாலும்(இலக்குமிக்கும் இனியதாகிய முப்பத்திரண்டுலட்சணங்களும் அமைந்திருக்கின்றதனாலும்) இம்மலைதன்னிடத்தில் வந்தவர்களுக்கு எண்ணத்தக்க வளப்பங்களையெல்லாம் கொடுக்கும் நன்மையினாலும் (இலக்குமியும் தன்னையடைந்தவர்களுக்கு மிகுந்துள்ள எண்வகைச்சம்பத்துகளையுங் கொடுக்கின்ற நன்மையினாலும்) ஒப்பற்றதாமரைமலரில் வீற்றிருக்கும் இலக்குமியை யொத்தது இப்பொதியமலை. எ-று. (க)

கலைகளெண்ணெழுத்தாதிதன்வயின்விளங்கலினான்
மலைவிலாவயன்றலமேவதிந்திடும்வகையாற்
றலைவில்பல்பொருட்கிடங்கொடுத்திருந்திடுந்துணிவாற்
றலைமைவாணியையனையதுசந்தனுசலமே.

(இ-ள்.) கலைமான்களும் எண்ணத்தக்க எழுக்களும்மற்ற உலோகங்களும் இம்மலையினிடத்து விளங்கலினாலும் (சரஸ்வதியினிடத்தும் அறுபத்துநாலு கலைகளும் சோதிடசாஸ்திரங்களும் இலக்கண சாஸ்திரங்களும் பிரகாசித்துக்கொண்டிருப்பதனாலும்) இம்மலைமலைதலில்லாமல்வெற்றிபொருந்திய பனைமரங்களை யுடைத்தாயிருக்கின்ற தன்மையினாலும் (சரஸ்வதியும் மாறுபாடில்லாத பிரமன் நாவிலே வீற்றிருக்குந் தன்மையினாலும், (இம்மலை ஒழியாத பலபொருள்களுக்கும் இடங்கொடுத்துக் கொண்டிருக்கும் உண்மையினாலும் (சரஸ்வதியும் ஒழிவில்லாத பல சொற்பொருள்களுக்கிடங் கொடுத்துக்கொண்டிருக்கும் வாய்மையினாலும்) கல்வியைக்குறித்து முதன்மைத்தன்மையையுடைய சரஸ்வதியை ஒத்திருந்தது இப்பொதியமலை. எ-று. (கഠ)

கற்பகத்தருநிழலணிகலந்துவைகலினால்
வெற்படக்கினோன் றன்னிடமேவியவியனா
லற்புதந்தருகோதையாலல்குலினணியென்
சற்பமெய்ச்சசியனையதுசந்தனசலமே.

(இ-ள்.) இம்மலை கற்பகதருவின் நிழலைப்பொருந்திக் கலந்திருப்பதனாலும் (இந்திராணியும்கற்பகதருவின் நிழலில் அழகுபொருந்தி வசிப்பதனாலும்) இம்மலை விந்தகிரியை யடக்கிய அகத்தியர் தன்னிடத்திலிருக்கப்பெற்றுக்கொண்டதனாலும் (இந்திராணியும் மலைகளின் சிறகையறுத்து அதுகளின் இறுமாப்பை யொழித்த இந்திரன்தன்னிடத்தி லிருக்கப்பெற்றுக் கொண்டதனாலும்) இம்மலையாவர்க்கும் அற்புதத்தை விளைக்கும் தென்றற்காற்றை யுடைமையினாலும் (இந்திராணியும் அதிசயத்தை விளைக்கும் அளகபாரத்தையுடைமையினாலும்) நாகபடம்போலும் நிதம்பத்தின் அழகு வாய்ந்தஉண்மையான இந்திராணியையொத்திருந்ததுஇப்பொதியமலை. எ-று.

வேறு.

செழுஞ்சுடர்கான்றிருள்சிய்க்குநறுந்தீபமரப்பொதும்பர்செறியும்பாரி,லெழுந்துபடரொளிதரளக்குவாலனந்தநிறைந்துவதிந்திலகப்பாங்கர், கொழுங்கனகமணிக்குவைகடிகழ்வதுநற்பொதியமெனுங்குவட்டிலேறி, யொழுங்குடன்வான்சுடர்கள்பலவுருக்களொடுதவமிழைப்பதொக்குமாதோ.

(இ-ள்.) பொதியமலையில் செழுமையுள்ள சோதியைவீசி இருளைக் கெடுக்கும்படியான நல்லசோதிவிருக்ஷங்கள் நிறைந்துள்ள சோலைகள் நெருங்கி யிருக்குமிடத்தில் எழுந்து படர்கின்ற ஒளியையுடைய முத்துக்குவைகள் அனந்தமாக நிறைந்து பொருந்திப் பிரகாசித்துக்கொண்டிருக்க மற்றொருபுறத்தில் பொன்குவியலும் மாணிக்கக்குவியலும்பிரகாசித்துக்கொ

ண்டிருப்பது ஆகாயத்தில் சஞ்சரித்துக் கொண்டிருக்கும் சந்திர சூரியர்களு மற்றுமுள்ள பிரகஸ்பதி முதலான நவக்கிரகங்களும் பொதியமென்கிறமலையிலேறிப் பலஉருவங்கொண்டு ஒழுங்குடனிருந்து தவஞ்செய்வதையொத்திருக்கும். எ-று. (கஉ)

முத்துக்களைச் சந்திரனாகவும் சுக்கிரனாகவும், மாணிக்கங்களைச் சூரியனாகவும் அங்காரகனாகவும், நீலரத்தினங்களைச் சனிபகவானாகவும், மரகதத்தைப்புதனாகவும், பொன்னினைப்பிரகஸ்பதியாகவும் பகுத்துக்கொள்க

பொறியடக்கிப்புலன்றுறந்தங்குள்ளுணர்வோரினிதுறங்குபுனிதராஞேர், செறிதருமெய்த்தவாச்சிரமமொருகோடிதிசைகடொறுந் திகழாநிற்கு, முறியொடித்தேமதமாக்கள்பன்னசாலைகளவர்க்குமுடிக்குமாக்க, ளறிவுடனங்கவர்பூசைக்கமுதளிக்குங்காலமுணர்ந்தங்கணம்மா.

(இ-ள்.) ஐம்பொறிகளை யடக்கியும் சத்தாதிவிஷயங்களை நீக்கியும் பிரமத்தையுள்ளே தியானிப்பவர்களாய் ஞானநித்திரைசெய்யும் புனிதர்களானவர்கள் வசிக்கும் தவாச்சிரமங்கள் ஒருகோடி அந்தமலையின்திசைகள்தோறும் பிரகாசித்துக்கொண்டிருக்கும். மதமுள்ளயானைகள் துளிர்களாயிருக்கிற தழைகளை யொடித்துக்கொண்டுவந்து அவர்களிருப்பதற்குப் பன்னசாலைகள்கட்டும். பசுக்கள் அவர்களுடைய பூசைக்குக் காலமறிந்து பால்களை அவரவர்களுடைய பாத்திரத்திற்கறக்கும். எ-று. (கஙா)

நறுஞ்சூதங்கதலிபலாநைந்துமிழுந்தேனருவிநடந்தங்கோர்சார்
துறுங்கானமதிலேறிமுகில்பொழியும்வெள்ளருவிதுள்ளியோர்சா
ரறுங்காலமுறுகார்போன்முழங்குகயமொழுக்குமதவருவியோர்சா
ரிறும்பூதிங்கிவைவாணிதங்கைகாளுந்தியெனவிழியுமாதோ.

(இ-ள்) நல்லமாம்பழங்களும் வாழைப்பழங்களும் பலாப்பழங்களுமைந்துபொழிகின்ற தேனருவிகள் அங்கொருபுறத்திலோடியும் அடவிமரங்களிலேறி மேகங்கள் பொழிகின்ற வெண்ணிறமுள்ள அருவிகள் ஒருபுறத்திலோடியும்உலகமெல்லாம்அழியும்படியான ஊழிகாலத்தில்வந்துமழைபெய்கின்றமேகம்போல முழங்குகின்றயானைகள் பொழிகின்றமதநீர்ஒருபுறத்திலோடியும் பார்க்கின்றவர்கள் ஈதென்ன அற்புதம் ஆகாயகங்கைபோலவும் சரஸ்வதியென்னும் நதிபோலவும் காளுந்தியென்னும் நதிபோலவும் இருக்கின்றதென்று சொல்லும்படிபொழிந்துகொண்டிருக்கும். எ-று.

கங்கை வெண்மைநிறம். சரஸ்வதி செம்மைநிறம். காளிந்தி கருமைநிறம். மழையருவி வெள்ளைநிறம். தேனருவி செம்மைநிறம். மத அருவி கருமைநிறமெனக்கொள்க.

தென்னாடுசெழித்தோங்கமுத்தமிழும்விளங்கமுன்னாட்சிறந்துதோன்றி, மின்னாரமணிசொழிக்கும்பொருநைதருமம்மலைமேல்விளங்குகோட்டிற், புன்னாகம்பொன்னிதழிப்பாடலந்தேனுகுத்துமலர்பொழியுங்காட்சி, யெந்நாளுஞ்சிவலிங்கத்தன்பர்கணீரொடுமலரிட்டிறைஞ்சல்போலும்.

(இ-ள்.) பாண்டிய நாடுசெழித்து ஓங்கவும் இயலிசை நாடகமென்னு மூன்று வகைத்தமிழும் பிரகாசிக்கவும் சிறப்புள்ளதாய் ஆதி காலத்திற்றோன்றி ஒளிபொருந்திய முத்துக்களையும் இரத்தினங்களையுங் கொழித்துக்கொண்டு வராநின்ற தாமிரபர்ணியென்னும் நதியானது வருகின்ற ஓசையினையுடைய அந்த மலையின்மேல் விளங்குகின்ற சிகரங்களில் சுரபுன்னைகளும் பொன்போலும் கொன்றைகளும் பாதிரிகளும் தேனைப்பொழிந்து புட்பங்களையுஞ் சொரிகிற காட்சியானது எந்நாளிலும் அடியார்கள் சிவலிங்கப்பெருமானுக்குத் திருமஞ்சனஞ்செய்து புட்பங்களையருச்சித்துப் பணிவதுபோலிருக்கின்றது. எ-று. (கரு)

காவதங்கள்பலகடந்துமருவுலாவான்முடிமேற்ககனஞ்சூடும், பூவளைந்துபசுந்தென்றற்குழவிதவழ்செஞ்சாந்தப்பொதும்பர்மேவித், தேவரெலாமினிதுறையவிச்சைபெருகப்பெருகத்திரிவரென்றாற், றுவிலருட்பொதியமலைத்தனிப்புகழென்னாற்புகழுந்தகைமைத்தேயோ.

(இ-ள்.) பலகாதம்மேலேசென்று வாசனை பொருந்திய சிறப்புள்ள தன் முடியின்மேல் தேவலோகத்தார் சூட்டுகின்ற புட்பங்களைப் பொருந்தியும் இளந்தென்றல் தவழ்கின்ற செஞ்சந்தனச் சோலையைப்பொருந்தியும் தேவர்களெல்லாம்இனிதாக வாசஞ்செய்யும்படி மேலுமேலும் இச்சையுண்டாகச் சஞ்சரித்துக்கொண்டிருப்பார்களென்றால் குற்றமில்லாத அருளையுடைய பொதியமலையின் ஒப்பற்றபெருமையானது என்னால் புகழத்தக்க தன்மையுடையதோ. எ-று. (சகூ)

வேறு.

இந்தவளமேவியவெழிற்பொதியவெற்பிற்
சந்தனவனத்திரடதைந்துறையுநாப்பண்
சுந்தரமணிக்கனகசோதிதவழ்கோயி
லந்தவயனும்புகழவங்குளதொன்றம்மா.

(இ-ள்.) இத்தகைமையையுடையவளப்பம் பொருந்திய அழகுள்ள பொதியமலையில் சந்தன விருக்ஷங்கள்நிறைந்த சோலைகள்மத்தியில் அழகமைந்தமணிகள்பதித்துச் சுவர்ணமயமாயெங்கும்பிரகாசித்துக்கொண்டிருக்கிற ஒரு ஆலயம் பிரமதேவனும் கண்டு சந்தோஷிக்கும்படி அவ்விடத்திலிருக்கின்றது. எ-று. (கஎ)

அக்கனகமாளிகையிலம்பொன்மணியாரக்
தக்கபலவெங்கதிருந்தண்கதிருமொன்றாய்
மிக்கவொளிகக்குமரிமென்றவிசின்மீதே
புக்கிரவிமேற்றிகழ்புராரிதனைமான.

(இ-ள்.) சுவர்ணமயமாகிய அந்த ஆலயத்தில் பொன்னும் இரத்தினங்களும் முத்துக்களும் தகுதியுள்ள பலசூரியப்பிரகாசத்தையுங் குளிர்ச்சிபொருந்திய சந்திரப்பிரகாசத்தையுமொன்றாய் வீசிக்கொண்டிருக்கின்ற சிங்காதனத்தின்மேல் சூரியமண்டலத்திற்சென்று வீற்றிருக்கும் சிவபிரானை யொப்பாக. எ-று. (கஅ)

கண்டுவகைகொண்டவர்கள்கள்ளவினைதள்ளும்
புண்டரிகமன்னவிருபொன்னடிகண்மின்ன
வெண்டவிரவண்டநிரையீற்றுமழிவற்றே
மண்டுமொளிவிஞ்சரையின்வற்கலைவயங்க.

(இ-ள்.) தரிசித்துச் சந்தோஷங்கொண்டவர்களுடைய வஞ்சவினைகளை யொழிக்கத்தக்க செந்தாமரைமலர்போன்ற இரண்டு அழகுள்ள திருவடிகள் பிரகாசிக்கவும் கணக்கிறந்த அண்டகோடிகளின் முடிவிலும் அழிவில்லாமல் நெருங்கிய பிரகாசமிகுந்த அரையினிடத்து மரவுரி விளங்கிக் கொண்டிருக்கவும். எ-று. (கக)

வித்துருமவெற்பினடுமேவிவிளையாடும்
புத்தமுதமுற்றகிரணக்குழவிபோலச்
சுத்தவொளிபெற்றருகுதூங்கருவிபோல
நித்தனருணீற்றொளிமுநூலுமுரநீட.

(இ-ள்.) பவளமலையினடுவிற் பொருந்திவிளையாடுகின்ற புதிய அமுதமயமாயமைந்த கிரணங்களையுடைய பிறைமதிபோலவும் பரிசுத்தமாகிய பிரகாசத்தைப்பெற்று அப்பவளமலையின்சாரலில் வீழ்கின்றஅருவிபோலவும் சிவபிரான்திருவருள்போன்றதாகிய விபூதிபிரகாசிக்கவும் பூணூலும் மார்பினில்விளங்கவும். எ-று. (உ0)

ஆழிமுழுதுங்கவருமங்கையின்மருங்கே
வாழியருளோதுசிவமாலைபொலிவெய்த
வூழிமுதல்வன்கணிலுதித்தமணிமாலை
சூழிருபுயக்குவடுதுன்னழகுமன்ன.

(இ-ள்.) சமுத்திரநீர்முழுவதையுங் கவர்ந்த அழகியகையினிடத்து பஞ்சாக்ஷரத்தையுச்சரிக்கும் செபமாலை பிரகாசித்துக்கொண்டிருக்கவும் சிவபிரான் திருநேத்திரங்களிலிருந்துண்டாகிய ருத்திராக்ஷமாலைகள் சூழ்ந்த மலையின்சிகரம் போன்ற இரண்டுபுஜங்களிலும் பொருந்திய அழகு நிலைபெற்றிருக்கவும். எ-று. (உக

ஆரணசிவாகமபுராணமுனைத்தும்
பூரணமதிக்குள்வளர்போல்வதனத்தோங்க
வேரணியுறப்பெருகியின்பநயனத்திற்
சீரணியருட்சலதிசீதவலைமோத.

(இ-ள்.) நான்குவேதங்கள் இருபத்தெட்டாகமங்கள் பதினெண்புராணங்கள் ஆதியாகியசாஸ்திரங்களெல்லாம் பூரணமாகிய சந்திரனுக்குள்ளிருந்து வளர்வதுபோலத்திருமுகத்தினிடத்தோங்கவும் மிக்க அழகுபொருந்தப்பெருகிநல்லபார்வையினிடத்துச் சிறப்பமைந்த கிருபையாகிய சமுத்திரத்தின் குளிர்ச்சிதங்கிய அலையானதுமோதிக்கொண்டிருக்கவும். எ-று. ()

சிந்துரநிறக்கனகதேசொளியெங்காளுந்
தந்திடுசெட்குண்டலமுந்தாழ்குழையினூடச்
சுந்தரமதிக்குழவிதோன்றியொருமூன்றாய்
வந்தநிரையென்னநுதனீற்றொளிவயங்க.

(இ-ள்) சிந்துரநிறமுள்ள மாற்றுயர்ந்த பொன்னொளியைஎக்காலமுந்தருகின்ற ஆறுகட்டிவடிகாதுகளில் அசைந்துகொண்டிருக்கவும் அழகுள்ளஒருஇளந்திங்கள் உதித்துமூன்றுபிரிவாய்ப்பிரிந்திருக்கிறவரிசைபோலநெற்றியினிடத்து விபூதியின்பிரகாசம்விளங்கிக்கொண்டிருக்கவும். எ-று

மருந்தமரருண்ணவிடமுண்டசிவன்மன்னு
மிருங்கயிலைமேலமரினன்பொலிவுமான
வருந்தவவெண்ணீறணியவங்கமுழுதெங்குந்
தரும்பவளமேலுயர்சடாமுடிதயங்க.

(இ-ள்.) தேவர்களமுதுண்டுய்யுமாறு விஷமுண்டருளிய சிவபிரான் வீற்றிராநின்ற பெருமைவாய்ந்த கைலாயகிரியினிடத்துள்ள சூரியனுடைய பிரகாசத்துக்கொப்பாக அருமையாகிய கற்ப விதிப்படியமைந்த வெண்ணீறணிந்த திருமேனிமுழுவதும் பவளத்தினும் மேம்பட்டுச் சிவந்த சடாடவிவிளங்கிக்கொண்டிருக்கவும். எ-று. (உ)

விபூதிதூளனஞ்செய்துகொண்டிருக்கிறர் அவருடைய திருமேனி கயிலைமலையாகவும் செஞ்சடாமகுடமானது சூரியனுகவும் அமைத்துக்கொள்க.

நாதமுதலாயகரணங்கள்கெடநண்ணும்
போதமுடனேதமதுபோதமறவாழும்
வேதமுடிவாயபரவீடருள்மெய்ஞ்ஞான
மாதவவகத்தியமகாமுனியிருந்தான்.

(இ-ள்.) நாதமுதலாகிய பலதத்துவங்கள் ஒழிந்தவளவில் உண்டாகும் மெய்ப்போதத்துடன் தற்போதமறவாழ்கின்ற வேதமுடிவாகிய மோக்ஷத்தை யருளுகின்ற மெய்ஞ்ஞானத்தையுடைய மஹாதவசிரேஷ்ட்டராகிய அகஸ்தியமகாமுனிவர் வீற்றிருந்தார். எ-று. (உரு)

தாழினியவேணியரன்ருள்கருதியொன்று
யாழிமுழுதுண்டமுனியங்குறையும்வேலை
யேழுலகிலில்லதொருவேமவிறும்பூது
வாழியுலகுய்யவவண்வந்தவகைசொல்கேன்.

(இ-ள்.) இனியவைகளாய்த் தாழ்ந்த சடைகளுள்ள சிவபிரானுடைய திருவடிகளைத் தியானித்து ஏழுசமுத்திரங்களையுமொன்ருய் அருந்திய அகஸ்தியமாமுனிவரானவர் அங்குவீற்றிருக்குங்காலத்தில் கீழ் ஏழுலகிலும் மேல் ஏழுலகிலும் இல்லாததாகிய இன்பமுள்ள ஒரு அதிசயமானது இவ்வுலகத்தாரெல்லாம் உய்யும்படி அங்கு உண்டாகிய வகையைச் சொல்லுகின்றேன். எ-று. (உசு)

அண்டமுழுதுந்தருமரன்றிருவடிக்கீழ்த்
தொண்டினிலுயர்ந்தவர்கடூய்மையுடன்வாழ்வார்
கண்டிகைவெண்ணீறளவில்காதலுடன்பூண்டார்
தண்டினெடுகுண்டிகைதரித்திடுகரத்தார்.

(இ-ள்.) அண்டங்களையெல்லாம் படைத்தருளிய சிவபிரானதுதிருவடியின்கீழ்திருத்தொண்டில் உயர்ந்தவர்களும் பரிசுத்தத்துடன் வாழ்கின்றவர்களும் ருத்திராக்ஷகண்டிகையும் வெண்மைநிறமுள்ள விபூதியும் அளவில்லாத விருப்பத்துடன் தரித்துக்கொண்டிருப்பவர்களும் தண்டுகமண்டலங்களை ஏந்திக்கொண்டிருக்கும் கைகளையுடையவர்களும். எ-று. (உஎ)

பின்னுசடிலத்தருள்பெய்யுநயனத்தார்
மன்னுமரைமீதினியவற்கலைபுனைந்தார்
மென்னலுயிர்வீடுமெனமெல்லெனநடப்பா
ரெங்கிலமுமெண்டிசையுமெய்துமிசையுள்ளார்.

(இ-ள்.) பின்னியசடையையுடைய சிவபிரானது திருவருளைத்தம் மையடுத்தவர்களுக்குத் தருகின்ற கிருபாநோக்கத்தை யுடையவர்களும் பொருந்திய அரையினிடத்து நல்லமரவுரியைத் தரித்தவர்களும் கண்ணுக்குத்தோற்றாமல் விளங்குகின்ற சிறியநல்ல உயிர்களிறந்துபோகுமென்றுகருதி மெத்தென்று நடப்பவர்களும் எல்லாவுலகங்களிலும் அஷ்டதிசைகளிலும் அடைந்திருக்கும் புகழுள்ளவர்களும். எ-று. (உஅ)

செங்கனகவெற்பினொடுசேணழியுநாளுந்
தங்கள்விரதத்திலொருசற்றுமழியாதார்
மங்குலுடனிக்கிலமும்வானுலகுமொப்பப்
பொங்குவளமீந்திடினும்பொய்மையுரையாதார்.

(இ-ள்.) ¥மகம்மேருவும் தேவருலகங்களும் அழிந்துபோகும் ஊழிக்காலத்திலும் தங்கள்தவத்தில் ஒருசிறிது அழியாதவர்களும் மேகத்துடன் இந்த உலகத்தையும் தேவலோகத்தையுமொன்றாய்ச் சேர்த்து அதிலுள்ள விசேடித்தவளங்களெல்லாவற்றையும் கொடுத்தாலும் பொய்வார்த்தைசொல்லாதவர்களும். எ-று. (உகூ)

இத்தகையமாமுனிவரெண்ணிலர்திரண்டே
யத்திரியடர்த்ததவனாலயமடைந்தே
வித்தகதவாதிபவெனத்தொழுதுவீழ்ந்தே
பத்தியுடனுச்சிமிசைபாதமலர்பூண்டே.

(இ-ள்.) இத்தன்மையுள்ள பெருமைபொருந்தியமுனிவர்கள் அளவில்லாதவர்களாய்க் கூட்டமாகக்கூடிவந்து விந்தகிரியையடக்கிய அகஸ்தியமுனிவர் வீற்றிருக்கும் ஆலயத்தில் சேர்ந்து அவரைக்கண்டு வித்தகனே தவத்துக்கதிபனேயென்று தொழுது துதிசெய்து பக்தியுடனே தங்கள்சிரசினிடத்தில் அவருடைய திருவடித்தாமரைமலர்களை அணிந்துகொண்டு. எ-று. (ங0)

வேதமுதல்யாவையும்விளங்குகரைகண்டாய்
நீதியறமெவ்வகையுநின்னிடைவளர்ப்பா
யாதியிமவான்மகளையங்கைதொடுமந்நாட்
டீதுபடராதவகைதீர்க்கவிவண்வந்தாய்.

(இ-ள்.) வேதமுதலாகிய சாஸ்திரங்களினுடைய விளங்குகின்றகரையைக்கண்டீர்நீதியையும் எவ்வகைப்பட்டதருமங்களையும் உம்மிடத்தில்வைத்து வளர்க்கின்றீர், சிவபிரான் மலையரையன்புத்திரியாகிய பார்வதிதேவியாரைப்பாணிக்கிரகணஞ்செய்துகொண்ட அந்தநாளில் இந்தப்பூமிக்குக்கு

ற்றம் நேரிடாவண்ணம் அதைத்தீர்க்கும்பொருட்டு இந்தப்பொதியமலையி னிடத்து எழுந்தருளினீர். எ-று. (௬௧)

கைலாயபதியானவர் நந்திதேவர் அநந்ததாதிகள் முதலாகியசகல பிரமதகணங்களுடனும் இமயமலையிற்சென்று பார்வதிதேவியாரை விவாகஞ் செய்துகொள்ளுங்காலத்தில் அந்தத்திருமணக்கோலந் தரிசிக்கும்பொருட்டுத் தேவர்கள் முதலானயாவரும் அவ்விடத்தில் வந்து சேர்ந்தமையால் வடபூமி தாழ்ந்து தென்பூமி யுயர்ந்தது, அதுமுன்போலச் சமனாயிருக்கும்படி அகஸ்தியமுனிவர் பொதியமலையில் சென்றிருக்கச் சிவபிரான் கட்டளையிட்டது.

பூநெறிமறைத்தகலவான்முகடநப்போய்
மேனெறியடைத்துவளர்விந்தவலிவீழ்த்தாய்
மாநெறிவழாதசுரர்வாழ்த்தவவர்கட்காய்
மீனெறிதிரைப்புணரியும்பருகிவிட்டாய்.

(இ-ள்-) பூமியின்மார்க்கத்தை மறைத்துவிசாலமாகிய அண்டமுகட்டையும்பிளந்துசென்று ஆகாயமார்க்கத்தையடைத்து மேலோங்கிய விந்தகிரியினுடைய அகந்தையைக்கெடுத்தவரே; அன்றியும் நல்ல ஒழுக்கங்களில் நின்றும் வழுவாத இந்திரன்முதலாகியதேவர்கள் வந்து வாழ்த்த அவர்கள் பொருட்டு மகரமுதலிய மீன்களைக் கரையில்வீசுகின்ற அலைகளையுடைய ஏழுசமுத்திரநீரையும் உண்டு மீட்டுமுமிழ்ந்தவரே. எ-று. (௬௨)

விருத்திராசுரனென்பவன் தேவேந்திரனுடன் போர்செய்து தோற்றுச்சமுத்திரத்தில் ஒளித்துக்கொள்ள அவனைக்கண்டுபிடிக்கும்பொருட்டு அகஸ்தியமுனிவரைத் தோத்திரஞ்செய்ய அவர் சிவபிரான் திருவருளின்வல்லமையைக்கொண்டு ஏழுகடலையுந்தமது உள்ளங்கையிலேற்று ஆபோசனமாக உட்கொண்டனர்.

புன்மொழிபகர்ந்திகல்செய்பொய்ச்சமயமான
நன்மொழியினாரணனைகம்பனுருச்செய்தாய்
மன்மொழிவடாதுமொழிமாதவர்களின்சொற்
றென்மொழியெனப்புகறிருத்தமிழளித்தாய்.

(இ-ள்.) அற்பமொழிகளைச் சொல்லிக்கொண்டு சமயவாதஞ்செய்கின்ற உண்மைப்பொருளுணராதவைஷ்ணவசமயத்தார் கெடும் வண்ணம் நல்லவார்த்தையினாலே அர்ச்சாவதாரமாகவிருந்த விஷ்ணுவைச்சிவலிங்கமாகும்படிசெய்தருளினவரே, நிலைபெற்றமொழியாகிய வடமொழி யென்னு முனிவர்களுடையஇனியவாக்கியத்தைத்தென்மொழியாகப்பரவும்படிநல்ல தமிழ்மொழியையருளிச்செய்தவரே. எ-று. (௬௩)

முற்காலத்தில் திருக்குற்றாலமென்னும் ஸ்தலமானது விஷ்ணுஸ்தலமாயிருக்கையில் அகஸ்தியமுனிவர் அந்தவிஷ்ணுவைச் சேவிக்கும்பொருட்டு ஆலயத்துட்செல்லும்போது அங்கிருந்த வைஷ்ணவர்கள் நீ பாஷாண்டி உள்ளேபோகக்கூடாதென்று தடுத்தார்கள். அப்படியே உள்ளேபோகாமல் வெளியேசென்று அவர்களுக்குத்தெரியாமல் வைஷ்ணவ வேஷம் பூண்டுகொண்டு வரக்கண்ட அவர்கள் சம்மதித்ததனால் ஆலயத்திற்குட்போய் விஷ்ணுவாகிய சிலாரூபத்தைச்சிவலிங்கமூர்த்தியாகச்செய்தனர்.

தளர்ந்தருள்பிரிந்துயிர்கள்சார்பொருளிதென்னு
முளந்தனிலிருந்துணருமாபதியையல்லால்
வளந்தருமுகுந்தனயன்வானவர்களேனோ
ரளந்தளவினின்புகழையார்புகழவல்லார்.

(இ-ள்.) தளர்ந்து அருள்கூடாமற் பிரிந்துதங்களுக்குச் சார்பாகிய பொருள் எதுவோவென்று கருதிக்கொண்டிருக்கும். ஆன்மவர்க்கங்களின் உள்ளத்துக்குள் சார்பாயிருந்துணரும் சிவபிரானையன்றி வளப்பம்பொருந்திய விஷ்ணுபிரமன்தேவர்கள் முதலியமற்றயாவர்களும் அளவிட்டும் அளவில்லாத தேவரீருடைய மகத்துவத்தை யார் அறியத்தக்கவர்கள். எ-று. (௬௪)

வேறு.

என்றுசீர்த்திகளெடுத்தெடுத்தேத்திநின்றிசைத்துத்
துன்றுசன்மவல்வினைப்பிணித்துகளறத்துடைத்தே
யின்றியாமெலாம்பரகதியெளிதினினெய்த
வொன்றுநின்னிடைவினுதலுண்டெனமகிழ்ந்துரைத்தார்.

(இ-ள்.) இவ்வாறு அகஸ்தியருடைய கீர்த்திகளைப் பலவாறாக எடுத்தெடுத்துத் துதிசெய்து நின்றுபுகழ்ந்து ஒழியாமல்தொடர்ந்து வருகின்ற ஜனனமரணத்திற்கேதுவாகியவலிய இருவினைப்பிணிகளைக் குற்றமறத்தொலைத்துவிட்டு இப்போது நாங்களெல்லாம் பரகதியையெளிதாக அடையும்படி தேவரீரைக்கேட்கும் கேள்வி ஒன்றுண்டென்று மகிழ்ந்துசொன்னார்கள். எ-று. (௬௫)

அந்தவாய்மைகேட்டருந்தவனளவிலாமகிழ்ச்சி
புந்திமேற்கொளநன்றுநன்றிங்குநீர்புகன்ற
திந்தநல்லறிவின்றுநும்முளத்தினிலெழுந்த
தெந்தமாதவப்பயன்கொலென்றிசைமின்களென்றான்.

(இ-ள்.) அந்தமுனிவர்கள் கூறிய உண்மை வார்த்தையை அகஸ்திய முனிவர்கேட்டு அளவில்லாதமகிழ்ச்சியானது மனதுக்குள்ளடங்காமல் மேற்கொண்டு அவர்களைநோக்கி இப்போது நீங்கள் சொல்லியவார்த்தை மிகவும் நன்றுநன்று, இந்தநல்லுணர்ச்சி உங்கள்மனதிலிப்போதுண்டானது எந்தமாதவப் பயனோவென்று சொல்லிநீங்கள் கேட்குங்கேள்வியைச் சொல்லுங்களென்றார். எ-று. (௩௬)

என்றுகும்பமாமுனிவரனெடுத்தியம்புதலு
மின்றியாமெலாமிழைத்திடுந்தவமுடிந்திடுநா
ணன்றுநன்றெனவுவகையங்கடல்புகுநலத்தால்
வன்றிறத்தவமுனிவரர்யாவரும்வகுப்பார்

(இ-ள்.) இவ்வாறு அகஸ்தியமுனிவர்புகழ்ந்து சொன்னவளவில் இன்றையதினம் நாங்களெல்லாருஞ் செய்ததவம் நிறைவேறிடும்நாளாக்கும் மிகநன்றுமிகநன்றென்று சந்தோஷமாகிய சமுத்திரத்துக்குள் மூழ்கினநலத்துடனே மிகவுமுறுதிப்பாட்டுத்தன்மையுள்ள தபோபலத்தையுடைய முனிவர்கள்யாவரும்சொல்லுகின்றார்கள். எ-று. (௩௭)

ஏதமாற்றியவெண்ணிலாவுயிர்களுக்கிரங்கிக்
காதலுற்றவர்கருமபேதங்களைக்கருதி
யாதிதந்தபேரண்டங்களளப்பிலவதனுட்
டீதகற்றிடும்பிருதுவியண்டத்தின்றிறனில்.

(இ-ள்.) பாபங்களைச்செய்த அளவில்லாத உயிர்களுக்காகத் திருவுளமிரங்கி விருப்பமுற்று அவர்களுடைய கன்மபேதங்களைக் கருதிச் சிவபிரான் படைத்தருளிய அண்டங்கள் அளவில்லை அந்த அண்டங்களுக்குள் குற்றங்களை நீக்குகின்ற பிருதிவியண்டபேதத்தில் எ-று. (௩௮)

அளவிலற்புதம்படைத்திடுமிந்தவண்டத்தின்
வளமிகுந்தவிவ்வகிலலோகத்தின்மண்வரைப்பி
னொளிதரும்பொன்மாமேருவிற்றென்புடையுலவித்
தெளியிலைம்பதுகோடியோசனையதாய்த்திகழும்.

(இ-ள்.) அளவில்லாத அற்புதத்தையுடைய இந்தப்பிருதிவியண்டத்திற் சேர்ந்த எல்லாஉலகங்களுக்குள்ளும் வளமிகுந்த இந்தபூலோகத்தின் நிலப்பரப்பிலே பிரகாசம்பொருந்திய பொன்மயமாகிய மகம்மேருவின் தென்புறத்தில் சென்றுதேறுமிடத்து ஐம்பதுயோசனை தூரம் பரப்புள்ளதாய் இதில்விளங்குகின்றது. எ-று. (௩௯)

பாசவேதனைபறித்தருள்பதித்திடும்பரமா
னீசன்வாழ்தலமெண்ணிலவாயினுமிதனுண்
மாசுகாய்ந்தருண்முத்தியையெளிதினில்வழங்கு
மேசிலற்புதத்தலமெமக்கிசையெனவிசைத்தார்.

(இ-ள்.) பாசதுன்பத்தைப் பறித்துத்திருவருளைப்பதித்தருளும் பரமாகிய சிவபிரான் திருக்கோயில் கொண்டு வீற்றிருக்குந்தலங்கள் அளவில்லாதவைகளாயிருந்தாலும் இவைகளுக்குள் ஆன்மகோடிகளின் குற்றங்களை நீக்கி அருளாகிய மோக்ஷத்தை எளிதில் பிரசாதித்தருளுகின்ற குற்றமில்லாத அற்புதத்தையுடையதலம் எதுவோ அதனை அடியேங்களுக்குஅருளிச்செய்யவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தார்கள். எ-று. (௪௦)

விண்டுமாதவர்மொழிதரக்குறுமுனிவிளம்பும்
பண்டுமைக்கரனளித்ததோர்பதியுண்டப்பதியைக்
கண்டுபோற்றினுமதன்புகழ்கேட்பினுங்கருத்துட்
கொண்டுமுன்னினுமுயர்கதியக்கணங்கொடுக்கும்.

(இ-ள்.) பெருமைபொருந்திய முனிவர்கள் இவ்வாறு வாய்திறந்துகூற அதைக்கேட்ட அகஸ்தியமுனிவர் சொல்லுகின்றார். பூர்வம் பார்வதிதேவியாருக்குச்சிவபிரான் உபதேசித்தருளிய ஒருதலம்பூலோகத்திலிருக்கின்றது, அந்தத்தலத்தைத்தரிசித்துத் துதிசெய்தாலும்சிவகதியை அப்பொழுதேயருளிச் செய்யும். எ-று. (௪௧)

தன்னையேதனக்கிணையதாயுடையவித்தலத்தை
யென்னையாளுடைநாயகனறுமுகத்திளையோன்
முன்னைநாளெனக்களித்ததுகதிபுகமுனிகாண்
மன்னுமீரெட்டிலைந்தினின்முதன்மையாய்மருவும்.

(இ-ள்.) தன்னையேதனக்கு ஒப்பாக உள்ள அந்ததலத்தைக்குறித்து என்னையாட்கொண்டருளுந்தலைவராகிய ஆறுமுகக்கடவுளானவர் நான்கதியடையும்படிமுன்னாள் எனக்குபதேசித்தருளப்பட்டது முனிவர்களே அந்தத்தலம் நிலைபெற்ற சிறந்தசிவதலங்கள்பதினாறினும் அதனினும் முக்கிய ஐந்துதலங்களினும் முதன்மையாய்விளங்குகின்றது. எ-று. (௨௪)

வேறு.

தில்லைதிருவெண்காடுகாசிகாஞ்சிதிருவானைக்காமதுரைதிருக்காளத்தி, மல்லலுறுமறைக்காடுசோமநாதமருவுமந்தராசலஞ்சிரா

லங்காடு, எல்லையினற்கிரிபழையதிருக்கோகன்னமிராமநாதம்மயி
லையீரெட்டாகுந், தொல்லைமறையிங்கிவையுளதிகமாகச்சொல்லு
மைந்துநகர்வியாதன்சொற்றதாமால்.

(இ-ள்.) சிதம்பரம்-திருவெண்காடு-காசி-காஞ்சி-திருவானைக்கா-மதுரை-திருக்காளத்தி-வளப்பம்பொருந்திய வேதாரணியம்-சோமநாதேச்சுரம் நிலைபெற்றமந்தரகிரி - சிறப்பமைந்த திருவாலங்காடு அளவில்லாதநன்மையையுடைய பருப்பதம்-பழைய திருக்கோகன்னம்-இராமேச்சுரம் திருமயிலை யென்னும் பதினாறுதலங்களாம். இவைக்குள் பழையவேதங்கள் மேன்மைபொருந்தியவைகளாய்ச் சொல்லும் ஐந்துதலம் உள்ளதென்று வியாசமுனிவரால் சொல்லப்பட்டது. எ-று. (௬௩)

வேறு.

ஆயவைகாஞ்சிகாசியழகுறுதிருக்காளத்தி
நாயகனடனஞ்செய்யுநலந்தருந்தில்லைமூதூர்
தூயமாயூரமாகுஞ்சொற்றருமிவையுணன்மை
யேயுமாயூரமுத்தியெளிதினிற்கொடுக்குமாதோ.

(இ-ள்.) அந்த ஐந்துதலங்கள்யாவையெனில் காஞ்சி காசி அழகுபொருந்திய திருக்காளத்தி சிவபிரான் ஆனந்தநிருத்தஞ் செய்கின்ற நன்மையைத்தருவதான பழையதலமாகிய சிதம்பரம் பரிசுத்தமுள்ளதிருமயிலை யென்பவைகளாம். சொல்லப்பட்ட இந்த ஐந்துதலங்களுக்குள் நன்மைபொருந்திய திருமயிலை யானது மோக்ஷத்தை யெளிதாகக்கொடுக்கும். எ-று. (௬௪)

பொதியமலைச்சருக்கமுற்றிற்று.

ஆக சருக்கம் - ௪ - க்கு, திருவிருத்தம் - ௱௬௭.



## தலவிசிட்டச்சருக்கம்.

வேறு.

பரகதியெளிதினெய்தற்கினியதோர்பதியுண்டென்றே
யரனையுட்கொண்டகாட்சியகத்தியமுனிவன்கூற
வரதவமுனிக்குழாங்கண்மகிழ்ச்சியங்கடலின்மூழ்கிக்
குரைகடன்முழக்கங்காட்டிக்குணலையிட்டடியிற்றாழ்ந்தார்.

(இ-ள்.) பரகதியை உயிர்கள் எளிதில் அடைவதற்கேதுவாகிய நல்ல ஒருக்ஷேத்திரம் பூலோகத்தில் உண்டென்று சிவபிரானைத் தம்முள்ளத்தில்வைத்துக் கொண்டிருக்கிறதோற்றத்தினையுடைய அகஸ்தியமுனிவர் சொல்லச் சிரேஷ்டம்பொருந்திய தபோபலத்தையுடைய முனிவர்கூட்டங்கள்சந்தோஷமாகிய அழகுபொருந்தியசமுத்திரத்தில் முழுகிஅந்தச்சந்தோஷத்தினுல்சத்தியாநின்றகடல்போல ஆரவாரித்துக்கைகொட்டிக்கொண்டு கூத்தாடி அவருடையபாதத்திற்பணிந்தார்கள். எ-று. (க)

தாழ்ந்தெழுந்துவரியுண்டதவாதிபசனனவாரி
வீழ்ந்துவெந்நிரயத்தாழ்ந்துமெலிவுறாதருளின்வாளாற்
போழ்ந்தனிர்பிறவித்தெவ்வைப்புனிதவீடடைந்தின்பார்ந்து
வாழ்ந்தடியேங்களுய்யமற்றதைவகுத்தியென்றார்.

(இ-ள்.) பணிந்தெழுந்து துதிசெய்து அவரை நோக்கிச் சமுத்திரங்களையுண்டுமிழ்ந்தருளிய தேவனே பிறவிக்கடலில்வீழ்ந்து கொடிதாகிய நரகத்தி லமிழ்ந்தி நாங்கள்வருந்தாதவண்ணம் உம்முடைய அருளாகிய வாளினாலே சனனமரணமென்கிற பகைவரைப்பிளந்தீர் ஆதலாலினிப் பரிசுத்தமாகிய மோக்ஷத்தையடைந்து ஆனந்தமேலிட்டு வாழ்ந்து அடியேங்களுய்யும்படி அந்தத்தலம் இன்னதென்று வகுத்துச்சொல்லவேண்டுமென்றார்கள். எ-று. (உ)

அளவிலாவருளாற்கும்பமுனிவரனறைவனெண்ணிக்
களபமாமுலையாள்பங்கன்கபாலிமாநகரநோக்கிப்
புளகமேற்கொள்ளரோமம்பொடித்திடவிழிநீர்சிந்த
வுளநெகிழ்ந்துருகத்தெய்வவோவியம்போலங்குற்றான்.

(இ-ள்.) அளவில்லாத அருளினாலே அகஸ்தியமுனிவர் கருதிச்சொல்லுகின்றார். யானைமத்தகம்போன்றதனங்களையுடைய பார்வதிபாகனாகியகபாலீசுவரர் திருக்கோயில்கொண்டு வீற்றிருக்கும் பெருமைபொருந்திய திருமயிலைத்திசையைநோக்கிப் பணிந்து சரீரம் புளகிக்கவும் மயிர்க்குச்செறியவும் கண்களிலிருந்து ஆநந்தபாஷ்பம் பெருகவும் மனம்நைந்துருகவும் தேவசித்திரம்போல் தியானத்திலிருந்தார். எ-று. (ஈ)

நெடிதுபேரருளின்வாழ்ந்துமீண்டுமந்நிலைவழாதங்
கடிதொழுமுனிக்குழாங்களலர்திருமுகங்கணோக்கி
முடிவிலற்புதங்கள்சேர்ந்தமுதுபதிப்பெருமைமுற்றுங்
கடிதினிற்றொகுத்துச்சேரக்கழறுதுங்கேண்மினென்றான்.

(இ-ள்.) நெடுநேரமிருந்த அருளாகியதியானத்தில் வாழ்ந்திருந்து மீட்டுந்தியானநிலையைவிட்டு நீங்காமல் அங்குதம்முடைய திருவடியைப் பணிந்திருக்கும்முனிவர்கூட்டங்களுடையசந்தோஷத்தினுல்மலர்ந்ததிருமுகங்களைப்பார்த்து முடிவில்லாத அற்புதம்பொருந்திய பழமையாகிய திருமயிலையென்னும் அந்தக்ஷேத்திரத்தின் மான்மியமுழுவதும் விரைவில் தொகுத்துச்சேர்த்துச்சொல்லுகிறேம் கேளுங்கள் என்றார். எ-று. (௪)

கங்கையஞ்சடிலத்தண்ணல்கழறியபுராணந்தன்னுள்-
பொங்குசீர்படைத்தசைவபுராணத்தினுயர்ந்ததான
மிங்கிதென்றதன்சீர்கோடியுருத்திரவெழிற்பேர்மேய
சங்கிதைவிரித்துக்கூறுமதனையான்சாற்றுகின்றேன்.

(இ-ள்.) கங்கையைத்தரித்திருக்குஞ் சடாமகுடத்தையுடைய சிவபிரான் கற்பித்தருளிய பதினெண்புராணங்களுக்குள் ஒன்றாய்மிகுந்த சிறப்புள்ள சைவபுராணத்தினுயர்ந்த ஸ்தலம் இன்னதென்று அதனுடைய சிறப்புகளை கோடிருத்திரர்களுடைய அழகுள்ளபேர்கள் பொருந்திய சங்கிதையானது விவரித்துச் சொல்லுகின்றது அதையுங்களுக்கு இப்போதுநான் சொல்லுகின்றேன். எ-று. (௫)

வேறு.

எண்டவிருமுயிர்களுமெவ்வுயிர்க்குமேலாயிலங்குசிவமும்போலெப்பதிக்குமேலாய்த், தண்டரளவொளிபரப்பும்புனிதவெள்ளிச்சயிலரூபந்தனதுரூபமாகித், தெண்டிரையாடைக்கொடிதன்றிலகமாய்மெய்த்தேவர்கட்காரருளமிர்தாய்ச்சிறப்பின்றேவ, ரண்டருக்கும்பிணியறுக்குமருந்தாய்வைகுமதனுமயிலைநகராகுமன்றே.

(இ-ள்.) அளவில்லாத ஆன்மாக்களும் அந்த ஆன்மாக்களுக்கு மேலாய் விளங்குகின்ற சிவபிரானும்போல எல்லாத்தலங்களுக்கும் மேலாகிக் குளிர்ச்சிபொருந்திய முத்துக்களின் பிரகாசத்தைப்போல ஒளியைப் பரப்புகின்ற பரிசுத்தமாகிய வெள்ளிமலையினுருவம் தன்னுடைய உருவமாகியும் தெளிவுள்ள அலைகள் பொருந்திய சமுத்திரமாகிய ஆடைதரித்துள்ள பூமிதேவிக்குத் திலதப்பொட்டென்று சொல்லத்தக்கதாயும் மெய்த்தேவர்களுக்கெல்லாம் நிறைந்த அருளமிர்தமாகியுஞ் சிறப்புடைய அந்தத்தேவர்களெல்லாருக்கும் பிறவிநோயைநீக்கத்தக்கஔஷதமாயுமிருக்கும். அதனுடையபெயர் திருமயிலை நகரமென்றுசொல்லப்படும். எ-று. (௬)

இமையாநாட்டமுளசுரர்கண்முன்னுவிவ்வுலகின்மேயசராசரங்களீறு, வுமைபாகன்மருவுமதனெல்லைதன்னிலொருகணப்போ

திவ்வுயிர்களுறையப்பெற்றாற், சுமையாளசெடியுடலைத்தீர்க்குஞ்சீ ரூர்சுகபரானந்தவெள்ளத்தழுத்தும்பேரூ, ரமையாதபெருங்காதல ளிக்குமூதூரதனுமமயிலைநகராகுமன்றே.

(இ-ள்.) இமைகூட்டாதகண்களையுடைய தேவர்கள் முதல் இந்தவு லகத்தில் வாழும் சராசரமென்னும் இருவகையுயிர்களீருகப் பார்வதி பாகனுகிய சிவபிரான் திருக்கோயில்கொண்டு வீற்றிருக்கும் அந்ததலத் தின் எல்லையில் ஒருக்ஷணப்போதாவது இந்த உயிர்கள் வாசஞ்செய்யத் தக்க பேறுபெற்றால் சுமைபோலப்பாபசம்பந்தமாகிய இவ்வுடல் மறுப டியும் நேரிடாவண்ணம் தீர்க்கத்தக்கசிறப்புப்பொருந்திய ஸ்தலம் சுகப் பிரமானந்த வெள்ளத்திலழுத்துகின்ற பெரியஸ்தலம் அடங்காதபெருவி ருட்பைக்கொடுக்கத்தக்கபழமையான தலம். அதனுடையபெயர் திருமயி லை யென்றுசொல்லப்படும். எ-று. (எ)

எண்ணரியமாதவத்தாலதன்கண்வந்தேயிறந்தாலும்பிறந்தாலு மியாவரேனு, நண்ணியவணுறைந்தாலுமதனுமத்தைநாவினுலறை ந்தொருக்கானவிற்றினுலும், கண்ணகன்ஞாலத்திலெவ்விடத்துற் றேனுங்கருத்திலதைநினைந்தாலுங்கரிசுதீர்த்தே, யண்ணறிருவடி யதனையளிக்குமூதூரதனுமமயிலைநகராகுமன்றே.

(இ-ள்.) எவ்வகைப்பட்டவர்களேயானுலும் அளவிடுதற்கரிதாய்ப் பூ ர்வசென்மத்தில் செய்ததபோபலத்தினுல் அந்ததலத்தினிடத்தில் வந்து இறந்தாலும் பிறந்தாலும் அவ்விடத்திற்பொருந்தி வாசமாயிருந்தாலும் அ ந்ததலத்தின்பெயரை ஒருதரந்தங்கள்நாவினுல் உச்சரித்து மற்றொருவ ருக்குச்சொன்னுலும் இடமகன்ற இந்த உலகத்திலிருக்கும் ஊர்களில் எந் தஊரிலிருந்தாவது தங்களுடைய இருதயத்தில் அதனுடைய பெயரை நினைத்தாலும் பாபங்களெல்லாம் நீக்கிச்சிவபிரான் திருவடிகளைப்பிரசாதி க்கத்தக்கபழமையாகியதலம், அதனுடையபெயர் திருமயிலைநகரமென்று சொல்லப்படும். எ-று. (அ)

எவ்வகைப்பட்டவர்களென்றது சாதியினுல் உயர்ந்தவர்கள், தாழ்ந்த வர்கள், கல்வியினுலுயர்ந்தவர்கள், தாழந்தவர்கள், மகாரோகங்கள் முத லியரோகமுள்ளவர்கள், இல்லாதவர்கள், நல்லொழுக்கமுள்ளவர்கள், இ ல்லாதவர்கள், சிவநேசமுள்ளவர்கள், இல்லாதவர்கள் எனவிவரித்து அறி ந்துகொள்க.

வே று.

இப்பதியைவானவரியக்கரசுரேசர்
செப்பரியகின்னரர்கள்கிம்புருடர்சித்த

ரொப்பில்வசுதேவருடனுரகரவுணேசர்
தப்பிலருமாதவர்கள்சாரணர்களானோர்.

(இ-ள்.) இப்படிக்கொத்தமேன்மையுள்ள இந்தக்ஷேத்திரத்தைத்தேவர்கள் யக்ஷர்கள் அசுரேசர்கள் சொல்லுதற்கரிய கின்னரர்கள்கிம்புருடர்கள் சித்தர்கள் ஒப்பில்லாதவசுதேவர்கள் நாகராஜாக்கள் அவுணேசர்கள் பழுதுபடாததவமுள்ளமுனிவர்கள் தேவதூதர்கள் என்றுசொல்லப்பட்டவர்களும். எ-று. (௬)

வென்றிகொண்மருத்துவர்கள்விஞ்சையர்கள்வெய்யோர்
துன்றுசுதைவெண்கதிர்கள்தும்புருசுரேசர்
வன்றிறறரும்பிரமர்மாயரிவரெல்லா
மென்றுமிரவும்பகலுமேத்துவர்விழைந்தே.

(இ-ள்.) வெற்றிகொண்டிருக்கும்மருத்துவர்கள் வித்தியாதரர்கள் பன்னிரண்டுசூரியர்கள் அமிர்தமயமாகப்பொருந்திய வெண்கதிர்களுள்ள சந்திரர்கள் தும்புருநாரதர்கள் தேவேந்திரர்கள் மிகுந்தவல்லமைபொருந்திய பிரமர்கள் விஷ்ணுக்கள் ஆகிய இவர்கள்யாவரும் நாள்தோறும் இரவும்பகலும் நம்பித்தோத்திரஞ்செய்வார்கள். எ-று. (௧௦)

இப்பதியைத்தேவர்கள்முதல் விஷ்ணுக்கள்முதலாகிய யாவருந்துதிசெய்வார்களெனக்கூட்டியுரைத்துக்கொள்க. இவ்வோரண்டத்தில் சூரியர் முதலானவர்களிருப்பதுபோலப் பல ஆயிரங்கோடி அண்டங்களிலுந் தனித்தனியிருப்பதனால் சந்திரன், பிரமன், விஷ்ணு இவர்களைப்பலராகக்கூறினர்.

மூடியசடைக்கடவுண்முன்சொன்மறையும்பின்
பாடியசிவாகமமும்பல்கலையுஞ்சத்த
கோடிமனுவுந்தவளகோகனகமகோயி
னீடியகலைக்கொடியுநின்றருளிருமங்கண்.

(இ-ள்.) கவிந்திராநின்ற சடாமகுடத்தையுடைய சிவபிரான் ஆதியில் கற்பித்தருளிய வேதங்களும் பின்புகற்பித்தருளிய சைவாகமங்களும் பலசாஸ்திரங்களும் சப்தகோடிமகாமந்திரங்களும் வெண்டாமரைமலர்க்கோயிலில்வீற்றிருக்கும் சரஸ்வதியும் வாசமாயிருப்பது அந்தத்தலம். எ-று.

தேங்கியமலர்ப்பொழில்கள்தேவருலகிற்போ
யோங்கியவண்மேயதருவோடமரிழைக்க
வீங்கியநெடுஞ்சிகரவெள்ளியசலத்தி
னுங்குமைதனக்கரனளித்தபதியீதாம்.

(இ-ள்.) தேன்நிறைந்தபுட்பங்களையுடைய சோலைகள் தேவருலகத்திற் சென்று அவ்விடத்திலோங்கிவளர்ந்திராநின்ற பஞ்சதருக்களுடனே போர்செய்ய உயர்ந்த நீண்டசிகரத்தையுடைய வெள்ளிமலையாகிய கைலாயத்தில் பார்வதிதேவியாருக்குச் சிவபிரான் உபதேசித்தருளிய தலமும் இதுவாம். எ-று. (கஉ)

தேசிகன்மனைக்குருகுதீமையருளற்றே
பூசுரனையட்டவினைபொன்கவர்களங்க
மாசுபடுபொய்மதுவருந்தும்வினையாவு
நாசமுறுமங்ககரைநண்ணுமுனமம்மா.

(இ-ள்.) குருபத்தினிடைவிரும்புகிறபாபம், அருளென்பது சிறிதுமில்லாமல் பிராமணனைக்கொன்றபாபம், பொன்னைத்திருடுகிறபாபம், குற்றம்பொருந்தியபொய்பேசுதலால்வரும்பாபம், மதுபானஞ்செய்தலால்வரும்பாபம், என்னும் இவைகளெல்லாம் அந்ததலத்தைப்பொருந்துவதற்கு முன்னம் நாசப்பட்டுப்போம். எ-று. (கங)

வே று.

சண்டவெங்கதிர்பரப்பியேயிருளடுந்தபனர்கள்பல்கோடி
மண்டுபேரொளிதருந்துகிர்க்கிரியின்பால்வளர்மலர்க்கொடிபோல
வண்டுலாங்குழற்கற்பகக்கொடியெனுமடவரலொருபாகத்
தண்டர்நாயகர்கபாலிநாயகர்மகிழ்ந்தமர்ந்ததப்பதிதானே.

(இ-ள்.) மிகுந்தவெப்பமுள்ளகிரணங்களைப்பரப்பி இருளைக்கெடுக்காநின்ற பலகோடிசூரியர்பிரகாசத்தைத்தரத்தக்கதாகிய ஒருபவளமலையினிடத்து வளருகின்ற பூங்கொடிபோல் வண்டுகளுலாவும் அளகத்தையுடையகற்பகவல்லித்தாயாரென்கின்ற உமையவளையிடப்பாகத்திருத்திய தேவநாயகராகிய கபாலிநாதரானவர் திருக்கோயில்கொண்டுமகிழ்ந்துவீற்றிருப்பது அந்தத்தலம். எ-று. (கச)

இரவியாயிரங்கோடியொன்ருய்த்திரண்டிலகுபேரொளிமான
வரதனூர்சிவலிங்கரூபங்கொடுமயிலையிலுறைகின்றான்
விரவியேதொழுவார்வினையாவையும்வீடிடும்வீடாத
பரமஞானமும்வெளிப்படுமுத்தியும்பலிக்குமவ்விடைதானே.

(இ-ள்.) ஆயிரங்கோடிசூரியர்கள் ஒன்ருய்க்கூடி ஏககாலத்தில் உதயமாய்ப்பிரகாசிக்குமொளியையொப்பாகச் சிவபிரான் சிவலிங்கத்திருமேனிகொண்டுதிருமயிலையென்னுந்தலத்தில் வீற்றிருக்கின்ருர். அங்குசென்று அன்புபொருந்தி அவரைப்பணிகின்றவர்களுடைய வினைகளெல்லா

ம் நீங்கும். கெடாதமெய்ஞ்ஞானமும் உண்டாகும். அந்த இடத்தில் பரமுத்தியும் சித்திக்கும். எ-று. (கரு)

குலவுதெண்டிரையுடுத்தபாரிடத்தினிற்குழுமியவுயிர்க்கெல்லா
நலமிகுந்திடவவ்விடையவ்விடைநம்பன்முன்னருளாலே
யலகினற்சிவலிங்கரூபங்கள்கொண்டமருவனிதுபோலே
யிலகுபோகமுமுத்தியுமெளிதினிலீகுவதரிதாமால்.

(இ-ள்.) வளைந்ததாய்த்தெளிவுபொருந்திய அலைகளையுடையசமுத்திரஞ்சூழ்ந்த இவ்வுலகத்தினிடத்தில் கூட்டமாயிராநின்ற உயிர்களுக்கெல்லாம் இகபரசவுக்கிய முண்டாகும்பொருட்டு அந்தந்ததலங்களிற் சிவபிரான் கிருபைகூர்ந்து சிருஷ்டிகாலத்தின்போதே யளவில்லாதநல்லசிவலிங்கரூபங்கள் கொண்டுவீற்றிருந்தாலும் விளங்குகின்ற போகத்தையும் மோக்ஷத்தையும் இந்ததலத்தில் பிரசாதித்தருளுவது போலமற்றத்தலங்களில் எளிதில் அருளுவது அருமையாம். எ-று. (கசா)

அண்டர்போற்றிடுபுன்னையங்கானலிலிலிங்கத்தையன்பான்முன்
கண்டிறைஞ்சிடாக்கண்களுங்கண்களோகண்களன்றதனுமம்
விண்டுரைத்திடாநாவுநாவன்றிவண்மேவியதிருமுன்பு
தெண்டெனப்பணிந்தெழாதபொய்த்தேகமுந்தேகமன்றெனலாமே.

(இ-ள்.) தேவர்கள் போற்றுகின்றபுன்னைவனத்து வீற்றிருக்கும் சிவலிங்கப்பெருமானையன்புடன் தரிசித்துப்பணியாத கண்களும் கண்களோ கண்களன்று. அந்தசிவலிங்கப்பெருமானுடைய புகழைவாய்திறந்து கூறுதநாவும் நாவன்று. இவ்விடத்தில்பொருந்திய ஸ்வாமி சந்நிதிக்கெதிரில் தெண்டாகாரமாகப்பணிந்தெழாத பொய்த்தேகமுந்தேகமல்லவென்றுசொல்லலாம். எ-று. (கஎ)

ஊனுலாவியவுயிர்க்குழுப்பலபொருளொருங்குடன்றெரித்தேற
வானுலாவியசுக்கிரன்மெய்ப்பிணிமாற்றவத்தலநண்ணி
ஞானநாயகற்றொழுதருச்சித்தருணலம்பெறுமதனாலே
வானுளோர்களுஞ்சுக்கிரபுரியெனவழங்குமப்பதிதானே.

(இ-ள்.) தேகத்துடன்சஞ்சரித்துக்கொண்டிருக்கும் உயிர்க்கூட்டத்துக்கு ஆதாரமாகியபலபொருள்களையுண்டாக்கி அவைவிருத்தியடைய ஆகாயத்தில் நக்ஷத்திரரூபமாய்ச் சஞ்சரிக்கிற சுக்கிரபகவான்தன்னுடைய சரீரத்தில்பொருந்திய பிணியைநீக்கிக்கொள்ளும்பொருட்டுத் திருமயிலையென்னும் அந்தத்தலத்திற்சென்றுவசித்துஞானசொரூபனாகியகபாலிநாதனைப் பணிந்துபூசித்து அவருடைய திருவருட்பிரசாதம்பெற்றுக்கொண்ட நன்மையினாலே தேவர்களும்சுக்கிரபுரியென்று சொல்லும்படி அந்தத்தலத்துக்கு ஒருபெயர் வழங்குகின்றது. எ-று. (கஅ)

வேறு.

கோலமலர்மேலயன்மாலிந்திரர்களநந்தகோடிகடவுளரெவை யுங்கூடமடிந்திடவே, சாலவுலகங்களெலாம்பிரளயங்கோத்திடுநா ட்சாராதப்பதியினிதுசத்தியஞ்சத்தியமே, மாலுறவேபொய்த்துவ ருங்கொடுங்கலியு மெங்கும்வருத்திடினுமப்பதியின் மருங்குமுறாதத ைற், சிலவிரதந்தருமந்தவஞ்செபங்களெளிதிற்சித்திக்குமுத்திக்குந் திடந்திடநிச்சயமே.

(இ-ள்.) அழகுபொருந்திய தாமரைப்பூவில்வீற்றிருக்கும் பிரமதேவ ன் மகாவிஷ்ணு தேவேந்திரன் என்னும் இவர்களும் மற்றுமுள்ள அனந் தகோடிதேவர்களும் சராசரமாகிய உயிர்களும் ஏககாலத்தில்மடியும்படி மி குதியாக உலகங்களெங்கும் ஊழிப்பிரளயங்கோத்துக்கொள்ளும் நாளில் அந்தத்தலத்தினிடத்தில்அப்பிரளயம்சேராது இதுஉண்மை. உலகத்தில்யா வருமயக்கத்தைப்பொருந்தும்படி பாவத்தன்மைகொண்டு வருகின்றகொ டியகலியென்பதும் எந்தவிடங்களிலும் வியாபித்து வருத்தினாலும் அந்த த்திருமயிலையென்னுந் தலத்தின்பக்கத்திலும் சேராது. அதனால் சிலமுள்ள விரதங்கள் தருமங்கள் தபங்கள் செபங்கள் என்னும் இவைகள்யாவும் அந் தத்தலத்தில் எளிதாகச்சித்திக்கும். மோக்ஷமடைதற்கு அந்தத்தலமே திட முள்ளதாம். இது நிச்சயமானவார்த்தை. எ-று. (௧௯)

வேறு.

இத்தலத்தினுண்டுசந்ததீர்த்தமொன்றவைக்குளே
நித்தஞானரூபமாய்நிகழ்ந்திடுமதன்பெயர்
சத்திகங்கையத்தடந்தனிற்படிந்தெழுந்தபேர்
முத்தியின்சுகக்கடற்குண்மூழ்கியின்பமேவுவார்.

(இ-ள்.) திருமயிலையென்னும் அந்தத்தலத்தில் ஏழுதீர்த்தங்களிருக் கின்றன. அவைகளுக்குள்ளே ஒருதீர்த்தம் நித்தஞானரூபமாய் விளங்கு கின்றது. அதன்பெயர் சத்திகங்கையென்று சொல்லப்படும். அந்தீர்த்தத் தில் ஸ்நானஞ்செய்தவர்கள் மோக்ஷமாகிய ஆனந்தக்கடலில் முழுகிப்பே ரின்பமடைவார்கள். எ-று. (௨0)

வேறு.

மண்ணோரரியமாதவத்தோர்மலர்க்கற்பகநீழலில்வாழும்
விண்ணோரயன்மால்சித்தர்கள்சீர்மேவும்புகழ்விஞ்சையரிவர்கள்
பண்ணேரடியையும்மொழிமடவார்பலருந்திரண்டுதிரண்டேத்தித்
தண்ணோடிலங்குமதன்கரையிற்றனைந்தாடுவரெப்பொழுதினுமே.

(இ-ள்.) பூலோகத்திலிருக்கும்மனிதர்கள் அருமையாகிய தவமுள்ள முனிவர்கள் மலர்கள் மலர்ந்துகொண்டிருக்குங் கற்பகவிருக்ஷத்தின் நிழலில் வாழ்கின்ற தேவர்கள் பிரமதேவன் மகாவிஷ்ணு சித்தர்கள் சீர்பொருந்திய புகழுள்ளவித்தியாதரர்கள் என்னுமிவர்களும் பண்போலிருக்கும் வசனமுள்ள இவர்களுடைய மாதர்களும் பலராகக்கூடிக்கூடிவந்து துதிசெய்து குளிர்ச்சியுடன் விளங்குகின்ற அந்தத்தீர்த்தத்தின் கரையில் வந்து நெருங்கிநின்று எக்காலத்திலும் ஸ்நானஞ்செய்வார்கள். எ-று. (உக)

கற்றோர்பரவுஞ்சதானந்தர்கழறுஞ்சாபத்தானதனீர்
வற்றாபசுமண்டூகங்களாண்டுமெருவாவெயின்மூன்றுஞ்
செற்றார்விளங்குமயிலைநகர்க்குறவன்கங்கைதனின்மூழ்கப்
பெற்றாவரேபேறனைத்தும்பெற்றார்மற்றார்பெற்றாரே.

(இ-ள்.) கற்றுணர்ந்தவர்கள் துதிசெய்யத்தக்க சதானந்தமுனிவர்கூறியசாபத்தினால் அந்தத்தடாகத்திலுள்ள நீரானது எக்காலத்தும் வற்றுவதில்லை. அன்றியும் அதில்தவளைகள் பொருந்தாவாம். திரிபுரங்களையெரித்தவராகிய சிவபிரான் விளங்குகின்ற அந்தக்ஷேத்திரத்திலிருக்குஞ் சிவகங்கையில்ஸ்நானஞ்செய்யும்பேறுபெற்றவர்களே இம்மைமறுமைப்பயனையும் மோக்ஷத்தையும் பெற்றவர்கள். மற்றயார்பெற்றவர்கள்? எ-று. (உஉ)

முன்னார்புரமுமவர்புரமுமுருக்குந்தகையாரிருக்குமலர்ப்
பொன்னாரெழில்சேர்மயிலைநகர்புரப்பாளிருந்துத்தரத்திலென்று
மொன்னார்நடுங்கவெரியுமிழுமொண்சூலமுமெண்டோளுமணி
மின்னார்கலனும்விழிமூன்றும்விளங்கவிளங்கும்பைரவியே.

(இ-ள்.) பகைவருடையதிரிபுரங்களையும் அவர்களுடைய சரீரங்களையுமழித்தருளியதகைமைப்பாட்டினையுடைய சிவபிரான் திருக்கோயில்கொண்டிருக்கின்ற திருமகள்வாசமாயிராநின்ற அழகுநிறைந்ததிருமயிலையென்னுந்தலத்திலிருந்து காக்க, அதன்வடதிசையில் எக்காலமும் சத்துருக்களெல்லாம் நடுங்கும்படி அக்கினியைக் கக்கிக்கொண்டிருக்குஞ் சூலாயுதமும் அஷ்டபுஜங்களும் பிரகாசம்பொருந்திய இரத்தினாபரணங்களும் திரிநேத்திரங்களும் விளங்கும்படி பைரவியென்னுஞ்சத்தியானவள் பிரசன்னமாய் வீற்றிருக்கின்றாள். எ-று. (உந.)

வாவுங்கயற்கட்கற்பகப்பூவல்லிக்கொடியுங்காபாலித்
தேவும்விளங்குமயிலைநகர்செழிக்கும்வடதிக்கிருந்தளிப்ப
மேவுஞ்சோராருயிர்குடிக்கும்விற்கொண்டேந்திவிண்கிழியத்
தாவுமதகுஞ்சரமுகைக்குஞ்சாத்தாவெனும்வைரவருறைவார்.

(இ-ள்.) தாவிச்செல்கின்ற சேல்மீனையொத்த கிருபாநோக்கமுள்ள கற்பகவல்லித்தாயாரென்னும் பார்வதிதேவியாரும் கபாலீச்சுரருந் திருக்கோயில்கொண்டு வீற்றிருந்தருளும் வளப்பமுள்ள திருமயிலையென்னும் க்ஷேத்திரத்துக்கு வடதிசையில்பகைவருடைய உயிரை ஆபோசனமாகக் கொள்ளத்தக்க வில்லைக்கையிலேந்திக்கொண்டு அண்டமுகடு பிளக்கும்படி தாவுகின்ற வெள்ளையானையைச்செலுத்துஞ் சாத்தாவென்கின்ற பைரவமூர்த்திகள் வீற்றிருக்கின்றார். எ-று. (௨௪)

வே று.

நித்தனையர்ச்சனைபுரிதல்தவஞ்செபந்தியானநீராடல்தர்ப்பித்தனிமலனடியார்க்குச், சித்தமகிழப்பூசைசெய்திடல்பூசுரர்க்குச்செம்பொன்முதலாகியதானங்கள்கொடுத்திடுதல், பத்தியுடன்றிருப்பணிகள்பண்ணல்வலம்பண்ணல்பலமகங்கள்புரிந்திடுதல் பலிக்குமிவையெல்லா, மத்தலத்திலாற்றிடிலங்கொன்றநந்தமாகுமாற்றினவர்பவக்கடலைமாற்றினவராவர்.

(இ-ள்.) அங்குதிருக்கோயில்கொண்டுவீற்றிருக்கும் சிவபிரானை யருச்சித்தலும் தபம் செபம் தியானம் தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்தல் பிதுர் தர்ப்பணஞ்செய்தல் சிவனடியார்களுக்குச் சித்தம்மகிழும்படி யாராதனை செய்தல் பிராமணர்களுக்குச் சுவர்னதானமுதலான தானங்கள்கொடுத்தல் பத்தியுடன் ஆலயத்திருப்பணிகள்செய்தல் பிரதக்ஷணம் செய்தல் பலயாகங்கள்செய்தல் என்னுமிவைகள் அந்தத்தலத்தில் சித்தியாகும். அன்றியும் அந்தத்தலத்திலிவைகளைச் செய்தால் ஒன்று அனந்தமாகும். அவ்வாறு செய்தபேர்கள் பிறவிக்கடலைமாற்றினவர்களாவார்கள். எ-று. (௨௫)

பொங்குபுகழ்மேயபிரமன்முடிமுன்றேடிப்பேோதவிளைத்தம்முடிகாண்பான்புரியுந்தவம்போற், செங்கமலமேலெகினம்வாழ்மயிலைநகரிற்செறிந்திடுமூர்த்திகளிலொருமூர்த்தியைப்போற்றிடினுந், தங்கள்வினைப்பவங்கள்தொலைத்தருள்பெறுவரெனிலிச்சகத்துயிர்கட்குயிர்ப்பிணிகள்தவிரவினையறுக்கும், புங்கவனைச்சேவித்தோர்பேரின்பவாழ்வைப்பொருந்தியருந்துவரெனநாம்புகல்வததிசயமே.

(இ-ள்.) மிகுந்தபுகழைப்பொருந்திய பிரமதேவன் சிவபிரானுடைய திருமுடியைக்காணஅன்னப்பட்சியாகவடிவங்கொண்டுவிண்ணிற்பறந்துதேடியுங்காணுமையால் மிகவும்மனமிளைத்து அம்முடியைக்காணவேண்டித் தவம்புரிதல்போல் செந்தாமரைமலர்மேல் அன்னம்வாழ்கின்றதடாகங்கள் சூழ்ந்ததிருமயிலை யென்னுந்தலத்தில் வீற்றிருக்குஞ் சிவலிங்கமூர்த்திகளில்

ஒருசிவலிங்கமூர்த்தியைத்துதிசெய்தாலுந் தங்கள் தங்கள் பிறவிக்கேதுவாகிய வினைகளையறுத்துச் சிவகதியைப்பெறுவார்கள் என்றால் இவ்வுலகத்தில் வாழ்கின்றவர்களுடைய உடற்பிணிகள் நீங்கும்படி வினைகளையொழிக்காநின்ற கபாலீச்சுரரைச் சேவிக்கின்றவர்கள் பேரின்பவாழ்வைப் பொருந்திப் பிரமானந்தமடைந்து அங்குள்ளசுகத்தையநுபவிப்பார்களென்று நாம் சொல்லுவது அதிசயமாம். எ-று. (௨௬)

சன்மார்க்கசமயத்துட்சுத்தசைவமுஞ் சோபானமுத்திகளிற்சைவசித்தாந்தமுமாற், றுன்மார்க்கந்துரந்தழிக்குமந்திரத்துட்சிறந்த தூயவெழுத்தஞ்சுமுயர்ந்தோங்குமவைபோலச், சன்மார்க்கமளித்திடுமாமயிலைநகர்சன் சத்திகங்கையெனுந்தீர்த்தந்தவத்தினிற்குமேலா, நன்மார்க்கமுனிக்கணங்காளெளிதுகதிபுரக்கென்னுமருளொன்றுமெனக்கும்பனவிற்றினுல்.

(இ-ள்.) நல்லொழுக்கமுள்ள முனிவர்களே பலவகையாகியசமயங்களுக்குள் சுத்தசைவசமயமும் சிறப்பினைத்தருகின்ற மோக்ஷங்களில் சைவசித்தாந்தமோக்ஷமும் மயக்கமாகிய துன்மார்க்கங்களைத்துரத்தி அவைகளைக்கெடுக்கும்பலவகை மந்திரங்களிற் சிறந்ததாய்ப் பரிசுத்தமுள்ளபஞ்சாக்ஷரங்களும்மேன்மைபெற்றுவிளங்கிக்கொண்டிருக்கும். அவைபோலச்சன்மார்க்கத்தையருளுகின்ற திருமயிலையில்வீற்றிருக்கும் கபாலிச்சுரருடைய சத்திகங்கையென்னுந் தீர்த்தமும் தபோபலங்களுக்கெல்லா மேலானதாம். ஆகையால் அந்தத்திருமயிலையென்னுந்தலமானது யாவரும் எளிதில் கதியடையத்திருவருளைப் பொருந்திருக்குமென்று அகஸ்தியமுனிவர் கூறினர். எ-று. (௨௭)

கும்பமுனிமயிலைநகர்ப்புகழ்முழுதுந்தொகுத்தேகூறவருந்தவர்களெலாங்குண்டிகைதண்டயர்ந்தே, பம்புசடாமுடிதுளங்கக்கண்ணருவிபாயப்பரமானந்தக்கடற்குட்படிந்துகரைகாணு, திம்பரின்முன்னுள்வருத்துஞ்சூருரமுமன்னனிடுஞ்சிறையுமடுந்திறல்வேலெவீந்தருளுமங்கா, ளும்பரெல்லாங்குமரேசன்றிருவடிகண்டடைந்தவுவகையினும்பதின்மடங்கங்குற்றவதிசயமே.

(இ-ள்.) இவ்வாறு அகஸ்தியமுனிவர் திருமயிலையென்னுந்தலத்தின்மான்மியங்களை யெல்லாந்தொகுத்துச் சொல்லக்கேள்வியுற்ற முனிவர்கள்யாவரும் சந்தோஷத்தினல்மெய்மறந்து தண்டுகமண்டலங்கள் நழுவவும் சடைகள்நெருங்கிய முடிகள் அசையவும் சிரகம்பிதஞ்செய்து கண்களிலிருந்து ஆனந்தபாஷ்பஞ்சொரியப்பரமானந்தசமுத்திரத்திற்குள் மூழ்கி

க்கரைகாணுதவர்களாகிய அவர்கட்கு இவ்வுலகத்திலே ஆதிகாலத்தில் தேவர்க [illegible] டையயார்பும் அவர்க்கு [illegible] [illegible] நற்பொருந்திய வேலாயுதத்தை [illegible] தந்தருளிய அந்த் நாளில் தேவர்கள் யாவரும் சுப்பிரமணியக்கடவுளுடைய திருவடிகளைத் தரிசித்து அடைந்த சந்தோஷத்தைப்பார்க்கிலும் பதின்மடங்கதிகமாகச் சந்தோஷமுண்டாயின. எ-று. (உஅ)

வேறு.

ஆடினர்சிற்சிலராரணமுற்றும்
பாடினர்சிற்சிலர்பாதமுடிக்கண்
சூடினர்சிற்சிலர்துள்ளியெழுந்தங்
கோடினர்சிற்சிலருய்ந்தனமென்றே.

(இ-ள்.) இவ்வாறு அடைந்த சந்தோஷத்தினுல் சிலமுனிவர்கள் ஆனந்தக்கூத்தாடினுர்கள். சிலமுனிவர்கள் வேதவாக்கியங்களைப்பாடினுர்கள். அகஸ்தியமுனிவருடைய திருவடிகளைச் சிலமுனிவர்கள் தங்கள் முடியினிடத்துச் சூடினுர்கள். சிலமுனிவர்கள் நாமுய்ந்தோமென்று துள்ளியெழுந்தோடினுர்கள். எ-று. (உகூ)

துளித்தனர்கண்மழைசூழ்ந்துதிரண்டே
விளித்தனரெல்லிருமேவுதிரென்றே
களித்தனரின்பெனுமார்கலிகண்டே
குளித்தனர்நின்றுபுகூறுதலுற்றுர்.

(இ-ள்.) ஆனந்தபாஷ்பம் பொழிந்தவர்களாயும், நீங்கள் யாவரும் ஒருகூட்டமாய்ச் சேர்ந்து வாருங்களென்று முனிவர்கள் யாவர்களையும் அழைத்தவர்களாயும், களிப்படைந்து பேரின்பமாகிய சமுத்திரத்தைக்கண்டு மூழ்கினவர்களாயும் நின்று ஒருவார்த்தை சொல்லுகின்றுர்கள். எ-று. ()

கண்ணன்மகிழ்ந்துகடைந்தமுதத்தை
விண்ணவருண்ணவிடுத்ததுபோல்யா
நண்ணருமங்கர்நண்ணுபுவாழ
வண்ணலளித்தனையார்செயவல்லார்.

(இ-ள்.) மகாவிஷ்ணுவானவர் மகிழ்ச்சியடைந்து திருப்பாற்கடலைக் கடைந்து அதிலுண்டாகிய அமிர்தத்தைத் தேவர்களெல்லாருமுண்ணும்படி கொடுத்ததுபோல நாங்கள் அடைதற்கரிய அந்த க்ஷேத்திரத்தில் அடைந்துவாழும்படி பெருமைபொருந்திய அகஸ்தியமுனிவரே நீர்கடாக்ஷித்தருளி

ய உபகாரம்போல எங்களுக்குபகாரஞ்செய்யத்தக்கவர்கள்யாரிருக்கின்றார்கள். எ-று. (௬௧)

வெள்ளிவிலங்கலின்வேடனையீன்ற
தெள்ளமுதத்தின்செவிக்கமிர்தாக
வள்ளலிசைக்கும்வகைவிரிவெல்லா
மெள்ளவெமக்குவிளம்புதியென்றார்.

(இ-ள்.) சுப்பிரமணியக்கடவுளை யீன்றருளிய பார்வதிதேவியாருடைய திருச்செவிக்குத் தெளிந்த அமுதம்போல் மதுரிக்கும்படி சிவபிரான் வெள்ளிமலையில் வீற்றிருந்து உபதேசக்கிரமமாகத் திருவாய்மலர்ந்தருளிய அச்சரிதவிவரங்களையெல்லாம் எங்களுக்குப் பொறுமையுடனருளிச்செய்யுமென்றார்கள். எ-று. (௬௨)

வில்வலனன்றிளையோனுடன்வீய
வெல்வலனந்தவவேந்தர்கள்வேந்து
நல்வளமாதவர்தங்குழுநாடிச்
சொல்வளனோடிவைசொற்றிடலுற்றான்.

(இ-ள்.) முற்காலத்தில்வில்வலன் அவன்தம்பியாகிய வாதாவியுடன் இறக்கும்படி வென்றதவவல்லமையுடைய அழகியதவவேந்தர்களுக்கெல்லாம்வேந்தாகிய அகஸ்தியமுனிவரும் நல்லதவவளப்பமுள்ள முனிவர்கூட்டத்தைப் பார்த்துச் சொல்வளப்பத்துடன் இவைகளைச்சொல்லத்தொடங்கினார். எ-று. (௬௩)

கற்றிருளற்றொளிகண்டவர்கேண்மோ
நற்றவளக்கயிலைப்பரனங்கைக்
குற்றிடுசாபமுரைத்தருள்பான்மை
முற்றும்விரித்துமொழிந்திடுவேனால்.

(இ-ள்.) வேதாகமசாஸ்திரமுழுதுங்கற்றுணர்ந்து ஆணவ இருளைநீக்கிச்சோதிசொரூபத்தைத்தரிசித்துக்கொண்டிருக்கு முனிவர்களே, நல்லவெண்மைநிறமுள்ளகைலாயகிரியில்வீற்றிருந்தருளும்ஸ்ரீகண்டமூர்த்தியானவர் பார்வதிதேவியாருக்குச் சாபத்தைக்கூறிய தன்மை முழுவதையும் விரித்துச்சொல்கின்றோம் கேளுங்கள். எ-று. (௬௪)

தலவிசிட்டச்சருக்கமுற்றிற்று.

ஆ-சருக்கம்-ரு-க்கு, திருவிருத்தம்-௭௪௧.



# பார்வதியார்சாபச்சருக்கம்.

## வேறு.

நிலவுமிழ்கமலத்தவிசின்வீற்றிருப்போனிலமகட்படைத்துமெய்ம்முழுதும், பலநிறமணியிட்டிழைத்தொருதரளம்பதித்துநாப்பண்விடுத்ததுபோற், குலவுபார்சுமந்தமேருவோடனந்தங்குறும்பொறைபுடையெலாமிடைய, வலகில்வெண்சுடரோருருவுகொண்டதுபோலமர்வதுகயிலைமால்வரையே.

(இ-ள்.) சந்திரிகையைப்பொழிகின்ற வெள்ளைத்தாமரை மலராகிய ஆசனத்திலமர்ந்திருக்கும் பிரமதேவன் பூமிதேவியைச்சிருஷ்டித்து அவள் மேனிமுழுவதும் பலநிறங்களையுடையமணிகளைப் பதித்துமத்தியிலே நாயகமணியாக ஒரு ஆணிமுத்தினைப்பதித்து வைத்ததுபோல விளங்குகின்றபூமியைத்தாங்கிக்கொண்டிருக்கும் மகம்மேருவென்னும் மலையுடன் அனந்தஞ்சிறுமலைகள் தன்புறத்தில்சூழ்ந்திருக்கும்படி அளவில்லாதவெண்சோதியானது ஒருருவங்கொண்டதுபோல கைலாயகிரியானது பொருந்தியிருக்கின்றது. எ-று (க)

வெங்கடுவருந்தவளித்திடுநவைபோய்விளங்குதுமெனவிரைந்தெழுந்தோ, மங்கிடாதமரரின்னமுங்கடையவருவரென்றஞ்சியேசிவனும்,புங்கவனவன்பால்பொருந்துதுமென்றேபோந்தவண்பயோததிதிரண்டே,சங்கரன்றனக்கோர்வெள்ளியந்தவிசாய்ச்சமைந்ததென்றுரைத்திடத்தகுமால்.

(இ-ள்.) பாற்கடல்கொடிய விஷத்தை யுண்ணும்படி நாம்சிவபிரானுக்குமுன்கொடுத்தகுற்றம்நீங்கிப் பரிசுத்தத்தையடைந்திருப்போமென்று கருதிவிரைவாகச்சென்றுதானோ அல்லது முன்கடைந்தமட்டில் அடங்கிவிடாது தேவர்கள் இன்னமும்வந்து கடைவார்களென்று பயந்துதானோ சிவபிரானாகியகடவுளினிடத்தில்பொருந்தியிருப்போமென்று கருதித்தானோ திரண்டு அச்சிவபிரானுக்கு வெள்ளியாசனமாயுருவங்கொண்டு அங்குசென்றிருக்கிறதென்று சொல்லத்தகும். எ-று. (உ)

பற்பலபுவனநாயகராயபண்ணவரெண்ணிலர்சென்றே
பற்பலமுறைதாழ்ந்தெழுந்துபோற்றெடுத்துப்பரசிவனாலயம்புகுதப்

பற்பலமணியாற்குயிற்றியவிமானபந்திகள்நிறைதருங்காட்சி
பற்பலகிரிபுங்கயிலைபக்கிரியைப்பணியவந்திருந்ததுபோலாம்.

(இ-ள்.) [illegible] பலபுவனங்களுக்குத்தலைவர்களாயிருக்கிற தேவர்கள் அளவிறந்தோர்சென்று பலபலமுறைபணிந்தெழுந்து போற்றிசெய்து சிவபிரான [illegible]ற்றிருக்கும் ஆலயத்தில்செல்ல அவர்கள்ஏறிவந்த பற்பலமணிகள் [illegible]ழைத்திருக்கும்விமானவரிசைகள் அங்குநிறைந்திருக்கும்காட்சியானது [illegible] அந்தக்கைலாயகிரியைப்பணியும்படி வந்திருத்தல் போன்றன. எ-று. (௩.)

கனிமலர்த்தவிசின்மேயவாரணனுந்தவளவாணியுமணமுவந்தே புனிதனைவணங்கச்சென்றுதண்கயிலைப்பொருப்பினிற்புகுந்தவப்பொழுதிற், கனியிதழ்க்குவளைமலர்விழிக்கலைமான்கனகமேனியினையிங்கொளித்தே, யினிபகம்மகிணனம்முருப்படைத்ததென்னெனவதிசயித்திடுமால்.

(இ-ள்.) ஒப்பற்றதாமரைமலராகிய ஆசனத்தில் வீற்றிருக்கும் பிரமதேவனும் வெண்மைநிறமுள்ள சரஸ்வதியும் மனம்சந்தோஷித்துச் சிவபிரானை வணங்குதற்காகச் சென்று குளிர்ந்த கைலையங்கிரியைச் சேர்ந்தபோது கோவைக்கனிபோன்ற அதரத்தையும் நீலோற்பலமலர்போன்றகண்களையுமுடைய சரஸ்வதியானவள் கைலாயத்தின்சோதியினால் பிரமதேவன் வெண்மைநிறமாயிருப்பதைக்கண்டு தன்புள்ளநம்முடையகணவன்தனக்கியல்பாகிய பொன்னிறத்தை மறைத்துநம்முடையுருவம்போல வெண்மைநிறமடைந்தது என்னகாரணமோவென்று அதிசயப்படுவாள். எ-று.

பொன்னகர்மேவும[illegible]மைசைவாணிபூமகள்முதலணங்கெவரு
மன்[illegible]ல்வெற்பினின்றிழிபாலருவிசென்றாடியபொழுதின்
மன்னு[illegible]சாதியிலெவ்வா[illegible]ருங்கலைமான்வடிவெனத்தோன்றலாலரிபு
மன்னவாகன[illegible]றும்[illegible]ரனுமமருந்திகைத்துநின்றயர்ப்பார்.

(இ-ள்.) பொன்[illegible]ல்வாழும் இந்திராணி சரஸ்வதி இலட்சுமி முதலாகிய தேவமாதர்யாவரும் அந்தகுளிர்ந்த கைலாயகிரியில் நின்றுமிழிகின்றவெண்மைநிறம்பொருந்திய அருவியிற்குளித்தபொழுதில்அந்தக்கைலாயத்தின் நிலைபெற்ற சோதியினால் அம்மாதர்கள்யாவரும் சரஸ்வதியினுடைய நிறம்போல வெண்மைநிறமுள்ளாவர்களாய்த் தோன்றுதலினாலே மகாவிஷ்ணுவும் அன்னவாகனத்தையுடைய பிரமதேவனும் ஆயிரங்கண்ணுள்ளதேவேந்திரனும் தேவர்களும் திகைத்துநின்று இம்மாதர்கள்யாரோவென்றுசந்தேகிப்பார்கள். எ-று. (௫)

ஆதரத்துடன்போய்விஞ்சையர்மகளிரளப்பிலர்கயிலையம்பொருப்பிற், றூதுகுத்தருகேநறவுகொப்புளிக்குஞ்சரோருகவாவியிற்புகும்போர், தோதிமத்தொகையுமாதர்தங்குழுவுமோரினமாகியவொளியாற், காதலுற்றணையும்விஞ்சையர்நமக்குங்கண்டுரைத்திடவரிதாமால்.

(இ-ள்.) அளவில்லாதவித்தியாதரஸ்திரீகள் விருப்பத்துடன் சென்று அந்தக்கைலாயகிரியினிடத்தில் மகரந்தங்களையுகுத்து அருகில்தேனைக்கொப்புளிக்காநின்ற தாமரைமலர்களையுடைய தடாகத்தில் போம்போது, அன்னப்பக்ஷிக்கூட்டமும் இந்தமகளிர்கூட்டமும் ஓரினமாய்த்தோன்றுகிற பிரகாசத்தினாலே, ஆசைகொண்டு அங்குசெல்லும் வித்தியாதரர்களுக்கும் இவர்மாதர்களென்றும் இவைகளன்னப்பக்ஷிகளென்றும் பேதங்கண்டு சொல்லுதல் அரிதாயிருக்கும். எ-று. (௬)

வம்புலாமலர்சேர்கற்பகப்பொதும்பர்வளர்தரமுதமழைபொழியுங், கும்பமால்கரிசூழ்கயிலைமேலனந்தங்கொடுமுடிதோன்றுமாபோலச், செம்பொனுன்மணியாற்பளிங்கினாற்றுகிராற்றப்பட்டியேசமைந்துளகோயில், உம்பர்கோனுள்ளம்வியப்புறவனந்தமோங்கிடும்புடைதொறுஞ்செறிந்தே.

(இ-ள்.) வாசனைபொருந்திய மலர்கள்நிறைந்த கற்பகச்சோலைவளரும்படி மதநீரைப்பொழிகின்ற மத்தகத்தையும் மயக்கத்தையுமுடைய யானைகள் சூழ்ந்திருக்கும் கைலாயகிரியின்மேல் அனந்தங் கொடுமுடிகள்காணப்படுதல்போல, மாற்றுயர்ந்த பொன்னினாலும் மாணிக்கங்களினாலும் பளிங்குகளினாலும் பவளங்களினாலும் திரட்டிவிஸ்வகர்மாவினால் நிருமிக்கப்பட்டிருக்கும் அனந்தம் ஆலயங்கள் தேவேந்திரன்மனமுஞ் சந்தோஷிக்கத்தக்கதாக அந்தக்கைலாயகிரியின்புறங்கடோறும் நிறைந்திருக்கும். எ-று.

வேறு.

மலரின்வேதன்பதவிவழங்கவு
முலகமேற்றுண்டுமிழ்தரவும்வல
தலகில்பூதங்களார்த்துநடித்திடு
மிலகுவெள்ளிவிலங்கலிலெங்கணும்.

(இ-ள்.) தாமரைமலரில் வீற்றிருக்கும் பிரமதேவனுடையபதவியைக்கொடுக்கவும் உலகங்களையெல்லாம் கையிலெடுத்துண்டு மறுபடியுங் கக்கவும் வல்லனவாக அனந்தம்பூதங்கள் பிரகாசிக்கும்படியான அந்தவெள்ளிமலையினிடமெங்கும் ஆரவாரித்துக் கூத்தாடிக்கொண்டிருக்கும். எ-று

விண்டுபாசம்பராநந்தவெள்ளமேற்
கண்டுதோய்ந்துகளித்தருட்போதமுட்
கொண்டுவாழ்பவர்கூட்டமேயெங்கணு
மண்டுமக்கயிலைத்திருமாமலை.

(இ-ள்.) பாசங்களைநீக்கிப் பிரமானந்தவெள்ளத்தைக்கண்டு அதில்மூழ்கி ஆனந்தம் அடைந்து திருவருள்மயமாகிய மெய்ப்போதத்தையே உட்கொண்டுவாழ்கின்றயோகிகளுடையகூட்டங்களேஅந்தக்கைலாயகிரியிலெங்கும் நிறைந்திருக்கும், எ-று. (கூ)

பொன்றிவெம்மலமுத்திபுகுமிட
மொன்றென்பார்சிலரொன்றுமுடையமு
மன்றென்பார்சிலரங்கவர்பூசலே
துன்றுமம்மலைச்சூழலெங்கும்மரோ.

(இ-ள்.) கொடியமும்மலங்களும் நசித்து முத்தியைச்சேருமிடம் ஒன்றென்றுசொல்லுவார்கள் சிலர், யாம்யாதொருமலமும் உடையோம் அன்றென்றுசொல்லுவார்கள் சிலர் இவ்வாறு சொல்லுகின்ற தர்க்கவாதங்களே அந்தக்கைலைமலையினிடமெங்கும் பொருந்திருக்கும். எ-று. (க0)

கணங்களாயினோர்கண்ணுதற்போலவு
மணங்கனுருமையாடனைப்போலவு
மணங்கமழ்ந்தமலரிரதத்தின்மே
லிணங்குவெள்ளிவெற்பெங்குமுலாவுவார்.

(இ-ள்.) சிவகணங்களாயிருப்பவர்கள் சிவபிரானைப்போலவும் அவர்களுடையமாதர் பார்வதிதேவியாரைப்போலவும் வாசனைகமழ்கின்ற புட்பரதத்தின்மேல் ஆரோகணித்துக்கொண்டு யாவருடைய மனத்துக்கும் இணங்கியஅந்தக்கைலாயகிரியிடமெங்கும் சஞ்சரித்துக்கொண்டிருப்பார்கள். எ-று. (கக)

தொண்டர்பாடுந்துதியின்முழக்கமு
மெண்டவிர்பல்லியங்களினோதையுங்
கொண்டலார்ப்புமவ்வெள்ளிக்குவட்டின்மே
லண்டகோளகையுங்கடந்தார்க்குமால்.



உமைசாபம்பெற்றது.

(இ-ள்.) அக்கைலாயகிரியினிடத்தில் அடியார்கள்பாடுகின்ற தோத்திரத்தினோசையும் அளவில்லாத பலவாத்தியங்களினோசையும் மேகத்தின் முழக்கமும் அண்டகோளங்களையுங் கடந்து ஆரவாரிக்கும். (சஉ)

இத்தகைத்தவளங்களியைந்திடு
மெய்த்தபேரொளிவெள்ளியங்குன்றின்மேற்
சித்தர்மாதவர்தேவர்ததைந்திடு
நித்தன்வாழ்நிலையமொன்றுண்டரோ.

(இ-ள்.) இத்தன்மையதானவளப்பங்கள் பொருந்திய உண்மையாகியமிகுந்தபிரகாசமடைந்த அழகிய அந்தகைலாயகிரியினிடத்தில் சித்தர்களும் மஹாதவசிகளும் தேவர்களும் நெருங்கியிருப்பதாய் ஸ்ரீ நீலகண்டமூர்த்தி வீற்றிருந்தருளும் ஆலயமொன்றிருக்கின்றது. எ-று. (சங)

எக்காலமும் ஒழியாதபிரகாசமென்பது தோன்ற மெய்த்தபேரொளியென்றார்.

கோடிகோடிபிரமர்கள்கூடினும்
வாடிவாடிவருந்துதலன்றியே
நீடிவாழ்நிலையச்சிறப்பெலா
நாடியொன்றினைநாட்டிடவல்லரோ.

(இ-ள்.) அனந்தங்கோடிபிரமதேவர்கள் ஒன்றாகக்கூடினாலும் மனம் வாடிமயங்குவதேயல்லாமல் பல்லூழிகாலத்திலேயும் அழியாமல்விளங்கிக்கொண்டிருக்கும் அந்த ஆலயத்தின்சிறப்புகளையெல்லாம் நோக்கித்தங்களுக்குளுணர்ந்துகொண்டு அதன்சிறப்பு இவ்வண்ணமாயிருக்கின்றதென்று ஏதாவதொன்றை நிச்சயித்துச்சொல்லவல்லவர்களோ அல்லர். எ-று. ()

சிறந்தவிந்தச்சினகரத்துட்டமம்
புறந்தரப்பொரும்பொங்கொளிப்பன்மணித்
திறங்கள்கொண்டுகுயின்றசிங்காதனை
மறந்திரண்டதுபோலங்கமருமால்.

(இ-ள்.) சிறப்புள்ள இந்த ஆலயத்திற்குள்ளே இருளானது நீங்கும்படி தூரத்துகின்ற மிகுந்தபிரகாசத்தையுடைய பலரத்னங்களின் வகை

களை ஆராய்ந்தெடுத்துப்பதித்திருக்கும் சிங்காதனமானது ஏருபமெல்லா ந் திரண்டோருருவமாய் அங்கிருப்பது போலவமைந்திருக்கின்றது. எ-று,

அந்தமென்றவிசின்கணருட்பசுஞ்
சந்தவெற்பிடஞ்சார்துகிர்வெற்பென
வெந்தையுந்திகழேந்திழையாளுமாய்
வந்திருந்துமனோகரமாகவே.

(இ-ள்.) மிருதுவுள்ளதாகிய அந்த சிங்காசனத்தினிடத்தில் கிருபையுள்ளதாய் சௌந்தரியம் பொருந்தியமரகதரத்னமலையைச் சார்ந்தபவளமலைபோல் எமது ஐயனாகிய சிவபிரானும் விளங்குகின்ற பார்வதிதேவியாரும் மனோகரமாய்வந்தமர்ந்து. எ-று. (சகூ)

வேறு.

தொடையமையுமணிப்புயத்துமாலயனிந்திராதிசுரர்கள்யாரு
மிடையவருமவரவர்மின்னார்களுஞ்சென்றக்கயிலைவெற்பின்மேவிக்
கடைகடொறும்பணிந்துபணிந்தெழுந்து நடந்தருட்காலைக்கமலக்கண்
டாங்கே, புடைகடொறுநிறைந்தீண்டிக்கற்பகப்பூமழைபொழிந்து
பொழிந்துதாழ.

(இ-ள்.) துளசிமாலைபொருந்திய நீலநிறந்தங்கிய புஜங்களையுடைய மகாவிஷ்ணு பிரமதேவன் தேவேந்திரன் முதலாகிய தேவர்கள்யாவரும் நெருங்கும்படி வருகின்ற அவரவர்களுடைய மாதர்களுஞ்சென்று அந்தக்கைலாயகிரியைச்சேர்ந்துசிவபிரான்வீற்றிருக்கும் ஆலயத்தின்கடைவாயிற்கடோறும்பணிந்து பணிந்தெழுந்து நடந்து திருவருள்மயமாகிய செந்தாமரைமலர்போன்றசுவாமியினுடைய திருவடிகளைத் தரிசித்து அவ்விடத்தில் சந்நிதியின் இருபுறங்களெங்கும் நிறைந்துசேர்ந்து கற்பகப்புட்பங்களை அவரவர்களுந் தனித்தனியேபொழிந்து அருச்சித்துவணங்கவும். எ-று.

நாரதரின்னிசைபரப்பவரம்பையர்கள்கீதமுடனடனங்காட்டப்
பாரதிபோற்றெடுப்பவயனுன்குமுகத்தாலுமறைபணிந்துபாடச்[ஞ்
சாரதர்கள்பலகோடிமுழக்குறுபல்லியமோங்கத்தவத்தோரெல்லா
சீரியபல்லாண்டிசைப்பவிலங்குசாமரைவசுக்கள்திரண்டுவீச.

(இ-ள்) நாரதமுனிவரினிய இசையைப்பாடவும், † அரம்பையர்கள் தேவகீதம்பாடிக்கொண்டு நடனஞ்செய்யவும், சரஸ்வதிதுதிசெய்யவும், பிர

மதேவன்சாஷ்டாங்கமாகப்பணிந்து தன்னுடைய நான்குமுகங்களினாலும் வேதவாக்கியங்களையெடுத்துப்பாடவும், அநேககோடி பூதகணங்கள் முழக்காநின்ற பலவாத்தியங்களின் ஓசையானது அதிகரிக்கவும், தவசிரேஷ்டராகிய முனிவர்கள்யாவரும் சிறப்புள்ளபல்லாண்டுகூறவும், வசுதேவதைகள் இரண்டுபக்கங்களிலும் பிரகாசிக்கின்ற சாமரைவீசவும். எ-று. (சஅ)

தண்ணுலாவானதிசேர்சடாடவியோன்றிருவருளாற்றயங்கும் வெள்ளிப், புண்ணியமால்வரைகாக்கும்பெருஞ்சிறப்புமழுமானும் புயங்கணான்கும், கண்ணுதலுங்கறைமிடறும்படைத்தவருணந்திதிருக்கனகச்சூரற், பண்ணவர்கள்திருமகுடமிசைதாக்கியவைதிருத்திப்பரவிப்போற்ற.

(இ-ள்.) குளிர்ச்சிபொருந்திய ஆகாயகங்கைதங்கிய சடைக்காட்டினையுடைய சிவபிரானது திருவருளினாலே விளங்குகின்ற புண்ணியந்திரண்டிருப்பதுபோன்ற பெரிய அந்தக்கைலாயகிரியைக்காத்துக்கொண்டிருக்கும் மிகுந்த சிறப்பும் மழுவும் மானும் நான்குதிருத்தோள்களும் நெற்றிக்கண்ணும் காளகண்டமும் பெற்றுக்கொண்ட அருள்நந்திதேவர் அழகுபொருந்திய பொற்பிரம்பினால் அங்குதரிசனத்தின்பொருட்டு வந்துநெருங்குகின்ற தேவர்களுடைய மகுடங்களின்மேல் அடித்துச்சபையைச்சீர்ப்படுத்தித்துதித்துவாழ்த்தவும். எ-று. (சகூ)

கண்டுருகியவரவர்கள்குறைவிளம்பக்கேட்டருளிக்கருணைகூர்ந்தே மண்டுபெருங்காதலினாலவரவர்கள்பதப்போகவாழ்வுநல்கி யண்டரெலாந்தொழுதேகவிடைகொடுத்தச்சினகரதிலகிலயின்ற வொண்டொடியோடினிதுறையுமெந்நாளுமந்நாளிலொருநாளையன்.

(இ-ள்.) இவ்வாறுதிருவோலக்கமாக வீற்றிருக்கும் ஸ்ரீகண்டமூர்த்தியைப்பிர்மாவிஷ்ணுமுதலாகிய தேவர்கள் யாவரும் தரிசித்து மனமுருகி அவரவர்கள் தங்கள்தங்கள் குறைகளை விண்ணப்பஞ்செய்துகொள்ளத் திருச்செவியினுட்கொண்டருளிக்கிருபைகூர்ந்து நிறைந்த அதிகவிருப்பத்துடன் அவர்களுடையபதவிகளில் அனுபவிக்கும் போகவாழ்வுகளைப் பிரசாதித்து அந்தத்தேவர்களெல்லாரும் வணங்கிச்செல்லும்படி விடைகொடுத்தருளி அந்த ஆலயத்தில் இந்த உலகங்களையெல்லாமீன்றபார்வதியாருடன் எந்நாளும் வீற்றிருக்கும் நாள்களிலொருநாள் பெருமையனாகிய சிவபிரான் எ-று. (உ0)

வேறு.

சாந்துவார்குழலேந்திளமுலைச்சிறுதரளவாணகையின்பம்
வாய்ந்தகாமர்மென்கொடியிடைப்பவளவாய்வனிதைமாமுகநோக்கி
யாய்ந்தபூதிபஞ்சாக்கரத்துண்மைநீயறிந்திலையவைதேற [ல்
நாந்தொகுத்துணர்த்துதுமெனமொழிந்தனனதிபொதிசடைவள்ள

(இ-ள்.) மயிர்ச்சாந்தணியப்பட்டுநீட்சியுள்ளதாயிருக்கும்அளகபாரத்தையும்,இளமைத்தன்மைபொருந்தியதிருத்தனபாரங்களையும்,முத்துக்களையொத்த ஒளிபொருந்திய சிறியதந்தபந்திகளையும் இன்பந்தங்கிய அழகுள்ளமிருதுவாகியபூங்கொடியொத்தமருங்குலையும், பவளம்போன்ற செவ்வாயினையும் உடையபார்வதிதேவியாரது திருமுகத்தைநோக்கி கர்ப்பவிதியாலமைந்த விபூதி-பஞ்சாக்ஷரமென்னும் இவைகளினுண்மைத்தன்மையை இதுவரையிலேயும் நீயறிந்தாயில்லையாதலாலிப்போது அவைகளையுணர்ந்து நீதெளியும்வண்ணம் நாம்தொகுத்துனக்குத் தெரிவிக்கிறோமென்று கங்காநதிபொருந்தியசடாமகுடத்தையுடைய அச்சிவபிரான் திருவாய்மலர்ந்தருளினார். எ-று. (உக)

வையமீன்றருண்ஞானநாயகியுளமகிழ்ந்தடிமிசைத்தாழ்ந்து
செய்யவஞ்சலிகூப்பிநின்றையநின்திருவிழியருடன்று
லுய்யவேதடுத்தாட்கொளுமுறைமைபோலுணர்த்தினையெனவேத்
தையனுயகிநின்றனளமிர்துகுதன்மைபோல்மொழிகின்றான். [தித்

(இ-ள்.) இவ்வுலகத்தைஈன்றருளிய பார்வதிதேவியார்திருவுள்ளமகிழ்ந்து சுவாமியின் திருவடியிற்பணிந்து செங்கைகளையஞ்சலியாகக்குவித்து நமஸ்கரித்துச்சிவபிரானே தேவரீருடைய திருநோக்கத்தினருளினால்யாவரும் உய்யும்படி தடுத்தாட்கொண்டருளுந் தன்மைபோலத்திருவாய்மலர்ந்தருளின்றென்று விண்ணப்பஞ்செய்து அப்பார்வதியார் நிற்க, அதனைச்சிவபிரான் திருவுள்ளத்தமைத்து அமுதஞ்சிந்துமுறைமைபோலத் திருவாய்மலர்ந்தருளுகின்றார். எ-று. (உஉ)

வேறு.

ஆலமுமிகந்துகுழைமோதியடல்கொண்டே
வேலையுமுனிந்தருள்விளங்குவிழியாய்கேள்
மாலயனுமோர்ந்திலர்மறைப்பொருள்விபூதி
சாலவுமதன்பெருமைசாற்றவெளிதன்றால்.

(இ-ள்.) ஆலகாலவிஷத்தையும் தனக்குநிகராகாதவண்ணந் தள்ளிவிட்டுக்குண்டலங்களைத் தாக்கிவெற்றிகொண்டு சமுத்திரத்தையுங் கோ

பித்துக் கிருபையேவிளங்கிக்கொண்டிருக்கும் நேத்திரங்களை யுடைய பார்வதிதேவியேகேட்பாயாக,வேதப்பொருளாய் விளங்குகின்ற விபூதியின் பெருமையை பிர்மவிஷ்ணுக்களும் அறிந்திலர் ஆதலால் மிகவும் அதன் பெருமையையாவருஞ்சொல்லவெளிதல்ல. எ-று. (உங.)

மிக்கபுகழுங்கமொடுவேதமொருநாலுந்
தக்கவுயர்பல்கலைகள்தந்திரமியாவு
நெக்கிவிளைசங்கெனநிகழ்ந்ததிருநீறே
தொக்கதிருநெற்றியிடல்தூய்மையெனவோதும்.

(இ-ள்.) மிகுந்தபுகழுள்ளஆறங்கங்களும்,நான்குவேதங்களும்,தகுதியுடன் மேன்மைத்தன்மைபொருந்திய பலசாஸ்திரங்களும், இருபத்தெட்டாகமங்களும் குற்றங்களை நீக்கிவிளைகின்ற தவளச்சங்கம்போல நிறமுள்ளதாய்ப்பிரகாசியாநின்றதிருநீற்றினை அழகுபொருந்தியநெற்றியினிடத்தில் தரிப்பது பரிசுத்தமென்றுசொல்லும். எ-று. (உச)

ஆவினைவதைத்தவரருங்கொலைபுரிந்தோர்
காவிவிழிமங்கையர்கள்கற்பினையழித்தோர்
தேவெனநினைந்துதிருநீறணிவராயி
ஞவினும்வழுத்தரியமுத்திபதநல்கும்.

(இ-ள்.) பசுவைவதைத்தவர்களும், செய்தற்கரிய கொலைத்தொழில் செய்தவர்களும், நீலோற்பலமலர்போன்ற கண்களையுடைய மாதர்களது பதிவிரதாதர்மத்தைக்கெடுத்தவர்களும் திருநீற்றினையே சிவபிரானென்றுகருதி அதைத்தரித்துக்கொள்வாராயின் வாக்கினாலுஞ்சொல்லுதற்கரியமோக்ஷத்தைக்கொடுக்கும். எ-று. (உரு)

வேறு.

பொங்கும்வெவ்வுழுவைத்தோலாற்பொருவருநவ்வித்தோலாற்
றங்குநேத்திரத்தாற்பைகள்சமைத்ததின்விபூதிசாத்தின்
மங்குமாணவமுஞ்செய்யும்வல்வினைத்தொகையுமாயுந்
திங்களங்கண்ணிவேய்ந்தாந்திருவாணைதிண்ணம்.

(இ-ள்.) கோபமிகுந்த கொடியபுலித்தோலினாலாவது ஒப்பில்லாத மான்தோலினாலாவது பொருந்தியபட்டுச்சீலையினாலாவதுபைகளைத்தைத்துக்கொண்டு அதில்வைத்திருக்கும்விபூதியையெடுத்துத்தரித்துக்கொண்டால் ஆணவமலமுங்கெடும். செய்துகொண்டுவரும் கொடியபாவங்களுமொழிந்துபோம். இளந்திங்களைத்தரித்துக்கொண்டிருக்கும் நமது ஆணை. இது நிச்சயம். எ-று. (உசு)

சந்தனம்வில்வங்கொன்றைசண்பகங்காப்பலாச
ரந்துநாட்பத்துநீற்றைநவையிலாதடைத்தங்குட்ட
முந்தனுமிகையாலள்ளித்தரிப்பரேன்முடியும்பாவஞ்
செந்திருப்பொலியும்வாழ்வுசிறந்திடுமறங்களோங்கும்.

(இ-ள்.) சந்தனம் வில்வபத்திரம் கொன்றைமலர் சண்பகமலர் சோலையிலிருக்கும் முருக்கம்பூவென்னு மிவற்றுள் ஏதாவது ஒன்றில்பத்துநாள் விபூதியைக்குற்றமில்லாமல் அடைத்துவைத்துப்பின்பு அதை அங்குஷ்டம் அனுமிகையென்னும்விரல்களால் அள்ளித்தரித்துக்கொள்ளுவார்களாயின்பாவங்களெல்லாமொழிந்துபோம். மகாலட்சுமிவாசமாயிருக்கத்தக்கவாழ்வு அதிகரிக்கும் தருமங்களெல்லாம் விர்த்தியாகும். எ-று. (௪எ)

அங்குஷ்டம் என்பது பெருவிரல். அனுமிகை யென்பது மோதிரவிரல்.

இனிபதாம்பையினீற்றையெழிற்றலைகீழாக்கொட்டித்
தனிநுதற்றரித்தோரேற்றோர்தகுதியோரிருவர்தாமு
முனிதரும்ரவுரவத்தின்மூழ்குவர்கோடிகற்ப
மெனவுரைத்தருளுநாமுன்னிசைத்தவாகமமனைத்தும்.

(இ-ள்.) நன்மையுள்ளதாகியபையிலிருக்கும் விபூதியை அழகிய அப்பையின்தலைகீழாகக்கொட்டித்தங்களொப்பற்றநெற்றியில் தரித்துக்கொண்டவர்கள்கையில்வாங்கிக்கொண்டவராகிய தகுதியுள்ளவர்கள் என்னுமிவ்விருவர்களும் முனிபத்தக்கரவுரவநரகத்தில் கோடிகற்பகாலம் வீழ்ந்திருப்பார்களென்று நாம்முன்திருவாய்மலர்ந்திருக்கும் ஆகமங்களெல்லாங் கூறும். எ-று. (௪அ)

உலகினீற்றுண்மையார்க்குமுரைத்திலம்விரிஞ்சனாதி
யலகில்புங்கவருமோரா ராவையட்டுரித்துத்தின்னும்
புலையர்களேனும்பூசிற்பொள்ளெனவடைவர்முத்தி
திலகவாணுதலோர்காதைசெப்புவன்கேட்டியென்றான்.

(இ-ள்.) இந்தவிபூதியினது உண்மையை உலகத்திருக்கும் யாவர்க்கும் நாமிதுவரையில் உரைத்திலம். பிரமதேவன்முதலாகிய அளவில்லாத தேவர்களும் அதன்பெருமையை அறியார்கள். பசுவைக்கொன்று உரித்துத்தின்னும் நீசர்களே யானாலும் விபூதியைத்தரித்துக்கொள்வார்களாகில்விரைவில் முத்தியையடைவார்கள். திலதப்பொட்டணிந்த ஒளிபொருந்திய நெற்றியினையுடையபார்வதிதேவியே ஒருசரித்திரஞ்சொல்லுகிறேன்கேட்கக்கடவையென்றுதிருவாய்மலர்ந்தருளினர். எ-று. (௪௯)

அளப்பிலாவளஞ்சேர்பாண் டிநன்னாட்டோர்ந்தணன்றீத்தொழிற்சிறியன், கிளக்குமார்கலிபின்விடமொருவடிவங்கொழுந்தென்றுலகினிலுதித்தோன், றுளக்கிலாநெஞ்சன்கொடுவினையனைத்துஞ்சூழ்ச்சிசெய்தமைத்ததோருருவன், விளக்குமாமறையினெறிகணீத்தெவருமெய்பனித்திடக்கொலைவிளைப்போன்.

(இ-ள்.) அளவில்லாத வளப்பம்பொருந்திய நல்ல பாண்டிநாட்டினிடத்திலிருப்பவனுகிய ஒருபிராமணன், கொடுந்தொழிலையேசெய்யுங்கிழ்மையன், சொல்லுகின்ற பாற்கடலிலுண்டாகிய விஷமானது ஒருருக்கொண்டதென்றுசொல்லும்படி உலகத்திலுதித்தோன், நடுக்கமில்லாதநெஞ்சமுடையவன், கொடியவினைகளையெல்லாம் ஒன்றாகத்திரட்டி யமைத்ததுபோன்ற ஒருருவத்தையுடையவன், விதிவிலக்குகளைத்தெரிவிக்கும் பெருமைபொருந்திய வேதத்திற் சொல்லப்படுகிறநன்மார்க்கங்களையெல்லாம் நீக்கிவிட்டு எப்படிக்கொத்தவர்களும் தன்னைக்கண்டால் உடல்நடுங்கும்படி கொலைத்தொழில் செய்கின்றவன். எ-று. (டுO)

பரிவுடனெறியிற்படருவோர்ச்செகுத்தும்பறித்தும்வாய்மருந்தினுலயர்ச்சி, தரவிழைத்தவர்தம்பொருளெலாங்கவர்ந்துந்தவறில்சூதாடியுங்கன்னக், கரவினுலிரவிற்கரந்துமூர்தோறுங்கணிகையர்தங்களுக்களித்துந், திரியுநாளோர்நாளூழ்வினைத்தொடர்பாற்சேரியிற்சென்றனன்றீயோன்.

(இ-ள்.) காட்டிலிருந்துகொண்டு விருப்பத்துடன் மார்க்கத்திற்செல்லுகின்றவர்களைக்கொன்றும், அவர்கள் பொருள்களைப்பறித்தும், அன்றியுஞ்சிலரைத்தன்னிடத்தில்வாய்த்துள்ள மருந்தினுல்மயங்கும்படிசெய்தும், அவர்களுடைய பொருள்களெல்லாம் கொள்ளையாகக்கொண்டும், தவறுதலுக்கிடமாகிய சூதாடியும், கன்னக்கோல்வைக்குந் திருட்டினுல் இராத்திரியில் ஊர்கள்தோறுஞ்சென்று திருடியும், இவ்வாறுசம்பாதிக்கின்றபொருள்களை வேசையர்களுக்குக்கொடுத்தும் திரிந்துகொண்டிருக்கிறநாட்களிலொருநாள், ஊழ்வினைத்தொடர்ச்சியினுல் அந்தமகாபாவியானவன் பறைச்சேரியிற் சென்றான். எ-று (ருக)

வே று.

ஊற்றமாங்கங்குற்போழ்தினுனுகர்புலைச்சிதன்மை
யாற்றருங்காமநோயாற்கரவினிலணையுங்காலைக்
கூற்றெனவிழிஞன்கண்டுகொதித்தணனருளிலாமற்
சீற்றவெஞ்சினமேற்கொள்ளச்செங்கைவாளெடுத்துச்சென்றான்.

(இ-ள்.) உறுதிப்பாடுள்ளதாகிய இருள்சூழ்ந்த இராக்காலத்தில் மாமிசங்களைத்தின்கிற ஒருநீச்சஸ்திரியைக்கண்டு சகிப்பதற்கரிய காமநோயினால் திருட்டுத்தனமாக அவளுடன்புணர்ச்சிசெய்யும்போது அவள்கணவனாகிய நீசன்கண்டு எமன்போலமனங்கொதித்து இரக்கமென்பது எவ்வளவுமில்லாமல்மிகுந்தகொடிய கோபாதிகத்தாற்கையில் வாளெடுத்துக்கொண்டுசென்றான். எ-று. (௬௨)

ஒய்யெனவுறைகழித்தாங்குரியவாள்விதிர்த்துத்தீயன்
மெய்யிருகூறதாகவிசினன்விளிந்துவிழ்ந்தான்
செய்யபுன்றாளைப்பற்றிச்சேரிமுன்வேலிக்கப்பால்
வெய்யவனெறிந்தான்காமம்விழுமியோர்க்கியலாதன்றே.

(இ-ள்.) கொலைத்தொழிலுக்குரிய அந்தவாளின் உறையையவிரைவில நீக்கிவிதிர்த்து அந்தக்கொடியனானவன்புணர்ந்துகொண்டிருப்பவனுடைய சரீரம் இரண்டுதுண்டாகும்படிவெட்டினான். அவ்வாறுவெட்டினவளவில் அந்தத்திருடனிறந்துவீழ்ந்தான். அவனுடையசிவந்தபுல்லியகால்களைப்பிடித்திழுத்துக் கொண்டுபோய்ச்சேரிக்குமுன்சூழ்ந்திருக்கும் வேலிக்கப்புறத்தில் எறிந்துவிட்டான். ஆதலால்காமமானது பெரியோர்கள்தன்மைக்குயோக்கியமானதன்று. எ-று. (௬௩)

சுடலைவெண்சாம்பரூேய்காற்சுணங்கனுங்கவன்மேலேறி
யடரும்வெம்பசியாற்கவ்வியழிதசையருந்தமெய்யிற்
படுபொடிவிசேடந்தன்னாற்பரசிவலோகம்பெற்றான்
மடநடைமடந்தாயென்னவகுத்தனனிறைவன்மாதோ.

(இ-ள்.) வெண்மைநிறம்பொருந்திய சுடலைச்சாம்பலிற் படிந்தகால்களையுடைய ஒருநாயானது அந்தத்திருடனாகிய பிணத்தின்மேலேறி மிகுந்த பசியினாலே வாயினாற்கவ்வி அழிகின்ற ஊனைத்தின்ன, அந்தப்பிணஉடலில் சுடலைச்சாம்பல் பட்டவிசேஷத்தினாலேஅந்தக்கள்ளன் பரசிவலோகத்தையடைந்தான். மடப்பந்தங்கிய நடையினையுடைய பார்வதிதேவியே என்று சிவபிரான் திருவாய்மலர்ந்தருளினார். எ-று. (௬௪)

என்றலுமிமவான்பெற்றவிலங்கிழைமகிழ்ந்துபோற்றிக்
குன்றவிற்படையாய்பஞ்சாக்கரத்துண்மைகூறென்றேத
மன்றலங்குழலாய்நந்தம்வடிவாமஞ்செழுத்தேயாகு
நூன்றிருள்பொதியும்பாசத்தொகைதனைத்துமித்துவிட்டும்.

(இ-ள்.) இவ்வாறுசிவபிரான் திருவாய்மலர்ந்தருளக்கேட்டுப்பர்வதராஜபுத்திரியாகிய பார்வதிதேவியார் மகிழ்ந்துபோற்றிசெய்து மகமேருவாகிய விற்படையையுடைய இறைவனே, பஞ்சாக்ஷரத்தினுடைய உண்மையைக்கற்பித்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, வாசனைதங்கிய அழகிய அளகபாரத்தையுடையபார்வதியே, நம்முடையதிருமேனி அந்தபஞ்சாக்ஷரமேயாம், அது ஆணவ இருள் நிறைந்துள்ளதாகிய பாசக் கூட்டத்தை யொழித்துவிடும். எ-று. (௬௫)

படைத்தன்முன்னாதியாகப்பகர்தொழிலைந்துமென்று
நடத்தலஞ்செழுத்தேயாகுநாரணன்முதலோரோரா
ரிடைப்படுசராசரங்கள்யாவுமவ்வுருவேயாகுந்
தடுப்பரும்பிரணவத்திற்சாருமஞ்செழுத்துமொன்றாய்.

(இ-ள்.) சிருஷ்டித்தொழில்முதலாகச்சொல்லப்படுகிற பஞ்சகிருத்தியங்களும் நடத்துதல் அந்தபஞ்சாக்ஷரமேயாம், மகாவிஷ்ணுமுதலாகியதேவர்கள் யாவரும் அதன்பெருமையையுணரார்கள். இவ்வுலகங்களிற் பொருந்திய சராசரமாகிய உயிர்களெல்லாம் அந்தபஞ்சாக்ஷரசொரூபமேயாம். அன்றியுமந்தபஞ்சாக்ஷரங்களொன்றாய் யாவராலும் தடுத்தற்கரிய பிரணவத்துடனேசேர்ந்திருக்கும். எ-று. (௬௬)

ஓரெழுத்துருவமோரிலுரைக்குங்காற்சிவமேயாகு
மாரணத்தந்தந்தன்னிலறைவதிப்பொருளேஞான
பூரணநிலயமாகும்புவனநீர்தீக்கால்வான
மேருறுந்தோற்றமீறிங்கிதனிடத்தியங்குமன்றே.

(இ-ள்.) அந்த ஓரெழுத்தினுடைய உண்மையைமனதினாலுணர்ந்தாலும் வாக்கினாலுரைத்தாலும் சிவசொரூபமேயாம். வேதத்தினுடையமுடிவிற் சொல்லப்படுவது மிந்தப்பொருளே. அன்றியும் அது ஞானபூரணநிலையுமாகும். பிரிதிவு அப்பு தேயு வாயு ஆகாயமென்னுமிப்பஞ்சபூதங்களும் பொருந்திய தோற்றமும் ஒடுக்கமும் இந்தபஞ்சாக்ஷரத்தினிடத்தேயுண்டாகும். எ-று. (௬௭)

வேறு.

ஆயகாலையணிமயிலொன்றெழிற்
றாயகட்கமைதோகைவிரித்தவண்
மேயதாங்கதைவிட்டுமைநோக்கிட
நேயமாயந்நிலையிலுற்றாளரோ.

(இ-ள்.) அவ்வண்ணஞ்சிவபிரான் உபதேசித்தருளும்போது, சவுந்தரியமுள்ள ஒருமயிலானது பரிசுத்தமாகிய கண்களுக்கினிமையமைந்ததோகையைவிரித்துக்கொண்டு அந்தவிடத்தில் பொருந்தியது. பார்வதிதேவியார் சிவபிரான் அருளிச்செய்யுமுபதேசத்தில் ஞாபகத்தைவிட்டு அந்தமயிலைப்பார்த்து விருப்பமாய் அந்நிலைமையிலிருந்தார். எ-று. (௫௮)

வேறு.

வினைவலிதீர்க்கும்பெம்மான்மெய்ம்மொழியயர்ச்சியெய்தி
மனமொடுவாக்கிறந்தவள்ளலேமீண்டுங்கூறென்
றனநடையரிவைகேட்பவையனும்வெகுண்டுவீறும்
வனமிசைதழைகட்டோகைமயிலெனமேவுகென்றான்.

(இ-ள்.) அடியார்களுடைய வினைவலிகளையொழித்தருளும்சிவபிரான் அருளிச்செய்யுமுபதேசவழியில் சோர்வையடைந்து மனவாக்குக்கெட்டாத அய்யனே, அந்த உபதேசத்தை மறுபடியுங் கற்பித்தருளவேண்டுமென்று அன்ன நடையொத்த நடையினையுடையபார்வதிதேவியார் கேட்டவளவில், நம்மிறைவன்கோபங்கொண்டு ஓங்கிவளர்ந்த வனங்களில்சஞ்சரிக்கும் தழைந்தகண்கள் பொருந்திய தோகையினையுடைய மயிலுருவாகக்கடவையென்றுசபித்தார். (௫௯)

அரிவையும்வெருவிநின்றங்கண்ணல்யானீவிளம்பு
முரையினிற்பராமுகத்தாலுற்றிடுசாபநீங்கக்
கரையிலாவருள்கொண்டாளுங்கடவுளேயருள்செய்கென்னத்
திரைமுகட்டெழுந்தகூனற்செழும்பிறைச்சடையோன்கூறும்.

(இ-ள்.) சிவபிரான்இவ்வாறுசபித்தபோதுபார்வதிதேவியாரும்பயந்து தேவரீர் அருளிச்செய்த உபதேசத்தில் ஞாபகம்வையாமல் பராமுகமாயிருந்த என்குற்றத்தினால் அடியேன் அடைந்தசாபம் நீங்கும்படி அளவில்லாத கிருபைகுடிகொண்டிருக்குங் கடவுளே அருள்செய்யவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, சமுத்திரத்தினிடத்துண்டாகிய வளைவுபொருந்திய இளம்பிறையணிந்த சடாபாரத்தையுடைய சிவபிரான் திருவாய்மலர்ந்தருளுகின்றார். எ-எ. (௬௦)

தாமவார்குழலாய்கேண்மோதகுசிவவுபதேசங்க
ணேமமாய்மொழியும்போதுநிலைபிரிந்தயர்த்துக்கேட்பிற்
சேமவான்பறவையாதறிண்ணமாதலினுனியு
நாமமார்மயிலாய்யுநற்றலமொன்றுண்டாமால்.



பிராட்டியாரது மனம் மயிலின்மீது சென்றதனால் நீ மயிலாகக்கடவையெனப் பணித்தருள, பிராட்டியார் கலங்கி தேவரீர் சந்நிதியில் அடிமை மீண்டும் வரத்தக்க உபாயம் அருளவேண்டுமென பிரார்த்திக்க, நீ பூலோகத்தில் சுக்கிர புரியின்கண் நம்மை பூசித்தால் இவ்வடிவம் நீங்குமென கட்டளையிட்டது.

(இ-ள்.) பூமாலையணிந்து நீட்சிபொருந்திய அளகபாரத்தையுடைய பார்வதிதேவியேகேட்கக்கடவாய், சகுதியாகிய சிவ உபதேசங்களை நியமத்துடன் ஒருவருபதேசிக்கும்போது அந்தநிலையைவிட்டுப்பிரிந்து மறுபடியுங்கேட்டால் காவற்படுதலில் சிறந்தபக்ஷியாவதேநிச்சயம். ஆதலினாலே நீயும் பச்சோந்தியைக்கண்டு அச்சமடையத்தக்கமயிலாகிச்சிலநாளிருந்து பின்பு அவ்வுருவம் நீங்கி உய்தலையடைதற்கேதுவாகிய நல்லதலமொன்றுண்டு எனத்திருவாய்மலர்ந்தருளினார். எ-று. (சுக)

வேறு.

இன்பசாகரத்திடைப்புகுந்ததிசயித்திறைவனைப்பணிந்தேத்தி
யன்பராயவர்க்கன்பனேயப்பதியாதுநீபுகலென்று
ணம்பராபரமாய்வளர்கபாலிமாநகரமத்தலங்காணிற் [வான்.
றுன்பம்யாவையுந்தொலைத்திடுமதன்புகழ்தோகைகேளெனச்சொல்

(இ-ள்.) சிவபிரான் அருளிச்செய்தசாப நிவிர்த்தியைக்கேட்டவளவில் பார்வதிதேவியார்சந்தோஷமாகிய சமுத்திரத்தில் மூழ்கி அதிசயித்துச்சிவபிரானைப்பணிந்து துதிசெய்து, அன்பர்களுக்கன்பனே அந்தத்தலம் எதுவோ அதனைக்கற்பித்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்ய, பார்வதிதேவியே அது நமதுசொரூபமாய் விளங்குகின்ற கபாலிமாநகரமென்பதாம். அந்தத்தலத்தைத்தரிசித்தாற்பிறவித்துன்பங்களையெல்லாம் ஒழித்துவிடும். அதனுடைய பெருமையைக்கேளென்றுதிருவாய்மலர்ந்தருளுகின்றார். எ-று. (சுஉ)

துங்கவம்பரமுகடளவுந்துநீர்தொல்லிடம்புகுமாபோற்
பொங்குவெண்டிரைப்பாலிமாநதிவடபுறத்தினிற்புகழ்ந்தோங்கும்
பங்கையாசனைகேள்வன்முன்னாகியபண்ணவர்திரண்டேத்த
வங்கணிற்றிருப்போநமக்கத்தலத்தாதரவளவின்றால்.

(இ-ள்.) பரிசுத்தமுள்ள ஆகாயமுகட்டளவுஞ் செல்லுகின்ற அந்தநீரானது தானுற்பத்தியான இடமாகியபழைய இடத்திற்செல்லுது போலப் பெருகிக்கொண்டிருக்கும் வெண்மையான அலைகளையுடைய பாலாற்றின்வடபுறத்தில் யாவராலும் புகழப்பட்டோங்கியிருக்கின்றது. செந்தாமரைபலராசனத்தில் வீற்றிருக்குந் திருமகள் சணைவனாகிய விஷ்ணுமுதலிய தேவர்கள் கூட்டமாய்க் கூடித்துதிசெய்ய அந்த இடத்தில் வீற்றிருப்போம். நமக்கதனிடத்தில் உண்டாயிருக்கும் விருப்பமளவில்லை. எ-று. (சுங)

இனியபோதினைவிட்டகலாமனின்றிலங்கியமருப்போல
நனிமிகுஞ்சுவையமுதினைப்பிரிவுறுநன்னலந்தனைப்போலத்
தனியெனத்திகழ்கபாலிமாநகர்தனைச்சற்றும்விட்டகலாமற்
கனிவுளத்தினின்மிகுமவர்க்கருளவெக்காலமுமுறைவோநாம்.

(இ-ள்,) யாவருக்குமின்பத்தைத்தரத்தக்கதாகியமலரை விட்டுநீங்காமல் விளங்கிக்கொண்டிருக்கிற வாசனையைப்போலவும், மிகவும்விசேடித்த மதுரமானது அமிர்தத்தைவிட்டுநீங்காத நல்ல தன்மையைப்போலவும், ஒப்பற்ற தென்றுசொல்லும்படி விளங்குகின்ற பெருமைபொருந்திய கபாலிநகரத்தைச் சிறிதுபொழுதும் விட்டுநீங்காமல் உள்ளத்திலன்புமிகுந்தவர்களுக்குவரப்பிரசாதம் அனுக்கிரகஞ்செய்யும் பொருட்டு எக்காலமும் வாசமாயிருக்கின்றோம். எ-று. (சச)

அத்தலந்தனைப்புகழ்ந்துநாமுன்னுடனறைகுவதெவனீர்மை
மெத்துமாயிரங்கோடிதானத்திலும்விளங்கிடநமைப்பூசை
பத்தியாலொருசதவருடம்புரிபலமெலாமொருநாளிற்
சித்தியாகவேநல்குமங்கதற்கிணைசெப்புதற்கரிதாமால்.

(இ-ள்.) அந்தத்தலத்தைப்புகழ்ந்து உனக்குநாம்சொல்வது யாது? எனெனில் மிகுந்தவளப்பமுள்ள ஆயிரங்கோடிதலங்களிலும் விளங்கும்படி அன்புடன் நம்மை நூறுவருஷம் பூசித்தால் வரும்பலன்களை யெல்லாம் ஒருநாளில்சித்திக்கக்கொடுக்கும். ஆதலாலதற்கொப்புசொல்வதருமை. எ-று. (சரு)

கொங்குலாவியநறவுமிழ்ந்தளியிசைகுலவுபங்கயவாவிக்
கங்கையாடிவந்தெமைப்பணிந்தென்றுமக்கடிநகர்தனிலுற்றோர்
பொங்குபேரொளிநல்குமிக்கயிலையிற்புகழுடனமைப்போலத்
தங்குவாரிதுசத்தியஞ்சத்தியஞ்சயிலமீன்றிடவந்தோய்.

(இ-ள்.) இமயமலையரசன்செய்ததவத்தினால்அவனுக்குப்புத்திரியாய் வந்தவதரித்தபார்வதியே, வாசனைவீசும்தேனைச்சொரிந்து அதையுண்ணும் வண்டுகளின்ஓசையைதிகரித்துக்கொண்டிருக்கும்தாமரைமலர் நிறைந்ததடாகமாகியசிவகங்கையென்னுந்தடாகத்தில்ஸ்நானஞ்செய்துநம்மைப்பணிந்து அந்தத்தலத்திலெந்நாளும் வசிப்பவர்கள்-மிகுந்தபிரகாசத்தைக் கொடுக்கத்தக்க இந்தக்கைலாயத்தில் நம்மைப்போலப் புகழுடன்பொருந்தியிருப்பார்களிது சத்தியம் இதுசத்தியம். எ-று. (சகூ)

ஏற்றமாந்தலமாயிரகோடியென்றிசைத்திடுமவை தம்மு
டோற்றுபாலிசேர்தண்டகநாட்டினிற்றுன்னுமத்தலங்கட்கு
ளாற்றநாம்விருப்புடனுறைவதுசிலவவைகடம்பெயர்சேரச்
சாற்றுகேனதற்குன்செவிதாழ்க்குதிசததளமுகமாதே.

(இ-ள்.) விசேஷமாகிய தலங்கள் ஆயிரங்கோடியென்று சொல்லப்படும். அவைகளில் நந்திகிரியினின்றும் வருகின்றபாலாறு சேர்ந்ததண்டகநாட்டுக்குள்ளே பொருந்தியிராநின்ற தலங்களுக்குள் சிலதலங்களில் மிகுந்த விருப்பத்துடன் நாம்வாசமாயிருப்பது. அந்தத்தலங்களின் பெயர்களை நாம்வரிசையாகச்சொல்லுகிறோம். நூறு இதழ்கள்பொருந்திய செந்தாமரைமலர்போன்ற முகத்தினையுடைய பார்வதி தேவியே நீகேட்பாயாக. எ-று, (௪௭)

வே று.

உம்பரியாவருமுவந்திடமுத்தியையுதவ
வம்புலாந்துழாய்மாறிருத்தங்கையாய்மகிழுங்
கும்பவார்முலையுமையவள்பூசனைகுலவுங்
கம்பைமாநதிசூழ்தருகாஞ்சிமாநகரம்.

(இ-ள்.) தேவர்கள்யாவரும் சந்தோஷிக்கும்படி மோக்ஷத்தை யுதவ வாசனைபொருந்திய துளசிமாலையணிந்திருக்கும் மகாவிஷ்ணுவின் தங்கையாய் மகிழ்கின்றபொற்கும்பத்தை யொத்துக் கச்சணியப்பட்டிருக்கும் ஸ்தனங்களையுடைய உமையவளாகிய காமாக்ஷிசெய்த பூசைபிரகாசியாநின்ற கம்பாநதி சூழ்ந்த காஞ்சிநகரம். எ-று. (௪௮)

வே று.

வியனுகருமாமறையோருடனேவிறன்மாமுனிவோரனுபூதியினோர், துயர்சூழ்பவமாலறவேயளிசேர்துதியோடியல்பூசனையேசெயுமூர், சயமாதெனவேகருமேதியினைத்தரைமீதுவிழப்பொருசீர்திகழு, மயன்மான்முதலோருணராவொளிசேரழலார்கிரியாமருணபுரியே.

(இ-ள்.) பெரியவிண்ணுலகத்திலிருக்கும்தேவர்களும், பெருமைபொருந்திய பிராமணர்களும், ஐம்பொறிகளைவென்ற வீரமுள்ளமுனிவர்களும், சிவானுபூதிபெற்றிருப்பவர்களும், துன்பம் நிறைந்த பிறவிமயக்கம்நீங்க அன்பமைந்த தோத்திரத்துடனே விதிப்படி ஆராதனைசெய்கின்றதலமொன்றிருக்கின்றது. அதன்பெயர் சயமாதென்று யாவருஞ்சொல்லும்ப

டி காளியானவள் கருமைநிறமுள்ள எருமைக்கடாமுகம்வாய்த்த மகிடன் என்னும் அசுரன் பூமியிலே இறந்துவிழும்படி போர்செய்தபெருமை விளங்குவதாய்ப்பிரமதேவன்மகாவிஷ்ணுமுதலோரால் அறியப்படாத சோதிதங்கிய அக்கினி சொரூபமாகிய மலைவிளங்கிய அருணாசலமென்பதாம். எ-று. (சகூ)

வேறு

புகழ்திருமேற்றளிவல்லம்பணங்காட்டூரோத்தூர்பொங்குசீரில
மபையங்கோட்டூர்திருமாற்பேறு,திகழ்திருமாகறலமரர்செறிகாரை
க்காடுசிறந்தகுறங்கணின்முட்டந்திருவிற்கோல, மகழ்புடைசூழெ
யில்வானமளக்கும்வலிதாயமச்சிறுபாக்கங்கள்ளிலாலங்காடு, நிகழ
யனர்ச்சனைபுரியுந்திருப்பாசூர்கச்சூர்நிறுத்திடுமிப்பதியாவுநிலவியநம்
பதியே.

(இ-ள்.) யாவரும்புகழ்கின்ற திருமேற்றளிதிருவல்லம் திருப்பணங்காட்டூர் திருவோத்தூர் சீர்மிகுந்த திரு இலம்பயங்கோட்டூர் திருமாற்பேறுவிளங்குகின்ற திருமாகறல்தேவர்கள்சூழந்திருக்கும் திருக்காரைக்காடு சிறப்புப்பொருந்திய திருக்குறங்கணின்முட்டம் திருவிற்கோலம் புறத்தில் அகழ்சூழும்படியான திருமதிலானது ஆகாயத்தையளாவுகின்ற திருவலிதாயம் அச்சிறுபாக்கம் திருக்கள்ளில் திருஆலங்காடு சிருஷ்டித்தொழில்செய்துகொண்டிருக்கும்பிரமதேவன் ஆராதனைசெய்ததிருப்பாசூர் திருக்கச்சூர் ஆக ஏற்படுத்தியிருக்கும் இந்ததலங்களெல்லாம் விளங்குகின்ற நம்முடைய பதியாகும். எ-று. (ருஎ)

திருமேற்றளி என்னுந்தலம்காஞ்சீபுரம் பிள்ளைபாளயத்திலிருக்கின்றது. திருவிற்கோலமென்பது கூவமெனவழங்கப்படுகின்றது. திருவலிதாயமென்பது பாடியெனவழங்கப்படுகின்றது.

வேறு.

வளங்குலாவியவுருத்திரர்பூசனைமருவுவதுகந்தோறுந்
துளங்கியேயழிவுறுதுமேனிமிர்ந்திடுஞ்சோதிசேர்ந்தெழில்வீசுங்
களங்கமாற்றுமெப்புவனமுமேவியகடவுளர்திரண்டேத்த
விளங்கிவாழ்கழுக்குன்றமாங்கதன்புகழ்விரித்திடவரிதாமால்.

(இ-ள்.) தெய்வீகத்துடன்விளங்கிக்கொண்டிருக்கிற கோடிருத்திரர்கள் பூசைசெய்துக்கொண்டிருப்பது. யுகங்கள்தோறும் அசைவுற்று அழியாமல்மேல் ஓங்குகின்ற ஒளிசேர்ந்து அழகினைப்பரப்புகின்றதுமாய் குற்றம் நீங்கியபதினாலுலோகங்களிலும் இருக்கின்றதேவர்கள்யாவருங் கூட்

டமாய்க்கூடித் துதிசெய்ய விளங்கிவாழ்கின்ற திருக்கழுக்குன்றமென்னுந் தலமொன்றிருக்கிறது அதனுடையபுகழை விரித்துச்சொல்வ தருமை யாம். எ-று. (௱௧)

மருவுலாவரநறவுமிழ்பங்கயமலர்த்தவிசின்மேவும்
பெருமைசேரயன்மகந்தனையாற்றியபெரும்பதியதினின்றும் [கள்
பொருவிலாதபச்சிமதிசைநோக்கியாமிருந்திடும்புகழ்நகரிமையோர்
கருதுநற்றிருவான்மியூரதற்கிணைகாசிவேறிலைமாதோ.

(இ-ள்.) வாசனை யெங்கும்பரவும்படி தேனைப்பொழிகின்ற தாமரை மலர்த்தவிசிற்பொருந்திய பெருமைதங்கிய பிரமதேவன்யாகஞ்செய்த பெரும்பதியாகிய திருவொற்றியூரென்னுந்தலத்தில் நின்றும் ஒப்பில்லாத மேற்குத்திசையை நோக்கிக்கொண்டு நாம்வீற்றிருக்கிற பெருமையமைந்த தலம் தேவர்களெல்லாம் சதாகாலம் தியானிக்கும்படியான திருவான்மியூரென்பதாம் அதற்குச்சமானம் காசியென்னுந்தலமேயன்றி வேறொருதலமுமில்லை. எ-று. (௱௨)

இலங்குவார்குழலுமையவள்பூசனையியற்றியமுல்லைவாயிலுஞ்சீர்
நலங்கொள்மூவுலகத்திலுள்ளார்களுநாவினுனவின்றேத்து
மலங்கல்வீதிசேரொற்றியூர்வசிட்டனுமரியயன்முதலாயோர்
மலங்கடீர்க்கும்வேற்காடுநன்முத்தியைவழங்குமெய்த்தலமாமே.

(இ-ள்.) இயற்கைமணத்துடன் விளங்குகின்ற நீட்சியாகிய அளகபாரத்தையுடைய பார்வதிதேவியார்பூசித்த திருமுல்லைவாயிலென்னுந்தலமும் சிறப்பும் நன்மையும்பொருந்திய திரிலோகத்திலு மிருப்பவர்கள் தங்கள் தங்கள் நாவினால் புகழ்கூறித் துதிசெய்யும் பூமாலைகளாலலங்கரிக்கப்பட்ட வீதிகளுள்ள திருவொற்றியூரென்னுந்தலமும் வசிட்டர் பிரமா விஷ்ணுமுதலானவர்களுடைய மும்மலங்களையும் நிவிர்த்திசெய்யத்தக்க திருவேற்காடென்னுந்தலமும் மெய்ம்மையான மோக்ஷத்தையருளுகின்ற உண்மைத்தலங்களாம். எ-று. (௱௩)

எண்ணில்சீர்த்திகொளித்தலங்களினுமவ்வெழின்மயிலையிற்காணு
நண்ணுமற்புதமினைத்தெனத்தெரித்திடநாக்குமேயரிதென்னிற்
கண்ணன்மாமலர்மேயவன்முதலியகடவுளர்பொறிமுன்னும்
பண்ணுலாமொழியாயினியாவர்கள்பகருதுமெனநேர்வார்.

(இ-ள்.) அளவில்லாத மகத்துவம்பொருந்திய இந்தத்தலங்களைப்பார்க்கிலும் அழகுள்ள அந்தத்திருமயிலையினிடத்துக் காணப்படுகிற சேர்ந்த

அற்புதங்களிவ்வளவென்று தெரிந்துசொல்ல நமக்கும் அரிதென்றால் விஷ்ணு பிரமன்முதலாகிய தேவர்கள் யாவர்தான் சொல்லுவோமென்று தொடங்குவார்கள் இலக்குமியானவள் தியானிக்கத்தக்க இசையையொத்த மொழியையுடைய பார்வதிதேவியே. எ-று. (ருச)

வேறு.

ஆதலாலப்பதிக்கிணையாகவே
யோதிலிக்கயிலைக்கிரியொன்றல
தேதமாற்றுமெழிற்றலமின்றுகாண்
கோதிலாவருட்கனிக்கொம்பனாய்.

(இ-ள்.) ஆகையினாலே அந்ததலத்துக்கு ஒப்பாகச்சொல்லுமிடத்தில் இந்தக்கயிலாயகிரி யொன்றேயல்லது அடியார்களுடைய பிறவித்துன்பங்களை நீக்கத்தக்க அழகுள்ள உபதலங்கள் வேறொன்றுமில்லை குற்றமில்லாத கிருபைக்கனிபூத்திருக்கும் பூங்கொம்பையொத்த பார்வதியே. எ-று. (ருரு)

சீரணம்படச்சோமுகன்செய்தநா
ளாரணன்னயனண்ணினவிந்துமு
னாரணங்களுநம்மையடைந்துதம்
பூரணம்பெறப்போற்றியதந்நகர்.

(இ-ள்.) வேதங்கள் நிலைகெடும்படி சோமுகனென்னும் அசுரன்செய்தநாளில் மஹாவிஷ்ணு பிரமதேவன் பொருந்தியசந்திரன் என்னுமிவர்கள்முதல் வேதங்களும் நம்மையடைந்து தமது பூரணத்தையடையும்படி நம்மைத்துதிசெய்தது அந்தத்தலம். எ-று. (ருசு)

துன்னும்வானவர்சூரனியற்றிய
வின்னறீர்ந்தின்பமெய்திடவேல்கொள்வான்
முன்னெம்வேணமதேவலின்மூண்டருண்
மன்னுபூசைவகுத்ததுமந்நகர்.

(இ-ள்.) சூரபத்மாவினால் செய்யப்பட்ட துன்பங்களை தேவர்கள்நீங்கியின்பத்தையடையும்படி அவனைக்கொல்வதற்காக வேலாயுதம் பெற்றுக்கொள்ள நம்முடையகட்டளையினால் சென்று பூசைசெய்ததும் அந்தத்தலத்தில். எ-று. (ருஎ)

மன்பதைக்கருண்மால்செய்வினையினாற்
றுன்பமுற்றிடுசுக்கிரன்மேவியே
யன்பினம்மையருச்சனைசெய்யவே
யின்பம்வந்தெழிலெய்தியதங்கர்.

(இ-ள்.) சீவகோடிக்காக அருள்பொருந்திய மகாவிஷ்ணுவானவர் செய்தசெய்கையினாலே ஒருகண்ணிழந்து துன்பத்தை யடைந்தசுக்கிரன் விரும்பியன்புடன் பூசிக்க இன்பத்தையும் அழகையும் அடைந்தது அந்தத்தலத்தில். எ-று. (௫அ)

தராதலத்திற்றறுகண்மையேசெயு
மிராவணற்சிரமிற்றிடத்தேவர்கள்
பராவமாயன்பரிந்தவதாரஞ்செ
யிராமன்பூசையியற்றியதங்கர்.

(இ-ள்.) இவ்வுலகத்தினிடத்தில் துன்பத்தையே செய்துகொண்டிருக்கும் இராவணன் தலைகளறும்படி தேவர்களெல்லாந் துதிசெய்ததினால் மகாவிஷ்ணு அவர்களிடம் அன்புவைத்து அவதாரஞ்செய்த இராமன் நம்மைபூசைசெய்ததும் அந்தக்ஷேத்திரத்தில். எ-று. (௫௯)

வேறு.

மருவுலாவாராமஞ்சூழ்மயிலைமாநகரத்தோர்காற்
றிருவுலாவியவங்கண்ணற்சிவநிசிவிரதஞ்செய்தாற்
பொருவிலாப்புவனமுற்றும்புரந்திடவளித்துப்பின்னுங்
கருவிலாப்பரமர்பாதங்கலந்திடவளிக்குமின்னே.

(இ-ள்.) வாசனைபொருந்திய சோலைகள்சூழ்ந்த அந்தத்திருமயிலையினிடத்து ஒருகாலம் செல்வநிறைந்த சிவராத்திரிவிரதத்தை யனுஷ்டித்தால் ஒப்பில்லாத பதினாலுலோகங்களையும் அரசுசெய்யும்படி அளித்து ஜென்மம் இல்லாமல் பரமசிவனுடைய திருவடிகளைச்சேரும்படி கொடுக்கும். எ-று. ()

முன்புளமறைகடேர்ந்தமுதுமறையோர்கடம்மி
னன்புடனொருவன்றுய்க்கவத்தலத்தளிக்கிலன்னந்
தன்புடையரசர்சூழ்ந்துசரண்டொழச்செங்கோலோச்சிப்
பின்புநங்கயிலைவெற்பைப்பெறுவதுதிண்ணமாதோ.

(இ-ள்.) ஆதியாயிருக்கிற வேதங்களையுணர்ந்த பழயபிராமணர்களுக்குள் ஒருபிராமணன் உண்ணும்படி அந்தத்தலத்தில் அன்னங்கொடுத்தால்

அரசர்கள் சூழ்ந்துகொண்டு தன்பாதத்தை வணங்கும்படி செங்கோல்செலுத்தி பின்பு நம்முடைய கயிலாசகிரியை அடைவது நிச்சயம். எ-று. செங்கோல்செலுத்தலாவது நீதிசெலுத்துதல் அந்தநீதியானது ஒருவர்பட்சத்தில் சாயாமல் தராசுக்கோல்முள்ளைப்போல் சரியாயிருக்கத்தக்கதாதலால் செங்கோலென்று சொல்லப்பட்டது. (கூக)

வேறு.

அத்தலத்தில்விடைபொறித்தோருடல்விடுத்தாலொருவிடைமேலரன்பாற்செல்வார், பத்தியினுற்பசுவளித்தோர்பசுத்துவத்தைக்கழிப்பர்நிலம்பனவற்கீந்தோர், சுத்தநமதருகிருப்பார்கலையளித்தோர்கலைகளைந்துந்தொலைத்தப்பாலை, முத்தியிலேபுகுவரன்னம்படைத்தவர்க்குங்கிடைக்குமந்தமுத்திதானே.

(இ-ள்.) அந்தத்தலத்தில் ரிஷபத்திற்கு சூலமுத்திரை யிட்டவர்கள் உடலைவிட்டுயிர் நீங்குங்காலத்து ஒரு ரிஷபத்தின்மேலேறிக்கொண்டு சிவனிடத்திற் சேர்வார்கள் பத்தியுடன் பிராமணர்களுக்குக் கோதானங்கொடுத்தவர்கள் மும்மலங்களோடுங்கூடிய பசுத்துவத்தைநீங்கிச் சிவத்துவமடைவார்கள் பிராமணர்களுக்குப் பூதானங்கொடுத்தவர்கள் பரிசுத்தமுள்ள நம்முடையசமீபத்தில் இருப்பதாகிய சாமீபபதத்தையடைவார்கள். வஸ்திரதானங்கொடுத்தவர்கள் கலாதத்துவங்களைந்தையுமொழித்து அப்பாலாகிய சாயுச்சியபதவியை யடைவார்கள், அன்னம்படைத்தவர்களுக்கும் அந்தசாயுச்சிய பதவிகிடைக்கும். எ-று. (கூஉ)

விடம்புனையெம் மடியவருக் காதனமாதனமீந்தோர் விமலராவார், மடஞ்சமைத்தோர்மடத்துக்கோரயுதயுகஞ்சிவபதத்தின்மருவிவாழ்வார், குடந்தரிக்குஞ்சிறியகொடிக்கன்னியர்தங்களைத்தானங்கொடுத்தபேர்கள், படந்தரிக்கும்பாம்பணையான்பதவியிலேபலபோகம்பயிலுவாரே.

(இ-ள்.) கண்டத்தில் விஷந்தரித்துக் கொண்டிருக்கிற எம்முடைய அடியவர்களுக்கு ஆசனமுந்திரவியமும் கொடுத்தவர்கள் சித்தசுத்தியுள்ள பரிசுத்தராவார்கள். மடங்கள் கட்டிக்கொடுத்தவர்கள் ஒவ்வொருமடத்திற்குப் பதினாயிரயுககாலம் சிவலோகத்தில் வாசமாயிருப்பார்கள். பொற்குடத்தைத் தாங்கிக்கொண்டிருக்கிற சிறியபூங்கொடிபோலத் தனங்களைத்தாங்கிக்கொண்டிருக்கும் கன்னியர்களைத் தானமாகக்கொடுத்தவர்கள் ஆயிரம்படங்களையுடைய ஆதிசேஷனாகிய சயனத்தில் பள்ளிகொண்டிருக்கும் மகா

விஷ்ணுவினுடைய பதவியிலே பலபோகங்களை அனுபவித்துக்கொண்டிருப்பார்கள். எ-று (கூக)

வே று.

ஆலயத்திலலகிடுவார்க்கப்பயனோராயிரமாஞ்
சாலமெழுகிடுவார்க்குத்தன்மைபதினாயிரமா
மாலைபுனைந்தணிவார்க்குவரும்பயனூறாயிரமாங்
கோலவிளக்கிடுவார்க்குக்கோடிபலன்கொடுத்திடுமே.

(இ-ள்.) ஆலயத்தில் திருவலகிடுகின்றவர்களுக்கு வரும்பலன் முன்பலனிலும் ஆயிரம்பங்கதிகமாம், திருமெழுக்கிடுகின்றவர்களுக்கு வரும்பலன் அதனிலும்பதனாயிரம்பங்கு அதிகமாம், மாலைதொடுத்துச் சிவபிரானுக்குத் தரிப்பவர்களுக்குப்பலன் அதனினும் லக்ஷம்பங்கதிகமாகும். அழகிய விளக்கேற்றுபவர்களுக்குப்பலன் அதனினுங் கோடிபங்கதிகமாக உண்டாகும். எ-று. (கூச)

ஒரகலில்விளக்கிடுவாருறைவரும்பரிறையாவா
ரீரகலிற்றீபமிட்டாரிலங்குமலரயனாவா
ராரவொருமூவகலிற்சுடரிடுவாரரியாவார்
சேரவொருநாலகலிலொளியிடுவார்சிவனாவார்.

(இ-ள்.) ஒருஅகலில் தீபமிடுகின்றவர்களாய் அங்குவசிப்பவர்கள் தேவேந்திரபட்டம் பெற்றுவாழ்வார்கள் இரண்டகலில் தீபமிட்டவர்கள் விளங்குகின்ற பிரமதேவனாய் வாழ்வார்கள் பொருந்தும்படி மூன்றகலில் தீபமிடுகின்றவர்கள் மகாவிஷ்ணுவாய் வாழ்வார்கள் சேரும்படி நாலகலில் தீபமிடுகின்றவர்கள் சிவரூபம்பெற்று வாழ்வார்கள். எ-று. (கூரு)

பானீயமினிமைதரும்பயந்தயிர்நெய்பச்சிளநீர்
தேனாரக்குழம்புநம்பொற்றிருமுடியிலாட்டுவித்தால்
தானாயிரம்மயுதஞ்சதமுறமாயிரங்கோடி
நானூறாயிரங்கோடிமகாகோடிநலந்தருமே.

(இ-ள்.) திருமஞ்சனதீர்த்தம் மதுரமுள்ளபசுவின்பால் பசுவின்தயிர் பசுவின்நெய் பசுமைதங்கிய இளநீர் தேன் சந்தனக்குழம்பு என்னும் இவைகளைத்தனித்தனியாக நம்முடையபொலிவுள்ள திருமுடியில் திருமஞ்சனஞ்செய்வித்தால் அவர்களுக்கு வரும்பலன் மேற்கூறிய வஸ்துக்கள் ஒவ்வொன்றுக்கு ஆயிரம் பதினாயிரம் நூறாயிரம் கோடி நானூறாயிரங்கோடி மகாகோடி என்னுமளவாகும். எ-று. (கூசு)

மண்ணாலுந்தருவாலுமரன்கோயில்வகுத்தவர்க
டண்ணாரும்பிறைமுடியென்றன்னுடனேயமைந்திருப்பா
ரெண்ணார்செங்கலிலமைத்தோரெம்வடிவாயினிதிருப்பார்
பண்ணார்கற்களிலமைத்தோர்பரமெனுநம்பதஞ்சேர்வர்.

(இ-ள்.) மண்ணினாலும் மரத்தினாலும் சிவாலயங்கட்டுவித்தவர்கள் குளிர்ச்சிபொருந்திய இளந்திங்களணிந்த திருமுடியினையுடைய என்னுடன் சாலோகபதவியில் வாழ்ந்துகொண்டிருப்பார்கள். எண்ணத்தக்க செங்கல்லினாலே ஆலயங்கட்டுவித்தவர்கள் எமதுவடிவம்பெற்றினிமையாக வாழ்வார்கள் பண்பமைந்த கருங்கல்லினாற் கட்டுவித்தவர்கள் பரமாகிய நமது திருவடிநீழலில் வாழ்வார்கள் எ-று. (கூஎ)

சிறந்தநீர்ப்பந்தறன்னைச்சித்திரைமாதந்தன்னி
லறந்திகழவ்வூர்தன்னிலமைத்தவர்வேந்தராய்வாழ்ந்
திறந்தபின்சிவலோகத்தையெய்துவரியாகஞ்செய்தோர்
பிறந்துசொர்க்கத்தையாண்டுபின்புநம்பதமுஞ்சேர்வார்

(இ-ள்.) தர்மங்கள் விளங்கிக்கொண்டிருக்கும் திருமயிலையென்னுந் தலத்தில் சிறப்புற்றதாகிய தண்ணீர்ப்பந்தலைச் சித்திரைமாதத்தில் வைத்தவர்கள் அரசர்களாய் வாழ்ந்திருந்து மரணமடைந்தபின்பு சிவலோகத்தைச்சேர்ந்து வாழ்வார்கள். யாகங்கள் செய்தவர்கள் மறுதேவர்களாய் ஜனனமெடுத்துச் சொர்க்கலோகத்தை யாள்வார்கள். பின்பு நம்முடையபதவியிலுஞ் சேர்வார்கள். எ-று. (கூஅ)

இலங்கியகவிகைவெண்பட்டிரத்தினமகுடஞ்செம்பொற்
கலங்கணற்சிவிகைசாந்துகமழ்புழுகவைகளீந்தோர்
நலங்கொள்பொன்னுலகமுன்னாய்நவிறரும்பதவியின்பப்
பலன்களுந்துய்த்துமேலாம்பதம்பெற்றுமுயர்வர்மாதோ.

(இ-ள்) பார்வதிதேவியே பிரகாசியாநின்ற வெள்ளைக்குடை வெண்பட்டுவஸ்திரம் இரத்தினகிரீடம் பொன்னாலாகிய திருவாபரணங்கள் நன்மையமைந்த பல்லக்கு சந்தனம் பரிமளிக்கும் புனுகு என்னுமிவைகளை நமக்கென்று கொடுத்தவர்கள் நன்மைகொண்ட பொன்னுலக முதலாகச்சொல்லப்பட்ட பதவிகளில் இன்பப்பலன்களை யனுபவித்தும் மேலாகியபதவியைப்பெற்றும் மேன்மையடைவார்கள். எ-று. (கூகூ)

கறையடிபரிமாமுன்னுக்கழறியதசதானங்கள்
மறைவனமாரூர்காசிவழங்கினோர்பலத்தில்வேத
மறைதருமயிலைதன்னிலாற்றினர்பலத்தைக்கூறி
னிறைசதமடங்காமென்றானிகரதற்குளதோமாதே.

(இ-ள்.) பார்வதியே யானை குதிரை முதலாகச்சொல்லப்படுகின்ற பத்துவிததானங்களையும் வேதாரண்ணியம் திருவாரூர் காசிஎன்னும் இந்தத்தலங்களில் எமக்கென்று செய்தவர்கள் அடையும்பலன்களில் வேதங்களால் துதிசெய்யப்பட்ட திருமயிலையில் மேற்கூறிய யானைமுதலிய தானங்கள் செய்தவர்கள் அடையும்பலனைச் சொல்லுமிடத்து நிறைந்த நூறுமடங்கு அதிகமாகுமென்றால் அந்தத் தலத்திற் கொப்புண்டோ. எ-று. (எ0)

தூயகற்பூரஞ்சேர்ந்தசுகந்தப்பொன்னுடைவெண்பட்
டேயபொற்கலங்களவ்வூரிடத்தெமக்கணியச்செய்தோர்
மாயிருஞாலமுற்றும்புரந்துபின்வானங்காத்துத்
தாயிடத்துதியார்நம்பொற்றாளில்வீற்றிருப்பர்மாதே.

(இ-ள்.) பார்வதியே பரிசுத்தமுள்ள பச்சைகர்ப்பூரமுதலிய நல்லவாசனை யூட்டிய பீதாம்பரம் வெண்பட்டாடைபொருந்திய பொன்னாபரணங்களென்னுமிவைகளை அந்தத்திருமயிலை என்னுஞ் க்ஷேத்திரத்தில் நமக்குத் தரிக்கும்படிசெய்தவர்கள் பெருமைபொருந்திய இந்த உலகமுழுமையும் இரக்ஷித்துப் பின்பு தெய்வலோகத்தையுங்காத்துத் தாயின்வயிற்றில் கருவாய்த்தங்கிப் பிறவாது நம்முடையபொலிவுள்ள திருவடிநீழலில் வாழ்ந்துகொண்டிருப்பார்கள். எ-று. (எக)

துன்னுசெங்கழுநீர்மாலைதூயவெள்ளெருக்கங்கண்ணி
மன்னுபொற்கொன்றைத்தாமவகைகணம்முடிமேற்சாத்திற்
பன்னியைச்சேயைத்தாயைவதைத்திடும்பாவமற்றோர்
கன்னியைப்புணர்ந்தபாவங்கழிந்திடுந்திண்ணமாதே.

(இ-ள்.) பார்வதியே வாசனைபொருந்திய செங்கழுநீர்புட்பமாலையும் பரிசுத்தமுள்ளதாகிய வெள்ளெருக்கம் பூமாலையும் பொன்னிறம்பொருந்திய கொன்றைப்பூமாலையும் ஆகிய இவ்வகைப்பூமாலைகளை அந்தத்தலத்தில் நம்முடைய திருமுடியில் சாத்துவார்களாகில் மனைவியையும் பிள்ளையையும் தாயையுங்கொலைசெய்யும் பாவமும் பிறர்மாதரைப் புணர்ந்த பாவமுமொழித்துவிடும் இது நிச்சயம். எ-று. (எஉ)

இலங்குசண்பகநற்றும்பையெழில்கொண்மல்லிகைப்பூந்தாமந்
துலங்குவில்வத்தின்பன்னக்தூயறுகலரிமற்று
நலங்கொணன்னகரினன்பர்நம்முடிமீதிற்சாத்திற்
கலந்துதீராதபாவக்கடல்கடந்தருளுஞ்சேர்வார்.

(இ-ள்.) பிரகாசியாநின்ற சண்பகம் நல்லதும்பை அழகுபொருந்திய மல்லிகை இவற்றின் மலர்களாற் றொடுக்கப்பட்ட மாலைகளையும் நமது சொரூபமாய் விளங்காநின்ற வில்வபத்திரம் பரிசுத்தமுள்ள அறுகு அலரிப்பூ என்னுமிவைகளையும் இன்னும் நமக்குரியமலர்களையும் நன்மைபொருந்திய திருமயிலையில் இருக்கும் அன்பர்கள் நமதுதிருமுடியில் சாத்துவாா்களாகில் ஜனனங்கள்தோறுந் தொடர்ந்து ஒழியாமலிருக்கிற பாவக்கடலை நீந்தி நம்முடைய அருளையும்பெற்றுக் கொள்வார்கள். எ-று. (எரு)

தூயநற்பாயசான்னஞ்சுவைக்கறிவகைகணெய்யி
ஞயசிரபூபவர்க்கமன்புடனெமக்களித்தோர்
மேயபொய்ப்போகமெல்லாம்விட்டுநம்மடிக்கீழ்மேவி
யேயபேரின்பமெய்தியிருப்பர்நம்வெற்பிடத்தில்.

(இ-ள்.) பரிசுத்தமுள்ள நல்ல பாயசான்னமும் அறுசுவையுள்ள கறிவகைகளும் நெய்யாற் பாகஞ்செய்த சிறப்பமைந்த அபூபவர்க்கமென்னுமிவைகளையும் அன்புடனே நமக்கு நைவேத்தியஞ்செய்வித்த அடியார்கள் பொருந்திய பிரபஞ்சவாழ்க்கை யனைத்தையும்விட்டு நம்முடைய திருவடியின் கீழ்பொருந்திப் பேரின்பத்தையடைந்து நமது கைலாயகிரியி லமர்ந்திருப்பார்கள்.—எ-று. அபூபமாவது - பலகாரவகை. (எசு)

அப்பதிதனிற்கபாலிதீர்த்தத்திற்படிந்துநந்த
மொப்பறுங்கோயினண்ணியுருகியோர்வலஞ்செய்தாலுந்
தப்பறநமதுபாதஞ்சார்ந்துபேரின்பந்துய்ப்பார்
முப்பொழுதுஞ்செய்வோர்கள்பலத்தையார்மொழிவார்மின்னே

(இ-ள்.) மின்னற்கொடியையொத்த திருமேனியையுடைய பார்வதியே அந்தத்தலத்திலிருக்கும் கபாலிதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து ஒப்பு சொல்லுதற்கரிய நம்முடையதிருக்கோயிலுக்குள்வந்து உள்ளுருகி யொரு பிரதக்ஷணஞ்செய்தாலும் குற்றங்களெல்லாம் நீங்கும்படி நம்முடைய திருவடியைச்சேர்ந்து பேரின்பத்தை யனுபவிப்பார்கள் இவ்வண்ணம் திரிகாலத்திலுஞ்செய்கின்றவர்கள் அடையும்பல னிவ்வளவென்று யாரளவிட்டுச் சொல்லுவார்கள். எ-று. (எரு)

நண்ணியேயவ்வூர்தன்னினந்திருமுன்னமெய்திப்
புண்ணியப்பொருளாயோர்மாப்பொன்னளித்திறைஞ்சினோரும்
விண்ணவர்தொகுதிபோற்றவெள்விடையுகைத்துநம்போ
லெண்ணிலாவின்பந்துய்த்துக்கயிலையிலிருப்பர்மாதே.

(இ-ள்.) பார்வதியே அந்தத்தலத்திற் சேர்ந்து நம்முடைய சந்நிதானத்தில்வந்து புண்ணியவழியிற் சம்பாதித்தபொருளாக நமக்கென்று ஒருமாப்பொன்னளித்துப் பணிந்தவர்களும் தேவகூட்டங்களெல்லாம் துதிசெய்யும்படி வெள்ளைவிடையிலேறிச்செலுத்தி நம்மைப்போலளவில்லாத இந்தப் பேரின்பத்தை அனுபவித்துக்கொண்டு இந்தக் கைலாசகிரியில் வாழ்ந்திருப்பார்கள். எ-று. (எசு)

அத்தலங்காணின்மாயவருவினையுடன்கெட்டோடு
மத்தலத்தென்றுமுண்டாமதிசயமெங்குமில்லை
யத்தலம்பரமமுத்தியடைதற்கோரேணியாகு
மத்தலவிசிட்டநாமுமறைவதற்கெளிதன்றுமால்.

(இ-ள்.) அந்தத்தலத்தை தரிசித்தாலும் மாயாசம்பந்தத்தினல் நேரிட்ட தீவினைகளெல்லாம் உடனே அழிந்து ஒழிந்துபோம் அந்தத்தலத்தில் என்று முண்டாயிருக்கிற அற்புதங்கள்மற்ற எந்தத்தலங்களிலுமில்லை. அன்றியு மந்தத்தலமானது பரமமுக்தியையடைவதற்கு ஒரு ஏணிபோலிருப்பதாம். ஆகையினலே அந்தத்தலத்தின் மான்மியங்கள் நாமும் சொல்லுதற்கு எளிதல்ல. எ-று. (எஎ)

என்றனனியம்பக்கேளாவிருகண்ணீரருவிபாயத்
தன்றனிக்கரங்கள்கூப்பிச்சயசயபோற்றிஞான
நன்றெனக்களித்தோய்போற்றிநற்றலந்தன்னிலாங்க
ணின்றியானேகுமுன்னமேகல்வேண்டடிகளென்றாள்.

(இ-ள்.) இவ்வாறு சிவபிரான் திருவாய்மலர்ந்தருளினர் அவ்வாறு சொல்லிய அம்மொழிகளைக்கேட்டிரு கண்களினின்றும் ஆனந்தபாஷ்பம் பெருகத்தனது ஒப்பற்ற கைகளை யஞ்சலியாகக்குவித்து சயசயபோற்றி நன்மையுடனே ஞானத்தை அடியேனுக்கருளிச் செய்தகடவுளேபோற்றி இப்போது தேவரீர் அருளிச்செய்த திருமயிலையென்னும் அந்தத்தலத்திற்கு இன்று நான் போவதற்குமுன்னமே தேவரீர் எழுந்தருளவேண்டுமென்று பார்வதிதேவியார் விண்ணப்பஞ்செய்தார். எ-று. (எஅ)

அப்பொழுதுமையாள்கூறவையனுங்கருணைகூர்ந்தே
துப்பிதழ்க்கனியேநீமுன்றொடர்ந்தங்கணடைந்துநம்மைத்
தப்பறவருச்சித்தேத்தித்தாழ்ந்திடினுளங்களிக்க
வொப்பிலப்பதியினூழுமுன்முனம்வருதுமென்றான்.

(இ-ள்.) அப்பொழுதுமையவ ளிவ்வாறுவிண்ணப்பஞ்செய்யச் சிவபிரானும் கிருபைகூர்ந்து பவளத்துண்டுபோன்ற அதரத்தையுடைய பார்வதியே நீ முன்சென்று அவ்விடத்திற்சேர்ந்து நம்மைப்பழுதற அருச்சித்துத் துதித்துப்பணிந்தால் உனதுமனம் களிப்படைய ஒப்பில்லாத அந்தத் தலத்தில் உனக்குமுன் நாமும் வந்துசேருகிறோமென்று திருவாய்மலர்ந்தருளினர். எ-று. (எகூ)

ஐயனுமியைந்திசைப்பவம்பிகைவிடைகொண்டாங்கே
மெய்யனைப்பிரிவிலாமற்பிரிந்துமெல்லியர்கள்சூழத்
துய்யசீர்மணியாற்கண்டசுடரிரதத்தினேறிப்
பையவேசேரலுற்றபரிசெலாம்பகரலுற்றேன்.

(இ-ள்.) சிவபிரானு மிவ்வாறுகிருபைகூர்ந்து திருவாய்மலர்ந்தருளப் பார்வதிதேவியார் விடைபெற்றுக்கொண்டு அவ்விடத்தினின்றும் சிவபிரானைப் பிரியாமற்பிரிந்து தோழிகள் சூழ்ந்துக்கொண்டுவர பரிசுத்தமாய்ச்சிறந்த இரத்தினங்கள் பதித்துச்சமைத்த பிரகாசமுள்ள இரதத்தின்மேலாரோகணித்துக்கொண்டு மெதுவாக எழுந்தருளுகின்ற தன்மையையெல்லாம் சொல்லத்தொடங்கினேன். எ-று. (அ0)

பார்வதியார்சாபச்சருக்க முற்றிற்று.

ஆகச்சருக்கம் - ௩ க்கு - திருவிருத்தம் - ௨௫௪.

---

# பார்வதியார் அருச்சனைச்சருக்கம்.

என்னையாளுடையநாயகியையனையிறைஞ்சிமுன்விடைகொண்டே, பொன்னினுன்மணிவரிசையாற்குயிற்றியபொங்கொளித்தேரேறித், துன்னிவானவர்மலர்மழைபொழிந்திடச்சுருதிபல்லியமார்ப்ப, மின்னுமேகலைமெல்லியர்சிலருடன்வெள்ளிவெற்பினைநீத்தாள்.

(இ-ள்.) என்னை ஆட்கொண்டருளும் இறைவியாகிய பார்வதிதேவியார் சிவபிரானைப்பணிந்து விடைபெற்றுக்கொண்டு பொன்னாலும் இரத்தினவகைகளினாலும் செய்யப்பட்டிருக்கிற மிகுந்த பிரகாசத்தையுடைய இரதத்தின்மே லாரோகணித்துக்கொண்டு தேவர்களெல்லாஞ் சூழ்ந்து கற்பகப்பூமாரிபொழியவும் வேதங்களும் பலவாத்தியங்களும் கோஷிக்கவும் விளங்குகின்ற மேகலாபரண மணிந்த சில தோழிகளுடன் கைலாயகிரியை விட்டுநீங்கி எழுந்தருளினார். எ-று. (க)

தொடாந்துவானவர்மாதவராசிகள்சொன்மலர்பொழிந்தார்ப்பக், கடந்துதெக்கணந்தன்னில்காவதங்கள்செங்கனகமாமணித்திண்டே, ரடர்ந்துவல்லிருட்குழுவெலாமுகந்தெடுத்தருந்தியெண்டிசையெங்கும், படர்ந்துபேரொளிதெவிட்டிடவந்தரப் பதவியிற்செலவூர்ந்தாள்.

(இ-ள்.) தேவர்களும் முனிவர்களும் தொடர்ந்து ஆசீர்வசனஞ் சொல்லியும் கற்பகப்பூவைப் பொழிந்தும் துதிசெய்ய அளவில்லாத காதவழிதூரங்கடந்து தெற்குநோக்கிச் சென்று செம்பொன்னினாலும் இரத்தினங்களினாலுஞ் செய்யப்பட்ட வலிய இரதமானது இவ்வுலகமெங்கும் சூழ்ந்துவலியதாயிருக்கிற இருட்கூட்டத்தையெல்லாம் ஒன்றாய்ச் சேர்த்தெடுத்துண்டு அஷ்டதிக்கெங்கும் பிரகாசம்பரந்து நிறைய ஆகாசமாய்ச் செல்லும்படி செலுத்தினார். எ-று. (உ)

எண்ணிலாவளம்படைத்துவிண்கிழித்துநின் றிலங்குகேதாரத்தி, னண்ணியவ்வளநோக்கிநின்றவ்வயினன்மணிவையத்தின், வண்ணமாமணிக்குன்றினின்றிழிதருமயிலெனவிழிந்துற்றே, கண்ணுதற்கொழுங் கனியினைத்தொழுதுகண் களிக்கவே விடைகொண்டாள்.

(இ-ள்.) அளவில்லாத வளப்பங்களைப்பொருந்தி ஆகாயமுகட்டைக்கிழித்துநின்று பிரகாசியாநின்ற திருக்கேதாரமென்னுந் தலத்தில் அடைந்து அவ்வளப்பங்களையெல்லாம் பார்த்து அவ்விடத்தில் நல்லமணிகள் பதித்திருக்கின்ற தேரினின்றும் அழகுள்ள உயர்ந்த இரத்தினங்கள் நிறைந்த ஒருமலையினின்றும் இழிகிற மயிலைப்போல இழிந்துநின்று தன்னுடைய நேத்திரங்கள் களிக்கும்படி நெற்றிக்கண்ணையுடைய நல்ல பழம்போன்ற சிவபிரானைக் கண்டு பணிந்து விடைபெற்றுக்கொண்டாள். எ-று. (௩)

வந்துமன்னிரதத்தினையூர்ந்துமேன்மங்குன்மார்க்கமதாக
விந்துசேகரன்பதிகள்மற்றுள்ளவுமியல்புடன்பணிந்தேத்தி
விந்துநாதமுங்கடந்துபேரொளியுடன்மேவிவாழ்ந்திடநல்குங்
கந்தமாமலர்ப்பொதும்பர்விண்டடவிடுங்காசிமாநகர்சேர்ந்தாள்.

(இ-ள்.) விடைபெற்றுக்கொண்டு வந்து அங்குநிறுத்தியிருந்த இரதத்தில் ஆரோகணித்துப் பிறகு ஆகாசமார்க்கமாகச் சென்று சந்திரசேகரனாகிய சிவபிரான் வீற்றிருக்கும் மற்றத்தலங்களையும் முறைமையுடன்பணிந்து துதிசெய்து நாதவிந்து தத்துவங்கடந்து பெரியசோதியுடன் பொருந்திவாழ்ந்திடும்படி அடியார்க்கருள் செய்வதான வாசனைபொருந்திய மலர்கள்நிறைந்துள்ளசோலைகள் ஆகாயத்தையளாவுகின்ற பெருமைபொருந்திய காசியென்னுந்தலத்தில் சேர்ந்தாள். எ-று. (ச)

பிலந்துளைத்துநன்றந்தரத்தெழுந்துதற்பேணினர்கருமூல, மலந்துடைத்தருள்வழங்குமந்தாகினியம்மையுற்றனளென்றே, நலந்துதைந்ததண்டரளமுமணிகளுநறுமலர்க்குவையாவுங், கலந்துதெண்டிரைக்கரங்களாற்பொழிவதுகண்டுகண்களிப்புற்றாள்.

(இ-ள்.) பிலத்தைத் துளைத்துக்கொண்டு நன்மையாக மேலெழுந்து தன்னைப்பணிகின்றவர்களுடைய பிறவிக்கேதுவாகிய மூலமலத்தை யொழித்தருள்சுரக்கின்ற கங்கையானது பார்வதிதேவியார் நம்மிடத்திற்கு வந்தாரென்றுகருதி நன்மைபொருந்திய குளிர்ந்த முத்துக்களையும் இரத்தினங்களையும் வாசனைபொருந்திய மலர்க்குப்பல்களையும் இவைகளை யொன்றுகச்சேர்த்து தெளிவான அலைகளாகிய கைகளால் தன்பாதத்தில் சிந்தக்கண்டு பார்வதிதேவியார் கண்களிப்படைந்தாள். எ-று. (ரு)

நண்ணியங்ஙனங்கைதன்கரங்களானடந்தனைபணிசெய்யப், புண்ணியப்புனல்படிந்துநீறணிந்துசெம் பொற்சினகரத்துற்றே, யண்ணலேபரனேவிசுவேசனே யருளெனப்பணிந்தேத்தித், தண்ணுலாவருட்டேவனைவிடைகொடுதையல்தேர்தனிற்சென்றாள்.

(இ-ள்.) அவ்விடத்திற் பொருந்திக் கங்காதேவியானவள் தன்கைகளால் நடந்து எமதன்னையாராகிய உமாதேவியாரது பணிவிடை செய்யும்படி அந்தப் புண்ணிய தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து விபூதிதரித்துக்கொண்டு செம்பொன்னாற் செய்யப்பட்ட ஆலயத்திற்போய்ப் பெருமையிற் சிறந்தவனே அரனே விசுவநாதனே அருள்புரிவாயெனப் பணிந்து துதிசெய்து குளிர்ச்சிபொருந்திய திருவருளினையுடைய விசுவநாதனிடத்தில் விடைபெற்றுக்கொண்டு பார்வதிதேவியார் தேரேறி அப்புறஞ்சென்றார். எ-று. (சு)

சேர்ந்துமானனையார்கட்சூழ்ந்திடச்செலுத்திவிண்டனிற்சென்றே, கூர்ந்தவன்புடன்பருப்பதத்துற்றருட்கொழுந்தினைப்பணிந்தேத்தித், தேர்ந்துமற்றுளபதிகளிற்பூசனைசெய்துபின்விடைகொண்டே, சார்ந்துகாளத்திகண்டுளங்களித்தனள்சகமெலாமுனமீன்றாள்.

(இ-ள்.) மானையொத்த தோழிமார்கள்தன்னைச் சூழ்ந்துவரும்படி இரதத்தினை ஆகாசமார்க்கமாகச் செலுத்திச்சென்றுமிகுந்த அன்புடன் ஸ்ரீசைலத்தைச்சேர்ந்து சிவபிரானைப் பணிந்து துதித்து விடைபெற்றுக்கொண்டுசென்று மற்றுமுள்ள தலங்களி லெழுந்தருளிய சிவபிரானைப் பூசித்து அங்கங்கும் விடைபெற்றுக்கொண்டு மூவுலகத்தையெல்லா மீன்றருளிய பார்வதிதேவியார் திருக்காளத்தியைச் சேர்ந்து அங்கு வீற்றிருந் தருளும் காளத்திநாதனைத் தரிசித்து திருவுள்ளக் களிப்படைந்தாள். எ-று. (எ)

விளங்குமம்மலைக்கொழுந்தினைப்பணிந்துடன் விடைகொடுகளிகூர்ந்து, களங்கமின்றியவக்கிரிக்கனலவன்காத்திடுந்திசைநோக்கித், துளங்கலின்றியேயிரதமூர்ந்திலகுபொற்றோரணமணிமாட, வளங்குலாவியகயிலையங்கிரியெனமயிலைமாநகர்கண்டாள்.

(இ-ள்.) தொண்டைநாட்டில் பிரகாசித்துக்கொண் டிராநின்ற அந்தக் காளத்திமலையில் வீற்றிருந்தருளும் சிவபிரானைப் பணிந்து அப்பொழுதே விடைபெற்றுக்கொண்டு களிகூர்ந்துசென்று களங்கமில்லாத அந்தமலைக்குத் தென்கீழ்த்திசையாகிய அக்கினிதேவன் காக்குந் திக்கைநோக்கி அசைவில்லாமல் இரதத்தைச் செலுத்திக்கொண்டு விளங்குகின்ற அழகிய தோரணங்களும் இரத்தின மாடங்களும் ஆகிய வளப்பங்களையுடைய கைலாயத்தையொத்த திருமயிலையென்னுஞ் க்ஷேத்திரத்தைச் சேர்ந்தாள். எ-று. (அ)

வே று.

கண்டனள்களித்தனள்கணிப்பிலற்புதங்
கொண்டனள்சிலிர்த்துமெய்குழைந்துவிம்மினள்
விண்டனள்குமுதவாய்குழறிமென்சொலும்
பண்டனமூர்திகள்படைப்பன்றென்றனள்.

(இ-ள்.) அந்தத் தலத்தைக் கண்டு களிப்பையடைந்து அளவில்லாத அற்புதமுங்கொண்டு மெய்சிலிர்த்து மனங்குழைந்து பூரித்து செவ்வல்லிமலர்போன்ற திருவாய் மலர்ந்து மொழிகளுந் தடுமாறி இந்தத்தலம் பழை

மையாகிய அன்னவாகனமுள்ள பிர்மதேவர்களுடைய சிருஷ்டியில் அடங்கின தல்லவென்று தன்மனதில் நினைத்தனள். எ-று. (கூ)

இத்தலஞ்சிவமயமென்னலாமென
வித்தலங்கயிலையென்றிசைக்கலாமென
வத்தனன்றியம்பியவதிசயம்பட
வொத்திருந்ததுவெனவுமைசொற்றுளரோ.

(இ-ள்.) திருமயிலை என்னும் இந்தத்தலம் சிவமயமாகுமென்றும் இந்தத்தலத்தைக் கைலாயகிரியெனச் சொல்லலாமென்றும் சிவபிரான் கைலாயத்தில் திருவாய்மலர்ந்தருளிய அதிசயமெல்லாம் இருக்கும்படி ஒத்திருந்ததென்று பார்வதிதேவியார் திருவாய்மலர்ந்தருளினார். எ-று. (கo)

தண்ணுலாஞ்சரோருகத்தடங்கள்சூழ்ந்தநீர்
விண்ணுலாமலர்த்தருமிடைந்தசந்ததம்
பண்ணுலாமொழிக்குயிற்பந்திசூழ்பொழி
லெண்ணிலாவளங்களோடிருந்ததனோக்கினள்.

(இ-ள்.) குளிர்ச்சிபொருந்திய தாமரைத்தடாகத்தி னிறைந்த நீரும் மலர்நிறைந்து ஆகாயத்தையளாவிய விருக்ஷங்களும் இசைபோல மொழியினையுடைய குயிற்கூட்டம் எப்போதும் சூழ்ந்திருக்குஞ்சோலைகளும் அளவில்லாதவளப்பத்துடன் இருப்பதைநோக்கினள். எ-று. (கக)

வே று.

தங்குமாவணமேற்றலைகீழுறத்
துங்கமாதளையின்கனிதூங்குதல்
மங்கைமார்முலைபோலவனப்புறச்
செங்குடந்தவஞ்செய்வதுபோலுமே.

(இ-ள்.) பொருந்திய பின்புறம்மேலிருக்கவும் தலைகீழே பொருந்தியிருக்கவும் நல்லமாதளையின்பழம் தொங்குதல் மங்கைப்பருவமுள்ள மாதர்களுடைய தனங்கள்போல அழகினைப் பொருந்தும்படி செவ்விய குடங்கள் தவஞ்செய்வது போன்றிருந்தன. எ-று. (கஉ)

மாண்டசெங்கனிவாழைவளைந்தன
கூண்டமள்ளரிப்பூமியைக்கொத்தியே
தீண்டறங்கள்பொருட்டெனத்திரமாய்
நீண்டகையுறைநீட்டுவபோலுமே.

(இ-ள்.) மாட்சிமைதங்கிய கனிந்தபழங்களையுடைய வாழைக்குலைகள் வளைந்திருப்பவை தொழிலைப்பொருந்திய மள்ளர்கள் இந்தப்பூமியைக் கொத்திவெட்டுதல் தங்களைப்பொருட்டென்றே கருதித்தீரத்துடன் பெரிய ஒரு கையுறையாகக் கொடுத்தல்போலிருக்கின்றது. எ-று. (கங)

வே று.

கதிர்ச்சுமைகனத்தசாலிகழுத்துறவளைந்தநீரின்
முதிர்ச்சியாயினமோவென்றுபார்த்திடுமுறைமைபோலு [ல்
மெதிர்த்தசெங்கழுநீர்ப்போதையிறைஞ்சி மோந்தசையுஞ்செந்நெ
மதுக்களைநுகர்துதாமுஞ்சுழன்றிடும்வளமைபோலும்.

(இ-ள்.) கதிர்களின்கூட்டம் கனத்திருக்கும் சம்பாப்பயிர்கள் கழுத்து வளைந்திருப்பவை இந்தநீரினாலேதான் நாம்முதிர்ந்தனமோவென்று பார்க்குந் தன்மையைப்போலிருக்கின்றன தன்னெதிரிலிருக்குஞ் செங்கழுநீர் மலரை வணங்கி மோர்ந்து அசையுஞ் செந்நெல்லானது அம்மலரின்தேன்களை உண்டு அம்மயக்கத்தினால் தாமுஞ் சுழலுந் தன்மையையொத் திருந்தன. எ-று. (கச)

பயிரடர்பழனந்தோறுஞ்செறிபுனற்பரப்பினூடுங்
கயிரவக்கொடியிற்காலாலசையுண்டகமலராசி
யயிர்கொழித்துலவுபாலியாற்றினிற்குளிர்ச்சியாலே
மயிர்களும்பொடித்துமெய்யுநடுக்குறும்வளமைகாட்டும்.

(இ-ள்.) நெற்பயிர்கள் நிறைந்துள்ள கழனிகள்தோறும் நிறைந்த நீர்ப் பரப்புகள்தோறும் அல்லிக்கொடிகளின் காற்றால் அசைகின்ற தாமரைக்கூட்டம் நுண்மணலைக் கொழித்துக்கொண்டு செல்கின்ற பாலாற்றினது குளிர்ச்சியினாலே ரோமங்களுஞ்சிலிர்த்து நடுங்குகின்ற தன்மையைக்காட்டும். எ-று. (கரு)

வே று.

காருறுநெய்தலுங்கமழுங்காவியும்
பாருறுவாவியிற்பற்றிப்பாய்ந்தன
சேர்வுறுமதுகரந்தீண்டினேமென
நீரிடைமூழ்கியநீர்மைபோலுமே.

(இ-ள்.) கருமைநிறம்பொருந்திய நெய்தல்மலர்களும் வாசனைவீசும் செங்கழுநீர்மலர்களும் அந்தத்தலத்திற் பொருந்திய தடங்களிலமைந்து

படர்ந்திருப்பது மதுவையுண்ண நம்மிடத்திற் சேரும்வண்டுகளைத் தீண்டிக்கொண்டோமென்றுகருதி நீரில்ஸ்நானஞ்செய்கின்ற தன்மையை யொத்திருந்தன. எ-று. (கசு)

கண்ணிறைந்தரும்பவிழ்கமலப்போதினை
வண்ணமெல்லிசைபலவண்டுசூழ்தரு
லெண்ணுறுதிருமகளிருக்குமில்லெனப்
பண்ணியுகின்னரர்பாடல்போலுமே.

(இ-ள்.) தேனிறைந்து அரும்புகளவிழ்ந்த தாமரைமலர்களைப் பலவண்ணமுடையதுகளாய் மிருதுவான இசைபாடுகின்ற பல வண்டுகள் சூழுதல் யாவருந் தியானிக்கத்தக்க திருமகளானவள் வீற்றிருக்கும் ஆலயமென்று கருதிப் பண்தன்மையை யுணர்ந்த கின்னரர் இசைபாடுதல்போலிருக்கின்றன. எ-று. (கஎ)

முட்டியதாமரைமுகஞ்சுருங்கவே
கட்டியமுகையினிலிருக்குங்காரளி
வட்டவெண்மதியதில்மணங்கொளாததி
னிட்டமுத்திரையெனவிரவிற்றோன்றுமே.

(இ-ள்.) பொருந்திய தாமரைமலர்கள் முகங்குவிந்த வளவில் கட்டுபட்ட யிதழ்களையுடைய அரும்புகளினிடத்திலிருக்குங் கரியவண்டுகள் வட்டமாகிய சந்திரன் அந்த அரும்புகளில் நிறைந்துள்ள வாசனையை அபகரித்துக்கொள்ளாதவண்ணம் அதில் முத்திரையிட்டு வைத்தல்போல் இராத்திரியிலிருந்தன. எ-று. (கஅ)

தெளிந்தநீர்வயலடர்செந்நெலிற்களை
களைந்தெறிகாவிகள்கரும்பிற்சேர்ந்திட
லுளங்கவர்வேனில்வேளுலகினைப்பொர
வளைந்தவிற்செறிமலர்வாளிபோலுமே.

(இ-ள்.) தெளிந்த நீருள்ள கழனிகளில் நெருங்கிய சம்பாப்பயிர்களில் களைப்பறித்து எறியப்படுகிற நீலோற்பலமலர்கள் கரும்பினிடத்திற் பொருந்தியிருத்தல் காமிகளுடைய மனதைத் தன்வயப்படுத்திக்கொள்ளும் மன்மதனானவன் உலகத்திற் போர்செய்ய வளைந்த கரும்பு வில்லினிடத்தில் பொருந்திய நீலோற்பலமலர்ப் பாணம்போ லிருக்கின்றன. எ-று. (கசு)

வேறு.

விட்டுமேவிலித்தலத்தையென்னிருவினைவிலக்கி
யிட்டதாமெனவளைந்துமாமணிமதிலிலங்கும்
வட்டவார்கடலெனவதிலகழியைமதித்துக்
கிட்டிநீருணும்புயலெனக்களிற்றினங்கெழுமும்.

(இ-ள்.) பாசபந்தங்களைவிட்டு நீங்கி இத்தலத்தைச் சேரில் என்னுடைய நல்வினை தீவினைகள் ஒழிந்துவிட்டதாமென்றுமணிகள் பதித்துள்ள மதில்கள் பிரகாசித்துக்கொண்டிருக்கும் வட்டமாய் நீண்டிராநின்றசமுத்திரமென அதைச் சூழ்ந்த அகழியைமதித்து அதைச் சேர்ந்து நீருண்ணும் மேகம்போல் யானைகள் பொருந்தியிருக்கும். எ-று. (உo)

அகழிசூழ்மதிலமரர்நாடணைந்திடவகழி
புகரிலாப்பெரும்பாதலம்புகுதுவான்போந்து
ககனகேதுவுமநந்தனுங்குறுகிடக்கண்டு
சகுனமன்றெனவிடையிலேநின்றபோற்றயங்கும்

(இ-ள்.) அகழி சூழ்ந்த அம் மதிலானதுதேவருலகத்திற்செல்லவேண்டுமென்று மேலோங்கிட அகழியானது குற்றமில்லாத பாதாளலோகத்திற் போகவேண்டுமென்று நினைத்துச்செல்ல ஆகாயத்திற் சஞ்சரிக்கும் கேதுவென்னும் சர்ப்பமும் பாதாளத்திற் சஞ்சரிக்கும் ஆதிசேடனென்னும் சர்ப்பமும் எதிர்ப்படக் கண்டு, இது நல்ல சகுனமல்லவென்று அந்தமட்டில் நின்றுவிட்டதுபோற் பிரகாசித்துக்கொண்டிருக்கும். எ-று. (உக)

வேறு.

பொற்புறுமந்நகர்ப்புறத்தின்மேயசீ
ரற்புதங்களையறிந்தவனிமீதுறப்
பற்பலமுறையவண்பணிந்துபோந்தனள்
கற்பகக்கொழுந்தனுள்கமலத்தாள்களால்.

(இ-ள்.) இவ்வாறு பலவித அழகுள்ள அந்தத் தலத்திற்பொருந்திய சிறப்புள்ள அற்புதங்களையெல்லாங் கண்டு தேரைவிட்டு பூமியில் அஷ்டாங்கமும்பொருந்த அங்கு பலபலமுறை பணிந்து கற்பகக்கொழுந்தினையொத்த பார்வதிதேவியார் தம்முடைய செந்தாமரைமலர்போன்ற திருவடிகளால் நடந்து அந்தத் தலத்தைச் சேர்ந்தாள். எ-று. (உஉ)

இங்குமிந்நகரொழிலெல்லவையுமோர்ந்தன
மங்குமும்பரினெழிலாய்குவம்மெனப்
பொங்கும்விண்பதவியிற்போய்காட்சிபோல்
றங்குகோபுரம்பலதழுவக்கண்டனள்.

(இ-ள்.) இவ்வுலகத்திலும் இந்நகரத்தினுடைய அழகினையெல்லாம் பார்த்தறிந்தோம். ஆகாயத்திலிருக்கும் தேவருலகத்தினுடைய அழகினையும் பார்த்து அறிவோமென்று வளப்பமிகுந்த சொர்க்கலோகத்தில் சென்ற காட்சிபோல நிலையாகிய பலகோபுரங்கள் ஆகாயத்தினளவும் உயர்ந்திருப்பதைப் பார்வதிதேவியார் பார்த்தனள். எ-று. (உ௩)

வே று.

மணிவெயில்கொழிக்குமாடமாளிகைகளின்குழாமு
மணியணியாகக்கோடித்தமர்நிலைத்தேர்க்குழாமும்
பணியவந்தும்பர்நீத்தபன்மணித்தேர்க்குழாமு
நணியிவையின்னதென்றேநவிலருமறுகிற்சென்றாள்.

(இ-ள்,) இரத்தினங்கள் பிரகாசத்தை வீசுகின்ற மாடமாளிகைக்கூட்டமும் வரிசைவரிசையாக அலங்கரித்து அந்த மாளிகைகளினெதிரில் வைத்திருக்கிற நிலைத்தேர்களின் கூட்டமும் கபாலிநாதரைப்பணியும் பொருட்டுவந்து தேவர்கள் அங்கு விட்டிருக்கிறபல இரத்தினங்கள் பதித்திருக்கும் தேர்க்கூட்டமும் பொருந்தி இவைக ளின்னவைகளென்று சொல்லுதற்கரிய திருவீதியில் நடந்தாள். எ-று. (உச)

வே று.

வச்சிரத்தினலடுக்கியகனகவான்மதிலி
னுச்சிமேற்செறிவிளக்கின்மேன்முழுமதியுலாவ
வச்சுடர்த்தலையெழுதருபுகையினலடைந்த
கச்சளத்தினைக்களங்கெனப்பகருவார்கலையோர்.

(இ-ள்.) வச்சிரமணியா லடுக்கப்பட்டிருக்கிற பொன்னலாகிய உயர்ந்த மதிலின் உச்சியின்மேற் பொருந்திய தீபங்களின்மேல் பூரணசந்திரன் சஞ்சரித்துக்கொண்டிருக்க அத்தீபங்களின் சிகையினின்றுமெழுகின்ற புகையினல் அடைந்த கருமைநிறத்தைக் களங்கமென்று நூலுணர்ந்தோர் சொல்லுவார்கள். எ-று. (உ௫)

வேறு.

மந்தரகிரிப்புயமன்னர்வீதியிற்
சந்தனமுறிகளாற்சமைத்ததோரணங்
கந்தடர்களிற்றினைக்கரியமேகமென்
றிந்திரதனுவளைத்தல்போலுமே.

(இ-ள்.) மந்தரகிரியையொத்த புசங்களையுடைய அரசர்வீதியில் சந்தனக்கொழுந்துகளாலே அமைத்திருக்கிற தோரணங்கள். கட்டுத்தறிகளைமுறிகின்ற யானைகளைக் கருமைநிறமுள்ள மேகமென்றுகருதி இந்திரவில்லானது வளைத்திருப்பதுபோ லிருக்கும். எ-று. அரசர்வீதிகளில் சதா யானைகள் உலாவிக்கொண்டிருப்பதனாலும் அவைகள் ஆகாயத்தை யளாவ உயர்ந்திருப்பதனாலும் சந்தனத் தழைகளாலாயதோரணமும் அதியுன்னதமா யிருத்தலினும் யானைகளாகிய மேகத்தைச் சந்தனத் தழைகளாகிய இந்திரவில் வளைத்துக்கொண் டிருப்பதுபோ லென்றார். (உசு)

உவாமதிமுகத்தியருலவும்வாயிலிற்
குவாலெனவரம்பையின்குலத்தைக்கட்டுதல்
கவானெழிற்றிருடியகள்ளராமெனத்
தவாதுறப்பிணித்திடுந்தன்மைபோலுமே.

(இ-ள்.) பூரண சந்திரனையொத்த முகமுள்ள மாதர்கள் சஞ்சரிக்கும் வீட்டு வாயில்கள்தோறும் கூட்டமாக வாழைமரங்களைக் கட்டுவித்தல் அந்த மாதருடைய தொடைகளின் அழகினைத் திருடிக்கொண்டவர்க ளென்று அங்கு நீங்காமல் கட்டிவைத்திருக்கிற தன்மைபோ லிருக்கின்றன. எ-று.

மோகனஞ்சுளிகைநேர்முறுவல்வெண்மையும்
பாகமுதொழுகியபவளச்செம்மையு
மாகயற்கருமையும்வானவில்லிடத்
தோகையர்முலைநிகர்சூதமாடுவார்.

(இ-ள்.) யாவரையும் பிரமிக்கச்செய்யும் சூளிகையின் நேரிலே அந்த மாதர்களுடைய தந்தங்களின் வெண்மைநிறமும் அமுதக் குழம்பு ஒழுகிய பவளம்போன்ற அவர்கள் அதரங்களின் செம்மைநிறமும் பெரிய சேற்கெண்டையையொத்த அம்மாதர் கண்களின் கருமைநிறமுஞ் சேர்ந்து வானவில்லிடும்படி மாதர்கள் அந்தச் சூளிகைக்கு ளிருந்து தங்கள் தனங்களையொத்த சொக்கட்டானடுவார்கள். எ-று சூளிகையென்பது, ஒருவகை

மண்டபம். சூளிகையெனற்பாலது சுளிகையெனக் குறைந்துநின்றது. வானவில்லிட என்றதனால் வெண்மை - செம்மை - கருமை ஆகிய மூன்றுநிறமும் பூமியிற் படிதலால் அந்நிறங்களின் தோற்றத்தையே சொக்கட்டான் பையாகக்கொண்டு ஆடுவார்கள் என்று பொருள்கொள்க. (உஅ)

அண்டருமரகதவரமியத்துறை
யொண்டொடியவர்கரத்துலவுமம்மனை
முண்டகவாவியின்முளரிப்போதிடை
வண்டினம்விழுந்தெழும்வளமைகாட்டுமே.

(இ-ள்.) கிடைப்பதற்கரிய மரகதரத்தினங்கள் பதித்துள்ள நிலாமுற்றத்தில் பொருந்தியிருக்கின்ற மாதர்களுடைய கைகளினிடத்திருந்து மேலேபோவதுங் கீழே வருவதுமாகிய அம்மனைகள் தாமரைத்தடாகங்களில் மலர்ந்திருக்கிற செந்தாமரை மலர்களில் வண்டினங்கள் படிந்து மீட்டும் மேலே எழுகிற வளப்பத்தைக் காட்டும். எ-று. நிலாமுற்றமென்பது, மேல் மாளிகையில் உலாவும்படியாய் வெளியாயிருக்குமிடம். அம்மனை வண்டினம்போ லிருக்கின்றதெனக் கூட்டிக்கொள்க. (உகூ)

விரிந்தசந்திரச்சிலைமிடைந்தமாளிகை
பொருந்தியநிலவினாற்புனலிறைத்திடல்
வருந்துவர்பிரிந்தவர்மதியினாலெனக்
கரைந்துளமுருகியேகலுழ்தல்போலுமே.

(இ-ள்.) பரந்த சந்திரகாந்தக்கற்கள் நெருங்கிய உப்பரிகைகள் ஆகாயத்திற் பொருந்திய சந்திரனாலே நீரைச்சிந்துதல் தத்தங்கணவர்களைப் பிரிந்த மாதர்கள் இந்தச் சந்திரனாலே வருந்துவார்களேயென்று நினைத்து மனங் கரைந்துருகி அழுவதுபோலு மிருக்கின்றது. எ-று. (கூ0)

அளிக்குலமடந்தையரங்கைமேவிய
கிளிக்குலந்தமதெழில்கிளர்ந்துதோன்றிய
பளிக்கறைநிழலினைப்பஞ்சரத்தைவிட்
டொளித்திடும்பேடையென்றாடிமீளுமே

(இ-ள்.) கிருபையுள்ள குலமாதர்களுடைய அழகிய கையினிடத்துப் பொருந்திய கிளிப்பிள்ளைகள் தம்முடைய அழகுவிளங்கித் தோன்றுகிற பளிக்கறையின் நிழலைக்கண்டு கூட்டினைவிட்டு ஒளித்துக்கொண்ட பெட்டையென்று கருதிப் பிணங்கிப்போய்ப் பார்த்துத் திரும்பிவிடும். (கூக)

விருப்புடைமடந்தையர்விளங்குங்கொங்கையிற்
பொருப்பெனுந்தோளினர்புழுகைவீசுதல்
கருப்புவில்லெடுப்பவன்காமசிந்தூர
மருப்பிடையிழிந்திடுமெதங்கள்போலுமே.

(இ-ள்.) விருப்பமுள்ள மாதர்களுடைய பிரகாசிக்குந் தனங்களிடத்தில் மலையென்று சொல்லத்தக்க தோள்களையுடைய அவர்கள் கணவர்கள் புழுகினைச் சிந்துதல் கரும்புவில்லேந்திய மன்மதனுடைய காமயானையின் கொம்பினிடத்தி லிழிகின்ற மதநீர்போ லிருக்கின்றது. (௬௨)

தாமரைக்கிருட்டும்வான்சசிக்குவெண்பக
லாமலர்முகத்திபரளகபந்தியின்
மாமதுகரத்தொலிவளையின்பேரொலி
காமருசிலம்பொலிகடலின்மிக்கதே.

(இ-ள்.) தாமரைமலருக்கு இருளும் விண்ணில் விளங்குஞ் சந்திரனுக்குவெள்ளிய பகலும்போலிருக்கிற மலர்போன்றமுகத்து மாதர்களுடைய அளகபாரத்தினிடத்திற் சூழ்ந்திருக்கும் பெரிய வண்டுகளின் ஓசையும் அழகுபொருந்திய பாதச்சிலம்பினோசையும் சமுத்திர ஓசையினும் அதிகரிக்கின்றது. எ-று. (௬௩)

கோதையரிப்படிகுலவும்வீதியும்
வேதியர்வீதியும்வேந்தர்வீதியு
மர்தியவணிகர்வேளாளர்வீதியுங்
காதலின்மிகுதியாற்கண்டுவந்தனள்.

(இ-ள்.) இவ்வண்ணம் மாதர்கள் விளையாடிக்கொண்டிருக்குஞ் சிறப்புள்ள வீதிகளையும் பிராமணர்கள் வீதிகளையும் அரசர் வீதிகளையும் இதுமுதலாகிய வைசியர் வீதிகளையும் வேளாளர் வீதிகளையும் மிகுந்த விருப்பத்தினால் பார்த்துச் சந்தோஷித்தாள். எ-று. (௬௪)

வேறு.

துன்றுபூங்குழன்மடந்தைதோகைமாமயிலதாகி
வென்றுதீவினையைமாற்றும்விமலனாலயத்தின்மேருக்
குன்றெனவுயர்ந்தசெம்பொற்கோபுரவாயின்முன்பு
சென்றுதாழ்ந்தெழுந்துபோற்றித்திருவுளங்களிக்கின்றாள்.

(இ-ள்.) நெருங்கிய மலர்களணிந்த அளகபாரத்தையுடைய பார்வதி தேவியார் பெரிய தோகையையுடைய மயிலுருவங்கொண்டு தீவினைகளை வென்று ஒழிக்கத்தக்க கபாலிநாதர் வீற்றிருந்தருளும் ஆலயத்தில் மகாமேருபோல உயர்ந்த செம்பொன்னாலாகிய கோபுரவாயிலின் முன்புசென்று பணிந்தெழுந்து துதிசெய்து திருவுளக் களிப்படையும்படி நின்றனள். எ-று. (கூ)

சோதிமாமணியாற்பொன்னாற்சோமகாந்தத்தாற்கண்ட
பூதநாயகன்றன்கோயிற்பொருவிலாவளங்கண்முற்றுந்
தாதுலாங்கூந்தற்செவ்வாய்த்தழைமயின்மடந்தைபார்த்துக்
காதலாற்கபாலிதீர்த்தக்கங்கைகயங்கரைகண்டுற்றாள்.

(இ-ள்.) பிரகாசமுள்ள பெரிய இரத்தினங்களினாலும் பொன்னினாலுஞ் சந்திரகாந்தக் கற்களினாலுஞ் செய்தமைக்கப்பட்ட கபாலிநாதருடைய ஆலயத்தின் ஒப்பில்லாத வளங்களையெல்லாம் மகரந்தங்கள் பொருந்திய அளகபாரமுஞ் சிவந்த வாயினையும் பொருந்திய மயில்போலும் பார்வதிதேவியார் கண்டு பெருவிருப்பத்துடன் கபாலி தீர்த்தமாகிய சிவகங்கையின் கரையைக் கண்டு அங்கடைந்தாள். எ-று. (கூசு)

மேயவத்தடத்தின்சீர்த்திவிளங்குநான்மறைகளாய்ந்த
தூயநான்முகர்தம்மாலுந்தொடுத்திடவரிதேயாகு
மாயன்மாமலரின்மேலோன்வாசவன்விண்ணோரேனோர்
நேயமோடாடிச்செல்வர்நிரந்தரமகிழ்ந்துசூழ்ந்தே.

(இ-ள்.) பொருந்திய அந்தத் தீர்த்தத்தின் பெருமையை விளக்குகின்ற நான்கு வேதங்களு முணர்ந்த பரிசுத்தமாகிய பிரமதேவர்களாலுஞ் சொல்லுதற் கரிதாகும் மகாவிஷ்ணு பிரமதேவன் தேவேந்திரன் தேவர்கள் மற்றுமுள்ள யாவர்களும் அன்புடன் மகிழ்ந்து சூழ்ந்து ஸ்நானஞ்செய்து செல்வார்கள். எ-று. (கூஎ)

நற்பலதருக்களுய்த்துநறவினாற்சேந்துமுற்றும்
பற்பலசுகங்களன்னப்பந்திபங்கயங்கள்சேர்தல்
கற்புறுதடமென்பேதைகைவலானெழுதித்தீர்ந்த
பொற்படாம்விரித்துச்சாத்தும்பொற்பினைநிகர்க்குமம்மா.

(இ-ள்.) பலவாகிய நல்லதருக்களைப்பொருந்தி முழுவதுந் தேனினாற் சிவந்து பலபல நிறமுள்ள கிள்ளைகளும் அன்னக்கூட்டமும் தாமரைமலர்க

னுஞ் சேர்ந்திருப்பது கற்பினைப்பொருந்திய தடாகமாகிய மாதானவள் சித்திரத்தொழிலில்வல்ல ஒருவனால் எழுதித்தொழில்முற்றிய அழகுள்ளபோர்வையை விரித்துச் சாத்துமழகினை யொப்பாகும். எ-று. (கஅ)

அண்ணறன்ஞானரூபமாயமர்தடாகமுற்றும்
வண்ணவான்கமலப்பன்னமறைதறநிறையுங்காட்சி
கண்ணுதல்காதல்கூரக்கவுரிபோற்றடம்பண்டாந்தன்
வெண்ணிறமறைத்துப்பச்சைமேனிகொண்டுறைதல்போலும்.

(இ-ள்.) சிவபிரானுடைய ஞானசொரூபமாய்ப் பொருந்திய வெண்மைநிறமுள்ள அந்தத்தடாக முழுவதும் அழகுஞ் சிறப்புமுள்ள தாமரையிலைகள் அந்நீர் மறையும்படி நிறைந்திருக்குங் காட்சியானது சிவபிரான் தன்னிடத்திற் களிகூரும்படி பார்வதியார்போல அந்தத்தடாகம் முன் தான்பொருந்தியிருந்த வெண்மை நிறத்தை மறைத்துப் பசியமேனிகொண்டுறைவதுபோ லிருக்கின்றது. எ-று. (கக)

விரவுசெங்கமலஞ்சேல்கள்விட்டபாசடைமேல்வீழ்தல்
வரமருளுமைவந்துற்றமகிழ்ச்சியாற்றடமென்பேதை
தரளமும்பரப்பிகாப்பண்டமுன்மணியமைத்தென்றாழா
மரகதத்தட்டிலேந்திவந்திடுஞ்செயலைமானும்.

(இ-ள்.) பொருந்திய செந்தாமரைமலர்களும் சேல்மீன்கள்விட்ட பச்சிலைமேற் பொருந்தியிருத்தல் அடியார்க்கு வரமருளுகின்ற பார்வதிதேவியார் தன்னிடத்துக்கு வந்துசேர்ந்த மகிழ்ச்சியினாலே தடாகமாகிய மாதானவள் முத்துகளையும் பரப்பி மத்தியில் மாணிக்கத்தை வைத்து சூரியன்போன்ற நிறமுள்ள மரகதத்தட்டி லேந்திக்கொண்டு வருகின்ற தன்மையையொப்பாகும், எ-று. (உ0)

வாய்ந்தசேற்குழுக்கள்துள்ளிமாங்கனிசிதறிவிண்போய்ப்
பாய்ந்துபாய்ந்துக்கவந்துபடிந்துபுற்புதங்கடோன்றல்
சாந்தமாமுலைமெய்ஞ்ஞானத்தையலைக்காண்டலாலே
பூந்தடமடந்தையங்கம்புளகமுற்றிடுதல்போலும்.

(இ-ள்.) நீரிற்பொருந்திய சேல்மீன் கூட்டந் துள்ளி மாங்களிகளைச் சிதறிவிட்டு ஆகாயத்திற்போய் மீட்டும் பலதரம் வந்து பாய்ந்து பாய்ந்து உதிர்ப்பதினாலே அந்தப் பழங்கள் நீரிலேவிழுந்து குமிழிகள் தோன்றுதல் சந்தனமணிந்த திருத்தனபாரங்களையுடைய மெய்ஞ்ஞானமாகிய திருமே

ணியுள்ள பார்வதிதேவியாரைக் கண்ட சந்தோஷத்தினாலே அந்தத் தடாக மென்கிற பெண்ணானவள் உடல்முழுவதும் புளகமடைந்ததுபோ லிருக்கி ன்றது. எ-று. (சக)

படரொளிபளிங்காற்கண்டபடிகளுங்கோடுஞ்சேர்ந்தே
கடிமலர்ப்புன்னைகொன்றைகைதைமற்றுளவுஞ்சூழ்ந்தே
புடைதொறும்விளங்குமந்தப்பூந்தடவளமிதெல்லா
மடமயினோக்கிநோக்கிமகிழ்ச்சியங்கடன்முன்றோய்ந்தாள்

(இ-ள்.) ஒளிபரந்த பளிங்கினாற் கட்டப்பட்ட படிகளும் கரையுஞ் சேர்ந்து வாசனைபொருந்திய மலர்களையுடைய புன்னைமரங்களும் கொன்றை மரங்களும் தாழைமரங்களு மற்றுள்ள விருட்சங்களுஞ் சூழ்ந்து பக்கங்களெல்லாம் விளங்கிக்கொண் டிராநின்ற அந்தக் கபாலி தீர்த்தத்தின் வளப்பங்களையெல்லாம் பார்வதிதேவியார் பார்த்துப் பார்த்துச் சந்தோஷமாகிய சமுத்திரத்தில் முன்னே மூழ்கினாள். எ-று. (சஉ)

கங்கைமாநதிமுன்னாகக்கண்டுதீர்த்தங்களெல்லா
மிங்ஙனம்வருகவென்றேயிமயமானுள்ளமுன்னச்
சங்கையில்சத்திநோக்குமுன்னரோநாட்சார்ந்தம்பொற்
பொங்குதீர்த்தங்களெல்லாம்புகுந்தகாபாலிதீர்த்தம்.

(இ-ள்.) பார்வதிதேவியார் பெருமைபொருந்திய கங்காநதியானது முன்னம் வரும்படி திருவுளஞ்செய்து பின்னு மிவ்வுலகத்திலிருக்குந் தீர்த்தங்களெல்லாம் இந்தத் தடாகத்தில் வந்து சேரக்கடவனவென்று திருவுளத்திற் சிந்திக்க அந்தப் பராசத்தி நோக்குதற்கு முன்போல வினையுடைய தீர்த்தங்களெல்லாம் நன்முகூர்த்தங்கொண்டு அந்தக் கபாலி தீர்த்தத்தில் வந்து சேர்ந்தன. எ-று. (சங)

அப்பொழுதிமயமீன்றவணிமயிறடத்திற்புக்கங்
கொப்பிலாப்புனலிற்றோய்ந்தங்குவப்புடனெழுந்துமன்னு
மிப்புவனத்துளோர்கள்யாவருமுய்யஞான
மெய்ப்படுமயிலாயம்மைவிரைவொடுதீரஞ்சேர்ந்தாள்.

(இ-ள்.) அந்தத் தீர்த்தங்களெல்லாம் வந்து சேர்ந்தவுடன் பார்வதி தேவியார் கபாலிதடாகத்திற் சேர்ந்து ஒப்பில்லாத அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து களிப்புடனெழுந்து நிலைபெற்ற இவ்வுலகத்திலிருப்பவர்கள் யாவரும் உய்யும்வண்ணம் ஞானசொரூபமாய் மயிலுருவம்பெற்ற நம்முடையதாய் சீக்கிரத்தில் கரையினிடத்தில் வந்துசேர்ந்தாள். எ-று, (சச)

ஆர்த்தருணிறைகட்டோகையணிசிறகுலர்த்திநின்று
போர்த்தினள்தாய்வெண்ணீற்றைப்பெருகியவங்கமெங்கும்
போர்த்தனணியமமுற்றும்புரிந்தனளிருந்துபொங்குஞ்
சீர்ப்பொலிசெம்பொற்சோதிதிகழ்தருகோட்டின்மாதோ.

(இ-ள்.) பொருந்திய அருள் நிறைந்த திரு நோக்கங்களை யுடைய மயிலுருவமாகிய பார்வதிதேவியார் - மிகுந்த புகழ் விளங்காநின்ற செம்பொற்சோதியுள்ள கரையினிடத்தில்வந்திருந்துகொண்டு, சிறகையுலர்த்தி ஈரத்தைப்போக்கி, பரிசுத்தமாகிய விபூதியினால் அழகுமிகுந்த தன் திருமேனி முழுவதும் பூசிக்கொண்டு நித்திய கருமானுஷ்டானங்களை நிறைவேற்றினார்.—எ-று. (சரு)

முற்றியபின்னரேகிமுருகுலாவருசெங்காவி
பற்றியோராயிரம்பின்பங்கயமலர்முன்னாகச்
சொற்றருமலர்களெல்லாந்துகளறக்கொய்துதாங்கி
நற்றிருமஞ்சனந்தாய்நறுங்கனிகளுங்கொண்டேகி.

(இ-ள்.) நித்திய கருமானுஷ்டானங்களை நிறைவேற்றிக்கொண்டுசென்று, வாசனைதங்கிய ஆயிரஞ் செங்கழுநீர்ப்புட்பங்களும், பின்பு தாமரை மலர்கள் முதலாகிய அருச்சனைக்குத் தகுதியுள்ளதென்று சொல்லப்பட்ட மற்றுள்ள மலர்களையும் பழுதறக்கொய்து ஏந்திக்கொண்டு, நல்ல திருமஞ்சனநீரும் மதுரமுள்ள பழவருக்கங்களுஞ் சேகரித்துக்கொண்டு சென்று.—எ-று. (சசு)

பொன்னணிக்கோயில்புக்குப்புன்னையங்கானத்தண்ணல்
சந்நிதிமுன்னரெல்லாந்தகைந்திடவமைத்தபின்ன
ருன்னுநற்றுவாரபூசையுடன்பரிவாரபூசை
முன்னுளகிரியையெல்லாமுடித்தனள்விரித்தவாற்றான்.

(இ-ள்.) பொன்னினாற் செய்யப்பட்டிருக்கும் ஆலயத்துக்குள் எழுந்தருளி, அழகுள்ள புன்னைவனத்திலிருக்குங் கபாலீசன் சந்நிதியினிட மெங்குந் தான் சுத்திசெய்தபின்பு, கருதுகின்ற நல்ல துவாரபூசையுடனே பரிவார பூசைமுதலிய கிரியைகளையெல்லாம் ஆகமத்திலே சொல்லியிருக்கிற முறைமைப்படி நிறைவேற்றினார்.—எ-று. (சஎ)

பரசிவனருண்மெய்ஞ்ஞானபண்டிதன்றனக்குப்பூசை
யுருகியங்கமைத்தமுன்னமுற்றமாலியபக்கந்தான்
மருவுபாறயிர்நெய்தேன்முன்மற்றுளவாசம்யாவுங்
கனிவுடனேந்தியோதிக்காதலோடாட்டியாட்டி.

கடு

(இ-ள்.) பார்வதியார் கிருபைமிகுந்த ஞானபண்டிதனாகிய கபாலிநாதனுக்கு, அன்புடன் மனமுருகி பிரதமத்திற்பொருந்திய திருமாலிய சோதனை செய்து, பின்பு மதுரமுள்ள பால் தயிர் நெய் தேன்முதலாக மற்றுமுள்ள வாசனைத் திரவியங்களெல்லாம் அன்புடன் ஏந்திக்கொண்டு, மந்திரங்களைச்சொல்லி விருப்பத்துடன் அந்தத் திரவியங்களெல்லாந் தனித்தனியாய் அபிஷேகஞ் செய்து வைத்தார்.—எ-று. (சஅ)

சங்கரியாட்டிமேனிதனிற்புனலீரமாற்றிக்
குங்குமகந்தஞ்சாத்திக்கொங்குலாவருஞ்செங்காவி
பங்கயங்கொழுந்துவேர்சண்பகமலர்பலவுங்கூட்டி
மங்கலமாகச்சேர்த்தவகைவகைத்தொடைகள்சாத்தி.

(இ-ள்.) பார்வதியார் இவ்வண்ணம் அபிஷேகஞ்செய்து, சுவாமியினுடைய திருமேனியிற் படிந்திருக்கும் ஈரத்தைத் திருவொத்தாடைகொண்டு நீக்கி, குங்குமப்பூ சேர்த்த சந்தனமணிந்து, வாசனைபொருந்திய செங்கழுநீர் மலர் தாமரைமலர் மருக்கொழுந்து குறுவேர் சண்பகமலர் இன்னுமுள்ள பல மலர்களையுஞ் சேர்த்து மங்களமாகத் தொடுத்திருக்கிற பலவகையாகிய திருப்பள்ளித்தாமங்களைச்சாத்தி.—எ-று. (சகூ)

வெண்டுகில்விரித்துச்சாத்திவிளங்குபொற்கலன்கள்சாத்திக்
கண்டுடனான்பானெய்முக்கனிகள்சேர்த்தமைந்தவன்ன
மெண்டவிரடைக்காய்தூய்நீரோந்திமுன்னமைத்தென்பூசை
கொண்டருளருளென்றேத்திக்கோங்கலரிறைத்துத்தாழ்ந்தாள்.

(இ-ள்.) வெண் பட்டுவஸ்திரம் விரித்துச் சாத்தி, பிரகாசியாநின்ற இரத்தினங்கள் பதித்துள்ள திருவாபரணங்களு மணிந்து, வெல்லம் பசுவின்பால் நெய் முப்பழங்கள் என்னும் இவைகள் சேர்த் தமைக்கப்பட்டிருக்கிற அன்னம், அளவிடப்படாத புகழ்வாய்ந்த தாம்பூலம் பரிசுத்தமுள்ள நீர் என்னுமிவைகளைத் தாங்கிக்கொண்டுவந்து நிவேதனஞ் செய்வித்து, இறைவனே அடியேன் பூசையை அங்கீகரித்துத் திருவருள் பாலிக்கவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்து துதித்து, வாசனைபொருந்திய புஷ்பாஞ்சலிசெய்து பணிந்தார்.—எ-று. (இ0)

ஆரணமுடிமேல்வாழுமாதியேயமலாபோற்றி
நாரணனயனுந்தேடிநாடரும்பொருளேபோற்றி
காரணப்பொருள்கட்கெல்லாங்காரணமானாய்போற்றி
வாரணமுரித்துப்போர்த்தவள்ளலேபோற்றிபோற்றி.

(இ-ள்.) வேதமுடிவில் வாழ்கின்ற முதல்வனே நிருமலனே போற்றி, விஷ்ணுவும் பிரமதேவனுந் தேடிக்காணுதற்கரிய பொருளேபோற்றி, காரணப் பொருளாயுள்ளவைகட்கெல்லாங் காரணப்பொருளாயிருப்பவனேபோற்றி, யானையையுரித்து அதன் தோலைப் போர்த்துக்கொண்ட வள்ளற்றன்மையையுடையவனே போறறிபோற்றி.—எ-று.

யானையைக்கொன்று ரிஷிகளுக்கெல்லாம் திருவருள் பிரசாதித்தருளியபடியினாலே ஈங்கு வள்ளலென்றார். (ருக)

அடியவர்க்கெளியாய்போற்றியரியயற்கரியாய்போற்றி
கொடியவர்க்கருளாய்போற்றிகுணமுளார்க்கினியாய்போற்றி
கடிமலர்ச்சடையாய்போற்றிகனன்மழுப்படையாய்போற்றி
வடிவெடுத்தொளிர்புன்னாகவனத்தனேபோற்றிபோற்றி.

(இ-ள்.) அடியவர்களுக்கு எளியனேபோற்றி, பிரமாவுக்கும் விஷ்ணுவுக்கும் அரியவனேபோற்றி, தீயர்களுக்குக் கிருபை பாலிக்காதவனே போற்றி, நற்குண நற்செய்கை யுள்ளவர்களுக்குக் கிருபை பாலித்தருள்பவனேபோற்றி, வாசனைபொருந்திய கொன்றைப் பூமாலை யணிந்திருக்குஞ் சடாமகுடமுள்ளவனேபோற்றி, அக்கினிமயமாகிய மழுவாயுத முடையவனேபோற்றி, சுரபுன்னை வனத்திலே சிவலிங்க மூர்த்தங்கொண்டு பிரகாசிப்பவனே போற்றி போற்றி.—எ-று. (ருஉ)

பசுத்துவமழிப்பாய்போற்றிபதித்துவமளிப்பாய்போற்றி
யசுத்துவமிலானேபோற்றியடுக்கல்வில்லானேபோற்றி
விசுத்தமுள்ளானேபோற்றிவிளங்கியேயடியார்நெஞ்சுள்
வசித்தருள்பொழிபுன்னாகவனத்தனேபோற்றிபோற்றி.

(இ-ள்.) அடியவர்களுக்குள்ள சீவத்தன்மையை யொழித்தருள்பவனே போற்றி, அவ்வண்ண மழித்துச் சிவத்தன்மையைப் பிரசாதித் தருள்பவனே போற்றி, அசுத்த மென்பதில்லாமல் பரிசுத்தமா யிருப்பவனேபோற்றி, மகாமேருவாகிய வில்லையுடையவனேபோற்றி, நல்ல சுத்தமுள்ளவனே போற்றி, பக்தி சிரத்தையுடன் விளங்குகின்ற அடியவருள்ளத்தில் வாசமாயிருந்து திருவருளைப் பாலித்தருளும் புன்னாகவனத்தவனே போற்றிபோற்றி.—எ-று. (ருா)

மன்றினுணடிக்குஞானவரதனேபோற்றிவெள்ளிக்
குன்றின்மேல்வளருந்தெய்வக்கோமளக்கொழுந்தேபோற்றி
யென்றெழின்மயிலாள்போற்றியிருகணீர்சொரிவிபாய
நின்றனளங்னன்றேன்றுகின்மலன்செய்கைசொல்வாம்,

(இ-ள்.) சிற்சபையினிடத்துச் சதானந்த நிர்த்தனஞ்செய்யும் ஞானானுக்கிரகம் பிரசாதித்தருள்பவனேபோற்றி, வெள்ளி மலையினிடத்தில் எக்காலமும் ஒரு தன்மையாய் வளருகின்றதெய்வத்தன்மையுள்ள இளங்கொழுந்தேபோற்றி, என்று பலமுறை அழகுள்ள மயில்வடிவு கொண்டிருக்கும் பார்வதி தேவியார் போற்றிசெய்து, இரண்டு கண்களிலிருந்து ஆனந்த பாஷ்பம் பெருகும்படி பரவசமாய் நின்றனர். அப்போது காட்சிகொடுத்தருளும் சிவபிரானுடைய திருவுள்ளச்செயலைச் சொல்லுகின்றோம்.—எ-று. (௫௪)

வெள்ளியங்குன்றின் மீதோர்மேருவெற்புறைதன்மானத்
தெள்ளியவெள்ளேறூர்ந்தேதேவர்கின்னரர்கள்சித்தர்
துள்ளியபூதர்வேதர்சூழ்ந்துசூழ்ந்தார்த்துவாசக்
கள்ளருமலரின்மாரிகரங்களாற்பொழிந்துதாழ.

(இ-ள்.) சுந்தரமுள்ள வெள்ளி மலையினிடத்து ஒரு பொன்மலை யிருப்பதை யொப்பாக, தெளிவுள்ள வெண்மை நிறம்பொருந்திய ரிஷபவாகனத்தின் மீது ஆரோகணித்துக்கொண்டு, தேவர்கள் கின்னரர்கள் சித்தர்கள் துள்ளிய பூதகணங்கள் மகாரிஷிகள் ஒவ்வொரு கூட்டமாகச் சூழ்ந்துகொண்டு ஆரவாரித்து, வாசனையுடைய தேனை இடைவிடாது சொரிகின்ற கற்பகப் புட்பமாரியைக் கைகளாலே பொழிந்து வணங்கவும்.—எ-று. (௫௫)

மன்னியவசுக்கள்வெண்சாமரையெடுத்திரட்டவெங்குந்
துன்னியமுனிவரெல்லாஞ்சுருதிபல்லாண்டுகூறப்
பின்னியகுறுந்தாட்பூதர்பிறங்குபல்லியமுழங்கச்
சென்னியிற்கரங்கள்கூப்பித்திருமகள்கேள்வர்போற்ற.

(இ-ள்.) நிலைபெற்றுள்ள அஷ்டவசுக்கள் வெண்சாமரையெடுத்து வீசவும், எங்குஞ் சூழ்ந்திராநின்ற மகாரிஷிகளெல்லாம் வேதவாக்கியங்களும் பல்லாண்டுகளுஞ்சொல்லவும், ஒன்றோடொன்று பின்னுகின்ற குறுந்தாள்களையுடைய பூதகணங்கள் விளங்குகின்ற பலவாத்தியங்களைமுழக்கவும், திருமகள் கணவர்களாகிய அனந்தம் விஷ்ணுக்கள் சிரசில் கையைக் குவித்து வைத்துக்கொண்டு போற்றிசெய்யவும்.—எ-று.

ஒவ்வொரு அண்டத்திற்கும் ஒவ்வொரு விஷ்ணுவாகப் பல்லாயிரங்கோடி அண்டங்க ளிருப்பதினால் அனந்தம் விஷ்ணுக்களென்று சொல்லப்படுகின்றது, பிரமர்களும் இந்திரர்களும் இவ்வண்ண மிருக்கிறார்கள். (௫௬)

செக்கருமங்குன்றொன்றித்திகழிளம்பிறையுந்தீண்டப்
புக்கவாளரவும்வானம்பொங்குடுக்குழுவும்போல

மிக்கவேணியுஞ்சேயிந்துவிண்டுபேழ்வாயினாலங்
கக்கிடுமரவுநீருங்கடிமலர்க்கணமுந்தோன்ற.

(இ-ள்.) செவ்வண்ணமும் அவ்விடத்திற்றோன்ற விளங்குகின்ற மூன்றாம்பிறையும் அதைத் தீண்டுதற்குவந்த கொடிய கேதுவென்னும் பாம்பும் ஆகாயத்தில் மிகுந்திருக்கும் நக்ஷத்திரக்கூட்டமும்போல - மிகுந்த சடையும் இளம்பிறையும் பெரிய வாயைத்திறந்து விஷத்தைக் கக்கும்படியான சர்ப்பமும் கங்கையாகியநீரும் வாசனைபொருந்திய மலர்க்கூட்டமும்பிரகாசிக்கவும்.-எ-று.

ஒளிதருநுதலினீறுமொண்கனற்கண்ணுமென்றுங்
களிதருமதியுஞ்சேயின்கதிர்க்குழவியும்போற்றோன்ற
வளிதருமுகமுநீலமணிமணிமிடறுஞான
வெளிதரும்பொருளுமாசுமேவுதல்போலத்தோன்ற.

(இ-ள்.) பிரகாசியாநின்ற திருநெற்றியினிடத்தில் விபூதியும் ஒள்ளிய அக்கினிக்கண்ணும்-எப்போதுங் களிப்பினைத்தருகின்ற சந்திரனுஞ் செவ்வாயென்னுங் கிரகத்தின் இளங்குழந்தையும்போலத்தோன்றவும், கிருபையைப் பிரசாதித்தருளுந் திருமுகமும் நீலநிறம்பொருந்திய அழகுள்ள கண்டமும்-ஞானமாகிய வெளியினிடத்துத் தோன்றுகின்ற சிவமும் ஆணவமல இருளுந் தோன்றுதல்போல விளங்கவும்.—எ-று.

நெற்றிக்கண்ணைச் செவ்வாயினிளங்குழந்தையென்றது, இல்பொருளுவமை. செவ்வாய் - சிவப்புநிறம். (௫௮)

விண்புகத்தொனிகள்காட்டிவெருட்டியேயுயிர்கள்வீட்டி
நண்புநீத்தரிணமண்ணிவிரல்களினடுவினிற்றல்
திண்புயவெற்பின்மீதுசிறந்தனைச்சாதித்தேறி
யொண்சடாடவியிற்பாயவுன்னுதல்போலத்தோன்ற.

(இ-ள்) தேவலோகத்திற்கேட்கும்படி ஓசைகளைக் காட்டிக்கொண்டு பயப்படச்செய்து பலவுயிர்களையுங்கொன்று இரக்கமென்பது சற்றேனுமில்லாது வந்த மானனது விரல்களினடுவிற் சேர்ந்திருக்குந் தோற்றமானது-வலிமையுள்ள புஜமென்னும் மலையின்மீது சிறப்பமைந்த யானைத்துதிக்கை துணிவுகொண்டேறி ஒள்ளிய சடைக்காட்டிற் பாயும்படி நினைக்கின்றதுபோலத் தோற்றவும்.—எ-று. (௫௯)

அரவுதாழ்மணியோடுற்றவாமையின்வெரிந்பொன்னோடும்
விரவுதாரகைச்செய்தவெண்டலைகளின்குழாமு

முரமிசைக்கிடத்தன்மிக்கவொளிமணிப்பதக்கமுஞ்சீர்
மருவுதண்பெருகுமுத்துமாலையுமென்னத்தோன்ற.

(இ-ள்.) சர்ப்பங்களும் தாழ்ந்த அக்குமணியோடு சேர்ந்த பொலிவுள்ள ஆமை முதுகோட்டினுடன் கலந்து மாலையாகச்செய்த வெண்டலைக்கூட்டமுந் திருமார்பின் மிசையிருப்பது-மிகுந்த பிரகாசத்தையுடைய ரத்தினப்பதக்கமும் சிறப்பமைந்த குளிர்ச்சி மிகுந்த முத்துமாலையும்போலாகுமென்று தோன்றவும்.

பொங்கொளியரையிலுற்றபொருபுலிச்சருமந்தூய
மங்கலமானபட்டின்வண்கலைபோலத்தோன்றச்
செங்கமலத்தாண்மீதிற்சிறந்தகிண்கிணியினார்ப்பு
மிங்ஙனஞ்சாரின்முத்தியீகுவமெனல்போற்றேன்ற.

(இ-ள்.) ஒளிமிகுந்த திருவரையினிடத்து உடுக்கப்பட்டிருக்கும் போர் செய்யத்தக்க புலியின்தோல் - தூய்மையுடைய மங்கலமாகிய பட்டுவஸ்திரம் போலத்தோன்றவும், செந்தாமரைமலர்போன்ற திருவடிகளிலணிந்திருக்குங் கிண்கிணியின் ஓசையானது-இவ்விடத்தில் வருவீர்களாகில் மோக்ஷங்கொடுப் போமென்று சொல்லுதல்போலத்தோன்றவும்.—எ-று. (சுக)

பொருவின்றித்தருணமாகிப்போற்றினர்க்கின்பநல்குந்
திருவுருவநந்தகோடியருக்கரிற்சிறந்துதோன்ற
வருண்மழைபொழியக்கண்களடியர்பூமழைகள்பெய்யச்
சுருள்கருங்குழலாண்முன்னந்தோன்றினன்கயிலைவேந்தன்.

(இ-ள்.) ஒப்பில்லாமல் எப்போதும் இளமைத்தன்மையுடையதாய்த் துதிப்பவர்களுக்கு இன்பத்தைப் பிரசாதித்தருளுகின்ற திருமேனியானது-அனந்தங்கோடி சூரியர்களைப்போலச் சிறந்துபிரகாசிக்கவும், திருநோக்கங்கள் அருள்மழைபொழியவும், அடியவர்கள் மலர்மழைபெய்யவும், சுருண்டு கருமைநிறமுள்ள அளகபாரத்தையுடைய பார்வதிதேவியாருக்கெதிரில் கயிலாசபதியானவர் காட்சிகொடுத்தருளினார்.—எ-று. (சுஉ)

துங்கவெள்விடையின்மீதிற்சோதிவந்தெழின்மயூர
மங்கைமுன்னின்றகாலைமகிழ்ச்சியங்கடலின்மூழ்கி
யங்கமும்விம்மக்கண்களருண்மழைபொழியச்சம்பு
சங்கராபோற்றிவெள்ளிச்சயிலநாயகனேபோற்றி.

(இ-ள்.) பரிசுத்தமும் வெண்மைநிறமுமுள்ள தருமசொரூபமாகிய ரிஷபவாகனத்தின்மேல் ஆரோகணித்துக்கொண்டு சிவபிரான் எழுந்தருளி, அழகுள்

ள மயில்வடிவமாகிய பார்வதிதேவியாரெதிரில் நின்றருளியகாலத்தில், சந்தோஷமாகிய சமுத்திரத்தில் மூழ்கித் திருமேனி பூரிக்கவும், கண்கள் ஆனந்தபாஷ்பஞ்சொரியவும், சம்புவேபோற்றி சங்கரனேபோற்றி கைலாசபதியே போற்றி.—எ-று. (சஈ)

அந்தனேபோற்றியென்றனமிர்தனேபோற்றியென்று
நித்தனேபோற்றியார்க்குநேயனேபோற்றிஞானப்
பித்தனேபோற்றியான்செய்பிழைபொறுத்தாள்வாய்போற்றி
முத்தனேபோற்றியென்றேமொழிந்துமுன்படிந்துதாழ்ந்தாள்.

(இ-ள்.) அய்யனேபோற்றி, எனக்கமிர்தம்போல்பவனேபோற்றி, எக்காலமு நித்தனுயிருப்பவனேபோற்றி, யாவர்க்கு மன்பனேபோற்றி, ஞானமாகிய பித்தகுணமுள்ளவனே போற்றி, அடியேன்செய்த குற்றத்தைப் பொறுத்தருள்பவனேபோற்றி, முத்தியையுடையவனே போற்றி, என்று விண்ணப்பஞ்செய்து பணிந்து தாழ்ந்தார்.—எ-று.

முத்தனென்பது இயல்பாய் பாசம் நீங்கினவன். (சஎ)

தாழ்ந்தபோதெம்பிரானுந்தனிவிடையிழிந்துதாங்கச்
சூழ்ந்துசூழ்ந்தமரர்போற்றத்தோகையின்சாபநீங்க
வாழ்ந்திருந்தனையோவென்றேவாய்மலர்ந்தருளிப்பின்னு
மாழ்ந்தநின்னுளத்தின்வேண்டுமவைகளேதென்றுனண்ணல்.

(இ-ள்.) இவவண்ணம் பார்வதிதேவியார் வணங்கினபோது, எம்மிறைவனாகிய சிவபிரானும் ஒப்பற்ற ரிஷபவாகனத்தினின்றிழிந்தருளிப் பார்வதியாரை எடுத்தருள, தேவர்கள் கூட்டங்கூட்டமாய்ச் சேர்ந்து துதிசெய்யப் பார்வதிதேவியாருடைய சாபமானது நீங்கினவளவில், உமையவளே சுகமாயிருந்தனையோவென்று திருவாய்மலர்ந்தருளி, பின்னும் அன்பில் படிந்த உன்னுடைய உள்ளத்தில் வேண்டியவைகள் யாவையென்று சிவபிரான் திருவாய்மலர்ந்தருளினார்.—எ-று. (சஅ)

கன்னியுநின்றுநின்றன்கழறனக்கன்புவேண்டு
மன்னியமயிலாப்பூசைவகுத்தலான்மயிலையென்றே
துன்னுமித்தலத்தைமேலோர்சொற்றிடவேண்டுமெம்மை
முன்னினோரெல்லாமேத்துமுத்தியையடைதல்வேண்டும்.

(இ-ள்.) பார்வதிதேவியாரும் சுவாமிக்கெதிரில் நின்றுகொண்டு, தேவரீருடைய திருவடிகளுக்கு அன்புசெய்யவேண்டும், நான் மயிலாயிருந்துபூசைசெ

ய்தபடியினாலே இத்தலத்தைத் திருமயிலை என்று பெரியோர்கள் சொல்லவேண்டும், நம்மைத் தியானிப்பவர்களெல்லாரும் எல்லாப்பேறும்பெற்றுப் பின்பு மோக்ஷத்தை யடையவேண்டும்.—எ-று. (சுசு)

இவையெமக்கருளென்றேத்திமயமான் கூறத்தந்தே
மவைகளப்படியேயாகக்கடவதென்றருளிவானச்
சுவையமுதனையவண்ணச்சோதிநாயகனுமங்கோர்
நவையறுமிலிங்கந்தன்னினண்ணியேமறைந்தங்குற்றான்.

(இ-ள்.) இந்த வரங்களை யடியேனுக்குப் பிரசாதித்தருளவேண்டுமென்று பனிமலைப்புத்திரியாகிய பார்வதிதேவியார் துதித்து விண்ணப்பஞ்செய்ய, சிவபிரான் அதைத் திருவுள்ளத்தடைத்து அவ்வண்ணமே யருளிச்செய்தோம் அந்த வரங்க ளப்படியே ஆகக்கடவனவென்று கற்பித்தருளி, தேவாமிர்தம்போல வெண்மைநிறமுள்ள சோதிசொரூபமாகிய சிவபிரானும் அவ்விடத்தில் குற்றமில்லாத ஒரு சிவலிங்கமூர்த்தத்தினிடத்திலமர்ந்து அங்கு மறைந்திருந்தார்.எ-று.

என்னையாளுடையநாதனிவ்வணமறைந்திருப்ப
வன்னையுந்திருவுளத்தினளவிலாமகிழ்ச்சிபூண்டே
மன்னுபண்ணவர்களெல்லாம்வணங்கியேவிடைகள்கொள்ளத்
தன்னொருமூர்த்திதன்னிற்றன்னுருமறைந்தங்குற்றாள்.

(இ-ள்.) என்னை யாட்கொண்டருளும் சிவபிரான் இவ்வாறு சிவலிங்கமூர்த்தியாய் மறைந்தருளியிருக்க, பார்வதிதேவியாரும் தமது திருவுளத்தில் அளவில்லாத மகிழ்ச்சியடைந்து, அவ்விடத்தில் வந்திருக்குந் தேவர்களெல்லாரும் வணங்கித் தனித்தனி விடைபெற்றுக்கொண்டு செல்ல, ஒப்பில்லாத தன் மூர்த்தத்தில் தன் திருமேனி மறைந்தருளியிருந்தார்.—எ-று. (சுஅ)

ஈதுமைக்கெம்மான்முன்னமிசைந்தருள்புரிந்தபான்மை
யீதுமையோடெம்மண்ணலிருந்தநற்றலத்தின்சீர்க
ளீதெனக்கும்பன்சொற்றானிருடிகளதிசயங்கொண்
டீதெமக்களித்தாய்கைம்மாறென்னெனவெழுந்துதாழ்ந்தார்.

(இ-ள்) நம்முடைய சிவபிரான் பார்வதிதேவியாருக்குக் கிருபைகூர்ந்து வரம் பிரசாதித்தருளிய முறைமை யிதுவாகும், நமது சிவபிரான் பார்வதிதேவியாருடன் வீற்றிருந்தருளும் திருமயிலையென்னுந் தலத்தின் பெருமையு மிதுவாகுமென்று அகஸ்தியமுனிவ ரருளிச்செய்தார், அதுகேட்ட ரிஷிகள் யாவரும் அற்புதங்கொண்டு மகாரிஷியே இந்த உபகாரம் எங்களுக்குச்செய்தருளினீர்

நாங்களுமக்குச்செய்யும் பிரதியுபகாரம் என்னிருக்கின்றதென்று சொல்லி எழுந்து பணிந்தார்கள்.—எ-று. (சுக)

தாழ்ந்தனர்முனிவர்கோமான்றந்தபேரருளின்மேவி
வாழ்ந்தனர்வாழ்கநின்றன்மாபெருங்கருணையென்றார்
சூழ்ந்தனர்துதிகள்பல்காற்சொற்றனரின்பவெள்ளத்
தாழ்ந்தனர்மீட்டுமோர்சொலாங்கவர்புகலலுற்றார்.

(இ-ள்.) இந்தச் சரித்திரங்களைக்கேட்ட முனிவர்கள் யாவரும் அகஸ்திய முனிவரைவணங்கி, அவர்கொடுத்த பெரியவருளைப்பொருந்தி வாழ்வடைந்து, முனிவரே உம்முடைய மிகுந்த கிருபையானது அனேககாலம் வாழக்கடவதென்று சூழ்ந்துகொண்டு பலதரந் தோத்திரங்கள் சொல்லி இன்பவெள்ளத்திலாழ்ந்தார்கள். மறுபடியு மந்தமுனிவர்கள் ஒருவார்த்தை சொல்லத்தொடங்கினார்கள்.—எ-று. (எ0)

முன்னமத்தலத்தின்சீர்கள்முழுவதுந்தொகுத்துச்சொற்றாய்
பின்னுமச்சீர்கண்முன்னேபிராட்டிக்குக்கயிலையோங்கல்
மன்னுமப்பெருமான்சொற்றவகையுமிங்கருளிச்செய்தா
யின்னுமவ்விரிவுகேட்கவிருப்புளோமிசைப்பாயென்றார்.

(இ-ள்.) மகாமுனிவரே அந்தத் திருமயிலையென்னுந் தலத்தின் மான்மிய முழுவதுந் தொகுத்துச்சொன்னீர், பின்பும் அந்த மான்மியங்களைப் பார்வதிதேவியாருக்கு கைலையில் வீற்றிராநின்ற சிவபிரான் அருளிச்செய்த வகையினையும் இப்போதெங்களுக் கருளிச்செய்தீர், இன்னமு மந்த மான்மியத்தின் விரிவைக்கேட்க விருப்பங்கொண்டிருக்கின்றோம், ஆதலாலெங்களுக்கு அருளிச்செய்யவேண்டுமென்றார்கள்.—எ-று. (எக)

அருந்தவமுனிக்குழாங்களையனையருள்வாயென்றே
வருந்தியாங்குரைத்தபோதுமால்பொதியச்சிலம்பி
னிருந்துகும்பேசனென்பானிருடிகள்சங்கநோக்கித்
திருந்தவேபுகலலுற்றதிறமெலாம்புகல்வான்புக்கேன்.

(இ-ள்.) செய்தற்கரிய தவங்கள் செய்த முனிவர் கூட்டம் ஐயனே அருளிச்செய்வாயென்று வருந்திச்சொன்னபோது, பெருமைபொருந்திய பொதியமலையிலிருந்துகொண்டு கும்பேசனென்னு மகஸ்தியமுனிவர் அந்த முனிவர் கூட்டங்களைப்பார்த்துத் திருத்தமாகச் சொல்லத்தொடங்கிய வகையினையெல்லாம் யானிந்த உலகத்தாருக்குச் சொல்லத்தொடங்கினேன்.—எ-று. (எஉ)

பார்வதிதேவியார் அருச்சனைச்சருக்கமுற்றிற்று.

ஆகச்சருக்கம் எ-க்கு திருவிருத்தம் - ௩உசு.

## வேதம்பூசித்தசருக்கம்.

இன்னுமோதெனக்கும்பனுமருள்சுரந்திரங்கியேகேண்மின்கண்
பன்னுமாரணம்வந்தருச்சித்தசீர்பகருகேனெனுமுன்னந்
துன்னுபாதலங்கிசரர்கடறனிற்றோன்றினர்விடம்போல
மன்னுசோமகனென்றொருகிருதன்மாமாயைகண்மிகவல்லான்.

(இ-ள்.) இன்னு மந்த க்ஷேத்திரத்தின் மான்மியங்களைச் சொல்லுமென்று கேட்க, அகத்தியமுனிவர் கிருபைகூர்ந்து திருவுளமிரங்கிக் கேண்மின்கள்; ஓதுகின்ற வேதங்கள் வந்து அருச்சித்த பெருமையைச் சொல்லுகிறோமென்று ஆரம்பித்துச் சொல்லுகிறார். முன்னொருகாலத்தில் இராக்ஷதர்கள் பாதாளத்திலிருந்து விஷம்போலச் சமுத்திரத்தில் தோன்றினார்கள், அவர்களில் சோமகனென்னும் ஒரு அசுரன் மாயையில் மிகவும் வல்லவன்.—எ-று. (க)

அன்னவன்றிறம்பகர்தரவரிதவனமரர்கண்முனிவோர்கட்
கென்னதீங்குகளிழைக்கவேண்டியவவையாவையுமிழைத்துள்ளான்
கன்னலஞ்சொலாள்பங்கினனோடும்போர்கருதுவனிணையில்லா
னின்னதன்மையனவனொருநாண்முனமினையனசெயலுற்றான்.

(இ-ள்.) அவனுடைய வல்லபத்தை யாவராலுஞ் சொல்லுதலரிது. அவன் தேவர்கள் முனிவர்கள் என்னு மிவர்களுக்கு என்னதீங்குகள் செய்யவேண்டுமோ அவைகளையெல்லாஞ் செய்துகொண்டிருப்பவன், கரும்பின் ரசம்போல மொழிகளையுடைய பார்வதிதேவியாரை இடதுபாகத்தில் வைத்தருளிய சிவபிரானுடனும் போர்செய்யவேண்டுமென்று எண்ணுகின்றவன், தனக்கொப்பில்லாதவன், இத்தன்மையையுடைய அவன் ஆதியிலே ஒருநாள் இந்தக்காரியங்களைச் செய்யத்தொடங்கினான்.—எ-று. (உ)

கோதின்மாதவர்புரந்தரனாதியாய்க்கூறும்விண்ணவரெல்லாம்
வேதமோதியங்கீதிகள்புரிந்ததின்மிகுதியாற்பிலமேவிக்
காதிதந்தமராருயிர்குடித்திவர்களிக்கின்றாரெனவெண்ணிச்
சூதினாலதைக்கவர்ந்திடுவோமெனச்சுரரிருக்கையிற்சென்றான்.

(இ-ள்.) குற்றமில்லாத முனிவர்களும் தேவேந்திரன் முதலான தேவர்கள் யாவரும் வேதங்களையோதி அதிற்கூறும் நீதிகளைச்செய்து, அந்த விசேஷத்தாற் பாதாளலோகத்தில்போய் நம்மினத்தார்களுடைய உயிர்களைக்கொன்று குடித்து இவர்களிறுமாப்படைந்திருக்கிறார்களென்று கருதி, சூதினாலே அந்த வேதங்களைக்கவர்ந்துகொள்வோமென்று தேவர்களிருக்குமிடத்திற்சேர்ந்தான்.

சென்றவெல்லையிற்பார்த்தவரிடந்தனிற்றிகழ்தருமுதலாகி
நின்றியார்க்குமோர்தம்பமாமறைதனைச்சோமகன்கவர்ந்தங்க
ணொன்றுமோர்கிலரூமர்களாயவருலைந்திடவவர்தம்மை
வென்றுபாற்கடற்புகுந்தொளித்திருந்தனன்வெற்றிகொண்டனமென்றே.

(இ-ள்.) இவ்வண்ணஞ் சென்றபோது தேவர்களிருக்கும் இடங்களிலெல்லாம் பார்த்து, விளங்குகின்ற முதலாயிருந்து அவர்கள் யாவருக்கும் ஓராதாரமாகிய வேதபுத்தகத்தை, அந்த சோமகனென்னும் அசுரனபகரித்துக்கொண்டு, அதனால் அவர்களொன்றுந்தெரியாமல் ஊமர்களாய்வருந்தும்படி, அவர்களை ஜயித்து வெற்றிகொண்டோமென்று பாற்கடலிலொளித்துக்கொண்டிருந்தான்.—எ-று. (௪)

அந்தவேலையிலமரருமுனிவர்களனைவருந்திகைப்பெய்தி
யிந்தவல்வினையெமக்கெலாநிகழ்ந்தவாறென்னெனவெருளுற்றே
புந்திகொண்டயன்மான்முதற்றேவர்கள்பொள்ளெனவிரைந்தேகி
யந்திவண்ணன்வாழ்கயிலையங்கிரிதனிலடைந்தனரனைவோரும்.

(இ-ள்.) சோமுகனென்னு மசுரன் வேதபுத்தகத்தை அபகரித்துக்கொண்டவளவில், தேவர்கள் முனிவர்கள் என்னு மிவர்கள் யாவரும் மனந்திகைத்து, இந்தக் கொடிய தீவினையானது நமக்கெல்லாஞ் சம்பவித்தது என்னகாரணமென்று பயமடைந்து, பிரமவிஷ்ணுக்கள் முதலாகிய தேவர்கள் அதிவிரைவாகச்சென்று அவர்கள் யாவரும் சிவபிரான் வீற்றிருந்தருளும் கைலாயகிரியிற் சேர்ந்தார்கள்.—எ-று. (௫)

அங்கணின்றிவர்முறையிடநந்திசென்றையன்முன்னவைகூற
வெங்கணாயகன்விளியெனநந்திவந்தேகுதிரெனவுய்ப்பப்
பொங்குசீர்த்தியெம்புராரியைத்தொழுதவர்புகன்றிடவவைமங்கை
பங்கனந்தியைமாயனைக்கொணர்கெனப்படர்ந்தவற்கொணர்ந்துற்றான்.

(இ-ள்.) இவர்களவ்விடத்திற்சென்று முறையிட, அதைக்கேட்டு நந்திதேவர் சிவபிரானுடைய சந்நிதானத்திற்சென்று தேவர்கள் வந்து முறையிடுவதை விண்ணப்பஞ்செய்ய, சிவபிரானவர் அதைத் திருவுளத்தடைத்து நந்திதேவரை நோக்கி அவர்களை யழைத்துக்கொண்டு வாவென்று கட்டளையிட்டருளினவுடனே, நந்திதேவர் சென்று நீங்கள் போங்களென்று தேவர்களை உள்ளேயனுப்ப, மிகுந்த புகழுள்ள நம்மிறைவனை வணங்கித் தங்களுக்கு நேரிட்ட துயரத்தை விண்ணப்பஞ்செய்ய, பார்வதிபாகனாகிய சிவபிரான் நந்தியை நோக்கி விஷ்ணுவை யழைத்துக்கொண்டு வாவென்று கட்டளையிட்டருள, அவ்வாறே சென்று அழைத்துக்கொண்டுவந்தார்.—எ-று. (௬)

விடுத்தகாலையின்மாயனுந்தொழுதெனைவிளித்ததென்னெனநாணிக்
கடுத்தனக்கிணைச்சோமுகன்சுருதியைக்கவர்ந்துபாரெனும்பேதை
யுடுத்தவாடையிற்புகுந்தனன்மச்சமாமொருபெருவுருநீசென்
றெடுத்தவன்றனைப்படுத்துயிர்குடித்திவணிருக்கினைக்கொணர்கென்றான்.

(இ-ள்.) சிவபிரானுடைய சந்நிதானத்தில் விட்டபோது, விஷ்ணுவானவர் பணிந்து அடியேனை யொருபொருளாகக்கருதி வரவழைத்த காரணம் யாதோ வென்று மிகுந்த பயத்துடன் விண்ணப்பஞ்செய்ய, சிவபிரான் விஷ்ணுவே விஷத்துக்கொப்பாகிய சோமுகனென்னும் அசுரன் வேதபுத்தகத்தைத் திருடிக்கொண்டு, பூமிதேவியானவள் தரித்துக்கொண்டிருக்கும் ஆடையாகிய சமுத்திரத்திற்போய் ஒளித்துக்கொண்டிருக்கின்றான், ஆதலால் நீ ஒருபெரிய மீனுருவங்கொண்டு சென்று அவனைக்கொன்று உயிரையுண்டு அந்த வேதபுத்தகத்தை இங்கே கொண்டுவாவென்று கட்டளையிட்டருளினார்.—எ-று. (௭)

என்றுநாயகனருள்செயமாயனுமிறைஞ்சினன்விடைகொண்டே
சென்றுவானவர்தொழுதிடவேலையின்றிண்கரைதனின்மேவி
யின்றவன்றனைக்கொன்றுயிர்குடிப்பனென்றிமையவர்பார்த்தஞ்ச
நின்றுபார்நடுக்குறவொருமச்சமாய்நிகழ்பெருவுருக்கொண்டான்.

(இ-ள்.) சிவபிரான் இவ்வாறு கட்டளையிட்டருள, விஷ்ணுவானவர் பணிந்து விடைபெற்றுக்கொண்டு சென்று, தேவர்களெல்லாந் தன்னைச் சூழ்ந்துவரப் பலமுள்ள சமுத்திரத்தின் கரையைச்சேர்ந்து, இப்போதந்த வசுரனைக்கொன்று உயிருண்ணுகின்றேனென்று சொல்லி, அந்தத்தேவர்கள் கண்டு அஞ்ச எதிரே நின்று பூமிதேவியானவள் நடுக்கங்கொள்ள ஒரு பெரிய மகரமீனுருவங் கொண்டார்.—எ-று. (௮)

கொண்டுபூதலம்பாதலம்விண்டலங்குலுங்கிடவசைத்தார்த்துந்
திண்டிறற்றிமிங்கிலகிலங்கீடமாய்ச்சேருறக்கடலேழு
முண்டுதன்முகத்தொளிருமோர்செலுவினாலொளித்தசோமுகன்றன்னைக்
கண்டுநீயினிப்போவதெங்கென்றவண்கடுஞ்சினத்தொடுசென்றான்.

(இ-ள்.) இவ்வாறு மச்சவடிவங்கொண்டு, பூலோகம்பாதாளலோகம் தேவலோகமென்னு மிந்த மூன்றுலோகங்களும் குலுங்கும்படி யசைத்து ஆரவாரித்தும், மிகுந்த பலமுள்ள திமிங்கிலங்களாகிய பெரியமீன்களெல்லாம் புழுவுக்குச் சமானமாகவும், ஏழுசமுத்திரநீரையும் உண்டு தன்முகத்தினிடத்தில் விளங்குகின்ற ஒருமுள்ளினால், ஒளித்திருக்கும் சோமுகனென்னும் அசுரனைக் கண்டு அடா நீ எங்கே பிழைத்துப்போவாயென்று சொல்லி மிகுந்த கோபத்துடன் அவனருகிற்சென்றார்.—எ-று. (௯)



சோமுகனைவதைத்துவேதத்தைவெளியிட்டது.

மாயனிப்படி வடிவுகொண்டுயிருண வருதல்கண்டவனஞ்சிப்
போயினிப்புறகிடல்வசைபாம்புகழ்போமெனத்துணிவெய்தி
நீயெனைப்பொரவருவதின்றெங்கெனநீள்சுழல்விழிபொங்கித்
தீயுசத்திசைசென்றுறவார்த்துமுன்சென்றனனடவுன்னி.

(இ-ள்.) விஷ்ணுவானவர் இவ்வண்ணம் பெரிய மகரமீன்வடிவங்கொண்டு தன்னைக் கொல்லும்படி வருவதைக்கண்டு, சோமுகாசுரன் பயந்து நாமினிப்புறகிட்டு ஓடிப்போவோமேயானால் வசைமொழிநேரிடும், அன்றியுங் கீர்த்தியும் போய்விடும் என்று துணிவுகொண்டு, இப்பொழுது நீ என்னுடன் போர்செய்யவருவதும் எப்படியோ பார்ப்போமென்று, பெரிய கண்கள் பொங்கிச் சுழன்று தீப்பொறிபறக்க அஷ்டதிக்குகளிலும் பொருந்தும்படி ஆரவாரித்து அவரைக்கொல்லும்படி எதிரிற்சென்றான்.—எ-று. (க0)

வந்துசோமுகன்வதைப்பனிங்குனையெனமாயனுமிகச்சீறி
யிந்தநாளுனக்கிறுதியென்றறிகிலாயெம்முனமெதிர்ந்துற்றாய்
சந்தமாமறைகவர்ந்திவணொளித்தநீசாற்றனன்றெனநக்கு
விந்தமாமலைபோலவனலறிமண்மேல்விழவிழப்பாய்ந்தான்.

(இ-ள்.) சென்று சோமுகாசுரன் உன்னைக் கொல்லுகிறேனென்று சொல்ல, விஷ்ணுவு மிகுந்த கோபங்கொண்டு இந்த நாள் உனக்கு முடிவான நாளென்று அறியாமல் என்னெதிரில் போர்செய்யவந்து நேரிட்டாய், அழகுள்ள வேதங்களைத் திருடிக்கொண்டு இவிடத்திலொளித்திருக்கும் நீ சொல்லுவது நன்றென்று நகைத்து, பெரிய விந்தகிரிபோல அவ்வசுரன் பூமியின்மேல் அலறிவிழும்படிப் பாய்ந்தார்.—எ-று. (கக)

பாய்ந்தகாலையிற்சிதைந்துடல்சோணிதப்பவ்வமாயினவோட
மாய்ந்துபோயினனிருதனுஞ்சமனுயிர்வவ்வினன்மலர்மாரி
வாய்ந்தமாதவர்சுரர்பொழிந்தார்த்தனர்மாயனுஞ்சமராட
லோய்ந்துநின்றனன்சுருதியுமரனிடத்துற்றனதுதிசொற்றே.

(இ-ள்.) இவ்வாறு பாய்ந்தபோது உதிரக்கடல் பெருகத்தக்கதாக உடல் சிதைந்து அச்சோமுகாசுரன் இறந்துபோனான், அப்போது யமனும் வந்து அவனுயிரைக் கொண்டுபோய்விட்டான். தேவர்களு முனிவர்களும் புஷ்பமழை பொழிந்து சந்தோஷத்தினு லாரவாரித்தார்கள். விஷ்ணுவும் போர்செய்தலை விட்டு நின்றார். முன்னொளிக்கப்பட்டிருந்த வேதங்களும் குற்றம் நீங்கித்துதி செய்து சிவபிரானிடத்து வந்து சேர்ந்தன.—எ-று. (கஉ)

வெய்யபாதகன்கிசாசரன்சூழ்ச்சியான்மிகுதியுந்தளர்வுற்றே
முய்யுமாறெமக்கருளெனச்சுருதிகின் றுரைப்பவெம்பெருமானுஞ்
செய்யபூம்பொழின்மயிலை மாநகரத்திற் சென்றுநீவிர்கணம்மைத்
துய்யமாமலர்கொண்டருச்சிக்கவுந் துயர்கெடுமெனச்சொன்னான்.

(இ-ள்.) கொடிய பாதகனாகிய சோமுகாசுரன் செய்த மாயையினால் அவனிடத்தி லகப்பட்டுக்கொண்டு மிகவுந் தளர்ச்சியடைந்தேம், இனி யடியேம் உய்யும்படி கிருபைபாலித்தருளவேண்டுமென்று வேதங்கள் விண்ணப்பஞ்செய்த போது, நம்பெருமானாகிய சிவபிரானும், செவ்விதான மலர்கள் நிறைந்த பொழில்கள்சூழ்ந்த திருமயிலையென்னும் க்ஷேத்திரத்தில் நீங்கள் சென்று, நல்ல மலர்களால் நம்மை யருச்சித்தால் உங்களுடைய துயரமெல்லாம் ஒழிந்துபோமென்று திருவாய்மலர்ந்தருளினார்.—எ-று. (௧௩)

நாதனிப்படிபுகறரச்சுருதியுநன்றெனவிடைகொண்டே
காதலுற்றுநக்கொடுநடந்தநுட்டலங்களுட்பலபணிந்தேத்தித்
தீதகற்றிடுமயிலைமாநகரமாஞ்செழுநகர்தனின்மேவிப்
பூதலத்தின்மேல்வீழ்ந்துவீழ்ந்தெழுந்தவண்போற்றுகின்றனவின்றே.

(இ-ள்.) சிவபிரான் இவ்வாறு கட்டளையிட்டருள, வேதங்கள் அவ்வண்ணமே செய்கிறோமென்று விடைபெற்றுக்கொண்டு அன்புற்று தம் சொரூபம் பெற்றுக்கொண்டு நடந்து சென்று, மத்தியிலிருக்கும் பல தலங்களையும் வணங்கித் துதித்து பிறவித்துன்பங்களை யடியார்களுக்கு நீக்கத்தக்க வளப்பமுள்ள திருமயிலை யென்னுந் தலத்திற் சேர்ந்து, பூமியினிடத்தில் பலதரம் வீழ்ந்து எழுந்து நின்று அங்குத் துதிசெய்கின்றன.—எ-று. (௧௪)

விடமுமாரமுதாயருந்தெம்பிரான்மேவுமந்நகர்ச்சீரும்
படரும்வாண்மணிக்கோபுரக்கோயிலும்பராரையம்புன்னைநீழ
லிடமுமற்றுமவ்வெழில்களுஞ்சோலையுமிமையவர்புரிந்தாடுந்
தடமுநோக்கியங்குற்றவற்புதந்தனைச்சாற்றிடவரிதம்மா.

(இ-ள்.) விஷத்தையும் அமிர்தம்போலாக உண்டருளிய சிவபிரான், திருக்கோயில்கொண் டெழுந்தருளியிருக்கும் அந்தத்தலத்தின் சிறப்புகளையும், ஒளிபெருகும் மணிகள் பதித்துள்ள கோபுரத்தினையுடைய ஆலயத்தின் சிறப்பினையும், பருத்த அரையினையுடையதா யழகுள்ளபுன்னைமரத்தினிழல் பரவிய இடத்தையும், மற்றுள்ள அலங்காரங்களையும் சோலைகளையுந், தேவர்கள்விரும்பி வந்து ஸ்நானஞ்செய்யுந் தடாகத்தையும் பார்த்து, அந்த வேதங்கள் அடைந்த அற்புதத்தைச் சொல்லுவது அருமையாம்.—எ-று. (௧௫)

மேயசீர்கொணான்மறைதெரிந்தருளெனவிளங்குபூந்தடமேவித்
தூயதீம்புனறோய்ந்துநீறணிந்தவண்டலங்குபங்கயமுன்னா
வேயபன்மலர்மஞ்சனமிவைகள்கொண்டேகியுன்னிடநல்குஞ்
சாயநீக்கிடுகபாலிநாயகனைமுன்கண்டுகண்களித்துற்றே.

(இ-ள்.) மிகுந்த பெருமையுள்ள நான்கு வேதங்களும் அந்தத் தடாகத்தைக்கண்டு, திருவருள்போல விளங்கும் பரிசுத்தமாயிராநின்ற தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, விபூதி தரித்துக்கொண்டு, அவ்விடத்தில் மலர்ந்திராநின்ற தாமரைமலர் முதலாகிய பல மலர்களையுந் திருமஞ்சனத்தையுஞ் சேகரித்துக் கொண்டு சென்று, அடியார்கள் இயாணிக்கச் சரீரசம்பந்தமாகிய பிறவியை நீக்கியருளும் கபாலிநாதனைக்கண்டு தரிசித்துக் கண்களிப்படைந்து.—எ-று.

உற்றபின்னரங்கருச்சனைக்குளவெலாமொருங்குடன்வரவுன்னி
நற்றுவாரமுன்னியற்றுறுங்கிரியைகணான்மறைவிரைந்தாற்றிச்
சொற்றபாறயிர்துப்பிவையாதியாய்த்துலங்கருக்கியமீறாய்க்
கற்றைவார்சடைக்கபாலிநாயகன்றனைக்கரங்களான்மகிழ்ந்தாட்டி.

(இ-ள்) வேதங்கள் அங்கு சேர்ந்தபின்பு சிவார்ச்சனைக்கு வேண்டிய திரவியங்களெல்லாம் ஏககாலத்தில் வரும்படி நினைத்து, முன்னதாகத் துவார பூசை முதலாக முதலிற் செய்யவேண்டிய கிரியைகளை நான்கு வேதங்கள் விரைவாகச்செய்து, சொல்லப்பட்ட பசுவின்பால் தயிர் நெய் இவைகளாதியாகத் துலங்குகின்ற அருக்கிய மீறாக, கற்றையாகிய நீண்ட சடாபாரத்தையுடைய கபாலிநாதனைத் தம்முடைய கைகளால் மகிழ்ந்து திருமஞ்சனஞ்செய்வித்து.—எ-று. (கஎ)

துலங்குமேனியினீரமுமாற்றிநற்சுகந்தமும்பலசாத்தி
யலங்கல்போற்கலன்வெண்டுகிலிவைகளுமணிந்தமுதடைக்காயு
மிலங்குபாணியமுடனளித்தலர்கடியிறைஞ்சிமுன்னிடர்தீர
நலங்கொளின்பநீநல்கெனத்துதிகளுநவின்றுநின்றனவன்றே.

(இ-ள்.) விளங்குகின்ற சிவலிங்கப் பெருமானுடைய திருமேனியில் ஈரத்தைத் திருவொத்தாடையாற் போக்கி, பல வாசனைத் திரவியஞ்சேர்ந்த சந்தனக்காப்புமணிந்து, திருமாலை திருவாபரணம் திருவாடை இவைகளையுந் தரித்து, திருவமுதமும் வெற்றிலை பாக்கு பருகுவன முதலாகிய முகவாசமும் நிவேதித்து, அருக்கியங் கொடுத்து புஷ்பாஞ்சலிசெய்து பணிந்து, முன்னேரிட்ட துன்பங்களெல்லாம் நீங்கும்படி தேவரீர் எங்களுக்கு நன்மையுடைய பேரின்பம் பிரசாதித்தருளுமென்று தோத்திரங்களுஞ் சொல்லிநின்றன.-எ-று.

மன்னுமிவ்வுலகத்தில்வாழ்மனிதர்கண்மாதவர்துறக்கத்திற்
றுன்னுவானவர்மலரயன்முராரிமுற்சொற்றிடுமிவரெல்லா
முன்னராரணங்கற்றறிந்தருச்சனை முக்கணர்க்கமையார்கள்
பன்னுமாமறைவந்தருச்சிக்கிலார்பண்புகளளக்கிற்பார்.

(இ-ள்.) நிலைபெற்றதாகிய இந்த வுலகத்தில் வாழ்கின்ற மனிதர்கள் முனிவர்கள் சொர்க்கலோகத்தில் வாழ்கின்ற தேவர்கள் பிரமதேவன் விஷ்ணு முதலாகச் சொல்லப்பட்ட இவர்கள் யாவரும், முன்னமே வேதங்களையோதியுணர்ந்து அதிற் சொல்லியிருக்கும் விதிப்படி திரிநேத்திரமுள்ள சிவபிரானுக்கு அருச்சனை செய்யமாட்டார்கள், சொல்லப்படுகிற அந்த வேதங்களே இப்போது வந்து அருச்சித்தால் அந்த அருச்சனையின் தன்மைகளை யார் விவரித்துச் சொல்லத் தக்கவர்கள்.—எ-று. (கக)

வேறு.

உமைக்கொருபாகன்கோயிற்குத்தரதிசையிற்சீரா
டமைத்தொளிர்பன்னசாலையவணொருநாயனுரை
யிமைக்குமுன்றாபித்தங்கணெழிற்குணபாலில்வீறுய்ச்
சமைத்தனவகிலம்போற்றுந்தடாகமொன்றிலங்கமாதோ.

(இ-ள்.) பார்வதி பாகனுகிய கபாலீசர் வீற்றிருந்தருளுந் திருக்கோயிலுக்கு வடதிசையில் சிறப்புடன் ஒரு பன்னசாலை ஏற்படுத்திக்கொண்டு, அவ்விடத்தில் ஒரு சிவலிங்கப் பிரதிஷ்டையை ஓரிமைப்பொழுதிற்கு முன்செய்து, அதற்குக் கிழக்குத்திசையில் உலகத்தாரெல்லாம் போற்றத்தக்க ஒரு தீர்த்தம் விளங்கும்படி சந்தோஷத்துடன் ஏற்படுத்தின.—எ-று. (உ0)

ஆங்கிடமாகநாளுமமர்ந்தெழிற்கபாலிநாதன்
பூங்கழலருச்சித்தேத்திப்பொலிவுறவமைத்தலிங்கம்
பாங்குறப்பூசித்தன்னபான்மையிற்சின்னாள்வைகி
யீங்கெமக்கிடர்கடீர்த்தாயெனவிசைத்திறைஞ்சிநாளும்.

(இ-ள்.) அந்தப் பன்னசாலையினிடமாக நாள்தோறும் பொருந்தியிருந்து, சவுந்தரியமுள்ள கபாலீசருடைய திருவடிகளை யருச்சித்துத் துதிசெய்து, பிரசித்தமாகத் தாங்கள் பிரதிஷ்டைசெய்த சிவலிங்கப் பெருமானையும் சிறப்புடன் ஆராதித்து, இத்தகுதியாகச் சிலநாளங்கே வாசமாயிருந்து, சுவாமியை நோக்கி இவ்விடத்தில் எங்களுக்குத் துன்பங்களைத் தீர்த்தருளின ஐயனே யென்றுதோத்திரஞ்செய்து, நாள்தோறும்பணிந்துகொண்டிருக்கின்றன.—எ-று.

ஆதிநாதனிர்நாளிலோர்நான்மறையருச்சனைச்செயல்கண்டே
மாதுபாகன்வெள்விடையுகைத்தாசிகள்மாதவர்பொழிந்தார்ப்பத்

தாதுலாமலரிமையவர்பொழியமுன்சாரதர்பலர்சூழ
வேதமாற்றமுன்னின்றனனாரணமெண்ணிலற்புதமெய்த.

(இ-ள்.) இவ்வண்ணம் பூசை செய்துகொண்டிருக்கும் நாளில் ஒருநாள் ஆதிநாதரும் உமாதேவி பாகருமாகிய சிவபிரான் அப்பூசையைத் திருவுளங் கொண்டு, கிருபைகூர்ந்து வெண்மை நிறமுள்ள ரிஷபவாகனத்தி லாரோக ணித்துக்கொண்டு, முனிவர்கள் யாவரும் ஆசீர்வசனஞ்சொல்லி ஆரவாரிக்கவு ம், மகரந்தங்கள் பொருந்திய கற்பகப் புஷ்பங்களைத் தேவர்கள் பொழியவும், பூதகணங்கள் முன்னே சூழவும் வேதங்கள் அளவில்லாத அற்புதத்தை யடை யும்படி அவைகளின் துன்பங்களை நீக்கிக் காட்சிகொடுத்து நின்றனர்.—எ-று.

அய்யன்வந்துமுன்னிற்றலுமாரணமருட்கழல்களின்வீழ்ந்தே
மெய்யபோற்றிபைம்பூகவனேபோற்றிமன்விமலசங்கரபோற்றி
துய்யபோற்றியென்றியம்பினசுருதியைச்சோதிபார்த்திவண்மேவிச்
செய்தபூசைகண்டுவந்தனம்வரங்கணீர்செப்புகல்குதுமென்றான்.

(இ-ள்.) சிவபிரான் இவ்வண்ணம் தரிசனங் கடாக்ஷித்தருளலும் அந்த வேதங்கள் அவருடைய திருவருண்மயமாகிய பாதங்களைப்பணிந்து, உண்மை யான கடவுளே போற்றி, ஐந்து திருமுகங்களையுடையவரேபோற்றி, நித்தியத் துவமும் மலரகிதமுமுடைய சங்கரனேபோற்றி, பவித்திரமுள்ளவரேபோற்றி யென்று தோத்திரஞ்செய்த வேதங்களை, சிவபிரான் அருட்கண்சாத்தி நீங்கள் இவ்விடத்தில்வந்து செய்த பூசையைக்கண்டு சந்தோஷித்தோம், ஆதலால் உங்களுக்கு வேண்டிய வரங்களைச் சொல்லுங்கள் கொடுக்கிறோமென்று திரு வாய் மலர்ந்தருளினர்.—எ-று. (உ௩)

உளங்களித்துமாமறையுநின்றன்புடனுவந்தொருமொழிகூறுங்
களங்கவல்வினைச்சோமுகன்மீனெனக்கவர்தலாற்றொடர்பாவந்
துளங்கிமாயுறச்செய்தலாற்றாபித்தசோதிலிங்கந்தன்னை
விளங்குநாமமீனேசுரனெனமண்ணோர்விளம்பிடமிகவேண்டும்.

(இ-ள்.) அந்த வேதங்கள் உள்ளங்களித்துச் சந்தோஷமடைந்து அன்பு டன் ஒரு வார்த்தை சொல்லுகின்றன, அதாவது-ஐயனே குற்றம் பொருந்திய வலிய தீவினைகளைச் செய்யும் சோமுகாசுரன், மீன்போ லுருக்கொண்டு எங்க ளைக் கவர்ந்து சமுத்திரத்திற்போய் ஒளித்து வைத்ததனால், எங்களைத் தொ டர்ந்தபாவமானது கெட்டொழியும்படி செய்தமையால், அடியேம்தாபித்துப் பூசித்த சோதிமயமாகிய சிவலிங்கப்பெருமானை மீனேசுவரனென்று இவ்வுலக த்தார் பேர்சொல்லும்படி வரம் பிரசாதித் தருளவேண்டும்.—எ-று. (உ௪)

அன்றியத்தடம்படிந்தபேர்வெம்பிணியகற்றிடவரம்வேண்டு
மின்னுபோலநின்றிருவடிக்கென்றுமன்பெம்முளத்துறவேண்டுங்.

கஎ

துன்றுமிங்கர்க்கெம்பெயராகவுந்தொலைவிலின்பமும்வேண்டு
மென்றுகூறவவ்வரமளித்திறைவனுமிலிங்கமூர்த்தியிலுற்றான்.

(இ-ள்.) இதுவுமல்லாமல் அங்கிருக்குந் தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்த வர்களுடைய கொடிய பிறவிப்பிணி நீங்கும்படி வரம் பிரசாதித் தருளவேண்டும், தேவரீருடைய திருவடிகளிடத்திலே இப்போது எம் முள்ளத்தில் அன் பிருத்தல்போல எப்போது மிருக்கும்படி வரம் பிரசாதித் தருளவேண்டும், நிலைபெற்றதாகிய இந்தத் தலத்துக்கு வேதபுரியென்று எங்கள்பேர் சொல்லத் தக்க அழியாத இன்பத்தையும் பிரசாதித் தருளவேண்டுமென்று விண்ணப் பஞ்செய்ய, அந்த வரங்களைப் பிரசாதித்தருளினர்.—எ-று. (உரு)

அடிகளவ்வயின்மறைதலுமறைதொழுதமலனைவிடைகொண்டே
கடிதினேகிமுன் னுறைதலமமர்ந்தருள்கலந்தசீர்முனிகாண்முன்
வடிவிலாமறைவடிவுகொண்டருச்சனைவகுத்ததுமிடர்நீங்கி
முடிவிலின்பமுற்றுய்ந்ததுமிதுவெனமுனிவர்கோனருள்செய்தான்.

(இ-ள்.) சிவபிரான் அந்த விடத்தில் மறைந்தவுடன், அந்த வேதங்கள் பணிந்து சிவபிரானிடத்தில் விடைபெற்றுக்கொண்டு விரைவாகச் சென்று முன்னிருந்த விடத்திற்போ யருள்பெற்றிருந்தன. சிறப்பமைந்த முனிவர்களே முன்னே உருவமில்லாத வேதங்கள் உருவங்கொண்டு கபாலீசரை ஆராதித்ததும், துன்பமொழிந்து ஒழிவில்லாத இன்பமுற்றிருந்ததும் இவ்வாருகு மென்று அகஸ்தியமுனிவர் அருளிச்செய்தார்.—எ-று. (உசு)

வந்திருக்கருச்சித்தவாறிதுவெனமாதவர்மகிழ்வெய்திச்
சிந்திமாமலர்கின்றருட்கழல்கண்மேற்றெண்டெனப்பணிந்தேத்திக்
கந்தவேளருச்சித்ததுவிரித்திவண்கழறெனவருள்கூர்ந்தே
சந்தனசலமுனிவனுந்தவர்க்கெல்லாஞ்சாற்றன்மேயினனம்மா.

(இ-ள்.) வேதங்கள் வந்து அருச்சித்த முறைமை இவ்வண்ணமாமென்று சொல்லக்கேட்டு, அந்த முனிவர்களெல்லாரு மகிழ்வெய்தி அவ்வகஸ்தியருடைய அருண்மயமான திருவடிகளின்மேல் சிறந்த மலர்களா லருச்சித்து, தண்டாகாரமாகப் பணிந்து எழுந்து நின்று, சுப்பிரமணியக்கடவுள் கபாலீசரை அருச்சித்த சரிதமும் இவ்விடத்தில் அடியேங்களுக்கு விரிவாகச்சொல்ல வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்ய, பொதியமலையிலிருக்கும் அகஸ்திய முனிவர் கிருபைகூர்ந்து அவர்களுக்குச் சொல்லத் தொடங்கினர்.—எ-று.

வேதம்பூசித்தசருக்கமுற்றிற்று.

ஆக சருக்கம் அ-க்கு திருவிருத்தம்-கூருகூ.

---

# குமரவேள் அருச்சனைச்சருக்கம்.



முப்பிணிகடொலைத்தெமக்குப்பரஞானம்வழங்குமோனகுரவ
ன்புரிந்தபூசைதனைமுனிகா, டப்பறவேவிரிக்குதுங்கேண்மின்கடிக
ழ்வெள்ளித்தண்டவளவெற்பின்மணித்தமனியமந்திரத்து, வொப்பி
ல்பூந்தவிசின்மிசையும்பரெலாம்பரவவொளிர்ஞானமேனியன்முனொ
ண்டொடியோடுற்றா, ளப்பொழுதிற்கடிதினெழுந்தகிலமெலாம்பய
ந்தவனையருட்கழல்கடொழுதருடாநின்றனண்முன்.

(இ-ள்.) மும்மலங்களாகிய பிணிகளை நீக்கி அடியேங்களுக்குச் சிவஞானமருளிச்செய்யு மெய்க்குருவாகிய சுப்பிரமணிய சுவாமியானவர், கபாலீசுரனை யருச்சித்ததை முனிவர்களே உங்களுக்குக் குற்றமறச்சொல்லுகிறோம் கேளுங்கள், குளிர்ச்சிபொருந்தி வெண்மை நிறத்துடன் விளங்குகிற கைலாயகிரியினிடத்து, பொன்னால் நிருமித்து இரத்தினங்கள் பதித்திருக்கிற ஆலயத்தில் அமைத்துள்ள ஒப்பில்லாத பொலிவுடைய சிங்காசனத்தில், தேவர்களெல்லாந் துதிசெய்யும்படி பிரகாசிக்கும்படியான ஞானசொரூபமுள்ளவராகிய சிவபிரான் பார்வதிதேவியாருடன் முன் வீற்றிருந்தருளினார். அப்போது உலகங்களை யெல்லாம் ஈன்றருளிய அந்தப் பார்வதிதேவியார் சடுதியிலெழுந்து, அருள்நிறைந்த சிவ்பிரான் திருவடிகளைத் தொழுது திருவருள் பெறும்படி சுவாமிக்கெதிரில் நின்றருளினார்.—எ-று. (க)

நின்றனளங்கப்பொழுதினமலன்முகநோக்கிநேரிழைநின்னுளத்
தினலநிகழ்த்துதியென்றிசைப்ப, வொன்றுமிலைநினையிகழ்ந்தசிறுவி
திதன்மகளாவுற்றதுயரற்றிடவிவ்வுருநீப்பாயென்ன, நன்றுனதுநி
னைவென்றேமகிழ்ந்தனமாகுலநீநண்ணியதையொழிந்திமயநற்சிலம்
பிற்பன்னா, டுன்றுபுகழ்வெற்பரையனினைமகவாய்ப்பெற்றுத்துய்த்
திடவின்பந்தவங்கடுலைவில்செயலுற்றான்.

(இ-ள்.) பார்வதிதேவியார் இவ்வண்ணம் நின்றபோது, சிவபிரான் அவருடைய திருமுகத்தைநோக்கி, உமையவளே உன்னுள்ளத்திலிருக்கும் எண்ணத்தைச் சொல்லக் கடவையென்று திருவாய்மலர்ந்தருளலும், சுவாமீ ஒன்றுமில்லை, தேவரீரை யிகழ்ந்த தக்கனுடைய மகளாய்ப்பிறந்திருக்கிற இந்தத் துன்பம் நீங்கும்படி இந்த உருவத்தை நீக்கி யருளல் வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, சிவபிரான் பார்வதிதேவியாரை நோக்கி உமையவளே உன்னுடைய எண்ணம் நன்மையானதென்று நாம் மகிழ்ந்தோம், நீ பொருந்தியிருக்

குந் துயரத்தை நீக்கி, பர்வதராஜன் உன்னைப் புத்திரியாகப்பெற்றுப் பேரின்பம் அடையவேண்டுமென்று கருதி, இமயமலையினிடத்தில் அனேக காலமாக அழியாத தவங்கள் செய்துகொண்டிருக்கின்றான்.—எ-று. (உ)

மேவியவன்பான்மகவாயிருந்தபினேநாமேவிரைந்தவண்வந்துனைமணந்துமேவுதுமென்றிசைப்பக், காவலநின்னருட்பணியினடப்பனெனவிரைந்தேகழல்களின்மேல்வீழ்ந்திறைஞ்சிக்கன்னிவிடைகொண்டே, வோவிலருளுடன்கயிலைநணந்திமயமென்னுமொண்சிலம்பினுற்றுருநீத்துயரியவானெனுக்கும், வாவியிற்பங்கயமலர்மேற்றனதுருவின்சோதிமாதிரமெங்குந்தெவிட்டவதிந்தனளோர்மகவாய்.

(இ-ள்.) ஆகையினாலே நீ அவனிடத்தில் குழந்தையாயிருக்கக்கடவை, அவ்வண்ணமிருந்தால் விருப்பங்கொண்டு வந்து, உன்னை நாமே பிறகு திருமணஞ் செய்துகொள்ளுகிறோமென்று திருவாய் மலர்ந்தருளலும், இறைவனே தேவரீருடைய கட்டளையின்படியே நடப்பேனென்று அவருடைய திருவடிகளில்வீழ்ந்து பணிந்து, உமையம்மை விடைபெற்றுக்கொண்டு நீங்குதலில்லாத திருவருளுடன் கைலாயகிரிவிட்டு நீங்கி, ஒப்பில்லாத இமயமலையினிடத்திற் சென்று முன்னுள்ள திருமேனிபோக்கி, உயர்ந்த ஆகாசம்போலத் துல்லியமாயிராநின்ற ஒரு தடாகத்திலிருக்கும் ஒரு தாமரைமலரின்மேல், தன் திருமேனியினுடைய சோதி திக்குகளெங்கும் நிறையும்படி ஒரு குழந்தையாய் வீற்றிருந்தருளினார்.—எ-று. (ங)

அச்செயல்கண்டசலமன்னனெழுந்துவிரைந்தோடியம்மைபெமையளிப்பவெந்தைதனையகன்றாள்போலு, நிச்சயமீதெனத்தெளிந்துபயந்துமகிழ்ந்துள்ளேநெக்குருகப்புக்கிறைஞ்சிநியமமங்கு கொண்டே, யிச்சையுடனெடுத்தணைத்துச்சென்னியினிற்றாங்கியிற்புகுந்துதன்மனையாண்மேனைகையிற்கொடுப்ப, வுச்சிதனிலுயிர்த்தணைத்துத்துணைமுலைகள்விம்மியொழுகுதீம்பாலுமையாட்கூட்டினள்பேரன்பால்.

(இ-ள்.) அவ்வண்ணங் குழந்தையாயிருப்பதைப் பர்வதராஜனறிந்து எழுந்து விரைவிற் சென்று, பார்வதிதேவியார் நம்மை ரக்ஷிக்கும் பொருட்டு நம்மையாளுகிய சிவபிரானைவிட்டு நீங்கினாள், இது உண்மையென்று தெளிந்து, மனதில் பயமும் மகிழ்ச்சியும் கொண்டு, உள்ளம் நெக்குவிட்டுருகச்சென்று பணிந்து நியமம்பூண்டு, விருப்பத்துடன் அந்தக் குழந்தையையெடுத்து மார்பிலணைத்துச் சிரசின்மேற் றாங்கிக்கொண்டு வீட்டிற்சேர்ந்து, மேனையென்று

பெயருள்ள தன்மனைவியினுடைய கையிற்கொடுக்க, அவள் வாங்கி உச்சிமோந்து அணைத்து இரண்டு தனங்களும் பூரித்து ஒழுகாநின்ற மதுரமாகிய பாலை, பார்வதி தேவியாராகிய அந்தக் குழந்தைக்கு மிகுந்த அன்புடன் ஊட்டினாள்.

துய்த்தமிர்தமிலங்குமதிப்பசுங்குழவியேபோல்சுடர்கான்றுநாடோறுந்தோன்றுருவங்காட்டிக், கைத்தலத்தும்புயமேலுந்தங்கிவளர்ந்தருளிக்கடியவயதைந்திலரன்காதலியாளாக, மெய்த்தவங்கள்புரிகிற்பேன்விடுத்தருளென்றியம்பவெற்பரையனிசைந்துடனேமெல்லியர்கள்சூழப், பொய்த்தவிடைக்கொடிதவஞ்செய்துறவொருபொன்மாடம்புரிந்திவணுற்றியற்றுகெனப்புரிந்தவணங்குற்றாள்.

(இ-ள்.) அந்த மேனை முலைப்பாலையுண்டு, பிரகாசியாநின்ற இளமைப் பருவமுள்ள மூன்றாம்பிறையைப்போல் காந்தியைப்பொழிந்து, நாள்தோறும் வளருகின்ற உருவத்தைக்காட்டி, அவள் கையினிடத்தும் பிதாவின் புயத்தின் மேலும் அமர்ந்து வளர்ந்து, விளக்கமுள்ள ஐந்துவயதானகாலத்தில் பிதாவை நோக்கி, நான் சிவபிரானுடைய மனைவியாகும்படி உண்மையான தவங்கள் செய்யவேண்டுமாதலால் எனக்கு விடைகொடுத் தருள்வாயாக வென்று சொல்ல, அதற்குப் பர்வதராஜன் சம்மதித்து, உடனே தோழிகள் சூழ்ந்திருக்கத் தக்கதாக, பொய்யான இடையினையுடைய தன் புத்திரியானவள் தவஞ்செய்து கொண்டிருப்பதற்கு, பொன்னால் ஒரு தவச்சாலை ஏற்படுத்தி இங்கேயிருந்து தவஞ்செய்யம்மாவென்றுசொல்ல, அங்கே தவஞ்செய்துகொண்டிருந்தாள்-எ-று.

அதுபொழுதிற்பரசிவனுந்தண்கயிலைவெற்பினம்பொன்மணிமந்திரத்துளாற்கீழ்வீற்றிருந்தே, சதுமுனிவர்தொழவவர்கட்கருளான்மெய்ஞ்ஞானஞ்சாற்றிடவோர்ந்தினிநிற்குந்தனிநிலையேதென்ன, விதுநிலையென்றொருநொடிப்போதருண்மேனிக்குறியோடெந்தையிருந்தானவர்களிருந்திடவுமந்நாட், பதுமன்முதற்றேவர்கடன்னேவல்செயச்சூரபன்மனுலகண்டங்கள்பலபுரந்தானிறையாய்.

(இ-ள்.) அவ்வண்ணம் பார்வதிதேவியார் தவஞ்செய்துகொண்டிருக்கும் போது, சிவபிரானுங் குளிர்ந்த கைலாயகிரியினிடத்து, அழகிய பொன்மயமாகிய ரத்தினங்கள் பதித்த ஆலயத்திற்குள்ளிருக்கும் ஆலமரத்தின்கீழ் வீற்றிருந்தருளி, ஜனகர்முதலாகிய நான்குமுனிவர்களும் தொழ, அவர்களுக்குக் கிருபையினாலே மெய்ஞ்ஞான உபதேசஞ்செய்ய, அவர்கள் அதை யுணர்ந்து ஐயனே இனி நாங்களிருக்கும் நிலைமையாதோ அதைத் தெரிவித்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, நீங்களிருக்கவேண்டிய நிலைமை இதுதானென்

று ஒருநொடிப்பொழுது குருமூர்த்தமாகிய திருமேனியுடன் எம்மையன் அமர்ந்திருந்தார், அவர்களும் அந்த நிஷ்டைநிலையிலமர்ந்திருந்தார்கள். அப்போது பிரமதேவன் முதலாகிய தேவர்களியாவரும் தன்னைவற்பணிசெய்யும்படி சூரபத்மாவானவன் இந்த உலகத்திற்கும் அண்டத்திற்கும் அரசனாகி அரசாக்ஷிசெய்துகொண்டிருந்தான்.—எ-று. (௬)

மாயன்முதற்றேவர்கடன்னடிபரவச்சீயமணித்தவிசினிருந்து
சுரர்மன்னவர்கண்மன்ன, னாயிரமோரெட்டண்டமோர்குடைநீழற்
கீழாண்டனன்முன்செய்தவத்தானருள்சிறிதுமற்ற, தீயவன்றனேவ
லினாலிடர்க்கடலுண்மூழ்கத் தீரும்வகைசிறிதுமின்றித் தேவர்கடற்
சூழ, மேயபுரந்தரன்கயிலைபுகுந்திறைமுன்செல்லவேளையன்றென்
றோர்ந்தயர்ந்து மேருவிற்சென்றுற்றான்.

(இ-ள்.) விஷ்ணுமுதலாகிய தேவர்கள் யாவரும் தன் பாதங்களை வணங்கும்படி சிங்காசனத்திலிருந்துகொண்டு, அசுரர்குலத்தரசர்களுக்கரசனாகிய சூரபத்மன்முன் செய்த தபோபலத்தினாலே, ஆயிரத்தெட்டண்டங்கள் தன்னுடைய ஒருகுடையின்கீழாகத் தங்கும்படி அரசாண்டான், இரக்கமென்பது கொஞ்சமுமில்லாத அந்தக்கொடியவனுடைய ஏவற்பணிசெய்வதினாலே, துக்கசாகரத்தில் மூழ்குதல் நீங்கும்வகை கொஞ்சமுமில்லாமல், தேவர்கள் யாவரும் தன்னைச்சூழ்ந்துவரும்படி வந்த தேவேந்திரன் கைலையிற்சென்று, சிவபிரான் சந்நிதானத்திற்போகக் காலமில்லாமையைத் தெரிந்து மனமிளைத்து, மகம்மேருவினிடத்திற்போயிருந்தான்.—எ-று. (௭)

உற்றவனோர்சாரணுகியருந்தவங்களிழைத்தேயொண்டொடிப
ங்கினன்கழல்களுன்னினனங்குறுநாண், மற்றவன்றன்றுயர்தீர்ப்பா
ண்றிருவுளத்துக்கொண்டே மதிமுடிப்பண்ணவன் விடைமேல்வந்து
முனநிற்ப, விற்றதினிச்சூர்க்கிளையென்றெண்ணியரன்றிருமுன்னி
ருகழல்கடொழுதெழுந்தவிந்திரனைநோக்கிக், கொற்றவநின்னுளத்தி
ன்னனிகழ்த்துதியென்றிசைப்பக் கொடுஞ்சூரன்றனைத்தொலைத்தெ
ன்குறையகற்றுகென்றான்.

(இ-ள்.) மேருமலையினிடத்திற்போன தேவேந்திரன், அங்கு ஒருபுறத்திருந்துகொண்டு அரிய தவங்கள்செய்து பார்வதிபாகனாகிய சிவபிரான் திருவடிகளைத் தியானசிந்திதனாயிருந்தான். அவ்வண்ண மிருக்குங்காலத்தி லொருநாள், அந்த இந்திரனுடைய துயரத்தை நீக்கத் தமது திருவுள்ளத்திலமைத்துச் சந்திரசேகரமூர்த்தியாகிய சிவபிரான் இடபவாகனத்தின்மே லாரோகணித்துக்

கொண்டு முன்னேவந்து காக்ஷிகொடுத்தருள, இனிச் சூரபத்மாவினுடைய குல்மெல்லாம் அழிந்துபோயதென்று தன் மனதிலெண்ணிக்கொண்டு, சிவபிரானுடைய திருமுன்னர் இரண்டு திருவடிகளிலும் பணிந்தெழுந்த இந்திரன்மேல் கிருபாநோக்கஞ்செய்து, தேவராஜனே உன் மனதிலிருக்குந் துன்பத்தைச் சொல்லக்கடவையென்று திருவாய்மலர்ந்தருளலும், சுவாமி கொடிய சூரபத்மாவை யொழித்து அடியேனுடைய குறையை நீக்கியருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தான்.—எ-று. (அ)

ஐயனவன்றனைப்பார்த்துன்றுயரனைத்துநம்பாலருட்குமரனொருவனுதித்தகற்றுவனென்றிசைத்தே, பொய்யெனவங்ககன்றனன்பின்புரந்தரனுந்துயர்களொழிந்தவணுற்றனன்சின்னாளுற்றிடுமந்நாளில், வெய்யவன்றன்பகைதுறக்கமனற்குநவிச்சேயைவிண்ணவர்களுடன்சிறையில்வீழ்த்தியதுந்தெரிந்து, நையுமனத்தினனாகிமனோவதியிற்புகுந்துநான்முகனைத்தொழுதவன்முன்னவிற்றினனீதெல்லாம்.

(இ-ள்.) இந்திர னிவ்வாறு விண்ணப்பஞ்செய்யச் சிவபிரான் அவனைப் பார்த்து, உன்னுடைய துயரத்தையெல்லாம் நம்மிடத்தி லொருபுத்திரன் உற்பவமாய் நீக்குவானென்று திருவாய்மலர்ந்தருளி விரைவில் அங்கு நின்றும் மறைந்தருளினார். பின்பு இந்திரனுமவன் துயரம் நீங்கி அவ்விடத்தில் சிலநாளிருந்தனன். அவ்வண்ணமிருக்குநாளில், சூரியன் பகைவனாகிய பானுகோபன் சொர்க்கலோகத்தைத் தீயினாற் கொளுத்திவிட்டு, இந்திரனுடைய புத்திரனாகிய சயந்தனென்பவனைத் தேவர்களுடன் பிடித்துக்கொண்டுபோய்ச் சிறையில் வீழ்த்தியதையும் தெரிந்து வருந்துகின்ற மனதையுடையவனாய், மனோவதியென்னும் பட்டணத்திற்சென்று பிரமதேவனைக்கண்டு பணிந்து அவர் முன்னே இந்தச் சங்கதிகளையெல்லாஞ் சொன்னான்.—எ-று. (கூ)

செங்கமலத்தவிசுகந்தோனெந்தைசெயலீதேற்செப்புவமிச்செயன்மாயன்றிருமுனஞ்சென்றென்றே, யங்ககன்றுதிருமான்முன்னிருவருஞ்சென்றேத்தி யாஅருளிச்செய்தவகையறைந்திடநன்றென்றே, கங்கைநதிச்சடைமுடியோன்யோகநிலைதவிரக்கலந்திடவின்பெவ்வுயிருமெமதுதுயர்கழியத், துங்கமதன்றனைவிடுக்கிலவன்செயலாலுமையைத்தோய்ந்திடுவன்முருகவேள்தோன்றிடுவனென்றே.

(இ-ள்.) செந்தாமரைமலர்மேல் மகிழ்ந்திருக்கும் பிரமதேவன் இந்திரனை நோக்கி, நம் அய்யனுடைய கட்டளை யிப்படியிருக்குமானால் நாம் விஷ்ணுவினுடைய திருமுன்சென்று இந்தச்செய்திகளைச் சொல்லுவோமென்று, அவ்விடம்

விட்டுப் புறப்பட்டு அவ்விருவரும் விஷ்ணுவினிடத்திற்போய்ப்பணிந்து, சிவபிரான் கட்டளையிட்டருளிய விவரத்தைச்சொல்லவு மவர் கேட்டு, இது நன்மையான காரியமென்று, கங்காநதியையணிந்த சடாமகுடமுள்ள சிவபிரான் யோகநிலையை நீங்கவும், எல்லா உயிர்களும் ஆண்பெண்கூடி யின்பமடையவும், நம்முடைய துயர் நீங்கவும் பலம்பொருந்திய மன்மதனை அனுப்பினால், அவனுடைய செய்கையினாலே சிவபிரான் பார்வதிதேவியாரைத் திருமணஞ்செய்துகொள்வார், சுப்பிரமணியக்கடவுள் திருவவதாரஞ்செய்வார்.—எ-று. (௧௦)

வேறு.

மாயனிவ் வண்ணமொழிதலுநன்றெனமகிழ்ந்து
பேயவாரணன்சுரரொடுமவ்விடைவிரைந்து
தூயசீர்புகழ்மனோவதிபுகுந்துமால்சுதனை
நேயமோடுளத்துன்னினனவன்முனைநின்றே.

(இ-ள்.) விஷ்ணுவானவர் இவ்வாறு சொல்லுதலும், இது நன்மையேயென்று மகிழ்ந்து, அங்கிருந்த பிரமதேவன் தேவர்களுடன் அவ்விடத்தில் நின்று விரைந்துசென்று, தூயதாய் மிகுந்த புகழுள்ள மனோவதியிற்சேர்ந்து, விஷ்ணு புத்திரனாகிய மன்மதனை வரும்படி தன்மனதில் நினைத்தான், நினைத்தவளவில் அவனவரெதிரில் வந்துநின்று—எ-று. (௧௧)

அரந்தையோடெனைவிளித்ததென்னீவிரென்றறையப்
பரிந்துவேடனைநோக்கியோநந்துயர்பறிப்பான்
விரைந்துசென்றுகன்னற்சிலைகுனித்தலர்விசிகஞ்
சொரிந்தரன்செயும்யோகநீயகற்றெனச்சொற்றார்.

(இ-ள்.) மனவருத்தத்துடன் நீங்கள் என்னை யழைத்தகாரியம் என்னவென்று மன்மதன் சொல்ல, அவனை விரும்பி நோக்கி நம்முடைய துயரத்தை நீக்கும்பொருட்டு நீ விரைந்துசென்று கரும்புவில்லைவளைத்துப் புட்பபாணங்களை யேவிச் சிவபிரான் செய்யும் யோகத்தை நீக்கிவிடென்று சொன்னார்கள்.

சொற்றசொற்செவிப்புலனுறப்புகுதலுந்துயரக்
கொற்றவாழியிற்புகுந்துளத்தினில்வெருக்கொண்டே
யிற்றதின்றுகொல்நந்திருமுழுதுமென்றெண்ணிச்
செற்றமோடவனனங்கவேளினையனசெப்பும்.

(இ-ள்.) அவர்கள் சொன்னவார்த்தை அவன் செவிப்புலனிடத்தில் நுழைந்தமாத்திரத்தில் துயரக்கடலில் மூழ்கி, மனதில் மிகுந்த பயங்கொண்டு நம்முடைய செல்வமெல்லாம் இன்றழிந்துபோயதென்று மனதிலெண்ணிக் கோபத்துடன் மன்மதனிந்த வார்த்தைகளைச் சொல்லுகிறான்.—எ-று. (௧௩)

நித்தனெவ்வுயிர்க்குமுயிராகியநிமலன்
பத்தனன்பருக்கிதமகிதங்களிற்பரம
னத்தனானந்தஞானமாமுருவுளனாதி
முத்தனாதலாலவன்செயறன்னையார்மொழிவார்.

(இ-ள்.) முடிவில்லாதவன், எல்லா உயிர்களுக்கும் உயிராயிருக்கிற நிருமலன், அடியார்க்கடியவன், இதாகிதங்களைக்கடந்துஉயர்ந்தவன், யாவருக்குந்தந்தை, ஞானானந்தசொரூபமுள்ளவன், அனாதிமுத்தன் ஆகையால் அவனுடைய திருவிளையாடல்களை யாவர் விவரித்துச் சொல்லத்தக்கவர்.—எ-று. (கச)

நீவிர்சொற்றசொல்லென்னெனமுனிந்துவேணிகழ்த்தத்
தாவினான்முகக்கடவுளுமறுத்துரைதந்தே
யேவிவேடனைநின்முனம்வருதுமென்றிசைப்பப்
பாவியவ்வணமிசைந்துமுன்கயிலையிற்படர்ந்தான்.

(இ-ள்.) ஆ ஆ நீங்கள் சொன்னவார்த்தை என்னவார்த்தையென்று மன்மதன் கோபித்துச்சொல்ல, குற்றமில்லாத பிரமதேவன் அவனுக்கு மறு உத்தரஞ்சொல்லி மன்மதனை யேவி, உனக்குமுன் நாங்களும் வருகிறோமென்று சொல்ல, அந்தப் பாவியானவ னவ்வண்ணமே செய்கிறேனென்று சம்மதித்துக் கைலாயகிரியிற்சேர்ந்தான்.—எ-று. (கரு)

மேயவெள்ளிவெற்படைந்தருணந்தியுள்விடுப்பப்
போயசஞ்சலனிற்குணனிராமயன்புனிதன்
றூயவானிழற்கீழிருந்தியற்றிடுதொல்சீ
ரேயயோகினைக்கண்டுளம்பணிந்துநின்றிரங்கி.

(இ-ள்.) அவ்வாறு சென்ற மன்மதன் அழிவில்லாத கைலைமலையைச்சேர்ந்து, அருள்நிறைந்த நந்திதேவரானவர் உள்ளே போம்படி விடுப்பப்போய், சஞ்சலாதீதனும் குணரகிதனும் நிராமயனுமாகிய சிவபிரான், பரிசுத்தமுள்ள ஆலமரத்தின்கீழ் அமர்ந்து செய்தருளும் பழமையாகிய புகழுள்ள சலனமில்லாத யோகநிலையைக்கண்டு மனதினால் வணங்கி நின்றுருகி.—எ-று. (கசு)

மன்னுமிச்செயறணித்திடலரிதெனமதித்தே
பின்னுமோர்வணந்துணிந்துமுன்பெருமிதமெய்திக்
கன்னலஞ்சிலைகுனித்துநாணொலித்திறங்கண்டே
துன்னுமாமலர்க்கணைகடேய்வேள்கணிற்சூழ்ந்தான்.

(இ-ள்.) நிலைபெற்ற இந்த யோகநிலையை நீக்குதல் அருமையென்று மன்மதன் மனதில் நினைத்து, மீண்டும் ஒருவாறு துணிந்து, முன்னே தானென்கிற மதிப்படைந்து, அழகுள்ள கரும்புவில்லை வளைத்து குணத்தொனியைத் தானறிந்துகொண்டு, தூணியிலிருக்கும் புஷ்பபாணங்களை யெடுத்துப்பிரயோகஞ்செய்து, சிவபிரானுடைய திருநேத்திரத்திலகப்பட்டான்.—எ-று. (௧௭)

துங்கவேள்விடுங்கணையெலாம்பதங்களிற்சொரிந்த
கொங்குலாமலராயினவச்செயல்குறித்தே
யெங்கணாயகன்றிருநுதல்விழிதிறந்திமைப்பி
லங்கணோக்கினன்சிரித்ததிற்றோன்றியதனலம்.

(இ-ள்.) மேன்மையுள்ள மன்மதனேவிய புட்பபாணங்களெல்லாம், சிவபிரானுடைய திருவடிகளிலருச்சித்த வாசனைவீசும் மலர்கள் போலாயின. அச்செய்கையை எங்களிறைவன் திருவுள்ளங்கொண்டு நகைத்தருளி, திருநெற்றியிலிருக்குங் கண்ணைத்திறந்து அவ்விடத்துப் பார்த்தனர். அதில் நின்றும் இமைப்பொழுதில் தீயானது தோன்றியது.—எ-று. (௧௮)

அந்தவெங்கனல்படர்ந்தொருநொடியில்வேளங்கம்
வெந்துவீழ்தரவட்டவப்புகைச்சிகைவிண்போய்
முந்தியெங்கணுமறைத்ததச்செயறனைமுகுந்தன்
மைந்தனாதியோர்கண்டனர்பதைத்துளமருண்டார்.

(இ-ள்.) அந்த வெப்பமுள்ள தீயானது படர்ந்து, ஒருநொடிப்பொழுதில் மன்மதனுடைய சரீரமானது வெந்து சாம்பலாய் விழும்படி கொளுத்திவிட்டது. அந்தப்புகையின் சிகையானது ஆகாயத்திற்சென்று முற்பட்டு அவ்விடத்தையெல்லாம் மறைத்தது அதை விஷ்ணுவினுடைய புத்திரனாகிய பிரமதேவன்முதலிய தேவர்கள் யாவர்களுங்கண்டு மனம் பதைபதைத்து மயங்கினார்கள்.—எ-று. (௧௯)

சம்புசங்கரனற்றலனென்னெனச்சாற்றி
வெம்பிமேருவிற்புகுந்தனரிரதியும்வெருண்டே
நம்பன்முன்விழுந்தலறிநின்றுணையைநல்குதுமா
லும்பர்சூழ்ந்திடுமிமயவெற்பினிலெனவுரைத்தான்.

(இ-ள்.) சம்புவென்றுஞ் சங்கரனென்றும் திருநாமங்களுள்ள சிவபிரான், மன்மதன்செய்த பிழையை க்ஷமித்தருளாதவராயினர். இது யாதுகாரணமோவென்று சொல்லி மனம் வெதும்பி, பிரமதேவன்முதலானவர்கள் மகாமேருவினிடத்தில் ஓடிப்போய்விட்டார்கள். இரதியானவள் அங்குவந்து பயந்து சிவ

பிரான் திருவடியில் வீழ்ந்தழக் கிருபைகூர்ந்து, தேவர்களெல்லாம் வந்து சூழ்ந்திருக்கும் இமயமலையினிடத்து உன் கணவனை யுனக்குப் பாலித்தருளுகிறோமென்று திருவாய்மலர்ந்தருளினார்.—எ-று. (உ0)

சொற்றபோதெழுந்திரதியெம்பகவனைத்தொழுதே
நற்றவத்தினையிமயமேலியற்றிடநடந்தாள்
சற்றுமச்செயறவிர்த்திலனிருந்தனன்றவத்தோர்
பற்றஞானமோனத்தியல்காட்டியபரமன்.

(இ-ள்.) இவ்வாறு கட்டளையிட்டருளியபோது, இரதியானவள் எம்முடைய கடவுளை எழுந்து பணிந்து இமயமலையின்மேல் நல்ல தவஞ்செய்வதற்காகச் சென்றாள். அவள் போனபின்பும் ஜனகர்முதலாகிய நான்குமுனிவர்களும் உணர்ந்துகொள்ளும்படி, ஞானமாகிய மோனநிலையை காட்டிக்கொண்டிருந்த சிவபிரான் சிறிதும் அந்நிலைமையைவிட்டு நீங்காதவராயிருந்தார்—எ-று.

ஐயனிவ்வண்ணமிருந்தனன்மேருவெற்படைந்த
துய்யநான்முகனுதியோர்மதனனுந்தொலைந்தா
னுய்வதெவ்வகையாமெலாமெனத்துயருழந்தே
செய்யதொன்றுதம்புந்தியாலங்ஙனந்தெருண்டார்.

(இ-ள்.) சிவபிரான் இவ்வண்ணம் யோகநிலையைப் பிரியாமலிருந்தனன், அதையுணர்ந்து முன்னம் மகம்மேருவினிடத்துப் போயிருந்த பிரமதேவன் முதலாகிய தேவர்கள் யாவரும், மன்மதனும் இறந்துவிட்டான் சிவபிரானும் யோகநிலைமையில் நின்றும் நீங்கினதில்லை, இனி நாமெல்லாம் பிழைப்பது எப்படியென்று துக்கித்து, இன்னது செய்யவேண்டுமென்று தங்களுணர்ச்சியினால் தெளிந்தார்கள்.—எ-று. (உஉ)

ஆலமுண்டவனடியவர்க்கெளியனுதலினாற்
சாலநாமிரந்திடலரும்பிழையெலாஞ்சகித்தே
கோலவாணுதலுமையையுமணந்தவட்கூடிக்
காலகாலனேர்சேயையுந்தருமெனக்கணித்தார்.

(இ-ள்.) நாமுய்யும்பொருட்டு ஆதியில் ஆலகாலவிஷத்தை யமுதுசெய்தருளிய பரமசிவன், அடியவர்களுக்கு எளியவனாதலால், நாம் யாவருஞ்சென்று மிகவுமிரந்துகொண்டால் நம்முடைய குற்றங்களையெல்லாம் பொறுத்தருளி, அழகும் பொலிவுமுள்ள நெற்றியையுடைய பார்வதிதேவியாரைத் திருமணஞ்செய்துகொண்டு அவளைச்சேர்ந்து, காலகாலனாகிய அந்தச்சிவபிரான் ஒரு திருமைந்தனைப் பிரசாதித்தருளுவார் என்று கருதினார்கள்.—எ-று, (உ௩)

இன்னவாறிவர்புந்திகொண்டமையமீதென்றே
முன்னமோர்ந்தவணனுகெனமருத்தெனுமுதல்வன்
றன்னையேவினர்போந்தவணந்தியாற்றடையுண்
டின்னலோடவணணைந்ததுங்கண்டனரெழுந்தார்.

(இ-ள்.) இவ்வாறு இவர்கள் புத்தியில் வைத்துக்கொண்டு, அங்கிருந்த வாயுதேவனை நோக்கிச் சிவபிரானிடத்திற்செல்லச் சமயமிதுவென்று அறிந்து வாவெனச்சொல்லி அனுப்பினார்கள், அவன்சென்று அங்கே நந்திதேவரால் தடைபட்டு துயரத்துடனே வந்ததையுங்கண்டு யாவரு மெழுந்தார்கள்.—எ-று.

ஏவருந்திரண் டிரங்கியேயிரசிதவிறும்பி
னேவிலன்புடன் மணிச்சினகரத்துமுன் னுற்றே
தேவர்தேவநின்சரண்சரணெனத்துதிசெப்பிப்
பூவின்மாரிகள்பொழிந்தனர்விழுந்தனர்போற்றி.

(இ-ள்.) இவ்வண்ணமெழுந்த இவர்கள் யாவரும் ஒன்றுகூடி மனம் வருந்தி, வெள்ளிமலையினிடத்து இரத்தினமயமாயிருக்கிற ஆலயத்தின்முன்சென்று, நீங்காத அன்புடன் தேவதேவனே அடியேங்கள் உன்னடைக்கலமென்று துதி சொல்லி, மலர்களா லருச்சித்துப் பணிந்து போற்றுதல் செய்தார்கள்.—எ-று.()

அன்னகாலையெம்பகவனுமருளினாலவர்கண்
முன்னமேவிநீரஞ்சலிரஞ்சலீர்முதனுஞ்
சொன்னவாறினிப்புரிதுமென்றிசைப்பவங்கவர்க
ளின்னனீங்கியேசுரர்கடம்பதியினிலிருந்தார்.

(இ-ள்.) அப்போது நம்முடைய கடவுளும் காருண்ணியத்தினால் அவர்களை நோக்கி, எமது திருமுன்னேவந்த நீங்கள் இனி அஞ்சவேண்டியதில்லையென்று பலமுறைசொல்லி, நாம் முன்னம் உங்களுக்குக் கட்டளையிட்டருளிய படி செய்கிறோமென்று திருவாய்மலர்ந்தருளலும், அவர்கள் யாவரும் தங்கள் தங்களிடத்தில் போயிருந்தார்கள்.—எ-று. (உசு)

வேறு.

ஆயபின்னருளாற்றூயநான் முனிவர்க்கையனுமோனநீத்தருள்வான், மேயவிம்முறையேயிருந்தருள்கலந்தேவிளங்குமின்னைவிடுத்தருளித், தீயசூர்முதலைத்தடிந்திடர்கெடுப்பான்றிருவுளத்தடைத்தெழுந்துமையா, ளுயகனிமயச்சிலம்பின்மேலுமைசெய்தற்றவங்கண்டிடநடந்தான்.

(இ-ள்.) அவ்வாறுனபின் நம்மையனுகிய சிவபிரான் யோகநிலையை நீங்கி, பரிசுத்தமுள்ளவர்களாகிய அந்த நான்கு முனிவர்களுக்குக் கருணையினுல் மோனநீங்கிக் கட்டளையிட்டருளுகின்முர். அதென்னவெனில், இவ்வாருக நிஷ்டையிலிருந்து அருளைக்கூடிப் பெருமைபெற்றிருங்களென்று விடைகொடுத்தருளி, கொடியோனுகிய சூரபத்மாவைக்கொன்று தேவர்கள் துன்பத்தையொழிக்கத் திருவுள்ளத்தடைத்தெழுந்தருளிய அச்சிவபிரான், இமயமலையினிடத்தில் உமையவள் செய்துகொண்டிருக்கும் நல்ல தவத்தைக் காணும்பொருட்டு அவ்விடத்திற் கெழுந்தருளினுர் —எ-று. (உஎ)

சென்றடர்ந்திமயச்சிகரமேலுமையாள்செய்தவச்சாலையின் மருங்கே, யொன்றுமுன்னுணராவிருத்தவேதியனுயுற்றவளுறுதிதேர்ந்துனையா, மின்றிவண்மேவிவதுவைசெய்குதுமென்றிலங்குருக்காட்டி நின்றேகித், துன்றுபேரொளிசேர்கைலைபுக்கிருந்தே தூலங்கெழுமுனிவரைநினைத்தான்.

(இ-ள்.) இமயமலையிற்போய்ச் சேர்ந்து, அம்மலையின் சிகரத்தின்மேல் உமையவள் தவஞ்செய்துகொண்டிருக்கும் தவச்சாலையிலடுத்து, யாதொன்றுந் தெரியாத மிகுந்த கிழப்பிராமணனுய்ச் சென்று உமையவள் மனவுறுதியையுணர்ந்து, உன்னை நாம் இன்றையதினம் இவ்விடத்தடைந்து விவாகஞ்செய்துகொள்ளுகிறேமென்று திருவாய் மலர்ந்தருளி, மான்மழு சதுர்ப்புஜங்களுடன் தம்முடைய திருமேனிக் கோலத்தைக்காட்டி எதிரில் நின்றருளி, மிகுந்த பிரகாசம் பொருந்திய கைலாசகிரியிற்போய்ச் சேர்ந்திருந்து, தபோபலத்தினுல் சிரேஷ்டராய் விளங்குகின்ற சப்தமுனிவர்களும் வரும்படி திருவுளங்கொண்டருளினுர்.—எ-று. (உஅ)

பரம்பரன்முன்னுஞ்செயலறிந்தெழுந்தேபடர்ந்தெழுமுனிவருந்தொழுதே, திரம்பெறுநிலைமையளித்திடவல்லாய்செய்பணியேதெமக்கென்ன, நிரம்பியதவத்தினீவிர்சென்றிமவானிகழிடத்தவன்முனம்புரிந்த, வரந்தருதவத்தாற்பெற்றமின்னனையாண்மணஞ்செயப்பேசுதிரென்முன்.

(இ-ள்.) சிவபிரான் தங்களை நினைத்தசெய்கையை யுணர்ந்து, சப்தமுனிவர்களுஞ் சென்று பணிந்தெழுந்து, அழியா நிலைமையாகிய முத்திநிலையைப் பிரசாதித்தருள வல்லவரே, அடியேங்கள் செய்யும் பணியாதோ கட்டளையிட்டருள வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்ய, மிகுந்த தவமுள்ள நீங்கள் பர்வதராஜன் வாழுமிடத்திற் சென்று, அவன் முன்செய்த தவத்தினுல்பெற்ற கன்னிகையை யாம் திருமணஞ்செய்யும்படி பேசுங்களென்று கட்டளையிட்டருளினுர்.

நன்றுநன்றெனவே மகிழ்ந்துமுன்றெழுதே நடந்தெழுமுனிவருமிமயக், குன்றமுற்றிமவான்மருங்குறவவனுங்கோலமாமலர்கடூய்ப்பணிந்தே, யின்றிவணீவிரனைவரும்வருதற்கேதுகாரணமெனத்தவத்தோர், குன்றனிமகளையெம்பரம்பரனுக்குதவெனச்செப்பவும்மகிழ்ந்தான்.

(இ-ள்.) அந்த சப்தமுனிவர்களும் ஐயனே இது எங்களுக்கு நல்லபணிவிடை யென்று துதித்துத் தொழுது சென்று, இமயமலையினிடத்திற் சேர்ந்து பர்வதராஜனிடத்திற்போக, அவனும் அழகுள்ள நல்ல புட்பங்களால் அருச்சித்துத் தொழுது, நீங்கள் யாவரு மிப்போது இங்கேவர யாதுகாரணமென்று வினவ, அந்த சப்தமுனிவர்களும் உம்முடைய புத்திரியை எங்கள் சிவபிரானுக்குத் திருமணஞ்செய்து கொடுக்கவேண்டுமென்று சொல்ல, அந்த அரசன் மனமகிழ்ந்தான்.—எ-று. (௯௦)

உளமகிழ்ந்தரனுக்கென்மகடனையின்றுதவயான்செய்தவமென்னென், றளவிலாவின்பக்கடல்புகுந்தாடியருந்தவமுனிவர்காணீவிர், வளமிகுங்கயிலைபுகுந்தரர்க்கொணர்ந்தே வம்மினென்றிசைப்பமீண்டியங்கித், தளர்நடைமுதியோர்கயிலைபுக்கிறைஞ்சிச்சம்புமுன்னினையனசொற்றூர்.

(இ-ள்.) இவ்வண்ணம் மனமகிழ்ந்து சிவபிரானுக்கு என் புத்திரியை விவாகஞ்செய்து கொடுக்க, இப்போது நான் செய்த தவம் யாதோவென்று அளவில்லாத ஆனந்தக்கடலில் மூழ்கி, அருமையாகிய தவமுள்ள முனிவர்களே நீங்கள் வளப்பமிகுந்த கைலைக்குச்சென்று, சிவபிரானை யழைத்துக்கொண்டுவாருங்களென்று சொல்ல, அதைக்கேட்டுத் தளர்ந்த நடையையுடைய பெரியோர்களாகிய முனிவர்கள் கைலைக்குச்சென்று பணிந்து, சிவபிரான் சந்நிதியில் இந்த வார்த்தைகளை விண்ணப்பஞ் செய்தார்கள்.—எ-று. (௯௧)

விலங்கன்மன்னவனிசைந்தசீர்புகன்றபின் விமலனுநந்தியைவிளித்தே, யலங்கல்சூழ்குழற்கவுரியைநமக்குவெற்பரையனீருடன்றரக்கவரத், துலங்குமாவிமயப்பொருப்பெய்தநாமுந்துரிசிலாவொற்றைவிடைநந்தே, யிலங்குமண்டலங்களெங்கணும்விடுதியாவருமிவண்வரவென்றான்.

(இ-ள்.) பர்வதராஜன் சம்மதித்ததை முனிவர்கள் சொன்ன பின்பு, சிவபிரான் நந்திதேவரை யழைத்தருளி, மாலைசூழ்ந்த அளகபாரத்தையுடைய பார்

வதி தேவியானை, நமக்குப் பர்வதராஜன் பாணிக்கிரகணஞ்செய்து கொடுப்பதைப் பெற்றுக்கொள்ள நாம் அந்த இமயமலைக்குப் போகவேண்டும், அதன் பொருட்டு குற்றமில்லாத தூதர்களை, அண்டங்களெங்கு மிருக்கிற தேவர்கள் யாவரும் இங்கு வரும்படி வினாவாக அனுப்பக் கடவையென்று கட்டளையிட்டருளினர்.—எ-று. (ருஉ)

தேவர்தேவனீதறைதலுநந்தியுஞ்சென்னியாற்றூழ்ந்துதாழ்ந்த கன்றே, காவல்வாய்தலினுற்றுவீற்றிருந்துதன்கணிப்பிலாவொற்றைவிடுப்ப,மேவுகூர்மாண்டராடகருரகர்விண்ணுலகெங்கணுமேயோர், தாவிலாப்பூதகணங்களுந்திரண்டே தகைந்தனர்கயிலையின்மாதோ.

(இ-ள்.) தேவர் நாதனாகிய சிவபிரான் இவ்வாறு கட்டளையிட்டருளினவுடன், நந்திதேவரானவர் தம்முடியினாற் பலதரம் வணங்கிச்சென்று, தாம் காவலாயிருக்கும் முதற்கோபுர வாயிலினிடத்திற் பொருந்தியிருந்து, அளவில்லாத தமது தூதரையனுப்ப, அவர்கள் சென்று சொன்னவளவில் கூர்மாண்டர் அளகேசுரர் நாகலோகத்தார் இவர்களுமன்றி, விண்ணுலகத்திலிருக்கும் யாவர்களும் குற்றமில்லாத பூதகணங்களும் கூட்டமாய்க்கூடி அந்தக் கைலாயகிரியில் வந்து சேர்ந்தார்கள்.—எ-று. (ருரு)

மாலயன்மகவான்பணிந்துமுனியங்கவசுக்கள்வெண்சாமரையிரட்டக், கோலமாமணிமென்றவிசுவிட்டிறங்கிக்கொங்கலர்மாரிகள்பொழியத், தாலமும்விசும்புமதிரநின்றளவில்சாரதர்பல்லியமுழக்க, மேலவர்மேலோன்முதற்கடையணுகிவெள்விடையேறினனம்மா.

(இ-ள்.) விஷ்ணு பிரமன் இந்திரன் ஆகிய இவர்கள் சிவபிரான் திருமுன்னே பணிந்து நிற்கவும், அஷ்டவசுக்களும் வெண்சாமரம் வீசவும், அழகு பொருந்திய இரத்தினங்களாலிழைக்கப்பட்ட மிருதுவான சிங்காதனத்தை விட்டிறங்கி, வாசனை வீசும் புஷ்பமாரி பொழியும்படியாக பூலோகமும் மேலோகமும் அதிரும்படி நின்ற தருணத்தில், சாரதர்கள் பலவாத்தியங்களை முழக்கச் சிவபிரான் முதற்கடைவாயிலை யடைந்து வெள்ளிய இடபவாகனத்தின்மீதாரோகணித்தருளினர்.—எ-று. (ருச)

கடவுளொவருங்கண்டனர்பரமன் கடிமணக்கோலமாக்கடல்களிடையகின்றூர்த்துச்சூழ்ந்துசூழ்ந்தலர்களிறைத்துமுன்றுதைந்துடனியங்கத், தடநெடுஞ்சிகரப்பனிவரைநோக்கிச்சங்கரன்சேறலுமிதன்முனடருமம்மலைமன்னுமையையிற்புகுவித்தணிமணக்கோலமாய்வித்தே.

(இ-ள்.) தேவர்கள் யாவரும் சிவபிரானுடைய திருமணக்கோலத்தைக் கண்டு, எழு சமுத்திரமும் பின்னிடும்படி ஆரவாரித்துக் கூட்டங் கூட்டமாய்க் கூடி, புஷ்பவருஷங்களைப் பொழிந்து தம்முடன் சூழ்ந்துவர, பெரிய நீண்ட சிகரங்களையுடைய இமயமலையைநோக்கிச் சிவபிரான் எழுந்தருளலும், இதற்கு முன் அவ்விமயமலை யரையன் பார்வதிதேவியாரைத் திருமஞ்சனச் சாலைக்கு அழைத்துக்கொண்டுபோய் அழகிய மணக்கோலஞ்செய்வித்து.—எ-று. (கூ௬)

தேவர்கம்மியனைவிளித்துநீ விரைந்தேசிகரமேலெங்கணுஞ்சிறக்கத், தாவில்பல்சிறப்பும்புரிதியென்றிசைப்பத்தாழ்ந்துசென்றம்மலை முழுதும், பாவனையதனாற்றடங்கள்பூம்பொழில்கள்பன்மணிக்கோயில்தெற்றிகளு,மோவியத்துடனங்கமைத்துவந்திறைஞ்சவோங்கல்மன் கண்டுளமகிழ்ந்தான்.

(இ-ள்) தேவதச்சனை யழைப்பித்து, நீ சீக்கிரமாக இந்த இமயமலை யிடமெங்கும் சிறப்புண்டாகும்படி கெடுதியில்லாத பல வளப்பங்களுஞ் செய்யென்று கட்டளையிட, பணிந்து சென்று அந்த மலையினிடமெங்கும் அவன் தாமரைத் தடாகங்களும் பூஞ்சோலைகளும் இரத்தினமயமாகிய கோயில்களும் மண்டபங்களும், சித்திரங்களுடனும், மனதினால் நினைத்து நிருமித்து வந்து பணிய, பர்வதராஜனவைகளையெல்லாங் கண்டு உள்ளே மகிழ்ச்சியடைந்தான்.—எ-று.

உளமகிழ்ந்திமவான்றமர்கள்சூழ்ந்திலங்கவோங்கலின்புடைதனில்வந்தா, னளவில்பண்ணவர்கடிரண்டுசூழ்ந்தியங்கவமரர்பூமாரிகள் பொழிய, வளமிகுந்திடுபல்லியம்பலதுவைப்பவரதனுப்பிடையுகந்தான், புளகமெய்ம்முகிழ்ப்பவெதிர்கொடுதிருமுன்பூதரமன்னவன்றொழுதான்.

(இ-ள்.) இவ்வாறு பர்வதராஜன் உள்ள மகிழ்ந்து, சுற்றத்தார்களெல்லாம் சூழ்ந்து வரத்தக்கதாக அம்மலைச்சாரலில் சென்றான், அளவில்லாத பிரமவிஷ்ணுக்கள் முதலாகிய பெருந்தேவர்கள் சூழ்ந்து வரவும், மற்றதேவர்கள் புட்பவருஷங்கள் பொழியவும், வளமிகுந்த பல வாத்தியங்கள் முழங்கவும், சிவபிரான் ரிஷபவாகனத்தின்மே லாரோகணித்துக்கொண்டு அங்கு வந்து சேர்ந்தருளினார். அதைக்கண்டு பர்வதராஜன் சந்தோஷமுள்ளவனாய்ச் சரீரமுழுவதும் புளகமடைய எதிர்கொண்டு சுவாமி சந்நிதியில் பணிந்தான்.—எ-று. (கூஎ)

அப்பொழுதவனுக் கருளளித்தவனோ டம்மலைமேவியம்மலைமே, லொப்பிலாவளங்கண்முழுவதுந்தெரிந்தேயோங்கன்மன்கோயின்மு

னணுகித்,துப்பிதழ்க்கொடிகளநந்தமாலத்திதுயரீர்த்தசும்பிவையே
ந்த, முப்புரமெரித்தோன்வெள்விடையிறங்கிமுழுமணிக்கோயிலுட்
புகுந்தான்.

(இ-ள்) அப்பொழுது சிவபிரான் அப்பர்வதராஜனுக்குத் திருவருள் பாலித்தருளி, அவனுடனே அம்மலைக் கெழுந்தருளி, அம்மலையினிடத்திருக்கும் ஒப்பில்லாத வளப்பங்களையெல்லாம் பார்த்து, அங்கிருக்கும் அவ்வரசனுடைய கோயில் முன் சென்றருளி, பவளம்போன்ற அதரத்தையுடைய தேவஸ்திரீகள் அநேகர் ஆலத்தி சுத்தவும், பூரண கும்பங்களேந்தி வரவும், திரிபுரதகனஞ் செய்தவராகிய சிவபிரான் வெண்மை நிறமுள்ள ரிஷபவாகனத்தை விட்டுக் கீழிறங்கி, பெரிய மணிகள் பதித்திருக்கின்ற திருமணக்கோயிலுக்குள்ளெழுந்தருளினார்.—எ-று. (ருஅ)

விரிகதிர்மணிபாற்குயின்றபொற்கோயின்மேயசீர்முழுவதுந்தெ
ரிந்தே, யரியபன்கரங்கடாநடந்தமலனம்பொனீண்மந்திரத்தணையச்,
சுரிகுழற்கயற்கண் மேனைவந்தமுதந் துணையடிக்கமலமேற்சொரிந்
தே,பரிவுடனகலப்பாசிவனவணோர்பன்மணித்தவிசின்வீற்றிருந்தான்.

(இ-ள்.) பரந்த ஒளியையுடைய மணிகளால் அலங்காரஞ் செய்யப்பட்டிருக்கும் அந்தக் கல்யாண மண்டபத்தில் பொருந்திய வளப்பங்களெல்லாம் நோக்கி, விஷ்ணுவும் பிரமதேவனும் இரண்டு பக்கத்திலுங் கைகொடுக்க அக்கைகளில் தம்முடைய கைகளைவைத்துக்கொண்டு நடந்து, சிவபிரான் அக்கல்யாண மண்டபத்தில் சேர்ந்தருளலும்; சுரித்து முடித்த அளகபாரத்தையுஞ் சேல்மீன்போன்ற கண்களையுமுடைய மேனையென்னும் பெயரினளாகிய அவ்வரசன்மனைவி வந்து,காமதேனுவின்பாலைப் பரிவுடன் சுவாமியினுடைய இரண்டு திருவடித் தாமரைகளிலுஞ் சொரிந்து பாதபூசைசெய்து பணிந்துசெல்ல, சிவபிரான் அங்கமைந்திருக்கும் இரத்தினமயமாகிய ஓர் சிங்காசனத்தில் வீற்றிருந்தருளினார் —எ-று. (ருகூ)

மேயவப்பொழுதினெவ்வயினுளரும்விளங்குமம்மலையின்வந்து
றலாற், றூயதென்புவிமேலுயர்ந்ததச்செயலைச்சுரர்கள்கண்டிறைஞ்
சிநின்றுரைப்ப, நாயகனெனையன்றருளினல்விளித்தேநடந்துதென்
றிசையினைநோக்கிப், போயிருசிகரப்பொதியமேலென்னப்போந்திவ
ணிருந்தனனிகர்க்க.

(இ-ள்.) சிவபிரான் இவ்வண்ணம் சிங்காசனத்தில் வீற்றிருந்தபோது எல்லா உலகத்திலிருக்கும் தேவர்கள் முதலான யாவர்களும் அந்த மலையினிட

த்துவந்து சேர்ந்தமையினாலே, பரிசுத்தமுள்ளதாகிய தென் பூமியானது மேலே உயர்ந்தது, அது உயர்ந்த தன்மையைத் தேவர்கள் கண்டு பணிந்து விண்ணப்பஞ்செய்ய, சிவபிரான் அன்று கிருபைகூர்ந்து என்னை யழைத்துத் தென் பூமியும் வடபூமியும் முன்போலச் சமனாகும்படித் தென்றிசையை நோக்கிச் சென்று சிகரமுள்ள பொதிய மலையினிடத்து இருக்கக் கடவையென்று கட்டளையிட்டருள, அவ்வாறே இப்பூமி சரிப்படும்படி நான் வந்து இங்கே யிருந்தேன்.—எ-று. (௪௦)

அன்னபின்னயன்மான்முதலினோரிறைஞ்சியணிமணிக்கோலமுன்றோன்றக், கன்னலந்தீஞ்சொற்கனியிதழுமையாள்கமலமான்முதலணங்கெவரும், பொன்னடிபரவப்போந்தரனிடத்திற்பொருவினித்திலத்தினாற்சமைத்த,மன்னுபொன்மடங்கற்றவிசின்வீற்றிருந்தாண் மகிழ்ந்தரன்கண்டுகண்களிக்க.

(இ-ள்.) அதன் பின்பு பிர்ம விஷ்ணுக்கள் முதலாகிய தேவர்கள் பணியவும், அலங்கரித்திருக்கும் திருமணக்கோலம் விளங்கவும், கரும்பின் ரசமொத்த மதுரமுள்ள வசனத்தையும் கோவைக்கனிபோன்ற அதரத்தையுமுடைய பார்வதிதேவியார்-செந்தாமரைப்புட்பத்திலும் வெண்தாமரை மலரிலும் வீற்றிராநின்ற திருமகளும் சரஸ்வதியும் முதலாகிய தேவஸ்திரீகள் யாவரும் பொலிவுள்ள தம்முடைய திருவடிகளைத் துதிசெய்யவும் சென்று, ஒப்பில்லாத முத்துகளால் சமைக்கப்பட்ட சொர்னமயமாகிய சிங்காதனத்தில் வீற்றிருந்தருளும் பரமசிவனிடப்பாகத்தில் அவர்கள்கண்டு கண்களிக்கும்படிபொருந்தியிருந்தார்.

அவ்வயினிமவானங்கைமேலுதகமள்ளிவின்றெழூக்கியெம்மகளை, யிவ்வயினினக்கின்றளித்தனனென்றேயிணையடிபரவவெம்பெருமான்,பவ்வமேழுடைந்தொன்றாயபோற்றிரண்டேபண்ணவரார்த்தலர்பொழியக், கொவ்வையங்கனிவாயுமைதிருக்களத்திற்கோலநூலணிந்துகைப்பிடித்தான்.

(இ-ள்.) அவ்விடத்தில் பர்வதராஜன் வந்து பார்வதிதேவியாருடைய திருக்கரங்களை சுவாமியினுடைய திருக்கரங்களின்மேல் வைத்து சலத்தை யள்ளிவிட்டு, இப்போது என் புத்திரியை தேவரீருக்கு தத்தம்பண்ணிக்கொடுத்தேனென்று சுவாமியினுடைய திருவடிகளில் வணங்கினவளவில், ஏழுசமுத்திரம் ஒன்றானதுபோல சந்தோஷத்தினால் தேவர்களெல்லாம் ஆரவாரித்து கற்பகப் புஷ்பமாரி பெய்யும்படி, பார்வதி தேவியார் திருக்கழுத்தில் திருமங்கில்லிய சூத்திரமணிந்து அவருடைய சுண்டுவிரலைப்பற்றி யருளினார்.—எ-று.

மடமயிலனையமகளைநன்றருளால்வரைந்தபின்வந்துமுன்றொழு தே, கடலமுதனசொல்லிரதியென்னுயிராங்கணவனைத்தருதியென்றி சைப்பப், படவரவசைத்தோனவடனக்குருவாய்ப்பார்க்கின்மற்ற வர்க்கெலாமருவா, யடறருசிலைவேள்வந்துமுன்பரவவளித்தனனவ ளுளுங்களிக்க.

(இ-ள்.) மடப்பந்தங்கிய மயில்போலச் சாயையுமுடைய பர்வதராஜன் புத்திரியை மிகுந்த கிருபையினால் திருமணஞ்செய்து பின்பு, பாற்கடலிலுண் டாகிய அமுதம்போன்ற வசனத்தையுடைய இரதிதேவியானவள் வந்து தொ ழுது, ஐயனே என்னுயிரையொத்த கணவனாகிய மன்மதனை எளியேனுக்குப் பாலித்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, கிருபைகூர்ந்து படம்பொ ருந்திய பாம்பினைத்திருவரையினிடத்துக் கச்சாக அணிந்திருக்கும்பரமசிவன், அந்த இரதிக்கு உருவமாகியும் பார்க்குமிடத்தில் மற்றவர்களுக்கெல்லாம் அ ரூபமாகியுந்தோன்ற, வெற்றிபொருந்திய கருப்பு வில்லையுடைய மன்மதனான வன் வந்து தம்முடைய திருவடிகளைத் துதிசெய்யவும் இரதியினுடைய உள் ளஞ் சந்தோஷிக்கவும் பிரசாதித்தருளினார்.—எ-று. (சரு)

ஏயவச்செயல்கண்டியாவருமகிழ்ந்தாரிறைவன்முன்னெவர்க்கு மன்றிமவான், றாயநல்விருந்தங்களித்தனதற்பின்சுந்தரியுடன்வி டையுகைத்தே, போயிருங்கயிலைபுகுந்தவரவர்கள்போற்றியேவிடை கொடுபட, நாயகனுமையைமருவியின்பெவர்க்குநண்ணவேயெண் ணிவீற்றிருந்தான்.

(இ-ள்.) பொருந்திய அந்த செய்கையைக்கண்டு பிரம விஷ்ணுக்கள் முத லாகிய யாவரும் மகிழ்ச்சியடைந்தார்கள். பரமசிவன் முதல் அங்குவந்திருக் கும் எல்லாருக்கும் பர்வதராஜனானவன் பரிசுத்தமுள்ள நல்ல விருந்து செய்வி த்தனன். அதன் பின்பு பார்வதிதேவியாருடன் ரிஷபவாகனத்தின்மே லாரோ கணித்துக்கொண்டு சென்று கைலாசகிரியில் எழுந்தருளி, விஷ்ணுமுதலாகிய யாவருந் துதிசெய்து விடைபெற்றுக் கொண்டுசெல்லக் கட்டளையிட்டருளி உயிர்களுக்கெல்லாம் இன்பமுண்டாகும்படி திருவுள்ளத்தில் கருதிப் பார்வதி தேவியாருடன்கூடி வீற்றிருந்தருளினார்.—எ-று. (சச)

வேறு.

விரிகதிர்வெள்ளிக்குன்றின்விமலன்வீற்றிருக்குநாளி
லரியயன்மகவான்விண்ணோரனைவருங்குழுமிச்சென்றே
யெரிசுடர்மணிப்பொற்கோயிலெய்தியெம்மிறைவற்போற்றித்
தரியலர்த்தெறவோர்சேயைத்தருதியின்றெமக்காயென்றார்.

(இ-ள்.) பரந்த கிரணங்களையுடைய வெள்ளிமலையினிடத்துப் பரமசிவம் வீற்றிருந்தருளும்போது, விஷ்ணு பிரமன் தேவேந்திரன் மற்றதேவர்கள் இவர்கள் யாவருங் கூட்டமாய்க்கூடிச் சென்று, பிரகாசியாநின்ற மாணிக்கங்கள் பதிக்கப்பட்டிருக்கிற சொர்னமயமாகிய திருக்கோயிலுக்குள்சென்று, தம்முடைய இறைவனாகிய பரமசிவத்தைப் போற்றிசெய்து. ஐயனே எங்கள் பகைவர்களாகிய சூரபத்மன் முதலாகிய அசுரர்களைக் கொல்லும்பொருட்டு ஒரு புத்திரனை எங்கள் பொருட்டாகப் பிரசாதித்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தார்கள்.—எ-று. (சகூ)

தருதியென்றிசைத்தபோதிற்சங்கரனருளாலுன்னப்
பொருவருமுகங்களாறும்பொள்ளெனவிளங்கிநெற்றித்
திருவிழிகளினோராறுசெம்பொறிபிறந்தேவிண்ணோர்
வெருவியெங்கணுஞ்சென்றோடவிழுங்கியதண்டமெங்கும்.

(இ-ள்.) தேவர்கள் யாவரும் ஒரு திருமைந்தனை அடியேங்கள் பொருட்டு பிரசாதித்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தபோது, பரமசிவங் கிருபையினாலே திருவுள்ளத் தடைத்தலும் ஆறு திருமுகங்கள் விளங்கி, நெற்றியிலிருக்கும் ஆறுகண்களிலும் ஆறுதீப்பொறிகள் உண்டாகித் தேவர்களெல்லாரும் பயந்தோடும்படி அண்டங்களெல்லாம் வியாபித்தன.—எ-று. (சசு)

மன்னுமப்பொழுதினேங்கல்வல்லியும்வெருவிச்செல்லப்
பொன்னடிதுணைகடாக்கிப்புனையணிமணியொன்பானு
நன்னிலத்துக்கண்டன்பாய்நாதனுற்றதனைநோக்கக்
கன்னியரொன்பானாகிக்கருப்பமுற்றுமைபாலுற்றார்.

(இ-ள்.) தீயானது அண்டங்களெங்கும் வியாபித்தபோது மலைமகளாகிய பார்வதிதேவியாரும் பயந்தோட, அழகுள்ள அவருடைய இரண்டு திருவடிகளி லணிந்திருக்கும் சிலம்புகள் ஒன்றோடொன்று தாக்கி, அச்சசிலம்புகளில் பதித்திருக்கிற நவரத்னங்களும் நல்ல பூமியினிடத்திற் சிந்த, பரமசிவம் அன்புடன் அந்த மணிகளைப் பார்த்தவளவில் அம்மணிகளிலிருந்து ஒன்பது மாதர்கள்தோன்றிக் கருப்பமடைந்து பார்வதிதேவியாரிடத்திற்சேர்ந்தார்கள்—எ-று.

தீதிலப்பொறிகளீசன்றிருவருளாலேவந்த
காதலாலடுதல்செய்யாதஞ்சவேசெய்துநின்ற
மாதவன்முதலோர்மீண்டும்வந்தரற்புகழ்ந்துபோற்ற
நாதனஞ்சலிரொன்றேதன்னற்கணமமைத்துப்பின்னர்.

(இ-ள்.) குற்றமில்லாத அந்தப் பொறிகள் பரமசிவனுடைய திருவருளால் வந்தவைகளாகலின் ஒருவரையுங்கொல்லாமல்பயப்படும்படிசெய்து நின்றன. விஷ்ணுமுதலாகிய தேவர்கள் யாவரும் மறுபடிவந்து பரமசிவனைப் புகழ்ந்து துதிசெய்ய, பரமசிவன் அவர்களைநோக்கி நீங்களஞ்சவேண்டாமென்று அபையாஸ்தங் கொடுத்தருளி, பின்பு—எ-று. (சஅ)

நீண்டவப்பொறிகடன்னை நின்மலன்குறுகச்செய்தே
மூண்டெழுகனலின்றேவைவிளித்துநீமுடியிற்றாங்கி
மாண்டகுசரவணத்தின் வைத்தியென்றிசைத் துக்காற்றை
யாண்டவண்கொடுபோயுய்க்கவவண்செலுத்திச்செல்லென்றான்.

(இ-ள்.) மிகுதியாகப் பரந்த அத்தீப்பொறியைப் பரமசிவம் குறுகிவரும்படி கடாக்ஷித்தருளி, சுவாலை மூண்டெழுகின்ற அக்கினிதேவனை அழைத்தருளி, இந்தப்பொறிகளை நீ உன்முடியிற்றாங்கிக்கொண்டுசென்று மாட்சிமைபொருந்திய சரவணப் பொய்கையினிடத்தில் வைக்கக் கடவையென்று கட்டளையிட்டருளி, வாயுதேவனை நோக்கி இந்தப் பொறிகளை அந்தச் சரவணப்பொய்கையினிடத்து அக்கினிதேவன் கொண்டுபோய் சேர்க்கும்படி யங்கே செலுத்திப்போகக் கடவையென்று கட்டளையிட்டருளினார்—எ-று. (சகூ)

பரனிசைத்தருளத்தீயோன்பணிந்துதன்முடியாற்றாங்கிக்
கருகிமெய்சோரலாற்றான்கங்கையிற்றிகழவைத்தான்
வரநதிவாங்கிச்சென்றேவனமெலாம்படைத்ததெய்வச்
சரவணத்திடையேயுய்க்கச்சண்முகமாயதாறும்.

(இ-ள்.) பரமசிவ மிவ்வாறு கட்டளையிட்டருள, அக்கினிதேவனானவன் வணங்கி அத்திப்பொறிகளைத் தன்முடியினாலே தாங்கிக்கொள்ளத் தன்சரீரமான துகருகிச் சோர்வினால் சகிக்காதவனாய் கங்கையினிடத்துவிளங்கும்படி வைத்தான். அத்திப்பொறியைக் கங்காநதிவாங்கிச்சென்று அழகுகளெல்லாம் படைத்த தெய்வத்தன்மையுள்ள சரவணமென்னும் புல்லினிடத்துவைக்க, அப்பொறிகளாறும் ஆறு திருமுகங்களாயின.—எ-று. (ருo)

அங்கவைகண்டுவானோர்திசயித்தருமின்றன்னை
யிங்கிவைபுரமினீரென்றிசைத்திடவளிக்கச்சென்றார்
சங்கரனுமையோடங்கன்றனிவிடையுகைத்துச்சென்றே
மங்கையைநோக்கியுன்றன்மைந்தனையெடுத்தியென்றான்.

(இ-ள்.) அந்த ஆறுபொறிகளும் ஆறுமுகமுள்ள குழந்தையானதைத் தேவர்கள் கண்டு அதிசயித்து, ஆறு நக்ஷத்திரங்களாயிருக்குங் கார்த்திகை நக்ஷத்திரத்தை நோக்கி, நீங்கள் பால்கொடுத்து இந்தக் குழந்தையைக் காக்கக்கடவீர்களென்று சொல்ல, அந்த நக்ஷத்திர ரூபமாயிருக்கிற மாதர்கள் அறுவரும் பால்கொடுக்கச் சென்றார்கள். அதன்பின்பு பரமசிவம் பார்வதிதேவியாருடன் ஒப்பற்ற ரிஷபவாகனத்தி லாரோகணித்துக்கொண்டு அந்த விடத்திற்குப் போய், பார்வதிதேவியாரை நோக்கி நீ உன்பிள்ளையை எடுத்துக்கொள்ளென்று திருவாய் மலர்ந்தருளினார்—எ-று. (ருக)

ஐயனீதறைந்தபோதங்சாதரவுடன்போந்தேதன்
கைகளாலணைத்துச்சேர்த்தியெடுத்தனள்கௌரியெந்தை
செய்யபன்னிருகையாறுசெம்முகமுடனேவானோ
ருய்யவேயகந்தகோடியருக்கரினுருவுகொண்டார்.

(இ-ள்.) பரமசிவ மிவ்வாறு திருவாய் மலர்ந்தபோது, பார்வதி தேவியார் விருப்பத்துடன் சென்று தன் கைகளாலணைத்துச்சேர்த்து எடுத்தார். அவ்வாறெடுத்த வளவில் என்னையனாகிய ஆறுமுகக்கடவுள் செவ்விதான பன்னிரண்டு திருக்கரங்களுடனும் செந்தாமரை மலர்போன்ற ஆறுதிருமுகங்களுடனும் தேவர்களெல்லா முய்யும்பொருட்டு கோடி சூரியர்கள் ஏககாலத்தி லுதயமானது போலத் திருமேனிகொண்டருளினார்.—எ-று. (ருஉ)

ஆங்கதுசண்டெம்மன்னையகமகிழ்ந்துச்சிமோந்தே
யோங்கல்களெனநின்றோங்குமொளிர்முலைத்துணைகள்விம்மித்
தேங்கியேயொழுகுந்தீம்பால்சேயினுக்களிக்கத்துய்த்தான்
பூங்குழலுமையாளேந்திப்புராரிகைக்கொடுத்தாளங்கண்.

(இ-ள்.) நம்முடைய தாயாகிய பார்வதிதேவியார் அந்தக் குழந்தையைக் கண்டு திருவுள்ளமகிழ்ந்து உச்சிமோந்து, மலைகள்போல உயர்ந்து விளங்காநின்ற திருத்தன பாரங்கள் பூரித்து நிறைந்து ஒழுகாநின்றபாலினைத் தன்புத்திரனுக்குக் கொடுத்தருள அவரும் உண்டருளினார். அதன் பின்பு பூமாலைக ளணியப்பட்டிருக்கிற அளகபாரத்தையுடைய பார்வதிதேவியார், அக்குழந்தையைத் தன் கையிலேந்திக்கொண்டு அங்கு சென்று பரமசிவனுடைய திருக்கரங்களில் கொடுத்தருளினார்.—எ-று. (ருங)

அல்லுறழ்மிடற்றுப்புத்தேளறுமுகன்றன்னைவாங்கிப்
புல்லியேயுச்சிமோந்துபூதரமடந்தைதன்னைத்
தொல்லைபோல்விடையிமேனற்றிச்சூர்ப்பகைதனைநாப்பண்வைத்
தொல்லையில்வெள்ளிக்குன்றினுற்றுவீற்றிருந்தாரம்மா.



சூர்பத்மனை ஜெயிக்க ஆறுமுகக்கடவுளைப படைத்தது.

(இ-ள்.) இருளையொத்த காளகண்டத்தையுடைய பரமசிவம், ஆறுமுகக் கடவுளைத் தன் திருக்கரங்களிலேந்திக்கொண்டு மார்போடணைத்து உச்சிமோந்து, மலைமகளாகிய அந்தப்பார்வதியை முன்போலரிஷபவாகனத்தி லேற்றிக் கொண்டு, சூரபத்மனுக்குப் பகைவராகிய ஆறுமுகக்கடவுளைத் தங்களிருவர் மத்தியில் வைத்துக்கொண்டு விரைவாகச்சென்று, வெள்ளிமலையாகிய கைலாசகிரியில் வீற்றிருந்தருளினார்.—எ-று. (கச)

அளவிலாமகிழ்ச்சிபூண்டங்கரியயன்மகவான்விண்ணோர்
புளகமேற்கொள்ளநாதன்பொன்னடித்துணைகள்போற்றித்
தளவவெண்ணகையாமன்னை சண்முகன்றனையும்போற்றி
வளமிகவளித்தியென்றேமன்னனைவிடைகொண்டார்கள்.

(இ-ள்.) விஷ்ணு பிரமதேவன் தேவேந்திரன் மற்றுமுள்ள தேவர்கள் யாவரும், ஆறுமுகக் கடவுளாகிய சுப்பிரமணியக் கடவுளைக்கண்டு அளவில்லாத மகிழ்ச்சியையடைந்து புளகாங்கிதமுற்று, பரமசிவனுடைய பொலிவுள்ள திருவடிகளைப்போற்றிசெய்து, முல்லையரும்பையொத்த நகையினையுடைய பார்வதிதேவியாரையும் சுப்பிரமணிய சுவாமியையும் போற்றிசெய்து, வண்மைமிகும்படி இந்தக் குழந்தையை அளித்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்து விடைபெற்றுக்கொண்டார்கள்.—எ-று. (கரு)

பண்ணவரகன்றபின்சூர்ப்பகைவன்முன்புரமூன்றட்ட
வண்ணறன்புயத்துமேலுமல்கல்சேருரத்துமேலுந்
தண்ணுலாம்புளகக்கொங்கைச்சங்கரிகரத்தின்மேலு
நண்ணியேவளர்ந்தானும்பர்நடுக்கமென்வினைகடீர்ப்பான்.

(இ-ள்.) தேவர்கள் விடைபெற்றுக்கொண்டு போனபின்பு, சூரபத்மனுடைய பகைவரும் தேவர்களுடைய நடுக்கத்தையும் எளியேனுடைய இருவினைகளையும் தீர்த்தருளுகின்றவருமாகிய சுப்பிரமணிய சுவாமியானவர், திரிபுரதகனஞ்செய்த பரமசிவனுடைய திருத்தோள்களின்மேலும், கொன்றைமாலை பொருந்திய மார்பின்மேலும், குளிர்ச்சிபொருந்திய புளகமுற்ற திருத்தனபாரங்களுள்ள பார்வதிதேவியாருடைய திருக்கரங்களின் மேலுமாகப் பொருந்தி வளர்ந்தருளினார்.—எ-று. (கசு)

ஐயனங்குமையைநோக்கியறுமுகன்றுணையாய்மைந்தர்
தையலார்தரச்சாற்றென்னச்சாற்றினனவர்கடன்பால்
வையகமுய்யவீரவாகுமுன்னோன்பான்வீரர்
மெய்யின்வேர்வையினிலக்கம்வீரர்வந்துதயமானார்.

(இ-ள்.) சுப்பிரமணிய சுவாமியானவர் இவ்வாறு வளரும்போது, பரமசிவம் பார்வதிதேவியாரை நோக்கி, நம்முடைய சண்முகக் குழந்தைக்குத் துணையாக முன் கெர்ப்பங்கொண்டிருக்கிற ஒன்பது மாதர்களும் புத்திரர்களைப் பெறும்படி கிருபைசெய்யென்று திருவாய்மலர்ந்தருள, பார்வதிதேவியார் அம்மாதர்களைநோக்கி நீங்கள் புத்திரர்களைப் பெறக்கடவீர்களென்று கடாக்ஷித்தருளலும்; அம்மாதர்களுக்கு அன்புடன் இவ்வுலகமெல்லாம் உய்யும்பொருட்டு வீரபாகு தேவர்முதலாக ஒன்பதுவீரர்களும், அந்தமாதர்களுடைய சரீரத்தின் வேர்வையில் லக்ஷம்வீரர்களும் திருவவதாரமானார்கள்.—எ-று. (ருஎ)

செறுநர்கள் வாழும்வாழ்வுஞ்சிதைக்கவந்துதையமான
வுறுதிசேர்வீரர்க்கண்ணலொல்லையிலருளிநீதென்று
மறுமுகன் றுணைவராகியவன்மொழிந்திடுங்குற்றேவன்
மறுவறவாற்றிச்சென்மினமற்றவன்பாலுற்றென்றான்.

(இ-ள்.) பகைவராகிய சூரபத்மாமுதலிய அவுணர்களுடைய வரங்களையும் செல்வங்களையும் கெடுக்கும்படி வந்தவதாரஞ்செய்த, பலம்பொருந்திய லக்ஷத்தொன்பது வீரர்களுக்கும் பரமசிவங் கிருபை பாலித்தருளி, நீங்களெந்நாளும் சண்முகக்குழந்தைக்குச் சகோதரர்களாகி அவன்பாலிருந்துகொண்டு, கட்டளையிடுகிற குற்றேவல்களைப் பழுதறச் செய்துகொண்டிருக்கக் கடவீர்களென்று கட்டளையிட்டருளினார்.—எ-று. (ருஅ)

அவ்வணமிசைந்துவீரரரனடிபணிந்துபோற்றி
யெவ்வமிலெங்கோன்செவ்வேளிணையடிக்கமலம்போற்றிச்
செவ்விதினொழுகவெந்தைசென்றுசென்றுலகும்வெற்பும்
பவ்வமுந்திரிந்துநல்கிப்பற்பலவாடல்செய்தான்.

(இ-ள்) இலக்ஷத்தொன்பது வீரர்களும் பரமசிவங் கட்டளையிட்டருளியபடி மாறுபாடில்லாமல் நடக்கச் சம்மதித்து, அவருடைய திருவடிகளைப்பணிந்து துதிசெய்தும், குற்றமில்லாத நம்மிறைவனாகிய சுப்பிரமணியக் கடவுளினுடைய இரண்டு திருவடித் தாமரை மலர்களை போற்றிசெய்தும் கிரமமாக நடந்துகொண்டிருக்க, அதற்குமேல் சுப்பிரமணிய சுவாமியானவர் திரிலோகங்களிடத்திலும் அஷ்டகுலபர்வதங்களிடத்திலும் ஏழுசமுத்திரத்தினிடத்திலும் சென்று சென்றுலாவி ஆத்மகோடிகளுக்கு வருத்தமில்லாமல் கிருபைகூர்ந்தருளி பலபல விநோதமாகிய திருவிளையாடல்கள் செய்தருளினார்.—எ-று. (ருகூ)

மேவியங்கொருநாளம்பொன்மேருவினோடுமெல்லைத்
தேவர்கோன்முதலோர்கண்டுசெறுநனென்றிகற்போர்செய்ப

வாவிபோயவர்கண்மாளவட்டடனெழுப்பியன்பா
லேவருங்கண்டுபோற்றவெழிற்பெருவடிவுகாட்டி.

(இ-ள்.) சுப்பிரமணிய சுவாமியானவர் இவ்வாறு திருவிளையாடல்கள் செய்துகொண்டிருக்குநாளில் ஒரு நாள், மகம்மேருவினிடத்தில் யாரோ ஒருவன்போல ஓடும்போது, தேவேந்திரன் முதலாகிய விண்ணவர் யாவர்களும் கண்டு, இவ்வுலகங்களை எல்லாம் மாறுபாடு செய்துகொண்டிருக்கிற பகைவன் இவனேயென்று தங்களுக்குள்ளெண்ணிப் பெரிய யுத்தஞ்செய்தார்கள். அவர்களெல்லாம் இறக்கும்படி கொன்று காருண்ணியத்தினால் அப்போதேயவர்களை எழுப்பி, அவர்களெல்லாருங்கண்டு துதிசெய்யும்படி சவுந்தரியமுள்ள தம்முடைய விஸ்வரூபத்தைக் காண்பித்தருளினார்.—எ-று. (சுO)

பின்னுமங்கவர்கள்வேண்டப்பிள்ளைமைவடிவுகொண்டே
மின்னவிர்கழல்கள்போற்றவிடைகொடுத்தவர்கட்கேகி
யென்னையாளுடையானென்பானிலக்கரும்பணிந்துபோற்ற
மன்னுபேரொளிசேர்வெள்ளிமலையின்முன்வாய்தலுற்றான்.

(இ-ள்.) இவ்வாறு விஸ்வரூபங் காட்டினபின்னு மத்தேவர்கள் வேண்டுதலினாலே பாலரூபங்கொண்டு,அவர்கள் யாவருந் தம்முடைய திருவடியைப் போற்றிசெய்ய அவர்களுக்கு விடைகொடுத்தருளி, என்னை யாட்கொண்டருளும் சுப்பிரமணியக் கடவுளானவர் அங்கிருந்தெழுந்தருளி, லக்ஷத்தொன்பது வீரர்களும் பணிந்து துதிசெய்ய, நிலைபெற்றதாகிய மிகுந்த பிரகாசம் பொருந்திய கைலாசகிரியின் முதற் கோபுரவாசலினிடத்துச் சேர்ந்தருளினார்.—எ-று.

அந்நாளிமையோர்சூழவளவில்சீர்நாரதன்றான்
செந்தழலோம்புமங்கண்செச்சையொன்றுதித்துத்தேவர்
சிந்திடவுதல்செய்யச்சிதறியெங்கணுஞ்சென்றோடி
வந்தடைந்திரந்துபோற்றமாதகர்ப்பற்றியூர்ந்தான்.

(இ-ள்.) அந்நாளில் அளவில்லாத சிறப்பினையுடைய நாரதமுனிவர், தேவர்களெல்லாருஞ் சூழ்ந்திருக்கும்படி ஒரு யாகஞ்செய்தவிடத்தில் ஒரு ஆடுண்டாகி,தேவர்களெல்லாஞ் சிதறியோடும்படி கொலைத்தொழில்செய்ய,அத்தேவர்களெல்லாருமெங்கெங்குமோடிச் சுப்பிரமணியசுவாமியினிடத்துவந்து தங்களுக்கு நேரிட்ட துன்பத்தைச்சொல்லி இரந்து துதிசெய்ய, அதனைத்திருச்செவியுட்கொண்டு கிருபைகூர்ந்து, வீரவாகுதேவனையனுப்பி அந்த ஆட்டுக்கிடாவைப் பிடித்துக்கொண்டுவரச்சொல்லி அதன்மே லாரோகணித்துக்கொண்டு செலுத்தினார்.—எ-று. (சுஉ)

பின்னருமயனையோர்நாட்பிரணவத்துண்மைகூறென்
றன்னதுவினவிச்சற்றுமறிந்திலன்மொழியானஞ்ச
வின்னதுதெரியுமென்றேயிசைத்ததென்னென்றுகையாற்
சென்னியிற்குக்கிக்கந்தச்சிலம்பினிற்சிறைசெய்வித்தான்.

(இ-ள்.) பின்னுமொருநாள் பிரமதேவனை நோக்கிப் பிரணவத்தின் உண்மைப்பொருளைச் சொல்லென்றுவினவி, அவனப்பொருளைச் சிறிது மறியாதவனய்ச்சொல்லாமற் பயந்திருக்கக்கண்டு, இப்பிரணவத்தின்பொருள் தெரியுமென்று சொன்னது என்னகாரணமென்று கோபங்கொண்டு, தம்முடைய திருக்கரத்தினால் அவன் தலையில்குட்டிக் கந்தகிரியினிடத்துச் சிறையில் வைக்கும்படி கட்டளையிட்டருளினார்.—எ-று. (சுரு)

வரன்றனைச்சிறையில்வீழ்த்திவையகமுழுதுந்தாங்கித்
திரம்பெறநல்கிக்கந்தச்சிலம்பினுற்றமலன்சென்றே
யிரந்திடவிட்டுநீயிங்கிசையெனமுறையாற்சொற்றே
யரன்கொடுகயிலைமேவவபர்ந்துடனிருந்துவாழ்ந்தான்.

(இ-ள்.) பிரமதேவனைச் சிறையில்வைத்து, இந்த உலகத்தையெல்லாம் படைத்துத் தாங்கி உறுதிபெறும்படி கிருபைபாலித்தருளிக் கந்தகிரியிலெழுந்தருளி யிருந்தார். பிரமதேவனைச் சிறையிலிட்டிருக்கிற செய்தி பரமசிவத்திற்குத்தெரிந்து சுப்பிரமணியரிடத்திற் சென்று, அவன் சிறையை மீட்டும்படி இரந்து கூறியதினால் சிறையை நீக்கிவிட்டு, பின்பு பரமசிவம் சுப்பிரமணியசுவாமியை நோக்கி உனக் கந்தப் பிரணவப்பொருள் தெரியுமோவென்று கேட்க, அதனை யுபதேசக் கிரமமாகசொல்லியருளப் பரமசிவன் அதைக்கேட்டுக்கொண்டு கைலைக்கெழுந்தருள, அவருடன்சென்று அமர்ந்து வாழ்ந்தருளினார்.

தேசிகன்குமரன்செவ்வேள்சிறந்துவீற்றிருக்குநாளிற்
பேசருந்துயரமென்னும்பெருங்கடல்கடந்துவாழ
வாசவனயன்மால்விண்ணோர்மற்றுளோர்கயிலைமேவி
யீசனைப்பணிந்துகுறையினியழித்தருள்வாயென்றார்.

(இ-ள்.) சிவகுருவென்றும் குமரனென்றும் செவ்வேளென்றுந் திருநாமங்களுள்ள சுப்பிரமணியசுவாமியானவர் கைலாசத்தில் வீற்றிருக்குநாளில், சொல்லுதற்கரிய துயரமென்கிற பெரிய சமுத்திரத்தைக் கடந்து முன்போல வாழ்ந்திருக்கும்பொருட்டு, தேவேந்திரனும் பிரமதேவனும் விஷ்ணுவும் தேவர்களும் மற்றுமுள்ள யாவர்களும் அங்குச்சென்று, பரமசிவத்தைப் பணிந்து

ஐயனே இனிச் சூரபத்மாவை அழித்து எங்களை ரக்ஷித்தருள வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தார்கள்.—எ-று. (௬௫)

மற்றவருரைத்தபோதெம்வரதனுங்கருணைகூர்ந்தே
நற்றிருமுகமாறுள்ளநம்பியையநோக்கித்தீமை
பற்றியங்கமருஞ்சூரபன்மனைக்கிளையோடட்டே
வெற்றிகொண்டிவண்மேவென்றேவிளம்பியங்கருளினானே.

(இ-ள்.) இவ்வாறு விஷ்ணுமுதலான அனைவரும் விண்ணப்பஞ் செய்தபோது, நம்முடைய பரமசிவங் கிருபைகூர்ந்து ஆறுதிருமுகங்களுள்ள சுப்பிரமணிய சுவாமியைப் பார்த்தருளி, கொடுமையான தொழில்களைச் செய்துகொண்டு அங்கு வாழ்கின்ற சூரபத்மாவை, அவனுடைய சுற்றத்தாருடன்கொன்று செயம் பெற்றுக்கொண்டு இவ்விடத்திற்கு வரக்கடவையென்று கட்டளையிட்டருளினார்.—எ-று. (௬௬)

தருமநன்னெறியின்மிக்கதசவுருத்திரரைவாளி
பொருதனுமற்றுமாக்கிப்போற்றிவையெனமுன்னல்கி
யொருநொடிமுன்னமண்டமெங்கணுமுற்றுமீண்டே
வருமனவேகமென்னும்வையமும்வகுத்தொன்றீந்தே.

(இ-ள்) தருமநெறியில் மிகுந்தவர்களாகிய பத்து ருத்திரர்களை, பாணங்களும் போர்செய்தற் கேதுவாகிய வில்லும் மற்றுமுள்ள ஆயுதங்களுமாக நிருமித்து, இவைகளைப் போற்றிவைத்துக்கொள்ளென்று முன்னே கொடுத்தருளி, பின்பு ஒரு நொடிப்பொழுதளவில் பல்லாயிரங்கோடி அண்டங்களிலுஞ் சென்று திரிந்துவரத்தக்க மனோவேகமென்று பெயருள்ள ஒரு இரதத்தையும் நிருமித்துக் கொடுத்தருளி.—எ-று. (௬௭)

தராதலமுழுதுமோரங்குலியினாற்றரிக்குமொவ்வொன்
றிராயிரம்பூதவெள்ளமிலக்கரோடொன்பான்வீரர்
கராசலமன்னன்வேதன்கண்ணனும்பரவிச்செல்லப்
பராபரனளித்துப்பின்னும்பகருவானோர்சொன்மாதோ.

(இ-ள்.) ஒவ்வொருபூதமும் தமது விரலினாலே இந்த பூலோகமுழுவதையுந் தாங்கத்தக்க வல்லமையுள்ளதாகிய இரண்டாயிரவெள்ளமென்று தொகையுள்ள பூதகணங்களையும், இலக்ஷத்தொன்பது வீரர்களையும், அயிராவதமென்னும் யானையையுடைய தேவேந்திரனும் பிரமதேவனும் விஷ்ணுவும் துதிசெய்துகொண்டு அவருடன் செல்லவும் பரமசிவங் கொடுத்தருளி, பின்னுமொருவார்த்தை திருவாய்மலர்ந்தருளினார்.—எ-று. (௬௮)

மெத்துசிர்த்தென்றிசைக்கண்விளங்கியபாலியாற்றுக்
குத்தரத்துண்டோர்சீருரொளிதருமயிலையென்றே
யத்தலந்தனிற்போய்நம்மையருச்சனைபுரிதியங்கண்
சத்தியொன்றகிலமுற்றுந்தட்பதாய்த்தருவோமென்றார்.

(இ-ள்.) மிகுந்த சிறப்பினையுடைய தென்றிசையினிடத்து விளங்கிக்கொண்டிருக்கும் பாலிநதிக்கு வடக்கில், செல்வத்துடன் பிரகாசித்துக்கொண்டிருக்கிற திருமயிலையென்று ஒரு தலமிருக்கின்றது. அந்தத் தலத்தில் நீபோய் நம்மை யாராதனைசெய்யக்கடவை, அவ்வாறு செய்தால் இவ்வுலகங்களெல்லாம் எதிர்த்தாலு மவைகளைத் தடுக்கத்தக்கதாய், ஒரு வேலாயுதத்தைத் தந்தருளுகிறோமென்று திருவாய் மலர்ந்தருளினார்.—எ-று. (சுக)

ஈதெலாமெந்தையிங்கேயிசைத்தருள்செய்தபோதங்
காதரவுடனன்றென்றேயறுமுகன்பணிந்துபோற்றித்
தாதையையிமயமீன்றதையலைவிடைகொண்டேகி
மாதவர்மறைகள்பாடமணிமுதற்கடைமுன்வந்தான்.

(இ-ள்.) நம்மையனாகிய பரமசிவம் இவைகளையெல்லாங் கட்டளையிட்டருளினபோது சுப்பிரமணியசுவாமியானவர், மிகுந்த விருப்பத்துடன் இக்கட்டளை மிகவும் நன்மையானதென்று பணிந்து துதிசெய்து, தம்முடைய தாய்தந்தையாகிய பரமசிவத்தினிடத்தும் பார்வதிதேவியாரிடத்தும் விடைபெற்றுக்கொண்டு சென்று, முனிவர்கள் யாவரும் வேதங்கள் ஓதிக்கொண்டு வரும்படி முன்னே கோபுரவாயிலில் எழுந்தருளினார்.—எ-று. (எ0)

வந்தவனார்க்கும்பூதமன்னுவெள்ளங்கணோக்கித்
துந்துமிசன்னஞ்சின்னமுழங்கிடச்சுரர்பூமாரி
சிந்திடமுனிவரெல்லாந்திரண்டுபல்லாண்டுகூற
விந்திரனயன்மால்போற்றவிரதமேலேறினானால்.

(இ-ள்.) அவ்விடத்திலாரவாரிக்கும் பூதவெள்ளங்களைப்பார்த்து, பேரிகைகளும் திருச்சின்னங்களும் முழங்கவும், தேவர்கள் புஷ்பவருஷம் பொழியவும், முனிவர்களெல்லாம் திரண்டுகூடிப் பல்லாண்டுகூறவும், தேவேந்திரனும் பிரமதேவனும் மகாவிஷ்ணுவும் துதிசெய்யவும், மனோவேகமென்னும் பெயருள்ள திருத்தேரின்மேலாரோகணித்தருளினார்.—எ-று. (எக)

என்னையாளுடையான்வையமேறியபோதுதானே
சென்னியிற்கரங்கள்கூப்பிச்செகமெலாமதிரவார்த்து

மன்னியபுவியின்மேலுமங்குலின்கணுக்தென்னேக்கி
முன்னுறவியங்கத்தூளியெழுந்துவான்முகடுபோர்ப்ப.

(இ-ள்.) என்னை ஆட்கொண்டருளும் சுப்பிரமணிய சுவாமியானவர் திருத்தேரின்மே லாரோகணித் தருளினபோது, பூதவெள்ளங்களாகிய சேனைகள் தத்தம்முடிகளில் கைகளைக்குவித்து வைத்துக்கொண்டு, உலகங்களெல்லாம் நடுங்கும்படி ஆரவாரித்த,நிலைபெற்றதாகிய பூமியினிடத்தும் ஆகாயத்தினிடத்துமாகத் தென் பூமியைநோக்கி நேராக முன்னுதாய்ச் செல்லவும், தூளியெழுந்து ஆகாச முகட்டையெல்லாம் மறைக்கவும்.—எ-று. (எஉ)

பெருகியதானைமுன்னம்பெயர்தரச்செவ்வேளெங்கோ
னொருதனிவையமேற்சென் றுயர்மருத்துவன்முன் றூண்டப்
பொருவில்கேதாரங்காசிபுகழுங்காளத்திமற்று
மருவியதலமும்போற்றிமயிலைமாநகரஞ்சேர்ந்தான்.

(இ-ள்.) மிகுந்த பூத சேனைகள் முன்னே செல்ல, எம்மிறைவனாகிய சுப்பிரமணிய சுவாமியானவர் ஒப்பற்ற திருத்தேரின்மே லாரோகணித்துக்கொண்டு, மேன்மையுள்ள வாயுதேவனாகிய சாரதியானவன் அந்தத்தேரினை முன்னே செலுத்தச் சென்றருளி, ஒப்பில்லாத திருக்கேதாரம் திருக்காசி யாவரும் புகழும்படியான திருக்காளத்தி என்னுந் தலங்களையும் மற்றுமுள்ள தலங்களையுங்கண்டு துதிசெய்து, பெருமை பொருந்திய திருமயிலை யென்னும் க்ஷேத்திரத்தில் சேர்ந்தருளினார்.—எ-று. (எங)

எண்ணில்சீர்தெரிந்தவ்வூர்முனெய்தியபூதவெள்ள
நண்ணிவந்திண்டவேதநவின்றுவாசவன்மால்வேதன்
விண்ணவரிலக்கத்தொன்பான்வீரருஞ்சூழச்செவ்வேற்
பண்ணவனிரதநீத்தேதைபம்பொன்மாமறுகிற்சென்றான்.

(இ-ள்.) அந்த க்ஷேத்திரத்தின் அளவில்லாத வளப்பங்களெல்லாம் நோக்கி, முன்சென்ற பூதப்படைகள் நெருங்கிவந்து தங்கியிருக்கவும், தேவேந்திரனும் மகாவிஷ்ணுவும் பிரமதேவனும் வேதங்களாற் றுதிசெய்துகொண்டு தம்முடன் வரவும், மற்ற தேவர்களும் லக்ஷத்தொன்பது வீரரும் சூழ்ந்துவரவுஞ் சென்று, சுப்பிரமணியசுவாமியானவர் திருத்தேர்விட்டு இழிந்தருளி, மாற்றுயர்ந்த பொன்னிறைந்த திருவீதிகளிடத்து நடந்தருளினார்.—எ-று. (எச)

பொங்குசீரளவற்றோங்கும்பொருவிலாமறுகுநீங்கிச்
செங்கனகக்குன் றீதோதெரிகிலமென்றென்றந்த

மங்குறேய்ந்திலகு மம்பொன்மணிமதிற்சிகரநோக்கிக்
கங்கையாதிகள்வணங்குங்கபாலியின்றீரஞ்சேர்ந்தான்.

(இ-ள்.) அளவற்ற சிறப்புள்ளதாய் ஓங்கி யிருக்கிற ஒப்பில்லாத திரு வீதியை நீங்கி,இது செம்பொன்மலையோ தெரிகிலமென்று கருதும்படி ஆகாயத்தையளாவி விளங்குகின்ற சொர்னமயமாகிய மதிலின் சிகரங்களைநோக்கி, கங்கைநதி முதலாகிய புண்ணிய நதிகளெல்லாம் வணங்கத்தக்க கபாலி தீர்த்தக்கரையில் சேர்ந்தருளினர்.—எ-று. (எடு)

சித்திகடருங்கபாலிதீர்த்தத்தைமகிழ்ந்துநோக்கித்
தத்துதெண்டிரைநீராடித்தயங்குநீறணிந்துநீங்கி
மெத்துபேரொளிபோற்கோயில்புகுந்துவெவ்வினைகடீர்க்கு
மத்தனைக்கண்டுதொழுந்தங்களவிலற்புதத்தனானன்.

(இ-ள்.) தன்னிடத்தில் ஸ்நானஞ் செய்கின்றவர்களுக்கு அஷ்டமாசித்திகளையுந் தரத்தக்கதான கபாலி தீர்த்தத்தை மகிழ்ந்து நோக்கி, தத்துகின்ற தெளிவாகிய அலைகளையுடைய அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, பிரகாசியாநின்ற விபூதி தரித்துக்கொண்டு அவ்விடம்விட்டு நீங்கி, மிகுந்த பிரகாசமுள்ள சொர்னமயமாகிய திருக்கோயிலுக்குள் எழுந்தருளி, அடியார்களுடைய வினைகளையெல்லாம் தீர்த்தருளுகின்ற கபாலீசுரரைக்கண்டு பணிந்து அளவில்லாத ஆனந்தமுடையவராயினர்.—எ-று. (எசு)

அற்புதமெய்திநாதனருச்சனைக்குபயோகங்கள்
பொற்புறவருவித்தங்கண்புரிந்துமுற்கிரியையெல்லாந்
தற்பரன்முடியிற்றூய்சிர்தயங்குபால்தயிர்தேன்மூன்று
நற்பலபலன்கண்மற்றுநந்தருக்கியமுமாட்டி.

(இ-ள்.) இவ்வாறானந்தமெய்தி, கபாலீசுவரருடைய ஆராதனைக்குபயோகமாகிய திரவியங்களெல்லாம் வரவழைத்துக்கொண்டு, முன் செய்யவேண்டியவைகளையெல்லாஞ்செய்து,பின்பு கபாலீசுவரருடைய திருமுடியில் தூய்மையுஞ் சிறப்பும் உள்ளதாய் விளங்குகின்ற பசுவின்பால் பசுவின்தயிர் தேன் ஆகிய மூன்றுடன் நல்ல பலவாகிய பழவர்க்கங்கள் அருக்கியமென்னு மிவைகளால் திருமஞ்சனஞ்செய்து.—எ-று. (எஎ)

மேனியினீரைமாற்றிவிளங்குசந்தறுவைசாத்தித்
தேனிருங்கனிநெய்கட்டிசேர்த்திடுபாயதானம்

பானியமுடனேநல்கிப்பரிந்துதூபாதியீந்தே
யானநற்கிரியையாவுமன்புடனியற்றினின்றார்.

(இ-ள்.) திருமேனியிலுள்ள ஈரத்தைத் திரு ஒத்தாடையினால் மாற்றி, விளங்குகின்ற பீதாம்பரமும் சந்தனமும் சாத்தி, தேன் பழம் நெய் வெல்ல மிவைகளைச்சேர்த்த பாயசான்னத்தை அருக்கியத்துடன் நிவேதித்து, அன்புடன் தூபதீபாராதனைகளையுஞ்செய்து, மற்றுமுள்ள கிரியைகளை எல்லாம் அன்புடன்செய்து நின்றருளினார்.—எ-று. (எஅ)

வேறு.

கந்தமாமலர்க்கந்தவேள்பொழிந்
தந்தமாமறையறைந்துசூழ்தலு
மெந்தைவெள்விடையேறிமாதுடன்
வந்துநின்றனன்மைந்தன்முன்னரே.

(இ-ள்.) அதன்பின்பு சுப்பிரமணியசுவாமியானவர், வாசனைதங்கிய புட்பங்களாலருச்சித்து வேதவாக்கியங்களால் துதிசெய்து பிரதக்ஷணமுஞ் செய்தவளவில், நமது ஐயராகிய கபாலீசுவரர் கற்பகவல்லியென்னும் மாதுடன் வெள்ளைரிஷபத்தில் ஆரோகணித்துக்கொண்டு, தம்முடைய திருமைந்தராகிய சுப்பிரமணியசுவாமி எதிரில்வந்து எழுந்தருளினார்.—எ-று. (எகூ)

கண்டுசெண்முகன்கைகள்சென்னிமேற்
கொண்டுதாழ்தலுங்குமரனைப்பிரான்
மண்டுகாதலின்மகிழ்ந்தெடுத்தொரு
சண்டவேலவன்றனக்குநல்கவே.

(இ-ள்.) கபாலீசுரரிவ்வாறு எழுந்தருளலும், ஆறுதிருமுகங்களுள்ள சுப்பிரமணியசுவாமியானவர் கண்டு, தன்னுடைய கரங்களைத் திருமுடியில் அஞ்சலியஸ்தமாகக்குவித்து வைத்துக்கொண்டு நமஸ்கரிக்க, கபாலீசுவரர் தம்முடைய திருமைந்தனை மிகுந்த மகிழ்ச்சியும் விருப்பமுங்கொண்டு எடுத்து, ஒப்பற்றதாகிய பராக்கிரமமுள்ள வேலாயுதத்தை அவருக்குப்பிரசாதித்தருளும்பொருட்டு.

ஐயன்முன்னுமுன்னயிலொன்றெண்டவிர்
செய்யவெங்கதிர்திரண்டொன்றாயபோல்
வெய்யதானவர்வீடவானவ
ருய்யவந்தவணுதயமாயதே.

(இ-ள்.) கபாலீசுவரர் தம்முடைய திரு உள்ளத்தில் சிந்திப்பதற்குமுன், சத்தி யென்கிற ஒரு படையானது வெப்பம் பொருந்திய கிரணங்களுடைய

அனேகஞ்சூரியர்கள் ஒன்ருய்க்கூடி உதயமானதுபோல, கொடியவர்களாகிய அவுணர்கள் இறக்கவும் தேவர்களெல்லாம் பிழைக்கவும் அவ்விடத்தில் வந்து உதயமாயிற்று.—எ-று. (அக)

அந்தவேலையிலறுமுகன்றனக்
கெந்தைநல்கிநீயிதுகொண்டேகியே
முந்துசூர்க்கிளைமுழுதுஞ்சாடியே
யிந்திராதியர்க்கிடர்தொலைத்துபின்.

(இ-ள்.) அந்த சத்திப்படையானது உதயமானபோது, அதனை ஆறுமுகமுள்ள சுப்பிரமணியசுவாமிக்கு நமதையனுகிய கபாலீசுவரர் பிரசாதித்தருளி, இதனை நீ பெற்றுக்கொண்டு சென்று, முதன்மையாய் இருக்கிற சூரபத்மா அவன் சுற்றத்தார் முதலானவர்களையும் கொன்று, தேவேந்திரன் முதலாகிய தேவர்களுக்கெல்லாஞ் சம்பவித்திருக்கிற துன்பங்களையொழித்துப் பின்பு.-எ-று.

துன்றுதானைகள்சூழவேகியே
நன்றுயிர்க்கெலாநாளுநல்கிடக்
கொன்றுபோர்வருநங்கூளிநோய்சமீர்த்
தென்றுமித்தலத்திருத்தியென்றனன்.

(இ-ள்.) இப்போதுன்னுடன் பொருந்திய பூதப்படைகளெல்லாம் உன்னைச் சூழ்ந்துவரும்படி சென்று, ஆத்மகோடிகளுக்கெல்லாம் நன்மையானது நாள்தோறும் விருத்தியாகும்படி அவுணர்களைக்கொன்று, அப்போர்முகத்தில் நேரிட்ட பூதப்படைகளின் நோய்களை எல்லாந் தீர்த்து, மறுபடி இங்கேவந்து எந்நாளு மித்தலத்திலே வாசமாயிருக்கக் கடவையென்று திருவாய் மலர்ந்தருளினர்.—எ-று. (அங)

இத்தலத்தினீயிலகுசத்திவேற்
பெற்றையாதலாற்பெயருனக்குநாம்
வெற்றிபெற்றசிங்காரவேலனென்
றுற்றநாமமுமுயர்ச்சிதந்தனம்.

(இ-ள்.) நீ இந்தத்தலத்தில் சத்திவேலைப் பெற்றுக்கொண்டனையாதலால், வெற்றிபெற்ற சிங்காரவேலனென்று பொருந்திய பெயரும் மகிமையும் நாம் உனக்குப் பிரசாதித்தருளினேம்.—எ-று. (அச)

பின்னுமித்தலப்பீடுறும்புக
ழென்னுஞ்சீர்த்தியாதிக்கமேவலான்

மன்னுசுந்தரமாமுனக்குமே
யென்னநல்கினமென்றியம்பினன்.

(இ-ள்.) இதுவுமன்றி இந்தத் தலமானது மிகுந்த புகழாகிய கீர்த்தியை அதிகமாகப் பெற்றமையால், மிகுந்த சவுந்தரியம் உனக்குண்டாகும்படி பிரசாதித்தருளினோமென்று திருவாய்மலர்ந்தருளினார்.—எ-று. (அரு)

என்றுபின்னுமொன்றியம்புமெம்மிறை
யொன்றுமன்பினு னுன்முன்வுந்தேதோர்
கன்றுதன்னிருகழல்கள்போற்றெனச்
சென்றுமாடச்சிங்காரத்தினே.

(இ-ள்.) இவ்வாறு திருவாய் மலர்ந்தருளிக் கபாலீசுரரானவர் பின்னுமொருவார்த்தை கற்பித்தருளுகின்றார். அது என்னவெனில், உனக்கு முன் அவதாரஞ்செய்திருக்கின்ற யானைக்கன்றுபோன்ற விநாயகனுடைய இரண்டு திருவடிகளையுந் துதிசெய் என்று கற்பித்தருளச் சிங்காரவேலர் சென்று சிறந்த கூத்தாடும் விநாயகரை.—எ-று. (அசு)

மண்டுகாதலின்மலருநாரமுங்
கண்டுக்தேனெய்முக்கனியபூபமுங்
கொண்டுபூசனைகுயிற்றவந்தவ
ணண்டர்போற்றுகூத்தாடுகற்பகம்.

(இ-ள்.) மிகுந்த அன்புடன் திருப்பள்ளித்தாமமென்னும் பத்ர புட்பங்களும் திருமஞ்சனமும் வெல்லமும் தேனும் நெய்யும் முப்பழமும் அபூபமென்று சொல்லப்படுகிற பலகாரவகைகளும் மற்றுமுள்ள திரவியவகைகளுஞ் சேகரித்துக்கொண்டு ஆராதனைசெய்ய, தேவர்களெல்லாம் போற்றிசெய்யும் திருக்கூத்தாடுகின்ற கற்பகம்போன்ற விநாயகர் அங்கு பிரசன்னமாகி—எ-று (அஎ)

மாற்றலர்த்தெறவரமளித்திடச்
சீற்றவேலவன்மகிழ்ந்துசென்றிவை
சாற்றியன்னையைத்தந்தைதன்னொடும்
போற்றிமீண்டுமுற்புறத்துற்றனரா.

(இ-ள். பகைவர்களாகிய அவுணர்களைக்கொன்று வெற்றியடையும்படி வேண்டிய வரங்களைப்பிரசாதித்தருளப் பெற்றுக்கொண்டு, அவுணர்களிடத்து மிகுந்த கோபங்கொள்ளத்தக்க வேலாயுதமேந்திய சிங்காரவேலரானவர் மகிழ்ந்து சென்று, தாய் தந்தையராகிய கபாலீசுவரரையும் கற்பகவல்லித் தாயா

ளையும் பணிந்து இவைகளைச்சொல்லி விடைபெற்றுக்கொண்டு, அத்தலத்திற்குப் புறத்திலெழுந்தருளினர்.—எ-று. (அஅ)

ஆயகாலையில்லணிகயார்த்திட
நாயகன்மனவேகநண்ணியே
மேய்தாருகன்மேற்சென்றன்னவன்
மாயமாநகர்வளைந்தங்கொல்லையில்.

(இ-ள்.) அப்போது பூதசேனைகளெல்லாம் ஆரவாரிக்கும்படி, சிங்காரவேலரானவர் மனோவேகமென்னும் பெயருள்ள திருத்தேரின்மேலாரோகணித்துக்கொண்டு, தாருகாசுரன்மேல் யுத்தத்திற்குச்சென்று, மாயாபுரிஎன்கிற அவனுடைய பட்டணத்தைச் சூழ்ந்துகொண்டு அதிகவிரைவில்.—எ-று. (அகூ)

வீரவாகுவைமிக்கவீரரைச்
சாரதப்படைதனையும்வென்றுசெல்
தாருகன்றனைச்சயிலமோடுமுன்
கூரவேலினாற்கொன்றுநின்றனன்.

(இ-ள்.) வீரவாகு தேவரையும் மற்றுமுள்ள வீரரையும் பூதப்படைகளையும், போர்செய்து வென்று சென்ற தாருகாசுரனையும் கிரவுஞ்சகிரியையும் கூர்மையாகிய வேலாயுதத்தினால் கொன்று நின்றருளினர்.—எ-று. (கூ0)

அந்தவெல்லையினண்டர்பூமழை
சிந்தவெம்பிரான்சென்றுதென்றிசைச்
செந்தின்மாநகர்செறிந்தங்கோர்மணி
மந்திரத்தினுண்மகிழ்ந்துற்றனரோ.

(இ-ள்.) தாருகாசுரனை அவ்வாறு வென்றபோது தேவர்களெல்லாருங் கற்பகப்பூமாரிபொழியச் சிங்காரவேலரானவர் அவ்விடம்விட்டுநீங்கித் தென்றிசையைநோக்கி எழுந்தருளி, பெருமை பொருந்திய திருச்செந்தூரென்னுந் தலத்திற் சேர்ந்தருளி, அங்கு அமைக்கப்பட்டிருக்கிற ஒப்பற்ற இரத்தினமயமாகிய திருக்கோயிலில் வீற்றிருந்தருளினர்—எ-று. (கூக)

வேறு.

மாயனாரணனாரணனும்பகர்மன்னுவாசவனடப்பைபரிக்கத்
தூயவானவர்பூமழைசிந்தச்சூழ்ந்துகின்னரரின்னிசைபாட
மேயவீரர்கள்சாமரைவீசவீரவாகுடைவாள்கொடுநிற்கச்
சீயமாமணிமென்றவிசின்கண்சிவனளித்தசிறுவனிருந்தான்.

(இ-ள்.) மாயனென்னும் பெயருள்ள மகாவிஷ்ணுவும் பிரமதேவனும் சொல்லுகின்ற தேவேந்திரனும் அடப்பைகள் தாங்கிவரவும், பரிசுத்தர்களாகிய மற்றதேவர்கள் யாவரும் கற்பகப்பூமாரிபொழியவும், கின்னரர்கள் கூட்டமாய்க்கூடி இனிய இசைகள் பாடவும், பொருந்திய வீரர்கள் சாமரை வீசவும், வீரவாகுதேவர் உடைவாளேந்திக்கொண்டு எதிரில் நிற்கவும், மாணிக்கங்கள் பதிக்கப்பட்டு மெத்தென்றிருக்கும் சிங்காசனத்தில், பரமசிவத்தினு லருளப்பட்ட சுப்பிரமணியக்கடவுள் வீற்றிருந்தருளினூர்.—எ-று. (கஉ)

இந்தவாறுபண்ணவர்கடிரண்டேயிருமருங்குறவிறைஞ்சினர்நிற்பக்
கந்தவேளவணிருந்தறிகிலர்போற்கடவுளர்க்கிறைவன்றனைநோக்கி
யெந்தைநல்வரம்பெற்றரசியற்றுமிலங்குசூரபன்மன்புவியிசைபே
வந்தவாறுமவன்செயன்முழுதும்வரம்புதோன்றவிவண்புகலென்றான்.

(இ-ள்) தேவர்கள் இந்தவாறு பணிந்து கூட்டமாய் இரண்டுபக்கத்திலும் நிற்க, சுப்பிரமணிய சுவாமியானவர் சிங்காசனத்தில் வீற்றிருந்து தாம் ஒன்றுமறியாதவர்போல் தேவேந்திரனைநோக்கி, என் ஐயனுடைய நல்ல வரம் பெற்றுக்கொண்டு அரசாட்சிசெய்யும் சூரபத்மாவானவன், இந்த உலகத்தினிடத்துப் பிறந்த முறைமையினையும் மற்றுமுள்ள அவன் சரிதங்களையும் அளவுதோன்றும்படி இப்போது சொல்லென்று கட்டளையிட்டருளினூர்.—எ-று. (கங)

துங்கவேலவனீதருள்செய்யத் தொழுதுவாசவன்பொன்றனை
நோக்கி, யிங்குநீருறைசெய்ம்மினென்றியம்பவிசைந்துவேள்சரணி
றைஞ்சிமுனின்றே, நங்கணாயகநின்பணிபதனுனவில்வனீயறியாததி
லென்றே, கொங்குலாங்குழன்மாயையைமோகங்கொண்டுகாசிபன்
கூடியவாறும்.

(இ-ள்.) பரிசுத்தமுள்ள வேலாயுதத்தையுடைய சிங்காரவேலனென்னும் சுப்பிரமணியசுவாமியானவ ரிவ்வாறு கட்டளையிட்டருள, தேவேந்திரன் பணிந்து அங்கிருக்கும் பிரகஸ்பதியைநோக்கி, சூரபத்மாவினுடைய சரித்திரங்களைத் தேவரீர் சொல்லவேண்டுமென்று சொல்ல அவர் சம்மதித்து, சுப்பிரமணியக் கடவுளை வணங்கி எதிரில்நின்று, எங்களுடைய இறைவனே இது தேவரீர் அறியாததொன்றுமில்லை, ஆகிலும் சுவாமியினுடைய கட்டளையினால் சொல்லுகின்றேன் என்று கூறிக் காசிபரிஷியானவர் மோகங்கொண்டு வாசனைபொருந்திய அளகத்தையுடைய மாயை என்பவளைச்சேர்ந்த முறைமையினையும்.

சூரன்மற்றவர்தோன்றியவாறுந்துலங்குகாசிபன்னவரங்கண்
டோர்நல்லுணர்வோதியவாறுஞ்சினத்தமாயைபச்சொன்மறுத்தன்ப

லோர்குலாவுசெல்வன்சிறப்பெய்த விசைத்துநீவிர்சென்றியற்றுதிரெ
வீரயாகமியற்றியவாறும்விமலனல்வரநல்கியவாறும். [ன்ன

(இ-ள்.) சூரபத்மா முதலான அசுரர் பிறந்த முறைமையினையும், விளங்குகின்ற காசிபரிஷியானவர் அவர்கள் தெளியும்படி நல்ல நீதிகளைச்சொன்ன முறைமையினையும், கோபமுள்ள மாயை அவர் சொல்லிய அந்நீதிகளை மறுத்து அன்பினாலே அழகுபொருந்திய தன்னுடைய புத்திரனாகிய சூரபத்மாவானவன் மிகுந்த சிறப்பினை யடையும்படி, நீங்கள் சென்று வீரயாகஞ்செய்யுங்களென்று கட்டளையிட, அவர்கள் அவ்வண்ணஞ் செய்த முறைமையினையும், அந்த விடத்தில் பரமசிவங் கிருபைகூர்ந்து எழுந்தருளி நல்லவரங்களைப் பிரசாதித்த முறைமையினையும்—எ-று. (கரு)

பின்னருற்றவர்திண்கவியின்பாற்பேசவாங்கவன்றீங்கிவணோர்க்கே
யின்னல்கொண்டிடமாதிரமெங்குமியங்கிவென்றிகொண்டேவருஞ்சூழப்
பன்னுதென்றிசைமுன்கடலின்பாற்படர்ந்துவீரமயேந்திரமென்று
மன்னுமாநகர்செய்தபன்முதலோர்வணங்கமாமுடிசூடியவாறும்.

(இ-ள்.) அதன்பின்பு அவர்கள் தங்கள் குருவாகிய சுக்கிரனிடத்தில் சென்று தாங்கள் பெற்றுக்கொண்ட வரங்களை எல்லாஞ்சொல்ல, அந்த சுக்கிரன் அவர்கள் கூறியகொடிதான செய்கைகளை எல்லாம் உணர்ந்துகொண்டு துன்பத்தையடைந்திருக்க, சூரபத்மனானவன் அஷ்டதிக்குகளெங்குஞ்சென்று போர்செய்து வென்று, தன்னுடைய தம்பிமார்முதலாகிய அசுரர்கள் சூழ்ந்துவரும்படி சென்று,தெற்குச் சமுத்திரநடுவில் வீரமயேந்திரமென்று சொல்லப்படுகிற ஒரு பெரிய நகரம் ஏற்படுத்திக்கொண்டு, பிரமதேவன் முதலானவர்கள் வணங்கும்படி மகுடாபிஷேகஞ் செய்துகொண்ட முறைமையினையும்—எ-று(கசு)

நித்தமுஞ்சுரர்வாசவனயன்மாணெருங்கியேவல்செய்திரங்கியவாறுந்
துற்றபூங்குழலசமுகிகரம்பின்றுணித்தவாறுமதனாலினன்பகைவன்
பற்றிவானவரையுஞ்சயந்தனையும்பருவரல்கொளச்சிறைசெய்தவாறு
முற்றுமுன்னுரைசெய்துவணங்கமுருகவேண்மகிழ்ந்தொன்றுவகுப்பான்.

(இ-ள்.) நாள்தோறும் தேவர்களும் பிரம விஷ்ணுக்களும் மகேந்திரபுரியிற் சென்று சூரபத்மன்சொல்லுகிற வேலைகளைச்செய்து துன்பமடைந்துகொண்டிருக்கிற முறைமையினையும், மலர்மாலையணிந்த அளகபாரத்தையுடைய அசமுகி என்கிற சூரபத்மாவினுடைய தங்கையின் கையைக் காளாமுகரென்பவர் வெட்டித்துணித்த முறைமையினையும்,அதனாலே சூரியன் பகைவனாகிய பானுகோபன் தேவர்களையும் தேவேந்திரன் மகனாகிய சயந்தனையும் பிடித்துக்

கொண்டுபோய்ச் சிறைச்சாலையில் வைத்த முறைமையினையும், இவைகளையெல்லாம் பிரகஸ்பதிசொல்லி வணங்கினவளவில், சுப்பிரமணிய சுவாமியானவர் மகிழ்ச்சியடைந்து ஒரு வார்த்தை கட்டளையிடுகின்றார்.—எ-று. (கஎ)

காவிற்றேவர்தஞ்சிறைவிடுத்திறைஞ்சிற்கடையசூற்கருள்புரிதுநம்முடனும், போர்வியந்திடிலெல்லைசென்றடுதும்புந்தியீதெனச்சொற்றவனிருக்கை, வாவியேர்ந்திவணணுகெனவிசைத்தேவீரவாகுவைவிடுத்திடவவன்றான், பாவிவேலைகடந்துமுன்சிலரைப்படுத்துவீரமயேந்திரத்துற்றான்.

(இ-ள்.) கற்பகத்தருநீழலில் வசிக்கும் தேவர்களைச் சிறையில் நீக்கிவிட்டுவந்து நம்முடைய திருவடியில் வணங்கினால், அந்தக்கடையனாகிய சூரபத்மாவுக்குக் கிருபைபாலித் தருளுவோம், அவ்வாறன்றி நம்முடன்போர்செய்ய விரும்பினால் இப்போது உடனே சென்று அவனைக் கொல்லுகின்றோம் இது புத்தி என்று சொல்லி, அவனுடைய இருக்கையை அறிந்துகொண்டு இங்கே வாவென்று கட்டளையிட்டு வீரவாகுவை யனுப்ப, அந்த வீரவாகுதேவர் பரவியிருக்குஞ் சமுத்திரத்தைக்கடந்துசென்று, மத்தியிலிருக்குஞ் சில அவுணரை எல்லாங்கொன்று பின்பு வீரமுள்ள மயேந்திரப்பட்டணத்தை யடைந்தார்—எ-று.

வல்லைசூர்முனம்வீற்றிருந்தமரர்வல்விநீக்கிலெம்முருகனுளின்னு, மெல்லையில்வளம்பெறுதியென்றிசைப்ப விசைகிலான்சினந்திடவுடனெழுந்தே, மல்லன்மாநகாழித்தவன்விடுப்பமைந்தர்வீரர்வந்தெதிர்ந்தவருயிருண், டொல்லைமீண்டவனிடும்பைகொண்டிருத்தலுரைத்திறைஞ்சினனமரர்கோன்களிக்க.

(இ-ள்.) வீரவாகுதேவர் அதிக விரைவிற்சென்று, அந்த சூரபத்மாவினெதிரில் சிங்காசனத்திலிருந்துகொண்டு அவனைநோக்கி, தேவர்களுடைய விலங்குகளைக் கழித்து சிறை விடுப்பையாகில், எங்கள் முருகக்கடவுள் கிருபையினால் இன்னமும் அளவில்லாத செல்வங்களைப் பெறுவாயென்று சொல்ல, அவன் சம்மதியாமல் கோபித்தவளவில், இவரெழுந்து வளப்பமும் பெருமையுமுள்ள அந்த வீரமயேந்திர பட்டணத்தையழித்து, அதைக்குறித்து அனுப்பிய அவன் மைந்தர்களையும் சில வீரர்களையுங்கொன்று விரைவாகச்சென்று, சுப்பிரமணிய சுவாமியின் சந்நிதானத்திற் சென்று பணிந்து தேவேந்திரன் சந்தோஷிக்கச் சூரபத்மா மமதைகொண்டிருப்பதை விண்ணப்பஞ்செய்தார்—எ-று.

வீரவாகுதேவர் சூரபத்மா சபையிற்சென்றபோது சுப்பிரமணிய சுவாமியினுடைய கிருபையினால் அப்போது ஒரு சிம்மாசனம்வர அதன்மீதிருந்து அவனுடன் பேசினார். (கஅ)

ஆயகாலையிலறுமுகப்பெருமானளவில்சீற்றமுடனேயவணீங்கி,
மேயவையமேற்கொண்டணிகங்கள் வெடித்ததண்டமென்றார்த்துட
ன்படரத், தீயசூர்நகர்க்குத்தரத்தணித்தாய்ச்சிந்துவுந்துகள்படநட
ந்தடைந்தே,தூயபாசறையங்கமைத்தணிகஞ்சூழவாழ்மணித்தவிசின்
வீற்றிருந்தான்.

(இ-ள்.) அப்போது ஆறுமுகக்கடவுளானவர் அளவில்லாத கோபத்துடன் அவ்விடம்விட்டு நீங்கி, பொருந்திய இரதத்தின்மீது ஆரோகணித்துக்கொண்டு, அண்டமும் வெடித்துப்போயதென்று சொல்லும்படி பூதப்படைவீரர்கள் ஆரவாரித்துக்கொண்டு தம்முடன் சூழ்ந்து வரும்படி சென்று, கொடியவனாகிய சூரபத்மாவினுடைய பட்டணத்திற்கு வடக்கில் சமீபமாய், சமுத்திரமும் தூள்படும்படி நடந்து சேர்ந்தருளி, அவ்விடத்தில் பரிசுத்தமுள்ளதாகப் பாசறை வீடமைத்துக்கொண்டு, பூதப்படை எல்லாஞ் சூழ்ந்திருக்கும்படி ஒரு இரத்ன சிம்மாசனத்தில் வீற்றிருந்தருளினார்.—எ-று. (௪௦௦)

முன்னொராதலவன்பகைவனைக்கொடுந்தீமுகத்தனைச்சிலவசுரவெ
ள்ளத்தை, மின்னுமாடகவீரனைவிற்போர்வீரவாகுவைக்கொடுபொ
ருதழித்தே, துன்னுபூதவெள்ளங்களையிகற்போர்தொடங்குவீரரை
த்தூரந்துவந்தெதிர்த்தே, மன்னுசீயமுகனாயிரமுடியும்வயங்குவச்சி
ரமுள்விடுத்தழித்தே.

(இ-ள்.) சுப்பிரமணிய சுவாமியானவரிவ்வாறு சிங்காசனத்தில் வீற்றிருந்தபோது, சூரபத்மாவின் உத்தரவினால் போர்செய்யவந்த அவனுடைய புத்திரர்களாகிய பானுகோபனையும் அக்கினி முகனையும் சில வசுரக்கூட்டத்தையும் ஆடக வீரனென்னும் அசுரனையும், விற்போர்செய்யவல்ல வீரவாகு தேவரால் பொருது கொல்லுவித்துப் பின்பு, கூட்டமாயிருக்கிற பூதப்படை வீரரையும் பெரும்போர்செய்யும் லட்சத்தொன்பது வீரரையும் போர்முகத்தில் தூரத்திவிட்டு, தம்மெதிரில் போர்செய்யவந்த சிங்கமுகாசுரனுடைய ஆயிரந்தலைகளையும் தம்முடைய திருக்கரத்திருக்கும் வச்சிராயுதத்தையேவி அறுத்தருளி.—எ-று.()

எண்டவிர்ந்தவிகற்படையுடன்வந்தெதிர்ந்துபோர்புரியிடும்பை
கொள்வீரற்கு, மிண்டுமாவரமுமாயைகள்பலவும்விரைந்துநீங்கிடவி
ளங்குவேல்விடுத்தே, மண்டுபண்ணவரலர்மழைபொழியமார்புகீண்
டிருதுணிபடுத்தழித்துக், கண்டுவந்துதொழச்சுரர்சிறைவிடுத்துக்க
டியமாநகர்கடல்கொளவழித்தே.

(இ-ள்.) அளவுகடந்த பலமுள்ள அசுரசேனைகளுடன் வந்து எதிர்த்துப் போர்செய்கிற மமதையுள்ள சூரபத்மாவுக்குப் பரமசிவனார் கொடுத்தருளப் பொருந்தியிருக்கிற வரங்களும், பலவாகிய மாயைகளும், சீக்கிர மொழிந்து போம்படி சத்திசொரூபமாய்விளங்குகின்ற வேலாயுதத்தையேவி, அங்குவந்திருக்கிற தேவர்கள் கற்பகப்பூமாரி பொழிய, அவனுடைய மார்பைக்கிழித்து இரண்டு துண்டாக விழும்படி அழித்தருளி, சயந்தன்முதலான தேவர்கள்கண்டு சந்தோஷித்து வந்து தம்மை வணங்கும்படி அவர்கள் சிறையை விடுவித்து, அந்த மயேந்திர பட்டணமானது சமுத்திரத்தில் மூழ்கும்படியழித்து.—எ-று ()

சூரன்மேனியிருதுணியுமாமயிலுந்துலங்குவாரணமுமாய்வரவவற்றை, வீரவூர்தியுந்துவசமுமாக்கிமீண்டுதானையுடன்றிருப்பரங்கிரிமேற், சீருலாவுபண்ணவர்கள்சூழ்ந்திறைஞ்சத்தெய்வயானையெனுமின்றனைமகவானாரமோடுதவவரைந்துபின்றுறக்கநண்ணியங்கவன்றனக்கரசளித்தான்.

(இ-ள்.) சூரபத்மாவின் சரீரத்தினிருபிளவும் பெரிய மயிலும் விளங்குகின்ற சேவலுமாய் வரக்கண்டு, அவைகளை வீரமுள்ள வாகனமும் கொடியுமாக்கிச் சேனையுடன் அவ்விடம்விட்டுப் புறப்பட்டுச் சென்று, சீர்பொருந்திய திருப்பரங்குன்றத்தில் பெருமைபொருந்திய தேவர்களெல்லாம் வணங்கும்படி, தெய்வயானை என்கிற மாதினைத் தேவேந்திரனானவன் நீருடன் தத்தஞ்செய்யத் திருமணஞ் செய்துகொண்டு, அங்கிருந்து சொற்கலோகத்திற்போய் அந்தத் தேவேந்திரனுக்கு இராச்சியபட்டாபிஷேகஞ் செய்தருளினார்.—எ-று.(கoரு)

நத்தனன்னன்முன்பண்ணவரெவருநண்ணவாங்கவர்பதங்களும்வழங்கி, மெத்துபேரொளிக்கயிலைபுக்கிறையை விமலையோடவண்பணிந்துமீண்டியங்கிக்,கொத்துலாங்குழல்வள்ளியைத்தணிகைக்குன்றின்மேல்வரைந்திமையவர்போற்றத், தத்துதெண்டிரைப்பாலியங்கரையுத்தரத்திலங்குமாமயிலையிற்புகுந்தே.

(இ-ள்.) சங்கமேந்திய விஷ்ணு அன்னவாகனமுள்ள பிரமதேவன் முதலாகிய தேவர்கள் யாவரும் வந்து சேவிக்க, அவர்களுடைய பதவிகளையும் அவர்களுக்குப் பிரசாதித்தருளி, மேன்மைத் தன்மையுள்ள மிகுந்த பிரகாசத்தையுடைய கைலாசகிரிக் கெழுந்தருளி, பரமசிவத்தையும் பார்வதிதேவியாரையும் பணிந்து அங்கு வீற்றிருந்து, பின்பு அவ்விடம்விட்டுச்சென்று பூங்கொத்துபொருந்திய அளகபாரத்தையுடைய வள்ளியம்மையைத் திருமணங்கொண்டருளி, அவ்விடம்விட்டு நீங்கித் தேவர்கள் துதிக்க, தத்துகின்ற வெண்மை

யாகிய அலைகளையுடைய பாலிநதிக்கு வடக்கிலிருக்கும் திருமயிலை யென்னுந் தலத்தில் சேர்ந்தருளினார்.—எ-று. (க0ச)

கொங்குலாங்குழற்றேவகுஞ்சரியுங்குறவர்மாமகளாயபூங்கொடியுந், தங்குநண்பினிருபாலுமெம்மருங்குந்தானைசூழவிறல்வீரர்கள்போற்றப், பொங்குபேரொளியம்பொன்மந்திரத்துட்பொருவிலாக்கதிர்மணித்தவிசுறைந்தே, யெங்கணாயகனென்றும்வாழ்ந்திருந்தானிரந்தடைந்தவர்க்கிடர்தொலைத்தளித்தே.

(இ-ள்) வாசனைபொருந்திய அளகபாரத்தையுடைய தெய்வயானை யம்மையும் குறவர் பெண்ணாகிய வள்ளியம்மையும் தன்னிரண்டு புறத்திலும் பொருந்திய அன்புடன்வீற்றிருக்கவும், மற்ற எந்தப்பக்கத்திலும் பூதப்படைவீரரும் இலக்ஷத்தொன்பது வீரரும் சூழ்ந்திருக்கவும், சொர்ணமயமாய் விளங்குகின்ற திருக்கோயிலுக்குள் ஒப்பில்லாத பிரகாசத்தையுடைய சிங்காசனத்தில் எழுந்தருளி, தம்மிடத்திற்கு வந்து பணிந்திரந்த அடியார்களுடைய இடுக்கண்களையெல்லாம் நீக்கிச் சதாகாலமும் வாழ்ந்திருந்தார்.—எ-று. (க0ரு)

என்றுகும்பமாமுனிவரன்முனிவர்க்கிசைத்தகாலையிலிருகணீர்சொரிய, நின்றுதாழ்ந்தெழுந்தருணடம்புரிந்துநெக்குநெக்குருகியின்பவெள்ளத்து, ளொன்றமாதவவேந்தர்கள்வேந்தேயுய்யுநங்களுக்குரைத்தவாறெல்லா, நன்றுவேதனுமருச்சனைபுரிந்தநலமெலாம்விரித்திசையெனவிசைத்தார்.

(இ-ள்.) இவ்வாறு அகஸ்திய மகாரிஷியானவர் தம்மிடத்திற்கு வந்து வினவிய முனிவர்களுக்குச்சொல்லியபோது, அவர்கள் இரண்டுகண்களிலும் ஆனந்தபாஷ்பஞ்சொரியும்படி பணிந்து எழுந்து, ஆனந்தக்கூத்தாடி மனம் நெக்குவிட்டுருகிப் பேரின்ப வெள்ளத்துள் மூழ்கி, நாங்கள் பிழைக்க முனிசிரேஷ்டராகிய அகஸ்திய முனிவரே, தேவரீர் சொல்லியருளியது நன்மையாயிருக்கின்றது, பிரமதேவனும் கபாலீசுரரை ஆராதித்த நல்லசரித்திரங்களையெல்லாம் விரித்து எங்களுக்குச் சொல்லவேண்டுமென்று வினவினார்கள்.—எ-று. (க0சு)

குமரவேள் அருச்சனைச் சருக்க முற்றிற்று.

ஆக சருக்கம் கூ-க்கு திருவிருத்தம்-சருகூ.

---

உ

சிவமயம்.

# பிரமன்பூசித்தசருக்கம்.

பங்கயனருச்சித்தேத்தும்பண்புகள்விரித்துக்கூறென்
றங்கவர்தொழுதபோதங்கருளினலவனைநோக்கிக்
கொங்குலாவருஞ்சந்தாருங்கோதிலாமலேயத்தண்ணல்
துங்கமாமுனிகாள்கேண்மின்சொல்லுதுமென்றேசொல்வான்.

(இ-ள்.) பிரமதேவன் பூசித்துத் துதிசெய்த தன்மைகளை விவரித்துச்சொல்லவேண்டுமென்று அம்முனிவர்கள் சொல்லித்தொழுதபோது, அவர்களைக்கிருபையுடன் பார்த்தருளி வாசனைபொருந்திய சந்தன விருக்ஷம் நிறைந்துள்ள பொதியமலையில் வீற்றிராநின்ற அகஸ்தியமுனிவர் அவர்களை நோக்கிப் பரிசுத்தமுள்ள முனிவர்களே கேளுங்கள் நாம்சொல்லுகிறோமென்றார். எ-று. (க)

முதிர்தவக்குழுக்காண்மோகவளக்கரின்மூழ்கித்தம்முட்
பதியினைத்தெருளாவுள்ளப்பசுவெலாம்பாகமேவிக்
கதிபெறவருண்மெய்கொண்டகயிலையங்கிரியின்மேவு
மதிமுடிப்பகவன்முன்னமயனைத்தன்வலப்பாற்றந்தான்.

(இ-ள்.) மிகுந்ததவமுள்ளமுனிவர் கூட்டங்களே அஞ்ஞானமான சமுத்திரத்தில் மூழ்கித் தமக்குள் அறிவுக்கறிவாயிருக்கிற இறைவனைத் தெரியாத உயிர்வர்க்கங்களெல்லாம் இருவினையொப்பு மலபரிபாகமென்னும் பக்குவத்தைப் பொருந்தி மோக்ஷத்தையடையும்பொருட்டு அருபதிருமேனிகொண்ட கைலாசகிரியி லெழுந்தருளியிராநின்ற இளந்திங்களணிந்த சடாமகுடத்தையுடைய பரமசிவம் தன்வலப்பாகத்திடமாகப் பிரமதேவனைச் சிருஷ்டித்தருளினர். எ-று. (உ)

முகிறவழ்பவளவெற்பின்முளைத்தெழும்பொற்குன்றம்போற்
பகீரதிமிலேச்சுஞ்சென்னிப்பராபரன்வலப்பாற்றோன்று
மகியெனப்பரந்தவல்குல்வாணிதன்கேள்வற்கெல்லா
வகிலமும்படைக்குமாற்றையருளுவானருளும்போதில்.

(இ-ள்.) மேகங்கள் தவழும்படியான உன்னதமுள்ள ஒருபவளமலையினிடத்து முளைத்தெழுந்த பொன்மலைபோலக் கங்கையைத்தரித்துக்கொண்டிருக்கிற சடாமகுடமுள்ள பரமசிவனுடைய வலப்பக்கத்திற்றோ

ன்றிய பூமிவட்டம்போலப் பரந்த அல்குலையுடைய சரஸ்வதியின் கணவனாகிய பிரமதேவனுக்கு இந்த உலகத்தையெல்லாம் சிருஷ்டித்த முறைமையைக் கற்பித்தருளப் பிரசாதித்தருளும்போது. எ-று.

பவளமலையினிடத்து முளைத்த பொன்மலைபோலச் சடாமகுடத்தையுடைய என்றது, பரமசிவனது திருமேனி பவளமலையும் சடாமகுடம் பொன்மலையுமாகக் கொள்க. சடாமகுடத்தைப் பொன்மலையென்றதற்கு, "மின்வண்ண மெவ்வண்ண மவ்வண்ணம் வீழ்சடை" என்கிற பொன்வண்ணத்தந்தாதித் திருப்பாடலே மேற்கோள். (௩)

கவுரிமஞ்சனமதாடிக்கமழ்தருநியமம்யாவு
மூவகையின்முடித்துவள்ளலுறையுமாலயத்திற்புக்குச்
சிவபரனிவனென்றோராதிகைத்தனனிருந்தவேதன்
புவனகாரணனைத்தன்னைப்போலியென்றுளத்துணர்ந்தான்.

(இ-ள்.) பார்வதிதேவியார் கமழ்கின்ற திருமஞ்சனங்கொண்டருளி நித்திய நியமங்களைச் சந்தோஷத்துடன் முடித்துக்கொண்டு பரமசிவத்துடன் வீற்றிருக்குந் திருக்கோவிலுக்குள் இந்தப்பிரமதேவன்போய் இது பரசிவனென்றுணராமல் திகைத்திருந்த வேதனானவன் அந்தலோககாரணனா யிருக்கிற பரமசிவத்தைத் தன்னைப்போல இவனும் ஒருவனென்று மனசிலெண்ணினான். எ-று. (௪)

உணர்ந்ததுகண்டேநிற்குமுமைதெளிதற்கோவேதா
வணங்கிடச்சிரமோரைந்திலகன்றவர்நோக்கிநிற்குங்
குணங்கெழுசிரத்தையண்ணல்கொடுநகநுதியாலீர்ந்து
நிணங்கெழுகுருதியோடுநிகழ்திருக்கரமேற்கொண்டான்.

(இ-ள்.) இவ்வாறு பிரமனுள்ளத்தில் நினைத்ததைத் தாமறிந்துகொண்டோ அல்லது பார்வதிதேவியார் தெளியும்பொருட்டோ பிரமதேவன் மமதைநீங்கிப் பின்பு தம்மைவணங்கும்படி அவனுடைய ஐந்துதலைகளுக்குள் ஆகாயத்தைநோக்கிய வண்ணமாயிருக்கும் நடுத்தலையைத் தம்முடையநகநுதியினாற் கிள்ளித் தசைகளுடனும் உதிரத்துடனும் அந்தத்தலையைத் தம்முடைய திருக்கரத்தில் ஏந்தியருளினர். எ - று. (௫)

அஞ்சிமெய்நடுக்கமுற்றுங்கலறினனெழுந்துவீழ்ந்து
பஞ்சின்மெல்லடியாள்செங்கேழ்பங்கயந்தலைமேற்கொண்டே
மஞ்சனேனுணவத்தின்மயக்கினாலுன்னுமுன்னல்
செஞ்சடைமுனியாய்நோக்கித்திரிந்தெனைமுனியேலென்றும்.

(இ-ள்.) பரமசிவம் இவ்வாறு பிரமதேவனுடைய தலையைக்கிள்ளினபோது அவன் பயந்து மெய்நடுங்கி அலறியெழுந்து சாஷ்டாங்கமாகப்



பிரமன் அகங்கொண்டது.

பணிந்து செம்பஞ்சியினு மெத்தென்ற திருவடிகளையுடைய பார்வதிதேவியின் பாததாமரையையும் பணிந்து புத்திரனாகிய நான் ஆணவத்தினாலே தேவரீரை யறியமாட்டாமல் மயங்கினேன்; இன்னமுங் கோபஞ்செய்தருள வேண்டாம்; சடாமகுடமுள்ள இறைவனே; அடியேனைக் குறித்துக் கிருபைமாறியெந்நாளுங் கோபிக்கவேண்டாம். எ-று. (சு)

கண்ணுதன்முனியேன்மேலாங்கடவுளேமுனியேனீற்று
வண்ணனேமுனியேல்வெள்ளிமலைச்சுடர்முனியேல்தீயே
னுண்ணிகழ்புன்மைதீர்த்தவொருவனேமுனியேலார்க்கும்
பண்ணவாமுனியேயென்றுபணிந்தனன்பிரமன்மாதோ.

(இ-ள்.) நெற்றிக்கண்ணினையுடைய பரமசிவனே கோபங்கொள்ளாதேயும், யாவருக்கு மேலாகிய கடவுளே கோபஞ்செய்யாதேயும், விபூதிபோலத்திருமேனிவண்ணமுடைய கடவுளே கோபஞ்செய்யாதேயும், வெள்ளிமலையில் வீற்றிருந்தருளுஞ் சோதியே கோபஞ்செய்யாதேயும், கொடியேனுடைய உள்ளத்திலுண்டாகிய அஞ்ஞானத்தைத் தீர்த்தருளிய ஏகனே கோபஞ்செய்யாதேயும், என்று துதிசெய்து பிரமதேவன் பணிந்தான். எ-று. (எ)

ஆயிடையீசனோக்கியணங்கொருபுறத்திருப்ப
நாயகன்பணித்துப்போதநான்முகனோக்கிச்சாற்று
நீயெமைநின்னோடொன்றாய்நினைத்தியங்கதனால்யாயுந்
தூயவான்சிரத்தையீர்ந்தேந்தொகையினோர்மொழிகேளென்ன.

(இ-ள்.) அப்போது பார்வதிதேவியார் ஒருபுறத்திலிருக்கும்படி பரமசிவம் கட்டளையிட்டு நான்குமுகமுள்ள பிரமதேவனைப் பார்த்துத் திருவாய்மலர்ந்தருளுகின்றார் அதாவதுபிரமனே நம்மை உன்போலொருவனாக நினைத்தாய் ஆகையினாலே நாம் பரிசுத்தமுள்ள உன்னுடைய தலையைக் கிள்ளியருளினோம் இன்னம் ஒருவார்த்தை தொடுத்துச்சொல்லுகிறோம்.

எம்மையாளுடையான்சொல்வானெழிற்பாலிதீரந்தன்னின்
மைம்முகிறவழுமாடமயிலைமாநகரமென்றோர்
மும்மையவுலகமேத்துமுதுபதியுண்டாங்கெய்தி
நம்மையங்கருச்சித்தேத்தினல்குதுமவண்வந்தென்றான்.

(இ-ள்.) நம்மையாட்கொண்டருளும் பரமசிவம் திருவாய்மலர்ந்தருளுகின்றது அழகுள்ள பாலிநதிக்கரையில் வடக்கில் கருமையுள்ள மேகங்கள் தவழும்படி யுன்னதமாகிய மாடப்பந்திகளையுடைய திருமயிலையென்றுசொல்லப்படுகிற பழமையாகிய ஒருதலமிருக்கிறது நீயவ்விடத்திற் செ

ன்று நம்மையாராதித்துத் துதித்துப் பணிந்தால் அங்கு நாம் எழுந்தருளி யுனக்குவேண்டிய வரங்களைப் பாலித்தருளுகிறோமென்று திருவாய்மலர்ந் தருளினார். எ-று. (க)

ஐயனீதருளிச்செய்யவயன்மகிழ்ந்திசைந்துநாதன்
செய்யதாள்பணிந்துதேவர்தேவனைவிடைகொண்டேகித்
துய்யவன்னத்தினேறிச்சுடர்மணிக்கயிலைநீத்துப்
பையவேதென்பால்வானப்பதவியிற்படரலுற்றான்.

(இ-ள்.) பரமசிவம் இவ்வாறு கட்டளையிட்டருளப் பிரமதேவன் மகிழ்ந்திசைந்து நம்முடைய இறைவனது திருவடியைப் பணிந்து அவரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு சென்று வெண்மைநிறமுள்ள அன்னவாகனத்தின்மேல் ஆரோகணித்துக்கொண்டு பிரகாசமுள்ள ரத்தினங்கள்பொருந்திய கைலாசகிரியைவிட்டு நீங்கித் தென்திசையைநோக்கி ஆகாசமார்க்கமாக விரைவின்றிச் செல்லுகின்றான். எ-று. (க0)

அற்புதந்தருங்கேதாரத்தன்புடனடைந்துபோற்றிப்
பொற்புறுங்காசியென்னும்பொருவின்மாநகரம்போற்றிச்
சிற்பரன்விளங்குந்தெய்வச்சீர்சயிலங்காளத்தி
கற்புறுவாணிகேள்வன்களிந்துளமகிழ்ந்துபோற்றி.

(இ-ள்.) பதிவிரதாதன்மையுடைய சரஸ்வதியின் கணவனாகிய பிரமதேவன் இவ்வாறு அந்தரமார்க்கமாய் வரும்போது அதிசயந்தரத்தக்க திருக்கேதாரத்திற்சேர்ந்து அங்கு திருக்கோயில்கொண்டு வீற்றிருக்கும் பரமசிவத்தை யன்புடன் தோத்திரஞ்செய்து அழகுபொருந்திய காசியென்கிற ஒப்பில்லாத க்ஷேத்திரத்தைப்போற்றிசெய்தும் ஞானசொரூபனாகிய பரமசிவன் வீற்றிருக்கு மல்லிகார்ச்சுனத்தையுந் திருக்காளத்தியையு மனங்களித்து மகிழ்ச்சியுடன் போற்றிசெய்தும். எ-று. (கக)

அப்பதிவணங்கியன்னனவணிங்கியியங்கும்போதிற்
செப்புமந்நகர்க்குத்தென்பாற்றீயவன்றிசையின்ஞான
வைப்பெனவிளங்குந்தெய்வமயிலைமாநகரமென்னு
மொப்பிலாப்பதியைநோக்கியுவகையாங்கடலிற்புக்கான்.

(இ-ள்.) அந்தப்பிரமதேவன் அவ்வாறு திருக்காளத்தியை வணங்கி அவ்விடம்விட்டுச் செல்லும்போது சொல்லுகின்ற அந்தக்காளத்தியென்னும் க்ஷேத்திரத்திற்குத் தெற்கில் அக்கினிதேவன்திசையில் ஞானத்திற்கிருப்பிடமாகிய தேவபூமிபோல் விளங்காநின்ற பெருமைபொருந்திய திருமயிலையென்கிற ஒப்பில்லாததாகிய க்ஷேத்திரத்தைக்கண்டு சந்தோஷமாகிய சமுத்திரத்தில் முழுகினான். எ-று. (க௨)

அன்னனங்கிறைஞ்சியெண்ணிலற்புதமெய்திச்சென்றே
கன்னலங்காடுஞ்செந்நெற்காடும்வண்கமுகின்காடுந்
துன்னுறும்புறத்திற்சீர்கடூரிசறத்தெரிந்தூர்புக்கு
மன்னுமாவணங்கின்மேயவளமெலாநோக்கிச்சென்றான்.

(இ-ள்.) அன்னவாகனத்தையுடைய பிரமதேவன் அந்தத்திருமயிலையைக் கண்டவுடன் பணிந்தும் அளவில்லாத அற்புதமடைந்து போய்க் கருப்பஞ்சோலையையும் சம்பாப்பயிர்விளைச்சல்களையும் வளப்பம்பொருந்திய கமுகமரச்சோலைகளையும் புறத்திற் சூழ்ந்திருக்கிற ஊர்களின் சிறப்புகளையுங் குற்றமறப்பார்த்துத் திருமயிலைக்குட்சென்று அவ்விடம் பொருந்தியிருக்கிற திருவீதிகளின் சிறப்புகளையும் பார்த்துக்கொண்டு சென்றான். ()

பண்டரன்படைப்பவெல்லாப்பதிக்குமோரரசதாகி
னண்டருக்கருநோய்மாற்றுமவ்விடமாகுமவ்வூர்
கொண்டசீர்தெரிந்துசெம்பொற்கோபுரவாயின்முன்னங்
கண்டணைந்திறைஞ்சிச்சாத்திக்கங்கையந்தீரஞ்சேர்ந்தான்.

(இ-ள்.) ஆதியிலே பரமசிவன் சிருஷ்டிக்கப்பட்டு, எல்லாத்தலங்களுக்கும் அரசாகித் தேவர்களுக்குச் சம்பவித்ததாகிய அரியநோய்களை மாற்றத்தக்கதான அந்தத்தலத்திற் பொருந்திய சிறப்புகளையெல்லாம் பார்த்துச் செம்பொன்னாலாகிய கோபுரவாயிலின் முன்னே கண்டுசேர்ந்து பணிந்து அங்கிருந்தபடியே கபாலிதீர்த்தத்தின் கரையிற்போய்ச் சேர்ந்தான்.

கபாலி தீர்த்தத்திற்கு - சத்திகங்கையென்று பெயர். (கச)

துன்னுசீர்மலரோன்சத்திகங்கையிற்றாய்நீராடி
மன்னுவற்கலையுங்கண்டிமாலிகையணிந்துபின்னி
மின்னவிர்வெண்ணீறன்பாமெய்யெலாநிறைத்துவேதம்
பன்னியகருமமுற்றும்பண்புறவியற்றிப்போற்றி.

(இ-ள்.) சீர்பொருந்திய தாமரைமலரில் வீற்றிருக்கும் பிரமதேவன் கபாலி தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து பொருந்திய மரவுரிதரித்துக்கொண்டும் ருத்திராக்ஷகண்டிகைபூண்டும் பிரகாசியாநின்ற விபூதியைத் தன் மேனிமுழுவதும் அன்புடன் உத்தூளனமாகப் பூசிக்கொண்டும் வேதத்திற் சொல்லப்படுகிற நித்தியகருமங்களையெல்லா முறைமையுடன் செய்து முடித்து ஸ்வாமியைத் துதிசெய்து. எ-று. (கரு)

அங்ககன்றியங்கிச்செம்பொனாலயம்புகுந்து
வெற்பின்மங்கையைமுருகவேளைமன்னுகற்பகத்தைப்போற்றிப்
பங்கயமலரோன்ஞானபண்டிதனுகிவைகு
மெங்கணுயகனைக்கண்டங்கெண்ணிலற்புதத்தனானான்.

(இ-ள்.) பிரமதேவன் அவ்விடம்விட்டு நீங்கிப் பொன்மயமாகிய திருக்கோயிலுக்குட்போய்க் கற்பகவல்லித் தாயாரையும் சிங்காரவேலரை யும் கற்ப விநாயகரையும் போற்றிசெய்து ஞானபண்டிதராய் வீற்றிருக்கும் கபாலீசரைத் தரிசித்து அளவில்லாத அற்புதத்தனானன். (கசு)

அற்புதமெய்திவேதனருச்சனைபுரிவானெண்ணிப்
பொற்புறுமுப்போகங்கள்பொள்ளெனவருவித்தங்கண்
முற்புரிகிரியையெல்லாமுடித்துவெவ்வினைகடீர்க்குஞ்
சிற்பரன்றனக்குப்பூசைசெய்திடத்தொடங்கியன்பால்.

(இ-ள்.) பிரமதேவன் இவ்வண்ணம் ஆச்சரியமடைந்து கபாலீசருக் கு ஆராதனைசெய்யத் தனக்குள் நினைத்து அதற்கு வேண்டியதான அழகு ள்ள திரவியங்களை விரைவிற் சேகரித்துக்கொண்டு அவ்விடத்தில் முன்ன ஞ் செய்யவேண்டிய கிரியைகளையெல்லாஞ் செய்துமுடித்துப் பின்பு கொ டிய்வினைகளையெல்லாந் தீர்த்தருளுகின்றவராகியகபாலீசருக்கு அன்புடன் பூசைசெய்யத்தொடங்கி. எ-று. (கஎ)

நீலமால்பிரமர்வானோர்நேயமோடனேகர்போந்து
சாலவுமன்பான்முன்னஞ்சாத்துமாலியங்கணீக்கிப்
பாலுடன்றதிநெய்தேனீர்பற்பலவற்கமற்றுங்
கோலநந்தாலமூலங்கொண்டபிடேகம்பண்ணி.

(இ-ள்.) இதற்குமுன் பிரமாவிஷ்ணுக்கள் முதலாகிய தேவர்கள் அனேகர்வந்து அன்புடன்பூசித்துச் சாத்தப்பட்டிருக்கிற நிருமால்யங்க ளெல்லாம் நீக்கிப் பால் தயிர் நெய் தேன் நீர் இதுமுதலாக மற்றுமுள்ள பலதிரவியங்களையும் அழகுள்ள சங்கினாலு மூலமந்திரஞ்சொல்லித் திரும ஞ்சனஞ்செய்து. எ-று. (கஅ)

திருவுருவீரமாற்றிச்சிறந்தசெஞ்சாந்தஞ்சாத்திக்
குருமணிமகுடஞ்சாத்திக்கோலவாபரணஞ்சாத்திப்
பொருவில்பொன்னுடைசாத்திப்பூந்தொடைத்தொகைகள்சாத்தி
மருவுயிர்த்திருவில்வத்தின்மாலைகள்பலவுஞ்சாத்தி.

(இ-ள்.) இவ்வாறு திருமஞ்சனஞ்செய்தபின்பு கபாலீசர் திருமேனி யிலிருக்கும் ஈரத்தைத் திருவொத்தாடைகொண்டு மாற்றியுஞ் சிறப்புள்ள செஞ்சந்தனக்காப்புச் சாத்தியும் நிறம்பொருந்திய ரத்தினமகுடஞ் சாத்தி யும் அழகுள்ள திருவாபரணஞ் சாத்தியும் ஒப்பில்லாத பட்டுப் பீதாம்பரஞ் சாத்தியும் பலவாகிய பூமாலைகள் சாத்தியும் வர்சனைவீசுகின்ற திருவில்வ மாலைகள்சாத்தியும். எ-று. (கக)



பிரமன் சிரமிழந்தது.

சுத்தவன்னத்தின்சார்நற்சுவைக்கறிக்குவைகண்மற்று
மத்தனையமுதுசெய்வித்தகற்றித்தூபாதிநல்கி
நித்தன்முன்னருளாற்சொற்றநிகழிருக்காதிவேதம்
பத்தியான்முழுதுங்கூறிப்பணிந்துசூழ்ந்திறைஞ்சிநின்றான்.

(இ-ள்.) சுத்தான்னமும் அதைச்சார்ந்த சித்திரான்னங்களும் அறுசுவையோடுங் கூடிய திருக்கறியமுது வருக்கங்களு மற்றுமுள்ள அபூவ வருக்கங்களுங் கபாலீசருக்கு நிவேதனஞ்செய்வித்து அவைகளைநீக்கித் தூபதீபாராதனைகளுஞ் செய்து பரமசிவம் ஆதியில் கிருபையினாற் கற்பித்தருளிய ருக்குமுதலாகிய வேதவாக்கியங்கள் முழுவதையும் அன்புடன் துதிசெய்து பணிந்து பிரதட்சணஞ்செய்து மீட்டும் சாஷ்டாங்கமாக வணங்கி யெழுந்துநின்றான். எ-று. (உ0)

பங்கயன்றுதிகள்சொற்றேபணிந்துசூழ்ந்திறைஞ்சும்போதி
லங்கவன்கருதும்வண்ணமருளுவானெண்ணியெண்ணிக்
கொங்கலர்மாலைசிந்தக்குணலையிட்டறவோர்சூழச்
சங்கரன்விடைமேல்வந்துசாரதர்பரவநின்றான்.

(இ-ள்.) பிரமதேவன் இவ்வாறு தோத்திரங்கள் சொல்லிப்பணிந்து பிரதக்ஷணஞ்செய்து மீட்டும் பணியும்போது அவன் நினைத்தபடிவரங்கள் பிரசாதித்தருளத் திருவுள்ளத்தடைத்து அளவில்லாத புட்பமாரிசொரியவும் முனிவர்கள் ஆரவாரித்துக் கூத்தாடவும் கபாலீசர் ரிஷபவாகனரூடராய் வந்து பூதகணங்கள் யாவருந் துதிசெய்யும்படி காட்சிகொடுத்தருளினார். எ-று. (உக)

வேதனுமதுகண்டின்பவேலையுட்புகுந்துபோற்ற
நாதனுமவனைநோக்கிநளினநின்விருப்பேதென்னக்
காதனின்னடிகட்கென்றுங்கருத்தினிற்பெறுகவேண்டுந்
தீதறவகிலமெல்லாஞ்சிருட்டிசெய்செய்கைவேண்டும்.

(இ-ள்.) பரமசிவம் இவ்வாறு காட்சிகொடுத்தருளியதைப் பிரமதேவன் தரிசித்து ஆனந்தக்கடலில் மூழ்கித் துதிசெய்யக் கபாலீசர் அவரிடத்திற் றிருக்கண் சாத்தித் தாமரைமலரில் இருப்பவனே உன்னுடைய விருப்பம் என்னவென்று திருவாய்மலர்ந்தருளலும் ஐயனே தேவரீருடைய திருவடிக்கன்பு அடியேனுள்ளத்தில் மேலு மேலும் வளரவேண்டும் இதுவுமன்றி இந்த உலகங்களையெல்லாம் குற்றமறச் சிருஷ்டிக்குந் தொழிலையும் பிரசாதித்தருளவேண்டும். எ-று. (உஉ)

விளங்குமித்தலந்தனக்கும்விண்ணகத்தமரரேத்தக்
களங்கறுத்திடுநினக்குங்கருதுமித்தீர்த்தத்துக்கும்

வளங்கொளுந்திருக்கபாலிமாநகரொன்றுமேலோ
ருளங்கொள்காபாலியென்றுமுலகில்வாழுயிர்கட்கெல்லாம்,

(இ-ள்.) எவ்விடத்தும் பிரகாசித்துக்கொண்டிருக்கிற இந்த க்ஷேத்திரத்திற்குக் கபாலிநகரமென்றும் தேவர்கள் யாவருந்துதிசெய்யக் கிருபைகூர்ந்து அவர்களுடைய தீவினைகளையெல்லாந் தீர்த்தருளுகின்ற தேவரீருக்குக் கபாலீசரென்றும் யாவரும் தியானிக்கத்தக்க இந்தச்சத்திகங்கையென்னுந் தீர்த்தத்திற்குக் கபாலி தீர்தமென்றும் உலகத்தில் வாழ்கின்ற உயிர்கட்கெல்லாம். எ-று. (உரு)

கருதியதுதவுஞ்சீர்த்திக்காபாலிதீர்த்தமென்னும்
பரவுசீரமரர்யாரும்பகர்ந்திடவேண்டுமென்ன
வுரைசெயுமுறைமையாவுமுதவினனேகென்றோதித்
திரைதருகங்கைசூடுஞ்செஞ்சடைமுடியோனுற்றான்.

(இ-ள்.) நினைத்தவரங்களை யெல்லாம் அருளிச்செய்கிற கபாலிதீர்த்தமென்றும் சீர்பரவியதேவர்கள்யாவரும் பேர்கள் கூறவேண்டுமென்றும் விண்ணப்பஞ்செய்யக் கபாலீசர் கிருபைகூர்ந்து பிரமனே நீகேட்டுக்கொண்டவரங்களையெல்லாம் பிரசாதித்தருளினோம் இனி நீ போகலாமென்று விடைகொடுத்தருளி அலைகள் பொருந்திய கங்காநதியைத் தரித்துக்கொண்டிருக்கிற சடாமகுடத்தையுடைய கபாலீசரானவர் வீற்றிருந்தருளினார். எ-று. (உச)

இங்கிவைமுனிகாள்வேதனெழில்பெறவருச்சித்தேத்துந்
துங்கமீதென்றான்சந்தத்தொடையணிமலயத்தண்ண
லங்கவரெழுந்துபோற்றியதிசயமுற்றுவெள்ளி
கொங்கலரருச்சித்தேத்துங்கொள்கையங்கருள்செய்யென்றார்.

(இ-ள்.) முனிவர்களே இப்போது நாம் சொல்லிவந்தவைகள் பிரமதேவன் அழகுபெற அருச்சனைசெய்து துதிசெய்த சரிதமென்று சந்தவிருக்ஷசோலைகள் நெருங்கிய பொதியமலையில் வீற்றிருக்கிற அகத்திய முனிவர் அருளிச்செய்தார் அதைக்கேட்ட முனிவர்களெல்லாரும் அதிசயமடைந்து எழுந்து துதிசெய்து முனிசிரேஷ்டரோ சுக்கிரபகவான் வாசனைபொருந்திய புட்பங்களாற் பூசைசெய்து தோத்திரம் பண்ணின சரிதம் எவ்வண்ணமோ அதனையுங் கிருபைசெய்ய வேண்டுமென்றார்கள். எ-று.()

பிரமனருச்சனைச்சருக்க
முற்றிற்று.

---

ஆகச்சருக்கம் - ௩௦ - க்கு திருவிருத்தம் ௬அ௧.

# சுக்கிரனருச்சனைச்சருக்கம்.

பண்ணவர் முனிகாள் முன்னம் பகர்தரு களிமக் தானு
மண்ணன்மக் திரத்துட் டீப மடர்திரி நுகர்வான் பற்றி
நண்ணுமுற் பிறப்பிற் செய்த நல்வினைப் பயனுற் றூண்டப்
பண்ணவன் மகிழ்ந்து மேலாம் பாதத்துக் குதவு மாபோல்.

(இ-ள்.) தேவரிஷிகளே! ஆதியிலேசொல்லப்படுகிற ஒருஎலியானது முன்செய்த தபோபலத்தினுல் கைலாயகிரியிற் பொருந்திய பரமசிவனுடைய திருக்கோயிலுக்குள் பிரகாசித்துக்கொண்டிராநின்ற திருவிளக்கினுடைய திரியினூறியநெய்யை யுண்ணப்பற்றித் தூண்டினமையினுலே பரமசிவமகிழ்ந்துசரியைமுதலாகிய நாலுபாதங்களுக்குள் மேலாகிய பாதத்துக்கு வரம் பிரசாதித்தருளுவதுபோல. எ-று. (க)

தாவின்மா வலியாய் நாமந் தாங்கியே யரக்க னுகி
மூவுல கங்க ளாய முழுவதுஞ் செங்கோ லோச்சிச்
சேவிவர்ந் தருளும் பெம்மான் றிகழ்தர வருள நாளு
மோவிலா துலக மெல்லா மொருதனிக் குடையுள் வைத்தான்.

(இ-ள்.) அந்த எலியானது-தானவர்குலத்திற் பிறந்து மாபலியென்னும் பெயர்பெற்றுத் திரிலோகங்களிலுந் தன்செங்கோல் செலுத்தி விளங்கும்படி ரிஷபவாகனத்தின்மே லாரோகணித்தருளும் பரமசிவம் கிருபைபாலித்தருள ஒருநாளும் நீங்காமல் இந்தஉலகங்களையெல்லாந்தன்னுடைய ஒருகுடையி னிழலின்கண் வைத்து அரசாட்சிசெய்தான். எ-று. (உ)

அன்னநா ளமர ரோடங் கமர்செய்து வெற்றி கொண்டே
பொன்னலர்த் தெறுங் களிப்பா லுவகைசேர் மனத்த னுகி
மன்னும்யா வருக்குங் கேட்ட மறுப்பிலா தளிப்பா னெண்ணிப்
பொன்னணி மதமா வையம் புரவியா திகள் வழங்கும்.

(இ-ள்.) அப்படி அரசாட்சிசெய்துகொண்டிருக்கிறகாலத்தில், தேவர்களுடன் போர்செய்து செயங்கொண்டு, இவ்வண்ணம் பகைவரை வென்ற இறுமாப்பினுலே சந்தோஷம்பொருந்திய மனத்தையுள்ளவனுகி, தன்னிடத்தில் யாவர்வந்து யாதுகேட்டாலு மறுக்காமல் கொடுக்கஎண்ணி, திரவியங்கள் ஆபரணங்கள் மும்மதம்பொழியும் யானைகள் தேர்கள் அசுவங்கள் முதலாகிய பொருள்களைக்கொடுத்துக்கொண்டிருக்கின்றுன். ()

அதுபொழு தாழி யங்கை யமலன்வா மனமா யோது
முதுமறை தெரிந்த வேத முதலிளஞ் சிறுவ னாகக்
கதுமென வவத ரித்துக் கதிர்மணிப் பூணன் முன்ன
மதிசயந் தோன்ற நிற்ப வரக்கன்வேண் டுவதென் னென்றான்.

(இ-ள்,) அவ்வண்ணங் கொடுத்துக்கொண்டிருக்கிறபோது, சக்கராயுதமேந்திய கையினையுடைய மகாவிஷ்ணுவானவர்-வாமனமாகிப் பழமையாகிய வேதங்களையெல்லாம் ஓதியுணர்ந்தபிராமணச் சிறுபிள்ளையென்னும் பிரமசாரியாகத் திருவவதாரஞ்செய்து, பிரகாசியாநின்ற இரத்தினாபரணங்கள் அணிந்திருக்கும் அந்த மாபலியின் எதிரில் அவனுக்கு அதிசயமுண்டாகும்படிச் சென்று நிற்க, மாபலிபார்த்து-உனக்குவேண்டியதென்னவென்றான். எ-று. வாமனமென்பது-குட்டையாகிய உருவம். (சு)

வேண்டுவ தளிப்பை யென்று விளம்பின ரெவரு நீண்ட
சேண்டவழ் புகழா யானுஞ் சேர்ந்தன னென மகிழ்ந்தே
தூண்டுவாம் பரித்தேர் மன்னன் சொற்றிடென் றருள நாளு
மாண்டிடு முலகத் துண்மூ வடிநமக் களித்தி யென்றான்.

(இ-ள்.) நீயாவருக்கும் வேண்டியபொருள்களைக்கொடுப்பையென்று எல்லாருஞ் சொன்னார்கள் ஆதலினால், தேவலோகம்வரையிலுஞ் சென்றிராநின்ற கீர்த்தியையுடைய அரசனே நான் உன்னிடத்தில் வந்தேனென்று சொல்ல, தாவுகின்ற குதிரைகள்கட்டிச் செலுத்தத்தக்கதாகிய தேரினையுடைய மாபலிமகிழ்ந்து, உனக்குவேண்டிய தெதுவோ அதனைக்கேளென்று சொல்ல, நீ நாடோறும் அரசாட்சிசெய்துகொண்டிருக்கிற இந்த உலகத்தில் நம்முடைய பாதத்தினால் மூன்றடிபூமி நமக்குக்கொடுக்கவேண்டுமென்று வாமனமூர்த்தி சொன்னார். எ-று. (எ)

என்னலு முவகை கூர்ந்தே யேத்திநீ ரொடு கொடுப்பன்
சொன்னவை யென்ற காலை சுக்கிர னுரைப்பான் வெளவேல்
மன்னவிப் புவியை யுண்ட மாயவ னிவனென் றோரா
தென்னினைக் கின்றாய் வாளா வேழைமா மதியை யென்றான்.

(இ-ள்.) வாமனமூர்த்தி இவ்வாறுசொன்னஉடன், மாவலி மிகவு மகிழ்ச்சியடைந்து நீ கேட்டுக்கொண்ட மூன்றடிபூமியையும் நான் நீர்த்தாரையுடனே தத்தம்பண்ணிக் கொடுக்கிறேன் வாங்கிக்கொள்ளென்று சொன்னபோது, ராக்ஷதகுருவாகிய சுக்கிரன் மாபலியை நோக்கிச் சொல்லுகின்றான், அரசனே இந்தப்பிரமசாரி ஆதியில் உலகங்களையெல்லாம் உண்ட மகாவிஷ்ணுவென்று தெரிந்துகொள்ளாமல் உன்னுடைய ஏழ்மைப்புத்தியினாலே என்னகாரியஞ் செய்ய நினைத்தாயென்றான். எ-று. (அ)



' சுக்கிரன் ஒற்றைக்கண்ணிழந்தது.

எண்ணலின் னனவென் றோத வெதிரிலா னகைத்து மேலாம்
பண்ணவன் கரத்திற் றானம் பண்ணிடச் சிரகக் கண்ணி
னுண்ணிக முதகம் வீழா துசனனு மறைப்ப மாயன்
கண்ணிசேர் தருப்பை தன்னாற் கண்ணிலா னாகச் செய்தான்.

(இ ள்.) இப்படிக்கொத்தகாரியம் நினைக்காதையென்று சுக்கிரன் சொல்ல, தனக்கு நிகரில்லாத மாவலி நகைத்துத் தேவர்களுக்கெல்லாம் மேலானவராகிய மகாவிஷ்ணுகையில் தானஞ்செய்யும்படித் தாரைவார்க்க எத்தனித்தபோது, கரகத்துக்குள்ளே விளங்குகிற நீரானது வீழாதவண்ணம் சுக்கிரன் அதனது துவாரத்தை யடைக்க, கொத்தாயிருக்கிற தருப்பைகளில் ஒரு தருப்பையினாலே அந்தக் கரகக் கண்ணிற் குத்திச் சுக்கிரனை யொரு கண்ணில்லாதவனாகச் செய்தான். எ-று. (எ)

கொடுப்பவ ரருகி ருந்து குற்றமே சொ லுமன் னோரைக்
கெடுத்திடுந் தெய்வ மென்று கிளத்திடும் வசனம் பொய்யோ
வெடுத்தகூ ராழி யங்கை யிறைவருக் களிக்குந் தானந்
தடுத்தசுக் கிரனு நாட்டந் தானிழந் திட்டா னம்மா.

(இ-ள்.) ஒருவருக்குப் பொருள்கொடுப்பவர்கள் அருகிருந்து கொடுக்கவொட்டாமல் தடுப்பவர்களைத் தெய்வங்கெடுத்துவிடும் என்று சொல்லுகிற வார்த்தை பொய்யோ, கூர்மைபொருந்திய சக்கராயுதமேந்திய அழகிய கையினையுடைய மகாவிஷ்ணுவுக்குக் கொடுக்கிற தானத்தைத் தடுத்த சுக்கிரனுங் கண்ணிழந்தான். எ-று. (அ)

வேறு.

இழந்தநாட் டத்தனென் றியம்பும் வெள்ளியு
முழந்துசெஞ் சடைமுடி யொருவன் றன்னையே
குழைந்தவன் புடனருச் சனைகு யிற்றிடத்
தழைந்திடு மயிலைமா நகரஞ் சார்ந்தனன்.

(இ-ள்.) கண்ணிழந்தவனென்று சொல்லப்படுகிற சுக்கிரனும் வருத்தமுற்று மனமுருகி மீட்டுங்கண்களைப்பெறக்கருதி யன்புடன் செஞ்சடாபாரமுள்ள பரமசிவம் திருக்கோயில்கொண்டு வீற்றிருந்தருளும் வளப்பங்கள்மிகுந்துள்ள திருமயிலையென்கிற க்ஷேத்திரத்தில் வந்து சேர்ந்தான். ()

நெருங்குதண் டலைகளு நீடு வாவியுஞ்
சுரும்பிமிர் குவளைகள் துன்னு மோடையுங்
கரும்பின்வண் சோலையுங் காமர் வீதியு
மொருங்குடன் கண்டுகண் டுவகை பூத்தனன்.

(இ-ள்.) அவ்வாறு சென்ற சுக்கிர னனவன்நெருங்கியமலர்ச்சோலை களையும் பெரியதடாகங்களையும்வண்டுகளிசைபாடிக்கொண்டிருக்கும் நீலோ ற்பல மலர்கள் மலர்ந்துள்ள ஓடைகளையும் கருப்பஞ்சோலைகளையும் அழகு ள்ள வீதிகளையும் அங்கங்கும் பார்த்துச்சந்தோஷமடைந்தான். எ-று. (கo)

வேறு.

போற்றின னின்பவெள்ளம் புகுந்தனன் றுன்பமெல்லா
மாற்றினன் மலரின்மாரி வழங்கினன் விழிநீர்மண்மே
லூற்றினன் மயிர்பொடிப்ப வுவந்தன னியங்கிவெள்ளை
யேற்றினன் கோயின்முன்ன மெய்தியே பணிந்துவீழ்ந்தான்.

(இ-ள்.) இப்படி சந்தோஷமடைந்த சுக்கிரனனவன் துதிசெய்து ஆனந்தவெள்ளத்தில் மூழ்கி,கண்ணிழந்த துன்பமெல்லாமாறி,புட்பவிருஷ ங்களைப்பொழிந்து,பூமியினிடத்து ஆனந்தக்கண்ணீரை ஒழுகவிட்டு,ரோம ங்கள் குச்சிடும்படி சந்தோஷமடைந்து, வெள்ளை ரிஷபவாகனமுடைய கபாலீசர் வீற்றிருந்தருளும் திருக்கோயில் முன்னைஞ்சென்று சாஷ்டாங்க மாகப்பணிந்தெழுந்து துதிசெய்தனன். எ-று. (கக)

வீழ்ந்துவீழ்ந் தெழுந்துபோற்றி விமலனா லயத்துண்மேவித்
தாழ்ந்துதாழ்ந் தமரர்போற்றுஞ் சத்தியங் கங்கைகண்டே
சூழ்ந்துசூழ்ந் திறைஞ்சிப்புக்குத் தோய்ந்துதோய்ந் தந்நீராடிப்
போழ்ந்துபோழ்ந் தல்லற்றெவ்வைப் பொடிபடுத் தின்பமுற்றான்.

(இ-ள்.) அந்த இடத்தில் பலதரம் சாஷ்டாங்கமாகப்பணிந்து துதி செய்து பின்பு சிவாலயத்துக்குட்போய். அங்கும் பலமுறை சாஷ்டாங்க மாகப் பணிந்து போற்றிசெய்து,தேவர்களெல்லாம் போற்றிசெய்யும் சத்தி கங்கையாகிய கபாலிதீர்த்தத்தைக் கண்டு அங்கு பலமுறை பிரதக்ஷிணஞ் செய்து வணங்கி அதன் கரையிற்போய் பலதரம் மூழ்கி அந்தத் தீர்த்தத் தில் ஸ்நானஞ்செய்து,தனக்குநேரிட்ட துன்பமாகிய பகையைத் தூள்படு த்திச் சந்தோஷத்தை யடைந்தான். எ-று. (கஉ)

சுடர்முடிப் புகரோன்மெய்யிற் றுவருடை யுடுத்துக்கண்டித்
தொடரணிந் திலங்கநீறு தூளித மாகச்சாத்தி
யடர்கரு மங்கண்முற்று மாற்றியா லயத்துண்மேவிப்
படரொளி பரப்புஞான பண்டித னுருவங்கண்டான்.

(இ-ள்.) பிரகாசியாநின்ற மகுடமணிந்த சுக்கிரன்-காவிவஸ்திரமுடுத்திக்கொண்டும் உருத்திராக்ஷமாலைகள் தரித்துக்கொண்டும் விளங்கும்படி விபூதியை உத்தூளனமாக மெய்முழுதும் பூசிக்கொண்டும் செய்யவேண்டிய நித்திய கருமங்களையெல்லாம் நிறைவேற்றிக்கொண்டும் திருக்கோயிலுக்குள் சென்று, மிகுந்த சோதிசொரூபமுள்ள கபாலிசருடைய திருமேனியாகிய சிவலிங்கப்பெருமானைத் தரிசித்தான், எ-று. (கங)

ஐயனை வினைகடீர்க்கு மடிகளை யெங்கோன்றன்னைத்
துய்யவெம் புகரோன்கண்டு தொழுதனன் விழிநீர்சிந்தக்
கைகள்சென் னியின்மேற்கூப்பிக் கடவுளே போற்றிஞான
மெய்யனே போற்றியென்று வீழ்ந்தனன் றிருமுன்மாதோ.

(இ-ள்.) யாவர்க்கும் ஐயனும் அடியார்களுடைய வினைகளைத் தீர்த்தருளும் சுவாமியும் எம்மிறைவனுமாகிய கபாலீசரைச் சுக்கிரன் தரிசித்துத் தொழுது ஆனந்தபாஷ்பம் பெருகும்படி இரண்டுகைகளையுங் குவித்து உச்சியின்மேல்வைத்துக்கொண்டு கடவுளே போற்றியென்றும் ஞானசொரூபனே போற்றியென்றும் துதிசெய்து சந்நிதியில் வீழ்ந்து பணிந்தான்.()

அத்தன்முன் பணிந்துபோற்றி யருச்சனை புரிவானெண்ணிப்
பத்தியா லுபயோகங்கள் பலவுமுன் வரமுன்முன்னிச்
சுத்திக ளுடனேபூசை தொடங்கிவெவ் வினைகண்மாய்க்கு
முத்தனுக் கன்பாயெல்லா முகந்தபி டேகம்பண்ணி.

(இ-ள்.) இவ்வாறு கபாலீசர் சந்நிதியில் பணிந்து துதிசெய்து அன்புடன் ஆராதனைசெய்யக் கருதி, அதற்குவேண்டிய திரவியங்களெல்லாம் அங்கு வரும்படி நினைத்து பஞ்சசுத்திகளுடனே பூசைசெய்யத்தொடங்கிக் கொடியவினைகளை யொழித்தருளுங் கபாலிநாதருக்குள்ளன்புடன் அங்குவந்திருக்குந் திரவியங்களெல்லாம் அபிஷேகஞ்செய்து. எ-று. (கடு)

சந்தன மறுவைபூந்தார் தயங்குபொற் கலன்கள்சாத்திச்
சுந்தரப் பாயசான்னஞ் சுவைக்கறி யுடனேநல்கி
யந்தமா மடைக்காய்தூநீ ரணிகொடு பாதியீந்தே
கந்தமா மலர்கள்சிந்திக் கழறியே மறைகளெல்லாம்.

(இ-ள்.) சந்தனக்காப்பும் வஸ்திரமும் பூமாலைகளுஞ் சாத்தி,பிரகாசியாநின்ற பொன்மயமாகியதிருவாபரணங்கள்சாத்தியும் மதுரமுள்ள பாயசான்னம் அறுசுவையுள்ள கறிவர்க்கங்களுடன் நிவேதித்தும், சவுந்தர

முள்ளவெற்றிலைபாக்குகளாகிய தாம்பூலமும் பரிசுத்தமுள்ள அருக்கியமும் அழகுபொருந்திய தூபதீப உபசாரங்களுஞ் செய்து, வாசனைபொருந்திய நல்லமலர்களைக் கொண்டு புட்பாஞ்சலியுஞ் செய்து, நான்கு வேதவாக்கியங்களாலும்தோத்திரஞ்செய்து. எ-று. (கசு)

வணங்கியே கபாலிதீர்த்த மருங்கினிற் றனதுபேரா
லிணங்கிடா விலிங்கந்தாபித் தெழிலருச் சனையுஞ்செய்தே
தணந்தனக் காக்கினேயந் தனியொரு தீர்த்தஞ்செய்தே
மணந்தரு மலர்கண்டென்றும் வரதனைப் பூசைசெய்தான்.

(இ-ள்.) சாஷ்டாங்கமாகப்பணிந்து கபாலிதீர்த்தத்தினருகில் தன்னுடைய பெயரினால் விளங்கும்படி இணங்கிச் சுக்கிரன் இலிங்கமென்று ஒருசிவலிங்கத்தைத்தாபித்து ஆராதனையுஞ் செய்து, குளிர்ச்சிபொருந்திய நீரினையுடைய அந்த கபாலிதீர்த்தத்திற்கு அக்கினிமூலையில் ஒரு தீர்த்தமுண்டாக்கி,வாசனைபொருந்திய மலர்களால் நாடோறும் கபாலீசனைப் பூசை செய்துகொண்டிருந்தான். எ-று. (கஎ)

முறைமையா லின்னபான்மை முயற்றின னெண்ணில்காலங்
கறைமிடற் றிறையுமோர்நாள் கருணையாய் விடையினேறி
மறைதெரி முனிவர்தேவர் வசுக்கள்கின் னரர்கள்வாழ்த்த
வறைகழல் பூதவீர ரடைந்திட முன்னமுற்றான்.

(இ-ள்.) வேதாகமவிதிப்படி இப்படிக்கு அனேகநாள் பூசைசெய்துகொண்டு வந்தநாள்களுள் ஒருநாள், காளகண்டத்தையுடைய பரமசிவங் கிருபைகூர்ந்து ரிஷபவாகனத்தின்மேலாரோகணித்துக்கொண்டு, வேதங்களுணர்ந்த முனிவர்களும் தேவர்களும் வசுக்களும் வாழ்த்தவும், ஒலிக்காநின்ற வீரகண்டையையணிந்த பூதவீரர்கள் சூழ்ந்துவரவும் சுக்கிரபகவானுக்கெதிரிலெழுந்தருளினார். எ-று. (கஅ)

வேதத்தி னந்தந்தன்னில் விளங்கிடும் பொருள்களெல்லாம்
போதித்த பொருளேபோற்றி பொருவிடற் கரியாய்போற்றி
நாதத்தின் மேலாய்போற்றி நம்பனே போற்றிபோற்றி
யேதத்தை யிரித்தாய்போற்றி யீசனே போற்றிபோற்றி.

(இ-ள்.) வேதமுடிவாகிய உபநிடதங்களில் விளங்காநின்ற பொருள்களையெல்லாம் முனிவர்களுக் குபதேசித்தருளிய வஸ்துவே போற்றி, ஒப்புசொல்லுதற்கரியவனேபோற்றி, நாததத்துவத்தின் மேலாயுள்ளவனே

போற்றி, நம்பனே போற்றி போற்றி, அடியேனுடைய துன்பங்களையெல்லாம் ஒழித்தருளிய கடவுளே போற்றி, கபாலீசுரனே போற்றி போற்றி. எ-று. (௧௯)

பாலனைப் பரிந்துகாத்தப் பாலனைக் கொல்லவந்த
காலனைக் களைந்தாய்போற்றி கபாலிநா யகனேபோற்றி
யோலமிட் டடையவும்பர்க் குருகியே யவர்கட்கந்த
வாலமுண் டமிர்தமீந்த வையனே போற்றிபோற்றி.

(இ-ள்.) மார்க்கண்டேயனென்னும் பிராமணப்பிள்ளையைப் பரிந்து ரக்ஷித்து அந்தப்பாலனைக் கொல்லவந்த யமனைக்கொன்றருளிய கபாலிநாதனே போற்றி, முறையிட்டு அடைக்கலமாகவந்த தேவர்களுக்குக் கிருபைகூர்ந்து சமுத்திரத்திலுண்டாகிய விஷத்தை யுண்டு அவர்களுக்கு அமிர்தம் பிரசாதித்தருளிய ஐயனே போற்றிபோற்றி. எ-று. (௨0)

பரமனே போற்றிபோற்றி பசுபதி போற்றிபோற்றி
பிரமனு மயனுந்தேடப் பிறங்கழ லானாய்போற்றி
யிருமல பாகந்தன்னி லிருண்மலந் தடுப்பாய்போற்றி
விரிதலைப் பேயோடாடும் விமலனே போற்றிபோற்றி.

(இ-ள்.) பரமனே போற்றிபோற்றி, எல்லாஉயிர்களுக்கு மிறைவனாகிய கடவுளே போற்றிபோற்றி, பிரமதேவனும் மகாவிஷ்ணுவும் தேவரீருடைய திருமுடியையும் திருவடிகளையுந்தேடும்படி பிரகாசியாநின்ற அக்கினிசொரூபமாகிய கடவுளேபோற்றி, இருவினையொப்புமலபரிபாகமுண்டான இடத்தில் ஆணவ இருளை யொழித்தருளுங் கடவுளேபோற்றி, பரந்த மயிர்த்தலையையுடைய பேய்களுடன் சுடலையில் கூத்தாடுகின்ற கடவுளே போற்றி போற்றி. எ-று. (௨௧)

செய்யவம் பவளமேனிச் சிற்பரா போற்றிவானிற்
றுய்யவான் மதியஞ்சூடுந் தோன்றலே போற்றியென்று
மையலற் றிலகநாயேன் வாழநீ யருள்செய்யென்றான்
செய்யவே ணியனுமின்றுன் சிந்தையின் விருப்பேதென்றான்.

(இ-ள்.) அழகுள்ள செம்பவளம்போன்ற திருமேனியுடைய சிற்பரனே போற்றி, ஆகாயத்தில் செல்லத்தக்கதாய் பரிசுத்தமான வெண்மை நிறமுள்ள இளந்திங்களைச் சூடிய கடவுளே போற்றி, நாயேன்மயக்கம் நீங்கி யெந்நாளும் வாழும்படி தேவரீர்கிருபை பிரசாதித்தருள வேண்டுமென்று துதிசெய்தான். இவ்வண்ணஞ்சுக்கிரபகவான் றுதிசெய்தபோது, செஞ்சடாமகுடமுள்ள கபாலீசர் கிருபைகூர்ந்து அவனைநோக்கி உன்மனதிற் குள்ளிருக்கும் விருப்பத்தைச்சொல்லக்கடவையென்றுதிருவாய்மலர்ந்தருளினார்.

ஆதர வுடனேயுன்ற னடிகளுக் கிடைவிடாத
காதலும் விளங்குமிந்தக் கடியமா நகர்க்கென்பேருந்
தீதறு தேசுசேர்ந்து திகழ்தரு விழியுமாகத்
தாதவிழ் கொன்றைவேய்ந்த வள்ளலே தருதியென்றான்.

(இ-ள்.) விருப்பத்துடன் தேவரீருடைய திருவடிகளிடத்தில்விட்டு நீங்காத அன்பும் அலங்காரத்துடனே பிரகாசித்துக்கொண் டிராநின்ற இந்த க்ஷேத்திரத்திற்குச் சுக்கிரபுரியென்று பெயரும் அருளுவதோடுகுற்றம்நீங்கிய ஒளிபொருந்தி விளங்குகின்ற நேத்திரம் அடியேனுக்குண்டாகவும் மகரந்தங்களுடன் மலர்ந்த கொன்றைமாலையையணிந்த பரமசிவமே வரம்பிரசாதித்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தான். எ-று.(உ௩)

இங்கிவை யெல்லாந்தந்தோ மேகென வியம்பிநாத
னங்கண மறைந்தான்வெள்ளி யளப்பருந் தேசுமின்னப்
பங்கனை விடைகொண்டேதன் பதியடைந் தவர்க்குமேலாந்
துங்கமு மெய்தியின்பந் துளைந்தருள் சேர்ந்துவாழ்ந்தான்.

(இ-ள்.) சுக்கிரனிவ்வாறு விண்ணப்பஞ்செய்யக் கபாலீசர் கிருபை கூர்ந்து, நீ கேட்டுக்கொண்ட வரங்களை யெல்லாம் அநுக்கிரகஞ் செய்தோம், இனி நீ உன்பதவிக்குச் செல்லக் கடவையென்று கட்டளையிட்டு அந்தச் சிவலிங்கமூர்த்தத்தில் மறைந்தருளினார். அதன்பின்பு தன்னுடைய சரீரத்தில் அளவில்லாத காந்திவிளங்கப் பார்வதிபாகனிடத்தில் விடைபெற்றுக்கொண்டுசென்று, இதுவரையில் சுக்கிரபதம் பெற்றிருந்தவர்க்கெல்லாம் மேலாகிய பெருமைபெற்று இன்பத்தைப்பொருந்திக் கபாலீசருடைய திருவருளையும் பெற்று வாழ்ந்திருந்தான். எ - று. (உ௪)

மன்னுமா தவர்காளீசன் மாநக ரடைந்துவெள்ளி
பொன்னடி யருச்சித்தேத்தும் பொற்பிது வென்றுமோனுங்கித்
தன்னிகர் மலையத்தண்ண றருக்குடன் மகிழ்ந்துபோற்றி
முன்னுமித் தலத்திற்றீர்த்த முக்கிய மருள்செய்யென்றார்.

(இ-ள்.) நிலைபெற்றிராநின்ற முனிவர்களே சுக்கிரபகவான் கபாலீசருடைய பொலிவுள்ளதிருவடிகளை யருச்சித்துத் துதிசெய்த சரிதமிதுவாமென்று, தவத்தில் தனக்குத் தானே ஒப்பாகிய அகஸ்திய முனிவரருள் செய்தார். அதைக்கேட்டமுனிவர் யாவர்களும் ஆனந்தத்துடன் மகிழ்ச்சியடைந்து அவரைத் துதிசெய்து யாவருந்தியானிக்கத்தக்க இந்தத்தலத்திலிருக்கும் தீர்த்தத்தின் பெருமைகளையும் எங்களுக்கருள் செய்ய வேண்டுமென்று சொன்னார்கள். எ-று.

சுக்கிரன்பூசித்தசருக்கம் முற்றிற்று.

ஆகச்சருக்கம் - கக - க்கு திருவிருத்தம் ௫௱௬.

## தீர்த்தச்சருக்கம்.

முன்னகுடனென்பவனைமூரியரவாகச்
சொன்னமுனிபின்னுமொருதுய்யகதைசொல்வான்
மன்னுமுனிகாண்மயிலைமாநகரின்மேவுந்
தன்னிகரில்தீர்த்தவகைசாற்றுவன்விளங்க.

(இ-ள்.) ஆதிகாலத்தில் நகுஷனென்னும் சூரியகுலத்தரசனைப் பலம்பொருந்திய சர்ப்பமாகும்படி சபித்த அகத்தியமுனிவர், பின்னும் ஒப்பற்று விளங்கும் தூய்மையான சரிதஞ் சொல்வாராய், நித்தியத்துவ மடைந்த முனிவர்களே! திருமயிலை யென்னுந் திருப்பதியிலுள்ள நிகரற்ற தீர்த்த வகைகளைத் தெளிவாகச்சொல்லுகின்றேன் கேட்கக்கடவீர்களென்று சொல்லத்தொடங்கினார்.

வேறு.

சீர்தருமயிலையென்னுஞ்செழும்பதியதனினிற்கு
நீரெலாந்தீர்த்தமென்றுநிகழ்த்திடும்புராணம்யாவுந்
தாரணிவேணியண்ணறுதவிழ்மலர்ப்பூங்கோதைக்
கூரயில்விழியாளுக்குக்கூறினனுலகமுய்ய.

(இ-ள்) சிறப்பமைந்த திருமயிலை யென்னும் திருப்பதியிலுள்ள நீர் நிலைகளெல்லாம் தீர்த்தங்களே யென்று புராணங்களெல்லாங் கூறும். கொன்றை மலர் மாலையணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானும், மகரந்தங்களையுதிர்க்கும் மலர்களைமுடித்த அழகிய கூந்தலையும் கூர்மையான வேல்போலுங் கண்களையுமுடைய பார்வதி தேவியாருக்கு உலகத்தா ருய்யும்வண்ணம் உபதேசித்தனர்.—எ-று. (௨)

அறந்தருமயிலையென்னுமணிநகர்தீர்த்தத்துண்மை
சிறந்திடவொருவருக்குஞ்செப்பினதில்லைநீவிர்
துறந்துபாசத்தைவென்றதூய்மையீர்வினவலாகு
நிறங்கெழுமழுமானங்கைநிமலன்மந்திரத்துமேல்பால்.

(இ ள்.) சிவபுண்ணியத்தைப் பாலிக்கும் திருமயிலை யென்னும் அழகிய நகரத்திலுள்ள தீர்த்தங்களின் மகிமையை, சிறப்புடனே இதுவரையில் ஒருவருக்குஞ் சொன்னதில்லை. நீங்கள் துறவறமடைந்து பாசத்தைச் சயித்த பரிசுத்தர்களாகையால் கேட்கத்தகும். நிறமமைந்த மழுவையும் மானையுந் திருக்கரங்களிலேந்திய கபாலீஸ்வரரது திருக்கோயிலுக்கு மேற்றிசையில்.—எ-று.

உந்தமகபாலிதீர்த்தத்துண்மையாங்கூறவற்றோ
பத்தியாற்படிந்தோரெய்தும்பலன்களைக்கணிக்கலாற்ரு
வத்தன்றன்சத்திகங்கையாதலாற்சத்திகங்கை
முத்தியோர்மொழிவர்வேதன்முதலினோர்மொழியவற்றோ.

(இ-ள்.) உத்தமமாகிய கபாலிதீர்த்தத்தின் மகிமையை நாம் சொல்லத்தரமோ? பத்தியுடனே அத்தீர்த்தத்தில் மூழ்கினோரடையும் பயன்களை யளவிடப்படா, சிவபெருமானது சத்தி கங்கையாதலால், அத்தீர்த்தத்தின்வல்லமையை முத்தியடையக்கூடிய பெரியோர்கள் கூறுவரன்றிப் பிரமன் முதலியோரும் கூறமுடியுமோ?—எ-று. (௪)

கருணையாற்கலிங்கதேசங்காத்திடுமன்னன்பெருந்
தருமனேயவன்றன்மைந்தன்சாம்பவன்றருக்கினாலே
யருமறைதனையுமோதானங்கமுமாராயான்செய்
கருமமுமியற்ருன்காலந்தொறும்விதிகருமமாய்ந்தே.

(இ-ள்.) காருணியத்துடன் கலிங்கதேசத்தை யரசாண்ட தருமனென்னும் ஓரரசனிருந்தனன். அவன் குமாரனாகிய சாம்பவனென்பவன் செல்வச்செருக்கால் அருமையாகிய வேதங்களையு மோதாதவனாய், வேதாங்கங்களையு மாராயாதவனாய், காலங்கடோறும் செய்யத்தக்க கருமங்களையும் விதிப்படியாராய்ந்து செய்யாதவனாய்.—எ-று. (௫)

தந்தைசொற்றனையுங்கேளானமைச்சர்சாற்றுதலுந்தாங்கா
னிந்தனைபுரிந்துதன்னுணினைத்ததுமுடித்துச்செல்வா
னிந்நாடன்னிற்றந்தையிகழ்ந்துடல்வானஞ்சேர்ந்தா
னொந்துமந்திரிகள்வையநோக்கிடான்புதல்வனெய்யான்.

((இ-ள்.) தனது பிதாவார்த்தையுங் கேளாதவனாய், மந்திரிகள் சொல்லையு மேற்காதவனாய், அவைகளை நிந்தித்துக்கொண்டு தன் மனத்தி லெண்ணியதை முடித்துக்கொண்டு வருவான். அவனிவ்வாறிருக்கும் நாளில் அவன் பிதா தேகவியோகமானார். அமைச்சர்கள் மனம் நொந்து ஐயோ இப்புத்திரன் உலகத்தைப் பாதுகாவான், மிகவும் அற்பன்.—எ-று. (௬)

உலகினையோம்பவல்லமற்றவனொருவன்றன்னை
யொலைமுடிசூட்டுவோமென்றுன்னியிவ்வூனன்றன்னைக்
கொலைபுரிவாமென்றெண்ணுங்கொள்கையுமறிந்துகொண்டு
சிலையினும்வலியநெஞ்சனவனயற்றேசஞ்சேர்ந்தே.

(இ-ள்.) உலகத்தைப் பாதுகாக்கவல்ல வேறொருவனை அதிசீக்கிரத்தில் அரசனாக்க வேண்டுமென்றெண்ணி, அதுவுமல்லாமல் இப்புதல்வனையுங் கொலைசெய்யவேண்டுமென்று மெண்ணிய கொள்கைகளை அப்புதல்வனாகிய சாம்பவனறிந்து, கல்லினும் கடினசித்தத்தையுடைய அவன் மறுதேசத்தையடைந்து.

இயலினினியம்பும்பாவமெவற்றையும்புரிந்தானங்குக்
கயல்விழியார்தங்காதற்கனியினுற்கயவர்தம்மை
நயவியரிவரோயென்றுநாடியேகூடிக்கொண்டு
பயன்மொழிபகர்ந்துதேசவிதந்தொறும்படாலுற்றான்.

(இ-ள்.) நீதிநூல்களில் விலக்கியுள்ள பாவங்களனைத்தையும் அவ்விடத்திற் செய்தான். கயல் மீன்போலும் விழிகளைப்படைத்த மாதர்களிச்சையென்னும் பழத்தைப் புசிப்பதற்கு, மூடர்களைக் கற்றவர்களென்று நினைத்து நட்புகொண்டு, அவர்களுக்குப் பிரியவசனஞ் சொல்லிக்கொண்டு, தேசங்கள்தோறும் திரியத்தொடங்கினன்.—எ-று. (அ)

கண்ணினபாலியென்னுநன்னதிகழ்ந்தநாட்டிற்
பண்ணியமுதற்காலத்திற்பண்ணியபருவமெய்திப்
புண்ணியர்நண்ணுமிந்தப்புவியினும்வந்துபுக்கா
னெண்ணமார்மறையோன்றன்னையொருவனையெதிரேகண்டான்.

(இ-ள்.) பொருத்தமாயுள்ள பாலியென்னும் சிறந்த நதி விளங்கிய தொண்டைநாட்டில், பிறந்த பிறவிகள்தோறு மியற்றிய தவப்பயனடைந்த புண்ணியர்கள் வசிக்கும் இத்திருமயிலையினும் வந்தடைந்தான். அவ்விடத்து யாவராலு மதிக்கத்தக்க ஓர் வேதியர் தன்னெதிரில் வரத் தரிசித்தனன்.—எ-று. (கூ)

தொழுதனனவனையந்தச்சுருதியந்தணனுநோக்கி
யழகியாய்வடிவத்தாலேயாவனீயறையாயென்ன
விழுமியரொன்றேயந்தவிடலையும்விருப்பமுற்றே
தொழுதகையுடனேநின்றுதுணையிவரொன்றுசூழ்ந்தே.

(இ-ள்.) அவ்வாறு தரிசித்தவுடனே அவரைப் பணிந்தனன். அப்படி வணங்கிய சாம்பவனென்பவனை வேதங்களை யோதியுணர்ந்த அவ்வேதியர் பார்த்தருளி, உருவத்தினால் அழகுள்ளவனே? நீயார்? சொல்லென்று கேட்க; இவர் மிகச் சிறந்தவரொன்றெண்ணி அந்தக் காளைப்பருவமுள்ள சாம்பவனும் விருப்பங்கொண்டு, சிரமேற்கூப்பிய கையுடனே எதிரில் நின்று, இனி நமக்குத் துணைவரிவரோயென்று யோசித்து.—எ-று. (கப)

தன்னதுதேசங்கூறித்தந்தைதுஞ்சியதுஞ்சாற்றி
மன்னியவுலகங்காக்கவலனலனென்றுவாடித்
துன்னியவமைச்சர்தன்னைத்தொலைக்கவெண்ணியதுஞ்சொல்லிப்
பன்னிடத்துணிந்தான்பாரிற்றன்புரிபாவமெல்லாம்.

(இ-ள்.) தனது தேசத்தின் பெயரையுஞ்சொல்லி, தந்தையாரிறந்ததையுந்தெரிவித்து, நிலைபெற்ற உலகத்தைப் பாதுகாக்கவல்லவனல்லவென்று மந்திரிகள் துயரடைந்து, தன்னைக் கொல்லவெண்ணியதையுமறிவித்து, உலகத்தில் அதுவரையில் தான்செய்த பாவங்களையெல்லாஞ் சொல்லத்தொடங்கினான். ()

தருக்கினாற்பரதாரத்தைத்தழுவியுங்கன்னிவேய்த்தோண்
முருக்கிதழ்ச்செவ்வாய்வேற்கண்முலைமுகைநகைபடைத்த
பரத்தையர்க்கினியனாயுங்கனவினும்பிறரைப்பாராக்
கருத்துடைக்கற்பினார்தோள்கலந்திடக்காதல்செய்தும்.

(இ-ள்.) செல்வச்செருக்காற் பிறர்மனைவியரைப்புணர்ந்தும், இளமையாகிய மூங்கில்போலுந் தோள்களையும், முருக்கமலரையொத்த அதரத்தையும், சிவந்த வாயையும், வேல்போலுங் கண்களையும், முல்லையரும்பையொத்த தந்தங்களையுமுடைய விலைமாதர்களைத்தழுவியும், கனவினிடத்தும் அன்னியபுருடரைப்பாராத மனவலியமைந்த கற்புடைய மாதர்களது தோள்களைத்தழுவ விருப்பங்கொண்டும்.—எ-று. (கஉ)

அருஞ்சுரத்ததனிற்செல்லுமந்தணர்தமைவதைத்தாங்
கிருந்தனங்கவர்ந்துகொன்றுமிருக்குமேந்திழையார்தம்மைக்
கரந்தணைந்திரவிற்புக்குப்பிறர்மனைக்கனகங்கொண்டு
மருந்தினையருத்தித்தக்கோர்க்கவர்பொருண்மயக்கிக்கொண்டும்.

(இ-ள்.) அருமையான பாலைவனங்களிற்செல்லும் அந்தணர்களைத் துன்பப்படுத்தி, அவர்களிடமுள்ள திரவியங்களைக் கவர்ந்துகொண்டு அவர்களைக்கொன்றும், அவ்வாறிறந்தவர்களது மாதர்களை மறைவாகத்தழுவியும், இரவிற் பிறர்மனைகளிற்புகுந்து அங்குள்ள பொன்னைத்திருடியும், மேன்மையுடையோருக்கு மயக்கம் வரத்தக்க மருந்துகளைக்கொடுத்து, அவர்களைமயக்கி அவர்கள் பொருளை யபகரித்தும்.—எ-று. (கரு)

அருந்திடினயர்ச்சிசெய்யுமதுவினையவலரோடே
பொருந்தியும்புகன்றுபொய்யும்பிறவுமூன்பொசித்தும்வெய்ய
சாந்தனைத்தூரந்துமார்க்கஞ்சரிப்பவருடலைச்சாய்த்தும்
புரிந்தமாபாதகங்களினுமுளபுவியுளென்றான்.

(இ-ள்.) குடித்தவுடனே மயக்கத்தைத்தரும் கள்ளைக் குடியர்களுடனே குடித்தும், பொய்வார்த்தையும் துர்மார்க்கவார்த்தையும் பேசியும், மாமிசத்தைத்தின்றும், வழிப்போக்கர்களது சரீரத்தைப் பாணங்களைவிட்டு மடித்தும், யான் இவ்வுலகத்தியற்றிய மகாபாதகங்க ளின்னுமனேகமிருக்கின்றனவென்று சொன்னான்.—எ-று. (கச)

அப்பொழுதறவுநொந்தேவந்தவந்தணனுமந்தோ
விப்பெரும்பாதகங்களுனையிகவாதேநின்று
வெப்பெரிநிரயந்தன்னில்வீழ்த்திடுமீளமாட்டாய்
செப்புவனிதற்குக்காலன்செய்வினைகேட்டியென்றான்.

(இ-ள்.) அப்பொழுது அவ்விடத்துவந்த வேதியர் மிகவருந்தி, ஐயோ! இந்த மகாபாதகங்கள் உன்னைவிட்டுப்பிரியாமல் நின்று, வெப்பத்துடன் எரிந்துகொண்டிருக்கும் நரகத்தில் உன்னைத்தள்ளிவிடும். நீ எக்காலத்தும் அந்நரகத்தினின்றும் மீளமாட்டாய், இப்பாதகங்களுக்கு யமன் செய்கின்ற தண்டனைகளைச் சொல்லுகின்றேன் கேட்பாயென்றார்.—எ-று. (கரு)

வேறு.

காலபாசங்களாற்கட்டித்தூதுவ
ராலமோடயமும்வெம்பாகுக்காய்ச்சியே
சாலவேபோழ்ந்தவாய்தன்னிலூற்றுவார்
சூலமார்கனலினுஞ்சூடுவார்களே.

(இ-ள்.) யமதூதர்கள் காலபாசத்தாற்கட்டி, விஷத்தையும் இரும்பையும் பாகுபோலக்காய்ச்சி, அதிகமாகவெடுத்து பிளவாயிருக்கும் வாயிலே யூற்றுவார்கள். நெருப்பிற்காய்ந்த சூலத்தினாலும் சூடுவார்கள்.—எ-று. (கசு)

பலபதினாயிரங்கற்பம்பற்களின்
மலையெனவழல்களைச்சொரிவர்மார்பினுந்
தலையினுந்தோளினுஞ்சலாகைநாட்டுவா
ரலமருஞ்செக்கினிலாட்டுவார்களே.

(இ-ள்.) அளவிறந்த பதினாயிரங் கற்பகாலம்வாயில் பல்லுகளிலே மலைபோல அக்கினியைச்சொரிவார்கள். மார்பிலும் தலையிலும் தோளிலும் இருப்புச்சலாகையைப் பாய்ச்சுவார்கள். சுழன்றுகொண்டிருக்கும் செக்கிலும் வைத்தாட்டுவார்கள்.—எ-று. (கஎ)

மற்றுளவாதையும்வகுத்துக்கூறினாற்
சொற்றிடுநாவையுஞ்சுடுமிதன்றியே
செற்றிடும்வினவினாற்செவியையாதலாற்
குற்றமானவைகடீர்நெறியைக்கூறுவார்.

(இ-ள்.) மற்றும் அவர்கள் செய்யத்தக்க துயரங்களையும் விரித்துச்சொன்னால், சொல்லுகின்ற நாவையுஞ் சுட்டுவிடும். இதல்லாமலும் கேட்டாற்காதையும் கொன்றுவிடும். ஆகையால் இத்தகைய பாதகங்களுக்குத் தீர்வான மார்க்கத்தைச் சொல்லுவோம்.—எ-று. (கஅ)

வேறு.

வேண்டிநீவினவிலெம்மைவிளம்புவேம்பரிகாரத்தை
யீண்டெனக்கேட்டேயந்தவிடலையுமெனக்குநல்லாய்
மாண்டறக்கொடியேன்செய்தவல்வினையனைத்தும்வாஞ்சை
பூண்டெனக்கருள்செய்மார்க்கமெனவவன்புகல்வாமென்றான்.

(இ-ள்.) இவ்விடத்தில் எம்மை நீ பிரார்த்தித்துக் கேட்பாயாகில், இப்பாதகங்களுக்குப் பரிகாரங் கூறுவோமென்று சொல்ல, அக்காளையாகிய சாம்பவன் கேட்டு, எனக்கு மிகவும் நல்லவரே! கொடியேனியற்றிய பாதகங்களெல்லாம் ஒழிந்துபோகும்படியான பரிகாரத்தை, என்மேற் கிருபைபாலித்தருளவேண்டுமென்று பிரார்த்திக்க, அவ்வேதியர் அவ்வாறே சொல்லுவோமென்று தொடங்கினர்.—எ-று. (கக)

இத்தலத்தினிலெஞ்ஞான்றுமிலங்குஞ்சீர்க்கபாலிதீர்த்த
மத்தடம்படியினீசெய்யருவினைக்குழுக்கண்மாயு
முத்தியுமடைவையிங்கேமூத்தினம்வசிக்கிலீது
சத்தியமென்றான்முன்னஞ்சதுமறைவிதியைநேர்வான்.

(இ-ள்.) இத்திருப்பதியில் எந்நாளுஞ் சிறப்பமைந்த சபாலிதீர்த்தம் விளங்கிக்கொண்டிருக்கும். அத்தீர்த்தத்தில் முழுகினால் நீ புரிந்துள்ள பாதகக்கூட்டங்களொழியும். இத்தலத்திலேயே மூன்றுதினம் வசித்தால் மோக்ஷானந்தமுமடைவாய். இது சத்தியமென்று முன்னமே நான்குவேதங்களின் விதியை யாராய்ந்துணர்ந்த அவ்வேதியர் கூறினர்.—எ-று. (உ0)

என்றவன்றன்னைப்பாதம்பணிந்தெழில்வேந்தனேத்திப்
புன்றலைப்பதகனேற்குப்புகன்றனையுய்யுமாற்றை

வென்றனன்வினையையின்னேயெனவிடைகொண்டேய்ன்பிற்
சென்றனன்கபாலிதீரத்திருங்கரைமருங்கின்மாதோ.

(இ-ள்.) இவ்வாறு கூறிய அவ்வேதியனைச் சாம்பவனென்னும் அரசகுமாரன் திருவடிகளில் வணங்கித்துதித்து, அற்ப அறிவினையுடைய பாதகனுகிய எனக்குப் பிழைக்கும் வழியை உபதேசித்தனை, என்னுடைய தீவினைகளனைத்தையும் இப்போதே ஜயித்தேனென்று விடைகொண்டு, அன்புடனே கபாலிதீர்த்தத்தின் கரைக்கருகிற்சென்றான்.—எ-று. (உக)

பங்கயங்கழுநீராம்பல்பற்பலவகைகடுன்னிச்
செங்கயன்மலங்கும்வாளைத்திரளடைந்தலைகள்வீசப்
புங்கவரொவருந்தோய்ந்துபோற்றிடவிளங்குஞ்சத்தி
கங்கைகண்டிறைஞ்சிநின்றேகணிப்பிலற்புதத்தனுனன்.

(இ-ள்.) செந்தாமரைமலரும், செங்கழுநீர்மலரும், செவ்வாம்பன்மலரும், இன்னும் பலவிதமலர்களும் புட்பித்து நெருங்கி, சிவந்த கயல்மீன்களும் மலங்குமீன்களும் வாளைமீன்களும் திரளாகச்சேர்ந்து அலைகள் வீசும்படி, தேவர்கள் யாவரும் மூழ்கித் துதிக்கவிளங்கும், சத்திகங்கையென்னும் கபாலிதீர்த்தத்தைத் தரிசித்துத் தொழுதுநின்று,அளவிறந்த அற்புதத்தையுடையவனானன்.–எ-று.

பங்குனிமாதந்தன்னிற்படைத்தவுத்திரத்திற்குன்றாத்
திங்கள்சேர்தினமாமற்றைத்தினத்தினிற்கபாலிதீர்த்தக்
கங்கையிற்படிந்துமெய்யிற்கதிர்தருபூதிசாத்திப்
பொங்கொளிமந்திரத்துட்புகுந்தனனார்வத்தோடும்.

(இ-ள்.) பங்குனிமாதத்தில் வந்த உத்திரநட்சத்திரத்திற் கலைகள் குறையாத பூர்ணசந்திரன் சேர்ந்த தினமாகிய பௌர்ணமியினன்று, கபாலிதீர்த்தத்தின் மூழ்கிச் சரீரத்தில் ஒளிகொடுக்கும் திருவெண்ணீற்றை யணிந்து, மெய்யன்புடனே அதிக பிரகாசத்தோடு கூடிய திருவாலயத்துட்புகுந்தனன்.—எ-று.

வலமொருமூன்றுஞ்செய்துவணங்கினன்கபாலிலிங்கத்
தலைவனைவிழியானோக்கித்தகமகிழ்ந்தவலந்தீர்ந்தே
சுலவியதரங்கவாரிசுற்றுமாமயிலைதன்னி
னிலவுமுத்தினம்வசித்தானிகழ்தருமுத்திசேர்ந்தான்.

(இ-ள்.) மூன்றுபிரதக்ஷணஞ்செய்து, கபாலீசுவரனைக் கண்களாற்கண்டு தக்கவாறு மகிழ்ச்சியடைந்து துயரம் நீங்கித் தொழுதான். வீசுகின்ற அலைக

ணயுடைய கடல்சூழ்ந்த திருமயிலையில் மூன்றுதினம் வசித்திருந்து, நிலைபெற் றுள்ள முத்தியின்பமடைந்தனன்.—எ-று. (உ௪)

ஒழிவிலாப்பருவந்தன்னினுயர்விதிபாதந்தன்னி
னழகுறுமருக்கவாரமற்பசியோணந்தன்னிற்
குழைவொடுபணிந்தோர்வானோர்குணிக்கருமுத்திசேர்வர்
மொழிதருமுத்திதீர்த்தமுதன்மையாந்தீர்த்தமாமால்.

(இ-ள்.) கலைகள் குறையாத பௌர்ணிமியிலும், உயர்வாகிய விதிபாத யோகத்தினன்றும், அழகமைந்த ஆதிவாரத்திலும், அற்பிசிமாதத்தில் வரும் திருவோணநட்சத்திரத்திலும், மனவுருக்கத்தோடு தொழுகின்றவர்கள், தேவர்களாலு மளத்தற்கரிய பெருமையமைந்த முத்தியை யடைவார்கள். இப்போது நாம் கூறிய முத்திதீர்த்தமென்னும் இத்தீர்த்தமே முதன்மையான தீர்த்தமாகும்.—எ-று. (உ௫)

மயிலையம்பதிதனக்குவடகிழக்கிடையோர்தீர்த்தம்
பயிறருகடவுட்டீர்த்தம்பரிசையாவர்களுமோரார்
கயிலைநாயகனுமைக்குக்கழறியதென்னினென்று
லியலுறவிசைக்கற்பாற்றேவிசைத்திடவலன்வியாதன்.

(இ-ள்.) திருமயிலையென்னுந் திருப்பதிக்கு வடகிழக்கில் ஓர் தீர்த்தமிருக்கின்றது. அதன்பெயர் கடவுள் தீர்த்தம். அதன்மகிமையை எவருமறியார்கள். அம்மகிமை கைலாயபதியாகிய சிவபெருமான் உமாதேவியாருக்கு உபதேசித்ததென்றால், அடியேனல் அளவிட்டுச்சொல்ல முடியுமோ? வியாசமுனிவரோ கூறவல்லவர்.—எ-று. (உ௬)

அங்கதேயத்துவாழ்வோனறநெறிவழியினளுரும்
பொங்கொளிநிதியஞ்சேர்த்தோன்பொருவில்சீர்வணிகன்றுனுந்
துங்கசீர்த்தானஞ்செய்துதொல்வினைப்பயத்தானேக்க
மங்கியவதனுற்றீர்த்தவகைநதியாடப்போந்தான்.

(இ-ள்.) அங்கதேசத்தில் வாழ்ந்திருந்த சிறப்புடைய ஓர்வணிகன், நல்வழியிலெந்நாளுமொழுகி அதிக பிரகாசத்தையுடைய திரவியத்தைச்சேர்த்தவனாய், பெருமையுள்ள உயர்ந்த தானங்களைச் செய்துவரும்நாளில், ஊழ்வினைப் பயனல் அவனுக்குப் பார்வைகுறைந்தபடியால், அக்குறைவு தீரும்படி தெய்வதீர்த்தங்களாகிய நதிகளில் நீராடச்சென்றனன்.—எ-று. (உ௭)

கங்கையாதிகள்படிந்துகனிவொடுசிவதலங்க
ளெங்கணுந்திரிந்தானேக்கமெய்திடாதிமயநீன்ற

மங்கைபாகனையேசேர்ந்துமயிலைமாநகரின்மாசித்
திங்கண்மாமகத்திற்சேர்ந்துதிரைகடற்படிந்துபெற்றான்.

(இ-ள்.) கங்கைமுதலிய தெய்வீகநதிகளில் மூழ்கி மனக்கனிவுடனே சிவதலங்களனைத்தினும் யாத்திரைசெய்தான். அவைகளால் தனது பார்வைக் குறைவு நீங்காமல், இமயவரையரையன் புதல்வியாகிய உமாதேவியை யோர்பாகத்திலுடைய சிவபெருமானை நினைந்து, திருமயிலையில் மாசிமாத மகநட்சத்திரத்தடைந்து, அலைகளையுடைய கடலில் நீராடித் தன்பார்வைக் குறைவுதீரப் பெற்றனன்.—எ-று. (உஅ)

வீறியமகரமாதம்வெண்மதிதேயும்பக்கத்
தூறியவந்தன்னிலொளிர்திதிதன்னின்மாதந்
தோறும்வாழ்பருவந்தன்னிற்றுளைந்தவர்முத்திசேர்வா
ரீறிலாத்தீர்த்தந்தனுளீதிரண்டாவதென்ப.

(இ-ள்.) சிறப்போங்கிய தைமாதம் அமரபட்சசதுர்த்தசிதிதியில், பிரதிமாதமும் வருகின்ற பௌர்ணிமியில் இவ்வாறு நீராடுபவர்கள் முத்தியடைவார்கள். முடிவில்லாத தீர்த்தங்களில் இத்தீர்த்தம் இரண்டாவதென்று பெரியோர் சொல்லுவர்.—எ-று. (உக)

கடியவெவ்வினைகடீர்க்குங்கபாலிமாநகர்தனக்கு
வடதிசைமருங்கேவேதம்வகுத்தலிங்கத்தின்முன்னர்
விடையினன்மகிழ்ச்சிகூரும்வேதமாதீர்த்தமாகும்
படிதலிற்பலத்தைக்கூறிற்பரிமேதயாகமொக்கும்.

(இ-ள்.) கொடிதாகிய தீவினைகளையொழிக்கும் திருமயிலைக்கு வடதிசைப்பக்கத்தில், வேதத்தாற் பிரதிட்டைசெய்த சிவலிங்கத்திற்குமுன்னே, இடபவாகனனாகிய சிவபெருமான் திருவுளமகிழும் வேததீர்த்தமுண்டு. அதில் மூழ்குவோர் பலனைச் சொல்வோமானால் அசுவமேதயாகஞ்செய்தோர் பலனுக்குச்சமானமாகும்.—எ-று. (௩௦)

அணிகொள்கார்த்திகைமாதத்தினழகுறுதிங்கடன்னிற்
பணிவொடுபணிந்தோரெய்தும்பலன்களைப்பகரவற்றோ
வுணர்வொடுதானஞ்செய்யிலொன்றுகோடியதாமாடும்
படவரவரையோன்கூறும்பரிசின்மூன்றாவதென்ப.

(இ-ள்.) சிறப்புடைய கார்த்திகைமாதத்தில் அழகமைந்த சோமவாரத்தில் தாழ்மையுடனே வணங்குவோரடையும் பலன்களைக்கூற முடியுமோ? அத்

தீர்த்தக்கரையில் நல்ல எண்ணத்துடனே தானஞ்செய்வார்களாகில் அத்தான த்தின்பலன் ஒன்றுகோடியாகப்பெருகும். ஆடுகின்ற படத்தையுடைய பாம்பை க் கச்சாக அரையிலணிந்த சிவபெருமான் திருவாய்மலர்ந்தவற்றில் இது மூன் றாவது தீர்த்தமென்று பெரியோர் சொல்லுவர்.—எ-று. (௩௧)

வேறு.

வாலியென்பவன்வந்துசென்
றாலமுண்டவனடிகளைக்
கோலுமன்பொடுகும்பிடா
வேலவெண்ணியெழுந்தனன்.

(இ-ள்.) வாலியென்பவன் திருமயிலையில் வந்து, முன்பு தேவர்கட்காகச் சென்று ஆலாலமுண்டருளிய கபாலீஸ்வரர் திருவடிகளை நிரம்பிய அன்பொ டுவணங்கி,தனதெண்ணம் நிறைவேறப் பிரார்த்தித்தெழுந்தான்.—எ-று.(௩௨)

வேறு.

சிரந்தருகாலம்பன்னசாலையுந்திகழச்செய்து
பரம்பரன்றன்னைப்பூசைபண்ணலாலவன்பேர்பெற்ற
துரம்பெறுகபாலீசத்துக்குத்தரதிசையில்விண்ணோர்
நிரந்தரம்படிந்துபோற்றநிகழ்தரும்வாலிதீர்த்தம்.

(இ-ள்.) நெடுங்காலம் பன்னசாலை கட்டிக்கொண்டு, கபாலீஸ்வரனைப் பூ சித்துவந்தமையால், அவ்வாலியின்பெயரையே தனக்குப் பெயராகப்பெற்றதா ய், வலியுள்ள கபாலீசமென்னுந் திருக்கோயிலுக்கு வடதிசையில், தேவர்கள் எப்பொழுதும் நீராடித்துதிக்கும்படி விளங்குகின்றது வாலிதீர்த்தம்.—எ-று.

மீனமாதத்திற்செவ்வாய்விதிபாதங்குருவாரஞ்சீ
ரானவெண்மதிதேய்பக்கத்தட்டமிகாரிவாரம்
பான்மையிற்படிந்தோர்தீராப்பவக்கடல்கடப்பர்நாளு
மீனமிலீதுநாலாந்தீர்த்தமாயிசைப்பர்மேலோர்.

(இ-ள்.) பங்குனிமாதத்திற் செவ்வாய்க்கிழமையில் விதிபாதயோகத்தில் வியாழக்கிழமையில், சிறப்பாகிய அமரபட்சத்தட்டமிதிதியில், சனிக்கிழமையி ல், விதியுடனே இத்தீர்த்தத்தில் மூழ்கினோர் தீராத பிறவிக்கடலைக் கடப்பர் கள். எக்காலத்தும் இத்தீர்த்தம் நான்காவது தீர்த்தமென்று பெரியோர்கூறுவர்.

வனைதருமயிலைமூதூர்வடகிழக்கிடைசரப்பூஞ்
சுனைதருகுமரவேண்முன்றோற்றச்செய்கங்கைதீர்த்தங்



வாலி சிவபூஜைசெய்தது.

கனகன்வாரத்தின்மேலாங்கார்த்திகைநாளின்மூழ்கின்
வினைவழிதொலைத்துவிண்ணோர்வியன்பதமடைதறிண்ணம்.

(இ-ள்.) அழகு விளங்கும் திருமயிலையென்னுந் திருப்பதியின் வடகிழக்கிலுள்ள சரவணப்பொய்கையில் அவதரித்த குமாரக்கடவுள் முன்னுண்டாக்கிய கங்கைதீர்த்தத்தில், குருவாரத்தில் மேன்மையாகிய கார்த்திகைநட்சத்திரத்தில் நீராடுவார்களாகில், ஊழ்வினைப்பயன்களை யொழித்துத் தேவர்களது சிறந்த பதவியை யடைவது நிச்சயம்.—எ-று. (௫௫)

மருவுதைம்மதியிற்செவ்வாய்வாரத்தின்மூழ்கிற்கொந்து
செருகுவார்குழலார்தம்மைச்சிந்தித்தபடியேயெய்து
முருளுழுந்தெல்லையோராண்டுட்கொளிற்கலைஞானங்கள்
பொருவிலாதுணர்ந்துமேலாம்புலமையுமெய்துமன்றே.

(இ-ள்.) தைமாதத்தில் வரும் செவ்வாய்க்கிழமையில் இத்தீர்த்தத்தில் மூழ்கில், பூங்கொத்துக்களைச் செருகியிருக்கும் நீண்ட கூந்தலையுடைய மாதர்களைத் தாங்களிச்சித்தபடியே யடைவார்கள். அத்தீர்த்தத்தில் உருளுகின்ற சிறு உழுந்தினளவு துளி, தினந்தோறுந் தவறாது நியமப்படி ஒருவருடம் உட்கொண்டுவந்தால், கலைஞானங்கள் நிகரற்றுணர்ந்து மேலாகிய புலமைத்தன்மையும் உண்டாகும்.—எ-று. (௫௬)

வள்ளையங்குழைமேற்றாவுவரிவிழிச்சிறுமருங்குற்
கிள்ளையங்கிளவிமாதர்கிளர்தருபுதல்வன்வேண்டி
வெள்ளியிற்படிந்தால்ஞானம்விதுவெனப்பெறுவார்கைம்மான்
வள்ளலுக்கடியார்போற்றவழங்குமீதஞ்சாந்தீர்த்தம்.

(இ-ள்.) வள்ளைக்கொடிபோன்ற காதிலணிந்திருக்கும் குழையின்மேற்றாவுகின்ற செவ்வரிபடர்ந்த விழிகளையும், சிறுத்த இடையையும்,கிளியைப்போலும் வசனங்களையுமுடைய மாதர்களும், ஒளிமிகுந்த புத்திரனும் பெறவிரும்பி, வெள்ளிக்கிழமையில் நீராடில், அவைகளைப் பெறுவதேயல்லாமல், மெய்ஞ்ஞானமும் கலைநிரம்பிய சந்திரனைப்போன்று பூரணமாகப்பெறுவார்கள், திருக்கரத்தில் மான்கன்றேந்திய சிவபெருமானடியவர்கள் துதிக்கத்தக்கதாய் விளங்குமித்தீர்த்தம், ஐந்தாவது தீர்த்தமாகும்.—எ-று. (௫௭)

விடம்படுகண்டன்வாழும்வியன்புனைமயிலைமூதூர்க்
கடைந்ததித்திசையோர்பாலிலழகுறுவெள்ளிதீர்த்தம்

தொடர்ந்திடுங்கதிர்வாரத்திற்சொற்றதுபுனர்பூசத்திற்
படிந்தவர்வினைகண்மாய்க்கும்பகரிலீதாறுந்தீர்த்தம்.

(இ-ள்.) காளகண்டராகிய கபாலீசுவரர் வீற்றிருந்தருளும் அற்புதமமைந்த திருமயிலையின் அக்கினிதிக்கின் ஓர்பக்கத்தில், அழகமைந்த வெள்ளிதீர்த்தமென்றொன்றுண்டு. அத்தீர்த்தத்தில் ஆதிவாரத்திலும், புனர்பூசநட்சத்திரத்திலும், மூழ்கினவர்களுடைய தீவினைகளைப்போக்கும். சொல்லுமிடத்து இத்தீர்த்தம் ஆறுவது தீர்த்தமாகும்.—எ-று. (௩௮)

மதிமுடியமலன்வாழுமயிலையம்பதிக்குமேல்பால்
விதிதருமிராமதீர்த்தம்விளங்குமைப்பசிமாதத்துப்
புதுமதிவளர்பக்கத்துப்பொலிவுறுநவமிமூழ்கிற்
கதியினிலடைதறிண்ணங்கழறிலீதேழாந்தீர்த்தம்.

(இ-ள்.) சந்திரசூடராகிய கபாலீசுவரர் வீற்றிருந்தருளும் திருமயிலைக்கு மேற்றிசையில், மெய்ப்பயனைத்தருகின்ற இராமதீர்த்தமென்றொன்று விளங்கும். அத்தீர்த்தத்தில் ஐப்பசிமாதத்தில் பூர்வபட்சத்து நவமியில் நீராடில் முத்தியிற்சேர்வது நிச்சயம். இது ஏழாவது தீர்த்தமாகும்.—எ-று. (௩௯)

இன்னசீர்தீர்த்தத்துண்மையியம்பினன்முனிகாளென்னப்
பன்னருமுனிவரானோர்பரவசமுற்றுஞானந்
துன்னியவிழிநீர்மல்கத்துதித்தனர்மயிலைமூதூர்
தன்னில்வாழ்சிவகோசங்கள்சாற்றுவன்றொகுத்துக்கேண்மின்.

(இ-ள்.) இவ்வகையான சிறப்போடுகூடிய தீர்த்தங்களின் மகிமைகளைக் கூறினேம் முனிவர்களேயென்று அகத்தியர் கூறலும், சொல்லுதற்கரிய அம் முனிவர்கள் ஆனந்தபரவசமடைந்து, ஞானம்பொருந்திய கண்களினின்றும் அருவிசொரியத் துதித்தார்கள். பின்னும் அகத்தியமுனிவர் கூறுகின்றார். திருமயிலையில் வீற்றிருக்கும் மற்றைச் சிவலிங்கங்களையும் தொகுப்பாகக் கூறுகின்றேன் முனிவர்களே கேளுங்கள்.—எ-று. (௪0)

கயிலையம்பதியின்மிக்கமயிலையெங்கடவுள்தாமும்
பயிலுறுசிவாலயத்தினடுத்தவுத்தரத்தின்பாங்க
ரிலகுமாகுலிதுர்க்கியாயமுக்கண்ணியெண்டோள்
பயிரவிவீற்றிருந்துவாழ்வளீதன்றிப்பின்னும்.

(இ-ள்.) திருக்கயிலையினும் மிக்க பெருமிதத்தையுடைய திருமயிலையில் வீற்றிருந்தருளும் கபாலீஸ்வரரது திருக்கோயிலுக்கடுத்த வடதிசைக்குப்பக்





வசிஷ்டர்-அத்திரி-கம்பந-காசர்-மயன் சிவபூசைசெய்தது.









அரிச்சந்திரன்-பாண்டவாள்-வியாக்கிரபாதர் சிவபூஜைசெய்தது.





மகாலட்சுமி-சரஸ்வதி-பிரகஸ்பதி-சூரியன்-சிவபூஜைசெய்தது.

கத்தில், விளங்குகின்ற மகாசூலி துர்க்கியென்னும் மூன்றுகண்களையும் எட்டுப் புஜங்களையுமுடைய பயிரவி திருக்கோயில்கொண்டிருப்பள். இதல்லாமல் இன்னும்—எ-று. (சுக)

புகழுறுமயிலைமூதூர்பொருந்தியவடபாறன்னிற்
பகர்பச்சைமால்நால்வேதம்பரவுசீர்வாலிசங்க
னிகரிலாவசிட்டன்றக்கனீதியத்திரிவானல்கும்
புகலுங்குறிகள்கண்டுபோற்றினாரிதன்றிக்கீழ்பால்.

(இ-ள்.) புகழமைந்த திருமயிலைக்கு வடதிசையில், யாவரும் துதிக்கும் மேகவண்ணராகிய திருமாலும், நான்குவேதங்களும், பரவிய சிறப்புள்ள வாலியும், சங்கனும், ஒப்பற்ற வசிட்டமுனிவரும், தக்கனும், நீதியுள்ள அத்திரிமுனிவரும், முத்தியின்பத்தைப் பாலித்தருளும் சொல்லுதற்கரிய சிவலிங்கங்களைத் தாபித்துத் துதித்தார்கள். இதல்லாமலும் கிழக்குத்திக்கில்.—எ-று. (சுஉ)

நளனொடுகடவுட்டச்சனுகர்கோன்வாமதேவன்
மளமிகுபிருகுசூதன்மாணிபத்திரன்வியாதன்
துளபமான்மன்றலங்குன்றூஞ்சித்தர்தும்புரோச
ருளமொடுகுறிகள்கண்டோரன்றியுமுறைக்குந்தென்பால்.

(இ-ள்.) நளமகாராஜனும் தேவதச்சனும் இந்திரனும் வாமதேவனும் இளமைமிகுந்த பிருகுமுனிவரும் சூதமுனிவரும் மார்க்கண்டேயரும் வீரபத்திரரும் வியாசமுனிவரும் துளபமாலையணிந்த திருமாலும், மணமிகுந்த மலையில் வசிக்கும் சித்தரும், தும்புரோசரும், மனவொருமையோடு சிவலிங்கந்தாபித்தார்கள். இதல்லாமலும் யாவருஞ்சொல்லுந் தென்றிசையில்.—எ-று, (சுரு)

செங்கமலத்துவைகுஞ்சேயிழைகலைமடந்தை
சிங்கவாகினிசுமாலிதிலோத்தமையமன்சாமுண்டி
யங்கசனாரதாதியளப்பிலமுனிவராயோர்
துங்கமார்குறிகள்கண்டோரிவையன்றித்துதிக்குமேல்பால்.

(இ-ள்.) செந்தாமரைமலரில் வீற்றிருக்கும் திருமகள் கலைமகள் துர்க்கை சுமாலி திலோத்தமை யமன் சாமுண்டி மன்மதன் நாரதர்முதலிய அளவற்ற முனிவர்கள் பரிசுத்தமான சிவலிங்கந் தாபித்தார்கள். இவையல்லாமலும் யாவரும் துதிக்கு மேற்றிசையில்.—எ-று. (சுசு)

சாம்புவன்சுக்கிரீவன்றசரதராமன்பௌம
னும்பலந்துவர்வாய்ச்சூலியருக்கனோடருணன்சீரான்

மேம்படுகுழைகொள் தாரைமிகுதவத்தினையோரெல்லாம்
பாம்பலங்காரப்பெம்மான்பதிந்திடுங்குறிகள்கண்டோர்.

(இ-ள்.) சாம்பவன் சுக்கிரீவன் தசரதராமன் பௌமன் செவ்வாம்பன் மலர்போலுஞ் சிவந்த வாயையுடைய காளி அருக்கன் அருணன் சிறப்பால் மேம்பாடமைந்த குண்டலத்தையுடைய தாரை, மிகுந்த தவத்தையுடைய இவர்களெல்லாம் பாம்பாபரணராகிய சிவபெருமான் ஆவிர்ப்பவிக்கும் சிவலிங்கங்களைத் தாபித்தார்கள்.—எ-று. (சரு)

அறைதருமறைகளன்றியரசர்பாண்டவர்களானோர்
நிறைதருமயிலைமூதூர்நிருதிதன்றிசையின்மேலோர்
முறைகொள்காவதத்தினெல்லைமுதுசிவலிங்கந்தீர்த்த
மறைமகிழ்தரக்குயிற்றியிருந்தனரளப்பில்காலம்.

(இ-ள்.) யாவரும் சொல்லுகின்ற வேதங்களேயல்லாமல் அரசர்களாகிய பாண்டவர்களும், சகலவளப்பமும் நிறைந்திருக்கின்ற திருமயிலையின் நிருதிதிக்கில் ஓர் காதவழிதூரத்தில், சிவலிங்கப்பெருமானும் தீர்த்தமும் உண்டாக்கி மனமகிழ்ச்சியுடனளவிறந்தகாலமிருந்தார்கள்.—எ-று. (சசு)

அன்றியுமயிலைமூதூர்க்கணிதருவடபாறன்னில்
வென்றிசேர்புலிக்காலண்ணன்மேம்படவிலிங்கஞ்செய்தே
யொன்றியகுரோசத்தெல்லையுற்றுமத்தியந்தனன்சேய்
துன்றுபன்புடனிருந்துதுய்த்தனன்சிவபேரின்பம்.

(இ-ள்.) அல்லாமலும் திருமயிலைக்கு வடதிசையில் வெற்றிபொருந்திய வியாக்கிரபாதர் சிவலிங்கப்பிரதிட்டைசெய்து, ஒருகூப்பிடுதூரத்தில் மேற்படி வியாக்கிரபாதமுனிவர், மெய்யன்போடு வீற்றிருந்து பேரின்பமெய்தினர்.

மடலவிர்பொதும்பர்சூழுமயிலையினிலிங்கஞ்செய்தோர்
படர்தருமளப்பிலோர்கள்பகரும்பஞ்சக்குரோசந்
திடமுடன்குடபாலாதியெல்லையத்தலமதாகுங்
கடகரியுரித்தபெம்மான்கழறியதுமைக்குமுன்னம்.

(இ-ள்.) இதழ்கள் விரிந்த மலர்கள் நிறைந்த சோலைகள் சூழ்ந்திருக்கும் திருமயிலையில் சிவலிங்கந் தாபித்தோர் அளவில்லாதவர்கள். வடக்குமுதல் நான்குதிக்குகளிலும் ஐந்து கூப்பிடுதூரம் அத்தலத்தின் எல்லையாகும். இவ்வாறேயானையுரித்த சிவபெருமான் முன்பு உமாதேவிக்கருளிச்செய்தனர்.—எ-று.

அன்புடன்முனிகாள்கேண்மினறைதருங்குறிகள்கண்டான்
முன்பறியாதுசெய்தமுழுவினைத்தொகைகண்மாயு
மின்புறுமாற்பிழைத்தாலெப்புறப்புறத்தாரேனுந்
துன்புறலன்றித்தீராத்தொலைவிலாநரகத்தேய்க்கும்.

(இ-ள்.) முனிவர்களே மெய்யன்புடன் கேளுங்கள்' நாம் சொல்லிவந்த சிவலிங்கங்களைத் தரிசித்தால் முன் அறியாமற்செய்த தீவினைக்கூட்டங்களொழியும். பேரின்பத்தையருளும் அச்சிவலிங்கங்களுக்குத் தவறிழைத்தால், எந்தப் புறப்புறச்சமயிகளாயினும், இம்மையில் துயரடைவதல்லாமல், எந்நாளுந் தீராமலும் ஒழியாமலுமுள்ள நரகத்தையு மடையச்செய்யும் —எ-று. (சக)

அத்தலமிலிங்கமூர்த்தியழகுறுதீர்த்தமூன்றி
லுத்தமமாமொவ்வொன்றேயுற்றுகந்திறைஞ்சினோர்க்கே
முத்தியைநல்குந்தொல்சீர்முனிவர்காளறையுமீது
சத்தியமென்றான்வாசச்சந்தனப்பொதியத்தண்ணல்.

(இ-ள்.) அத்திருமயிலையென்னுந் தலமும் கபாலீசனென்னும்மூர்த்தியும் அழகுள்ள கபாலீதீர்த்தமும் ஆகிய இம்மூன்றில், ஒவ்வொன்றே உத்தமமுடையதாய் இந்த இடத்திற்சென்று வந்து பணிகின்றவர்களுக்கு மோட்சத்தைக் கொடுத்தருளும். பழமையாகிய தவப்புகழுள்ள முனிவர்களே நாம் சொல்லிய வார்த்தை சத்தியமென்றார். வாசனையுள்ள சந்தனமரங்களோங்கிய பொதியமலையில் வீற்றிருக்கும் அகத்தியமுனிவர்.—எ-று. (கூ0)

கேட்டெழின்முனிவரானோர்கெழுமுமற்புதத்தராகி
வாட்டமில்ஞானநாட்டமாரிகள்வழாதுபெய்யப்
பாட்டளிமுரலுங்கொன்றைப்படர்சடைப்பரனார்பாதஞ்
சூட்டினராகிநின்றேதுதித்தனர்புளகம்பொங்க.

(இ-ள்.) அகத்தியமுனிவர் சொல்லிய தீர்த்தமகிமையைக் கேள்வியுற்ற தவமே அழகாகப்பெற்றிருக்கும் முனிவர்கள், அற்புதத்தைப் பொருந்தினவர்களாய், வாட்டமில்லாத ஞானமயமாகிய தங்கள் நேத்திரங்கள் ஆனந்தபாஷ்பத்தைப்பொழியத் திருமயிலைநகரைநோக்கி, இசைபாடும் வண்டுகள் சூழ்ந்த கொன்றைப்பூமாலையணிந்த பரந்த சடைகளுள்ள கபாலீசருடைய திருவடிகளைத் தம்முடியில் தரித்துக்கொண்டு சரீரமுழுதும் புளகங்கொள்ளும்படி துதிசெய்தார்கள்.—எ-று. (கூக)

தீர்த்தச்சருக்கம்முற்றிற்று.

ஆகச்சருக்கம் கஉ - க்கு திருவிருத்தம் - ௫௰௨.

---

நந்துநீவிர்களெவரும்வானரங்களாய்நண்ண
முந்துமென்றனன்சுரர்தொழுதகன்றனர்முயல.

(இ-ள்.) நாமவ்வண்ண மவதாரஞ்செய்து ராக்ஷதர்களுடைய வாழ்வும் வரங்களும் வெந்து நீறுபோலாகும்படி கொல்லுகிறோம், வருந்துகின்ற நீங்கள் யாவரும் வானரர்களாய் விரைவாக அவ்விடத்திற் பொருந்தச் செல்லுங்கள் என்றார். அதைக்கேட்ட தேவர்கள் அவரைப்பணிந்து வானரர்களாகும்படி சென்றார்கள்.—எ-று. (ச)

ஆயகாலையில்தசரதனென்னுமவ்வரச
னேயமைந்தர்களின்றிமுன்னவர்ப்பெறநினைந்தே
தூயமாதவக்கலைமுனிவசிட்டனைத்தொழுதே
யேயவங்கவர்தமைக்கொடேமகந்தனையிழைத்தான்.

(இ-ள்.) அந்தக்காலத்தில் தசரதனென்று சொல்லப்படுகிற அந்த வரசன்றனக்கு அன்புள்ள புத்திரர்கள் நெடுங்காலமில்லாமலிருந்து அவர்களைப் பெறும்பொருட்டுச் சித்தசுத்தியுள்ள பெரிய தபசியாகிய கலைக்கோட்டுமகாரிஷியையும் வசிட்டமகாமுனிவரையும் தொழுது அந்த இருவர்களாலும் புத்திரகாமேஷ்டியாகஞ் செய்வித்தான்.—எ-று. (ரு)

மற்றவச்செயல்காரணமாகியமன்னன
கொற்றவேல்விழித்தேவியர்வயிற்றிடைக்குறுகிப்
பற்றுமாழிசங்கனந்தனுமூன்றுருப்பரித்தே
யுற்றுமேவிடவிராகவன்புவியில்வந்துதித்தான்.

(இ-ள்.) அந்த புத்திரகாமேஷ்டிக்குக் காரணமாகிய தசரதமகாராசனுடைய வெற்றிபொருந்திய வேலாயுதத்தையொத்த கண்களுள்ள மனைவியர்கள் கர்ப்பத்தில் தங்கி, பொருந்திய சக்கிராயுதம் சங்கம் ஆதிசேடனென்னு மிந்த மூன்றுமுருவங்கொண்டு தம்பியர்களாக அவதாரஞ்செய்யும்படி இராமமூர்த்தியுட னிவ்வுலகத்தி லவதாரஞ்செய்தார்கள்.—எ று.

கௌசலை, கைகேசி, சுமித்திரை என்னும் இம்மூவர்களும் தசரதமகாராசாவினுடைய மனைவியர்கள். சக்ராயுதம் பரதனும், ஆதிசேடன் லக்ஷ்மணனும், சங்கம் சத்துருக்கனுமாம்; கௌசலை புத்திரன் இராமமூர்த்தி, கைகேசிபுத்திரன் பரதன், லக்ஷ்மணனும் சத்துருக்கனும் சுமித்திரை புத்திரர்கள். புத்திரகாமேஷ்டி செய்யும்போது அந்த ஓமத்திலிருந்து ஒரு பூதமானது பொற்றட்டில் ஒருபிண்டமாகிய அன்னம்கொண்டுவந்தது, அந்தப்பிண்டத்தில் பாதி கௌசலைக்கும், நின்ற பாதியில் பாதி கைகேசிக்கும், மற்று நின்ற பாதியை

யும் தட்டில் நின்றிருந்த அன்னத்தையும் சுமித்திரைக்குங் கொடுத்தார், அவை களை அவர்களுண்ட பிறகு கர்ப்பங்கொண்டு புத்திரர்கள்பிறந்தார்கள். சுமித்திரைக்கு இரண்டுபிண்டமாகக் கொடுத்தபடியினாலே அவள் வயிற்றினின்றும் இரண்டுபுத்திரர்கள் அவதரித்தார்கள்.—எ-று. (சு)

துங்கவேலிலக்குமணர்நற்பரதர்சத்துருக்க
ரிங்கனோதுமப்பெயர்களுந்தம்பியரிசையப்
பொங்குசீர்த்திகொளிராகவனுலகெலாம்புரக்க
வங்கமர்ந்தனன்றசரதன்மகிழ்ச்சியங்கடைந்தான்.

(இ-ள்.) பலமுள்ள வேலாயுதமேந்திய இலக்குமணன் பரதன் சத்துருக்கனென்று சொல்லப்படுகிற பெயர்களையுடைய தம்பிமார்கள் மூவரும் தன்னோடிருக்க, மிகுந்த கீர்த்தியையுடைய இராமமூர்த்தியானவர் உலகங்களை எல்லாம் ரக்ஷிக்கும்படி அங்கிருந்தார். அதுகண்டு தசரதமகாராசன் மகிழ்ச்சியடைந்தான்.—எ-று. (எ)

இந்தவாறுணர்ந்தயோத்திமாநகரிவனிருக்கு
மந்தவேலையிற்கவுசிகனென்னுமாதவனுற்
றுந்தன்மைந்தனையான்மகமியற்றிடத்துதவத்
தந்திடென்றனன்றசரதன்றொழுதளித்தனனால்.

(இ-ள்.) இந்த அயோத்திமாநகரத்தில் இராமமூர்த்தி இவ்வாறிருப்பதைக் கௌசிகமுனியென்கிற விசுவாமித்திரமுனியானவர் அறிந்து அங்குவந்து, தசரதமகாராசனை நோக்கி நான் யாகஞ்செய்வதற்குதவியாயிருக்கும்படி உன் மூத்த மைந்தனைக் கொடுக்கவேண்டுமென்று சொன்னார். தசரதமகாராசாவானவர் அவரை வணங்கி இராமமூர்த்தியைக் கொடுத்தார்.—எ-று. (அ)

அன்னபின்முனியிராகவன்றனையிலக்குமணன்
றன்னொடுங்கொடுபடர்ந்துதாடகைதனைச்சாடி
யின்னலின்றியேயிருந்துநன்மகந்தனையியற்றி
மன்னனுக்கவண்முனிவனன்மனுவெலாமளித்தான்.

(இ-ள்.) அதன்பின்பு விசுவாமித்திரமுனிவர் இராமமூர்த்தியையும் லக்ஷ்மணரையு மழைத்துக்கொண்டு சென்று, தாடகையென்னுமரக்கியை இராமமூர்த்தியால் கொல்லுவித்து, யாதொரு இடையூறுமில்லாமல் யாகத்தைச்செய்து முடித்து, அரசனாகிய அந்த இராமமூர்த்திக்கு தேவாஸ்திரங்களைக் கொடுத்து, அவைகளுக்குரிய மந்திரங்களு முபதேசித்தார்.—எ-று. (கூ)

இலங்குமாதவன்பின்னவற்கொடுபடர்ந்தேகி
யலங்கல்வார்குழலகலிகைசிலைவடிவகற்றிப்
பொலங்கொள்செம்பொன்மாமறுகுசேர்மிதிலையம்புரியிற்
கலந்துமாநகர்மன்னன்முன்செலவவன்களித்தே.

(இ-ள்.) தவத்தினால் விளங்குகின்ற விசுவாமித்திரமுனிவரானவர் அந்த இரண்டுபுத்திரர்களையுங் கூட்டிக்கொண்டு சென்று, பூமாலையணிந்த அளகபாரத்தையுடைய அகலிகையென்கிற ரிஷிபத்தினிக்குச் சாபத்தினால் சம்பவித்த கல்வடிவத்தைமாற்றி, பிரகாசம்பொருந்திய மாற்றுயர்ந்த சொர்ணங்கள் நிறைந்துள்ள பெரியவீதிகள் சேர்ந்த மிதிலைப்பட்டணத்தில்போய், பெருமைபொருந்திய அந்நகரத்தரசனாகிய சனகமகாராசனெதிரில் செல்ல, அவன்கண்டு களிப்படைந்து.—எ-று. (௬௦)

ஐயவென்றெழுந்தவனடிபணிந்தியானடிக
ளுய்யவிவ்விடையுற்றதென்னெனமுனியுரைப்பான்
றுய்யராகவன்றனக்குநீசுபமுறப்பயந்த
னையுநுண்ணிடைநாரியைநல்கெனநவின்றான்.

(இ-ள்.) சனகமகாராஜன் எழுந்திருந்து அவருடைய பாதங்களைப் பணிந்து, சுவாமிகளே நான் கடத்தேறும்படி இவ்விடத்திற் கெழுந்தருளிய காரணம் யாதென்ன, விசுவாமித்திரமுனிவர் சொல்லுகிறார். அரசனே நீ நன்மைபெறும்படி பெற்ற நுண்ணியதாகிய இடையையுடைய புத்திரியை, பரிசுத்தமுள்ளவனாகிய இந்த இராகவனுக்கு விவாகஞ் செய்துகொடென்று சொன்னார்.()

நன்றுநன்றெனமகிழ்ந்தவனிசைந்திடநன்னா
ளொன்றுகாலையிலியாவருந்திரண்டவணுய்ப்பத்
துன்றுதன்றமருடன்றிருக்கோயிலிற்றோய்ந்தே
வன்றிறற்பெறுமிராகவன்சீதையைமணந்தான்.

(இ-ள்.) விசுவாமித்திரமுனிவர் சொல்லிய வார்த்தையைக் கேட்டவளவில், சனகமகாராச னிது நன்மையான காரியமென்று மகிழ்ந்து சம்மதிக்க, சுபதினம்பொருந்தியகாலத்தில் அரசர் யாவருங் கூட்டமாய்க்கூடி அங்குவந்துசேர, பொருந்திய தன்சுற்றத்தாருடனே கல்யாணமண்டபத்திற்சேர்ந்து, மிகுந்த பராக்கிரமமுள்ள இராமமூர்த்தியானவர் சீதாபிராட்டியை விவாகஞ் செய்துகொண்டார்.—எ-று. (௬௨)

மேயசீதையைமணந்தபினவட்கொடுவிரைந்தே
யேயதன்பதிமுனிவனோடியங்கியேயெய்தி

நேயமோடிவன்பிரிந்திடவகுத்தநன்னெறிசேர்
தூயதாதையைத்தொழுதவன்சுபமுடன்வாழ்நாள்.

(இ-ள்.) சௌந்தரியம்பொருந்திய சீதாபிராட்டியை விவாகஞ் செய்து கொண்டபின்பு, அவளை யழைத்துக்கொண்டு விசுவாமித்திரமுனிவருடனே விரைவாக தன்பதியிற்சென்று சேர்ந்து, நல்ல நெறியும் பரிசுத்தமுமுள்ள தசரத மகாராசாவைப்பணிந்து, இன்பமுடன் விசுவாமித்திரமுனிவரை யனுப்பிவிட்டு மங்களகரத்துடன் வாழ்ந்துகொண்டிருக்கும்நாளில்.—எ-று. (கங)

மன்னர்மன்னவன் றசரதன் றளர்வுறமதித்தே
பன்னுமிப்புவிமுழுவதுமிராகவன்பரிக்கத்
துன்னுபேரொளிமணிமுடியவன்சிரஞ்சூட்ட
வுன்னியத்திறமுயன் றனனவ்விடையொருநாள்.

(இ-ள்.) அரசர்க்கரசனுகிய தசரதமகாராசன் மூப்பினுல் தனக்குத் தளர்ச்சிவந்ததையறிந்து, யாவராலும் புகழ்ந்து சொல்லப்படுகிற இந்தக்கௌசலைதேசத்தை இராமமூர்த்தி தாங்கும்படி, மிகுந்த பிரகாசம்பொருந்திய ரத்தினமகுடத்தை அவன் சிரசில் சூட்டுதற்காக முயற்சிசெய்தான், அதன்மத்தியி லொருநாள்,—எ-று. (கச)

ஓதுமன்னவன்றேவியர்மூவரிலொருத்தி
பேதைதான்பெறுமைந்தனவ்வரசியல்பெறுவான்
காதலுற்றருளிராமனை நோக்கிநீகடிதிற்
றுதைசொற்றனன்வனத்தினிலடைகெனச்சாற்ற.

(இ-ள்.) சொல்லப்படுகிற தசரதமகாராசாவினுடைய மனைவியர் மூவரில் ஒருத்தியாகிய கைகேசியானவள், அந்த ராச்சியபாரத்தைப் பெற்றுக்கொள்ள விருப்பமுற்று, கிருபை குடிகொண்ட இராமமூர்த்தியை அழைப்பித்து அவரை நோக்கி, இப்போதே வனத்தில் போம்படி உன்பிதா உத்திரவுசெய்தாரென்று சொன்னுள்.—எ-று. (கரு)

இன்னமேவுறுதிசைந்துடனரசியலிழந்தே
மன்னுபின்னலாய்க்கரந்துநீள்சிகையினைவளங்க
டுன்னுவற்கலைபுனைந்துநற்றவவுருத்தோன்றப்
பின்னர்த்தம்பியுஞ்சீதையும்படர்தரப்பெயர்ந்தான்.

(இ-ள்.) இன்னமும் பொருந்ாதவண்ணம் தன்மனதில் நிச்சயித்துக்கொண்டு, அப்போதே அந்த ராச்சிய இச்சையை நீக்கிவிட்டு, நீண்ட சிகைமயிரை

ச் சடைபோலாக முடித்துக்கொண்டு,வளப்பம்பொருந்திய மரவுரியையுந் தரித்துக்கொண்டு, நல்ல தவக்கோலந் தோன்றும்படி தம்பியுஞ் சீதாபிராட்டியும் பின்வர வனத்திற்குப் போய்விட்டான்.—எ-று. (கசு)

அந்தவேலையிற்பரதர்சத்துருக்கனென்றறையும்
புந்தியான்மிகுதம்பியர்படர்ந்துடன்புலம்ப
வந்துநாமரசியற்றுதுநீவிரவ்வளவு
மிந்தமாநிலம்புரந்திருமெனவிசைந்திருந்தார்.

(இ-ள்.) அப்போது பரதசத்துருக்கனென்று சொல்லப்படுகிற விவேகத்தினால் மிகுந்த தம்பிமார் பின்தொடர்ந்து புலம்பக்கண்டு, நாம் உடனேவந்து அரசாக்ஷிசெய்கிறோம். ஆகையால் நீங்கள் அதுவரைக்கு மிந்த தேசத்தைக் காத்துக்கொண்டிருங்களென்று சொல்ல, அவர்கள் சம்மதித்திருந்தார்கள்.—எ-று. (கஎ)

பின்னரெய்தியேகாசிமாநகரினிற்பெரிது
மின்னலீர்க்கிடுங்கங்கையம்புனல்படிந்திபங்கி
நன்னலந்தருமிலங்குகோதாவிரிக்கருகில்
பன்னசாலையொன்றமைந்தவணிருந்தனர்பரிவால்.

(இ-ள்.) அந்த இருவரும் போய்விட்ட பின்பு, காசியென்று சொல்லப்படுகிற மகாக்ஷேத்திரத்தில் சேர்ந்து ஸ்நானஞ்செய்கின்றவர்களுடைய துன்பங்களை எல்லா மொழிக்கத்தக்க கங்காநதிதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, அவ்விடம்விட்டு நீங்கிச்சென்று மிகுந்த நன்மையைத் தருவதாய் விளங்குகின்ற கோதாவிரிநதிதீர்த்தத்தினருகில், ஒரு பன்னசாலை யமைத்துக்கொண்டு இராமமூர்த்தி முதலிய மூவரும் அவ்விடத்திலிருந்தார்கள்.—எ-று. (கஅ)

மேயசாலையிலிராவணன்றங்கையாய்விளம்புந்
தீயமாயசூர்ப்பணகிவந்தவ்விடைச்செறிந்தே
யேயராகவற்கண்டுமோல்கொண்டிவனிவடன்
னாயகனிவட்சிதைத்திடினம்மிடநணுகும்.

(இ-ள்.) அவர்கள் வாசமாயிருக்கிற அந்த பன்னசாலையில், இராவணனுடைய தங்கையென்று சொல்லப்படுகிற கொடிய மாயைத்தொழிலில் வல்லவளாகிய சூர்ப்பனகையானவள் அவ்விடத்தில்வந்து சேர்ந்து, சௌந்தரியமுள்ள இராமமூர்த்தியைக்கண்டு மோகங்கொண்டு, அங்கிருக்கிற சீதையைக்கண்டு இவளுடைய கணவனிவன், இவளைக் கொன்றுவிட்டால் இராமன் நம்மிடத்திற் சேர்வானென்று.—எ-று. (கக)

என்றுசீதையையடர்ந்தடர்ந்திடவிலக்குமணன்
சொன்றுவீழ்ப்பனென்றதிர்ந்தவஞ்சியைக்குறைப்பக்
குன்றுபோல்விழுந்தலறியேயிலங்கையிற்குறுகித்
துன்றுதானைமன்னவன்முனம்வீழ்ந்திவைசொற்றாள்.

(இ-ள்.) என்றெண்ணிக்கொண்டு சீதையைக்கொல்லச் சமீபத்திற்போனாள். அதைக்கண்ட இலக்ஷ்மணன் இப்போதிவளைக்கொன்று தள்ளுகிறேனென்று விரைவாகச்சென்று, அந்த சூர்ப்பனகையினுடைய மூக்கைப்பிடித் தறுத்தவளவில், அவள் ஒருமலைபோல் விழுந்து பெருங்குரல்விட் டழுதுக்கொண்டு, இலங்கைக்குப்போய் நால்வகைச்சேனையுடையவரசனாகிய இராவண னெதிரில் விழுந்து இந்த வார்த்தைகளைச் சொன்னாள் —எ-று. (௨௰)

திருமிகுந்தகோதாவிரிமருங்கினிற்செறிந்தாண்
முருகுலாவருமலர்க்குழற்சீதைநீடுயங்கி
மருவநான்விரைந்தனனவளிடத்தினின்வந்த
விருவர்மானிடராற்றினரிச்செயலென்றாள்.

(இ-ள். வாசனைதங்கிய பூமாலையணிந்த அளகபாரத்தையுடைய சீதையென்பவளொருத்தி, செல்வமிகுந்த கோதாவிரிதீர்த்தத்தில் வந்திருக்கிறாள். அவளை நீ கூடும்படி எடுத்துக்கொண்டு வரலாமென்று விரைவாகச்சென்றேன். அவளுடன் வந்திருக்கிற இரண்டுமானிடர்கள் நான் சென்றதைக்கண்டு இவ்வாறு என் மூக்கை யறுத்துவிட்டார்களென்று சொன்னாள்.—எ-று. (௨௧)

மற்றவச்சொல்ராவணன்செவிப்புகுதலுமனத்திற்
செற்றமோடலர்காமமுமேற்கொளச்செறிந்தே
சொற்றவவ்விடைச்சீதையைக்கவருவான்றுணிந்தே
யுற்றமாமனையருணமாய்முன்செலவுரைத்தான்.

(இ-ள்) அந்த சூர்ப்பனகை சொன்னவார்த்தையானது இராவணனுடைய காதுகளில் நுழைந்தவளவில், கோபத்துடனே மிகுந்த காமமு மேற்கொள்ளப் பொருந்தி, முன் சொல்லப்பட்ட அந்த பன்னசாலையிலிருக்கும் சீதையை அபகரித்துக்கொண்டுவரத்துணிந்து, தன்மாமனாகிய மாரீசனை அந்த இடத்திற்கு மாயமானாகச் செல்லும்படி சொன்னான்.—எ-று. (௨௨)

மன்னுமானுருக்கொண்டவன்வருதலுமிராமன்
முன்னரெய்திடச்சீதைநல்கிதையெனமொழியப்
பின்னரேகிடவிராகவன்றம்பியும்பெயரத்
தன்னிகர்ப்பவள்நீத்தனளவ்வழிச்சார்ந்தே.

(இ-ள்.) மாரீசனானவன் மானுருக்கொண்டு வந்தவளவில், சீதையானவள் கண்டு இராமனிடத்தில்போய் அந்த மானை எனக்குப் பிடித்துக் கொடுக்கவேண்டுமென்று சொல்ல, அந்தவார்த்தையைக்கேட்டு இராமமூர்த்தி செல்லப் பின்பிலக்குமணனுஞ்செல்ல, இராமமூர்த்தி மானிருக்குமிடத்திற்குப்போய் தனக்குத்தானொத்தவளாகிய சீதையைப்பிரிந்தான்.—எ-று. (௨௫)

தீயராவணன்றவவுருக்கொடுமுனஞ்செறிந்தே
தூயநெஞ்சினளையகல்கெனமுனந்தொழுதே
மாயமோர்கிலள்பலியிடநடந்தனள்வலியோன்
மேயதன்னுருக்காட்டியேகவர்ந்தனன்விரைவின்.

(இ-ள்.) கொடியவனாகிய இராவணன் தவவேடம் பூண்டு சீதையினெதிரில் சேர்ந்து, பரிசுத்தமாகிய மனமுள்ளவளே எனக்கு பிச்சைபோடென்று சொல்ல,சீதையானவ ளிது மாயவேஷமென்று தெரியாமல் அவனை வணங்கிப் பிச்சையிடச்சென்றாள். அப்படி சென்றபோது இராவணன் தன்னுருவத்தைக்காட்டி அவளை விரைவாக எடுத்துக்கொண்டு போய்விட்டான்.—எ-று. (௨௬)

அந்தவேலையிற்சீதைகோவெனவெருண்டலறப்
பந்தமாமயலாலவட்பற்றியேபதக
னுந்திமேவிரதத்தினைவிண்ணெறியுகந்தே
முந்துபோதவன்சடாயுவந்தெதிர்த்தனன்முனிவால்.

(இ-ள்.) அப்போது சீதை பயந்து கோவென்றழ, பாபியாகிய இராவணன் பந்தப்பட்ட மோகத்தினாலே அவளை யெடுத்துத் தேரில்வைத்துக்கொண்டு, ஆகாசமார்க்கமாகச்செல்ல, சடாயுகண்டு கோபத்துடனே வந்தெதிர்த்தான். ()

பற்றும்வெஞ்சினப்பதகனின்னுயிர்க்கொலைபடுப்பான்
முற்றினேனெனவிருவரும்பொருதனர்முரணான்
மற்றிவேலையிலிராவணன்புட்கிறைமடியக்
கற்றசூதினாற்சிறகரிந்திட்டனன்கடிதின்.

(இ-ள்.) சீதையை யபகரித்துக்கொண்டுபோகிற பாதகனே, சடாயு நேரிட்டு உன்னுடைய உயிரைக் கொலைசெய்யவந்தேனென்று சொல்ல, அவ்விருவரும் போர்செய்தார்கள். இப்படி யுத்தஞ்செய்யும்போது பக்ஷிகளுக்கரசனாகிய அந்த சடாயு உயிரிறக்கும்படி இராவணன் கற்றிருக்குஞ் சூதினாலே அவனுடைய இறகை விரைவினாலறுத்துவிட்டான்.—எ-று. (௨௮)

மேயபுட்கிறைவன்றனைச்சூதினால்வென்றே
தீயராக்கதன்றனதுமாநகர்தனிற்செறிந்தே

காயமாமலர்சொரிந்திடுங்காவினிற்றுயரோ
வேயசீதையைப்பெய்துவீற்றிருந்தனனிதற்பின்.

(இ-ள்.) தன்னுடன் யுத்தஞ்செய்த பக்ஷிகளுக்கு அரசனாகிய சடாயுவைச் சூதினாலே வென்று, கொடியவனாகிய அந்த இராக்ஷதன் பெரியதாகிய தன்னுடைய இலங்கைப்பட்டணத்தைச்சேர்ந்து, காய்களையுடையவைகளாய் நல்ல மலர்களைச் சொரிகின்ற ஒருவனத்தில் துயரப்படும்படி, சீதையைச் சிறையில் வைத்தான். இதன்பின்பு.—எ-று. (உஎ)

நலமிகுந்திடுசடாயுவுமிதுலைமாநகரி
லிலகுபூண்முலைமொழியினாலுயிருடனிருந்தா
னலகினற்றவச்சீதையையதுபொழுதிராம
னிலவுமெம்பியுந்துயர்க்கடன்மூழ்கிநேடினரால்.

(இ-ள்.) நன்மைமிகுந்த சடாயுவானவர் இறவாமல் மிதிலைமாநகரத்தில் பிறந்த, பிரகாசியாநின்ற ஆபரணங்களணிந்த தனங்களையுடைய சீதை சொன்ன வார்த்தையினாலே உயிருடனே இருந்தார். அப்பொழுது இராமமூர்த்தியும் இலக்குமணனும் பன்னசாலை இடத்தினில் வந்து, அளவில்லாத நல்ல தவத்தையுடைய சீதையைக்காணாமையினாலே துக்கசாகரத்தில் மூழ்கித் தேடினார்கள்.—எ-று. (உஅ)

வஞ்சனாலுயிர்குறைந்துறுசடாயுமாதவனைக்
கஞ்சமாதினைநேடிவந்திருவருங்கண்டார்
விஞ்சியேதுயரென்னெனவரக்கர்தம்வேந்த
னிஞ்சொலாடனைக்கவர்ந்ததுசொற்றுயிரிறந்தான்.

(இ-ள்.) வஞ்சகனாகிய இராவணனாலே உயிர்குறைந்திருக்கிற சடாயுவாகிய தவமுள்ளவனை, சீதையைத் தேடிக்கொண்டுவந்த அவ்விருவருங் கண்டார்கள். கண்டு அவரைநோக்கி மிகுந்த துயரம் உனக்கு நேரிட்டதென்னவென்று வினவ, ராக்ஷதர்களுடைய அரசனாகிய இராவணன் இனிய சொல்லையுடைய சீதையை எடுத்துக்கொண்டு போனதைச்சொல்லி உயிர்நீங்கினவனானான். உகூ

வேறு.

அங்கதுபொழுதிற்செய்யுமாற்றல்களாற்றிப்பின்னர்
சங்கரற்கினியபூசைசமைத்திடற்சித்தியாமென்
றெங்கணுங்குலவும்போதினெழிற்றருபுரிசைமாட
மங்குறேய்ந்திலங்குஞ்சீர்த்திமயிலைமாநகரங்கண்டான்.



ஸ்ரீராமர் கபாலீசருக்கு பிரம்மோர்ச்சவம் நடாத்தினது.

(இ-ள்.) அப்படி யவனுயிர்விட்டபோது, அவனுக்குச் செய்யவேண்டிய தகனசஞ்சயனமுதலாகிய கடன்களைச்செய்து,பின்பு பரமசிவனுக்கினிமையாகிய பூசைசெய்தால் நம்முடைய காரியஞ் சித்தியாகுமென்றெண்ணி, எங்குஞ் சஞ்சரித்துக்கொண்டு செல்லும்போது, அழகுபொருந்திய திருமதில்களும் உபரிகைகளும் மேகமண்டலத்தை யளாவி விளங்குவதாய்ப் புகழ்பொருந்திய திருமயிலையென்னும் க்ஷேத்திரத்தை இராமமூர்த்தி கண்டார்.—எ-று. (௯௦)

கண்டனனுவகைபொங்கக்களித்தனனன்புமேன்மேற்
கொண்டனன்மணியாற்செய்தகோபுரவாயிற்புக்கு
மண்டுசீர்க்கபாலிதீர்த்தமகிழ்வுறப்பணிந்துபோற்றி
யண்டர்நாயகன்றன்பூசைக்காவனவெவையுங்கொண்டே.

(இ-ள்.) கண்டு சந்தோஷ மதிகரிக்கும்படி களிப்படைந்து அன்பு மேலுமேலுங்கொண்டு இரத்தினங்களினால் செய்யப்பட்டிருக்கும் கோபுரவாயிலுக்குட்போய், சீர்பொருந்திய கபாலிதீர்த்தத்தை மகிழ்ச்சியுடன் கண்டு அதில் ஸ்நானஞ்செய்து, தேவநாயகனாகிய கபாலீசருடைய பூசைக்கு வேண்டிய திரவியங்களையெல்லாஞ் சேகரித்துக்கொண்டு.—எ-று. (௯௧)

அங்கெழிற்கபாலிநாதற்கருச்சனைநிரப்பிப்போற்றி
யிங்கெனக்கருளென்றேத்தவெம்பிரான்விடையினேறித்
துங்கமன்னவன்முனின்றேசொல்கநின்விருப்பென்றோதக்
கொங்கலரிறைத்துத்தாழ்ந்துகூறுவானிராமன்மாதோ.

(இ-ள்.) அவ்விடத்தில் சௌந்தரியமுள்ள கபாலீசருக்கு ஆராதனைசெய்து நிறைவேற்றித் துதிசெய்து,ஆண்டவனே! அடியேனுக்குக்கிருபைபாலித்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, எம்முடைய இறைவர் ரிஷபவாகத்தின்மே லாரோகணித்துக்கொண்டு, பராக்கிரமமுள்ள வரசனாகிய அந்த இராமமூர்த்திக்கெதிரில் காக்ஷிகொடுத்தருளி, உனக்கு வேண்டிய வரம் யாதோ வதனை இப்பொழுதே சொல்லக்கடவையென்று கட்டளையிட்டருளின உடன், அந்த இராமமூர்த்தி வாசனைபொருந்திய புட்பங்களா லருச்சித்துப் பணிந்து சொல்லுகின்றார்—எ-று. (௯௨)

நாதனேயிலங்கையென்னுநகர்மருங்கெய்தியென்றுந்
தீதுறுமரக்கர்வேந்தன்சென்னிகள்பத்துங்கொய்தே
மாதுடன்கலந்துவாழ்ந்தேமகிழ்ச்சியங்கடலின்மூழ்கி
யாதரவுடனிவ்வூரினடைந்திடவேண்டுமென்றான்.

(இ-ள்.) கபாலீசரே! இலங்கையென்கிற பட்டணத்தருகிற்சேர்ந்து, எக்காலும் கொடிய தொழிலையே செய்துகொண்டிருக்கிற இராவணனுடைய பத்துத்தலைகளையுமறுத்து, என்னுடைய மனைவியாகிய சீதையைச் சிறையினின்று மீட்டுக்கொண்டு அவளுடன் சேர்ந்து, வாழ்ந்து மகிழ்ச்சியாகிய சமுத்திரத்தில் மூழ்கி விருப்பத்துடன் இந்தத்தலத்தில் வந்து சேரும்படியாக வரம் பிரசாதித்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தான்.—எ-று. (௩௩)

ஐயனுமவைகளீந்தோமகலெனவிடைகொண்டேகி
யொய்யெனவிலங்கையென்னுமுயர்நகர்புகுவான்முன்னி
னையுநெஞ்சினனுயங்கோர்சூழலினணுகவேரோ
மையறுமனுமனென்னுமாதவன்வந்துகண்டான்.

(இ-ள்.) கபாலீசர் இராமமூர்த்தியைப்பார்த்து, நீ கேட்டுக்கொண்ட வரங்களைப் பிரசாதித்தருளினோம், இனிநீ போகலாமென்று கட்டளையிட்டருள, விடைபெற்றுக்கொண்டு சென்று விரைவாக லங்கைப்பட்டணத்தைச்சேரக் கருதி, வருந்துகின்ற மனதையுடையவனாய் அங்கொருவனத்தில் சேர்ந்தபோது, அந்த இடத்தில் சூரியனுக்கு ஒத்தவனாய் குற்றமற்றிருக்கு மனத்தையுடைய அனுமான் வந்து கண்டான்.—எ-று. (௩௪)

கண்டடிபணிந்துநீரிக்கான்வருஞ்செயலேதென்ன
வொண்டொடிதன்னைத்தீயோன்கவர்ந்தவாறுரைப்பவன்னோன்
றிண்டிறலரக்கற்செற்றுச்சேயிழைதன்னைமீட்கு
மண்டுசுக்கிரீபனென்னும்வானரமன்னனென்றான்.

(இ-ள்.) கண்ட அனுமான் நீங்களிந்தவனத்தில் வந்த காரியமென்னவென்று வினவ, பிரகாசம்பொருந்திய வளையல்களணிந்த கைகளையுடைய சீதையை இராவணனபகரித்துக்கொண்டுபோனதைச்சொல்ல, அதைக்கேட்ட வனுமான் இராமமூர்த்தியை நோக்கி, மிகுந்த வல்லபங்கொண்ட சுக்கிரீபனென்கிற வானரராசன், மிகுந்தபலமுள்ள ராவணனைக்கொன்று செவ்விய ஆபரணங்களணிந்திருக்கிற சீதாபிராட்டியை மீட்டுக்கொண்டு வருவானென்று சொன்னான்.—எ-று. (௩௫)

அன்னவற்கொணரொன்றேதவசன்றனன்கொடுவந்துய்ப்ப
மன்னனும்பணிந்தையாமுன்வாலியென்பவனையட்டே
யென்னரசளித்தியென்றனெழிற்பெரும்படைகளோடும்
பின்னருற்றரக்கன்சென்னிபிடுங்குவன்பத்துமென்றான்.

(இ-ள்.) அவ்வாறாகில் அந்தச்சுக்கிரீபனை யழைத்துக்கொண்டு வாவென்று இராமமூர்த்தி சொல்ல, அனுமான் சென்று சுக்கிரீபனை யழைத்துக்கொண்டுவந்துவிட, அந்த வானர அரசனும் பணிந்து ஐயா! வாலியென்று சொல்லுகிறவனை முன்னே கொன்று என்னுடைய ராச்சியபாரத்தைக்கொடுத்த பின்பு, என்னுடைய அழகுள்ள வானரசேனையுடன் சென்று நானிலங்கைக்குப்போய் இராவணனுடைய பத்துத்தலைகளையும் பறித்துவிடுகிறேனென்று சொன்னான்.

நன்றெனவிசைந்துநீமுன்னடந்திகல்செய்தன்னோனை
யின்றிவண்கொணாவென்றேருதவியங்கியேகொணர்ந்துசெல்லப்
பொன்றிடவாலிமேலோர்பூங்கணைமறையவங்க
ணின்றுறத்தூண்டிவாட்டிநிலைமையுமிளவற்கீந்தான்.

(இ-ள்.) சுக்கிரீபன் சொன்னவார்த்தையைக்கேட்ட இராமமூர்த்தியானவர் அவனைநோக்கி, நீசொன்ன வார்த்தை நன்மையானதென்று சம்மதித்து, நீ முன்னே சென்று அந்த வாலியுடன் சண்டைசெய்து இங்கே கொண்டுவாவென்றுசொல்ல, அதைக் கேட்டுக்கொண்டு சென்று வாலியைக் கொண்டுவந்துவிட்டு அவன் போய்விட்டான். அப்போது இராமமூர்த்தி மறைந்து நின்று, வாலி இறக்கும்படி பொலிவுள்ளதாகிய ஒருபாணத்தையேவி அவனைக்கொன்று, அந்த ராச்சியபட்டாபிஷேகத்தை அவன் தம்பியாகிய சுக்கிரீபனுக்குக் கொடுத்தார்.—எ-று.

வாலிக்குத் தெரியும்படி யார் நின்றாலு மவர்களுடைய பலத்தில் பாதியவனைச் சேருமென்பதைத் தெரிந்தமையால், இராமமூர்த்தி மறைந்துநின்று பாணமேவினார். (கூஎ)

மற்றவனின்பமெய்திவந்துதன்சேனைசூழக்
கொற்றவன்றன்னைப்போற்றக்கூடியங்கெவருமுற்றே
ரொற்றினாலவையுந்தேர்ந்தங்குறுதலேகருமமென்றே
நற்றவவனுமன்றன்னைநடந்துணர்ந்தெய்திகென்றான்.

(இ-ள்) இந்தச்சுக்கிரீபன் சந்தோஷமடைந்து,தன்சேனை சூழும்படியாக வந்து,அயோத்திக்கரசராகிய இராமமூர்த்தியைப்பணிந்து போற்றுதல்செய்ய, அங்கெல்லாரு மொன்றாகச்சேர்ந்து ஒரு தூதினாலே எல்லாக்காரியங்களையு மறிந்துகொண்டு, அந்த இடத்திற்குப்போவதே நன்மையென்றாலோசித்து,நல்ல தபோபலமுள்ள அனுமானை நோக்கி, நீ முன்னே இலங்கைக்குப்போய்ச் சீதையையறிந்துகொண்டு இங்கே வாவென்று சொன்னார்.—எ-று. (கூஅ)

அங்கவன்விரைந்துசென்றேயார்கலிகடந்துநீங்கிப்
பொங்கொளிதவழும்வெள்ளிப்புரிசைசூழிலங்கைபுக்கு

மங்கையைக்கண்டுபோற்றிமாநகரனற்குநல்கித்
துங்கமேபடைத்துமீண்டுஞ்சொற்றனனெவையுமாதோ.

(இ-ள்.) அந்த அனுமான் விரைவாகச்சென்று சமுத்திரத்தைத் தாண்டிக் கடந்து, மிகுந்த ஒளி எங்கும் பரவுகின்ற வெள்ளிமயமாகிய மதில்சூழ்ந்த இலங்கைப் பட்டணத்திற்குள்போய், சீதாபிராட்டியைக்கண்டு போற்றிசெய்து, அந்தப்பட்டணத்தைத் தீயினால் சுட்டெரித்து மிகுந்த வீரம்படைத்து அவ்விடம்விட்டுத் திரும்பி, இராமமூர்த்தியினிடத்திற்குவந்து சீதையைக்கண்டது முதலான சேதிகளையெல்லாஞ் சொன்னான்.—எ-று.

அனுமான் சீதையைக்கண்டு சந்தோஷத்தினாலே அந்த வனத்தை யழித்துக் காவலாளிகளையுங்கொல்ல,இராவணன் அந்தச்சேதிகளைக்கேட்டுச் சிலராக்ஷதர்களை யேவ, அவர்களையும் யுத்தஞ்செய்துகொன்றான். அதற்குமேல் இந்திரசித்தன்வந்து பிரமாஸ்திரம் ஏவிக் கட்டியிட்டுக்கொண்டுபோய் அந்த ராவணனெதிரில் விட்டான். அவன் பார்த்து இவன் தூதனானகையால் இவனை வதைசெய்வது தருமமல்ல, ஆதலாலிவன் வாலில் துணிகளைச்சுற்றித் தீயிற்கொளுத்தி ஊருக்குப்புறத்தில் இட்டுக்கொண்டுபோய் விட்டுவிடென்று சொன்னான். அதைக்கேட்ட ராக்ஷதர்களும் அப்படி செய்தார்கள். அதன்பின்பனுமான் அந்தத்தீயினால் இலங்கைப்பட்டணத்தைக் கொளுத்திவிட்டு இராமரிடத்திற்கு வந்துவிட்டான் என்று இராமாயணத்திற் சொல்லுகின்றது.—எ-று. (௬௧)

ஆயபின்னிராமனன்பாலனிகபோடெழுந்துசென்றே
மேயவிவ்வரக்கர்முன்னர்மேவியேவிபீடணன்று
னேயமோடடைந்துபோற்றநிலைமையீந்தவனுக்கந்தத்
தீயவனகரிற்செல்லத்திண்கடல்குரம்புசெய்தார்.

(இ-ள்.) அதன்பின்பு இராமமூர்த்தியானவர்,மிகுந்த சந்தோஷத்தினாலே வானரப்படைகளைச் சேர்த்துக்கொண்டுசென்று,பொருந்திய ராக்ஷதர்களுக்கு முன்னேபோய்,இராவணனுடைய தம்பியாகிய விபீஷணன் அன்புடன்வந்து இராமமூர்த்தியைச் சரணாகதியென்றடைந்து போற்ற,அவனுக்கு அந்த அரசாக்ஷியைக்கொடுத்து, இலங்கைக்குப் போகும்பொருட்டுச் சமுத்திரத்தின்மத்தியில் பாலம் ஏற்படுத்தி.—எ-று.

குரம் என்பது-வரம்பு. அது உரையில் பாலமென்று சொல்லப்பட்டது.

இருங்கடல்குரம்புகண்டங்கிராமனோடனிகமெல்லா
மொருங்குடன்றிரண்டுவிண்ணுமுலகமுமதிரவார்த்து
நெருங்கியேபடர்ந்திலங்கைநீணகர்க்குறுகியவ்வூர்
மருங்குபாசறையொன்றாக்கிவதிந்துபோர்செய்யலுற்றார்.

(இ-ள்.) அந்தப் பெரிய கடலுக்குப் பாலங்கட்டி, வானரச்சேனைகளெல்லாம் இராமமூர்த்தியோடுசேர்ந்து, பூலோகமும் தெய்வலோகமும் அதிர ஆரவாரித்து நெருங்கிச்சென்று, அந்த இலங்கைப்பட்டணத்தின் சமீபத்தில் ஒரு பாசறை ஏற்படுத்தி அவ்விடத்திலிருந்துகொண்டு யுத்தஞ்செய்யத்தொடங்கினார்கள்.—எ-று. (௬க)

வேறு.

மன்னுமப்பொழுதிலிராவணன்புகல்வான்வானரக்குழுக்களுநரரு, மின்னணமடைந்துநம்முடன்போர்வந்தெய்திடவெளிதினிவ்வுலகி, னென்னரசியலுமென்பெரும்புகழுமிருந்தவாநன்றுநன்றென்னத், தன்னிலங்கிருபான்கரங்களும்புடைத்தேதரையெலாஞ்செவிடுற நகைத்தே.

(இ-ள்.) வானரங்களெல்லாம் வந்து போர்செய்யத் தொடங்கினபோது இராவணன் சொல்லுகின்றான். அது என்னவெனில், வானரக்கூட்டங்களும் மானிடக்கூட்டங்களு மிவ்வாறு எளிதாகவந்து நம்முடன் போர்செய்ய நேரிட்டதேயாதலால், என்னுடைய இராச்சியபாரமும் என்னுடைய பெரிய கீர்த்தியும் இருந்தவாறு மிகுந்த அழகாய் இருக்கின்றது என்று தனக்குள் சொல்லிக்கொண்டு, இருபதுகைகளாலு மடித்துக்கொண்டு இந்தப்பூமியெல்லாம் செவிடுபடும்படி நகைத்தான்.—எ-று. (௬உ)

எண்டிசைமுழுதுமடுதரவல்லவிராயிரவெள்ளமென்றிசைக்குந், திண்டிறலரக்கர்கரிபரியிரதத்திரள்கண்மேற்செறிந்துடன்படரப், பண்டைமூவுலகுமதிரவின்றொருநசாரக்கர்கள்பல்லியமியம்ப,மண்டுபேரொளிசேரிரதமூர்ந்திலங்கைமதிற்புறத்துற்றனன்போர்க்கு.

(இ-ள்.) அவன் அஷ்டதிக்குகளையும் கொல்லவல்ல இரண்டாயிரம்வெள்ளமென்று சொல்லப்படும் மிகுந்த பலமுள்ள ராக்ஷதசேனைகளும், யானை குதிரை தேர் என்னுங் கூட்டங்களும் நெருங்கித் தன்னுடன் சூழ்ந்துவரவும், இந்தத் திரிலோகமும் அதிரும்படி அரக்கர்கள் ஒருபுறத்திலிருந்துகொண்டு பல வாத்தியங்கள் முழக்கவும், மிகுந்த பிரகாசம்பொருந்திய ஒரு தேரிலேறிக்கொண்டு யுத்தஞ்செய்வதற்காக இலங்கைப்பட்டணத்து மதிற்கு வெளிப்புறத்தில் வந்தான்.—எ-று. (௬௩)

இங்கிவன்செயல்கண்டிராகவனெழுந்தேயெழுபதுவெள்ளமென்றிசைக்குந், துங்கவானரங்களுடன்படைத்தலைவர்தொகுதியுஞ்சூழ்ந்திடவெதிர்த்தே, புங்கவமழையங்கரக்கர்கோன்வெட்கப்பொழிந்

தவணிராயுதனுக்கிக், கொங்கலர்மாரிபொழிந்துநின்றார்ப்பக்கூறினா
னாளை வாவென்றே.

(இ-ள்.) இவ்வாறு இராவணன் வந்ததை இராமமூர்த்தியறிந்து, எழுபது வெள்ளமென்று சொல்லப்படுகிற பலமுள்ள வானரக்கூட்டங்களும், படைத்தலைவர்கூட்டமும் தன்னுடன் சூழ்ந்துவரும்படி சென்றெதிர்த்து, இராவணன் வெட்கும்படி பாணவருஷங்கள் பொழிந்து அவனை நிராயுதனாகச்செய்து, வாசனைபொருந்திய கர்பகப்பூமழைபொழிந்து தேவர்களெல்லாம் ஆரவாரிக்கும்படி வெற்றிகொண்டு, அவனை நோக்கி யுன்னூருக்குப்போய் யுத்தஞ்செய்ய நாளைக்கு வாவென்று சொன்னான் —எ-று. (சச)

அந்தவாய்மொழிகேட்டரக்கர்கோனிடும்பையழிந்துளத்தற்பு
தமெய்திச், சிந்தையில்வெருக்கொண்டிலங்கையிற்செறிந்தேசெய்வ
தென்னென்னென வரற்றி, மந்திரமணைந்துதுயர்க்கடற்புகுந்தேமகோ
தரன்றெருட்டிடத்தெருண்டே, யிந்திரசித்துமுதலெவர்தமையுமே
வியேயிருந்தனன்போர்க்கு.

(இ-ள்.) அந்த இராமமூர்த்தி சொன்ன வார்த்தையைக்கேட்டு இராவணன் கெர்வபங்கமாகி அதிசயமடைந்து, மனதில் பயங்கொண்டு இலங்கையிற்போய்சேர்ந்து, இனி நாம் செய்யத்தக்கதென்னவென்று அழுது, தன்னரண்மனைக்குள்போய் துக்கசாகரத்தில் மூழ்கி, மகோதரனென்கிற தன் மந்திரி தேறுதல் சொல்லத்தெளிந்து,இந்திரசித்தன் முதலானவர்களைப் போர்செய்யும்படி யனுப்பிவிட்டுத் தானங்கேதானே யிருந்தான்.—எ-று. (சரு)

மற்றவர்தமதுபடைகளோடியங்கிவந்துவந்தெதிர்ந்துபோர்தொ
டங்கக், கொற்றவன்வன்கணெம்பியையனிகக் குருக்களைக்கொடு
பொருதழித்தே, முற்றியசினத்தாற்பொருதிடுகும்பகன்னனுமுடிந்
தபின்போர்வந், துற்றிடுமரக்கர்மன்னவன்சிரங்களுருட்டியேயுயிர்கு
டித்தழித்தான்.

(இ-ள்.) அந்த இந்திரசித்து முதலான வரக்கர், தத்தம் சேனைகளுடன் வந்துவந்து போர்செய்யத்தொடங்க, இராமமூர்த்தியானவர் போர்க்கஞ்சாத தன் தம்பியைக்கொண்டும் சேனைத்தலைவனைக்கொண்டுமவர்களையெல்லாமழித்து, மிகுந்த கோபத்துடன் வந்து சண்டைசெய்த கும்பகர்ணன் தன்னுயிறந்த பின்பு, போர்செய்யவந்து எதிர்த்த இராவணனுடைய தலைகளைப் பலதரமறுத்துத்தள்ளி அவனுடைய உயிரையும் வாங்கிக்கொன்றான்.—எ-று. (சசு)

ஆயபினவண்வந்தலர்மழைபொழிந்தேயண்டர்வான்றிரண்டுநின்
றூர்ப்ப, மேயநற்புகழ்சேர்விபீடணன்றனக்குவிளம்புமந்நகரரசளி
த்தே, தீயவன்புரிந்தசிறைவிடுத்தினியசீதைநெஞ்சுணர்ந்தவட்டூவி,
யேயநற்படைஞருடனவண்விடுத்தேயிரதமூர்ந்தயோத்தியிற்புகுந்தே.

(இ-ள்.) அதன்பின்பு தேவர்களெல்லாருங் கூட்டமாகக்கூடிக் கற்பகம
லர்களைச்சொரிந்து ஆரவாரிக்க, மிகுந்த கீர்த்திபொருந்திய விபீஷணனுக்கு இராச்சியபட்டாபிஷேகஞ்செய்து, இராவணன் படுத்த சிறையை விடுவித்து, சீதாபிராட்டியினுடைய மனத்தூய்மையையறிந்து, அவளைக் கூட்டிக்கொண்டு அந்த இலங்கையைவிட்டுவானரப்படைகளுடன் புட்பவிமானத்திலேறிக்கொண்டு அயோத்திமாநகரத்தில் சேர்ந்து.—எ-று. (சஎ)

எம்பியர்மகிழ்ந்துகண்டடிபணியயாவருமின்பமெய்திடவே,யம்
புவிபுரக்குமன்னவர்திரண்டேயடியினின்முடியலர்சூட, வும்பர்பூம
ழைகள்பொழிந்திடமுனிவருயர்மறையாசிகள்கூறச், செம்பொன்
மாமணியாற்குயிற்றியதவிசிற்செறிந்துபொன்மணிமுடிசூடி.

(இ-ள்) பரதன் சத்துருக்கன் என்கிற தம்பிமார்கள் கண்டு மகிழ்ந்து பணியவும், மற்ற யாவருஞ் சந்தோஷத்தை யடையவும், இவ்வுலகத்தை யாளுகின்ற அரசர்களெல்லாம் வந்து தன்னுடைய பாதத்தில் அவர்களுடைய மகுடமாகிய மலர்களைச்சூட்டவும்,தேவர்கள் கற்பகப்பூமாரிபொழியவும்,முனிவர்கள் யாவரும் மேன்மைபொருந்திய வேதவாக்கியங்களா லாசீர்வசனஞ்சொல்லவும், மாற்றுயர்ந்த பொன்னினாலும் ரத்தினங்களினாலும் செய்யப்பட்டிருக்கிற சிங்காசனத்தில் வீற்றிருந்து ரத்தினமகுடஞ் சூட்டிக்கொண்டு—எ-று. (சஅ)

வேதநன்னெறியினுலகவொழுகமிக்கவன்பியாவருமருந்தப்,
பூதலமுழுதுந்திங்கண்மும்மாரிபொழிந்திடப்புகழ்களேபெருக, மா
தவரிடரற் றருந்தவப்புரிய வையமூவாயிரவருட, மாதவன்குலத்
தோன்புரந்துபின்மயிலையணைந்திடமனந்தனிற்கொண்டான்.

(இ ள்.) உலகத்தார் வேதமார்க்கத்தில் வழுவாமல் நடக்கவும், மிகுந்த சந்தோஷத்தை யாவரு மனுபவிக்கவும், பூமி எங்கும் மாதமும்மாரிபொழியவும், கீர்த்தியே எங்கும் பிரகாசிக்கவும், முனிவர்கள் யாதொரு இடறுமில்லாமல் தவங்கள் செய்யவும், சூரியவமிசத்தரசராகிய இராமமூர்த்தி மூவாயிரவருஷமாண்டிருந்து அதன்பின்பு திருமயிலைக்குப் போகும்படி தன்மனதில் நினைத்தார்.—எ-று. (சகூ)

வேறு.

எந்தைவாழ்மயிலைமூதூரெய்திடவிராமன்முன்னிச்
சுந்தரப்பரித்தேர்தந்திந்தொகுதிகடேரந்துதானை
வந்திடவரசர்சூழவளங்கொள்பல்லியங்களார்ப்ப
விந்திரவிரதமொன்றூர்ந்தேகியேகாசிமேவி.

(இ-ள்.) நம்மையருகிய கபாலீசர் திருக்கோயில்கொண்டு வீற்றிருந்தருளும், பழமையாகிய திருமயிலையென்னும் க்ஷேத்திரத்திற்குப் போகவேண்டுமென்று இராமமூர்த்தி எண்ணங்கொண்டு, அழகுள்ள குதிரைகளிலுந் தேர்களிலும் யானைகளிலும் ஏறிக்கொண்டு சேனைவீரர்கள் கூடவரும்படி, அரசர்களெல்லாஞ்சூழ்ந்துவரவும், வண்மைபொருந்திய பலவாத்தியங்கள் முழங்கவும், மேன்மையையுடைய ஒருரதத்தில் தானேறிக்கொண்டு சென்று காசிக்ஷேத்திரத்தில் சேர்ந்து.—எ-று. (௩0)

பன்னுசீர்விசுவநாதப்பரமனைக்கண்டுபோற்றித்
துன்னியபருப்பதத்துச்சோதியையுவந்துபோற்றித்
தன்னிகரிலாக்காளத்தித்தலைவனையருச்சித்தேத்தி
மன்னியவுமையாள்போற்றுமயிலைமாநகரஞ்சேர்ந்தான்.

(இ-ள்.) அவ்விடத்தில் திருக்கோயில்கொண்டு வீற்றிருந்து தேவரால் துதிசெய்யப்படுகிற விசுவநாதரைத் தரிசித்துப் போற்றுதல்செய்தும், அவ்விடம் விட்டு நீங்கிச்சென்று எக்காலமும் அழிவில்லாத ஸ்ரீசைலமென்கிற மல்லிகார்ச்சுனத்தில் சேர்ந்து, அங்கு வீற்றிருக்கும் பரமசிவத்தைப் போற்றுதல் செய்து தொழுதும், அவ்விடம்விட்டு நீங்கிச்சென்று திருக்காளத்தியைச்சேர்ந்து, அவ்விடம் வீற்றிருக்கும் பரமசிவத்தைப் பூசித்துத் துதிசெய்தும் அவ்விடம்விட்டு நீங்கிச்சென்று, பரமசிவனுடைய வாமபாகத்தில் பொருந்தியிருக்கும் பார்வதிதேவியார் மயில்வடிவங்கொண்டு பூசித்து வரம்பெற்ற, மேன்மைபொருந்திய திருமயிலையென்னும் க்ஷேத்திரத்தில் போய் சேர்ந்தார்.—எ-று. (௩௧)

வேறு.

அங்கரடைந்துபோற்றியளவிலற்புதத்தனாகி
முன்னவன்றனக்குப்பூசைமுயலுவான்கருதியென்று
நன்னெறியளிக்குமந்தநகரின்கணிருதிதிக்கி
னின்னமிர்தெனவோர்தீர்த்தமிராகவன்வகுக்கலுற்றான்.

(இ-ள்.) அந்த க்ஷேத்திரத்தில் சேர்ந்து போற்றுதல்செய்து, அளவில்லாத அற்புதத்தையுடையவராய்க் கபாலீசருக்குப் பூசைசெய்யக்கருதி,எந்நாளும்

நன்மார்க்கத்தையே தருவதாகிய அந்தக்ஷேத்திரத்திற்கு நிருதித்திசையில்,இனி தாகிய தேவாமிர்தம்போ லொருதீர்த்தம் இராமமூர்த்தி ஏற்படுத்துகின்றார் ()

சீரறம்வளரத்தாங்குஞ்சிலையினுற்புவியிற்கீறிப்
பேரருட்கங்கைமுன்னாப்பேசுதீர்த்தங்களியாவு
மேருறவங்கண்வந்தேயெய்திடக்கண்டுபோற்றித்
தாரணிமுழுதும்போற்றத்தடந்தனிற்புகுந்துதோய்ந்தே.

(இ-ள்.) சீருள்ள தருமங்கள் விருத்தியாகும்படி தன் கையிலேந்திக்கொண்டிருக்கும் கோதண்டமென்னும் வில்லினாலே தரையில் கீறி, மிகுந்த கிருபையுள்ள கங்கைமுதலாகிய தீர்த்தங்களெல்லாம் அழகுபொருந்தும்படி, அவ்விடத்திலுற்பத்தியாகிப் பொருந்தக்கண்டு போற்றுதல்செய்து, உலகத்தாரெல்லாந் துதிசெய்யும்படி அந்தத் தடாகத்தில்போய் ஸ்நானஞ்செய்து—எ-று. ()

அங்ககன்றெழிற்கபாலிதீர்த்தத்தினன்பின்மேவிக்
கொங்குலாம்புனறோய்ந்தாடிக்கோயிலினண்ணிநாதன்
பங்கயமலர்த்தாள்கண்டேபணிந்துவீழ்ந்தெழுந்துபோற்றிச்
சங்கரன்றனக்குப்பூசைசமைத்தனனிராமன்மாதோ.

(இ-ள்.) அங்கே ஸ்நானஞ்செய்த இராமமூர்த்தியானவர் அவ்விடம்விட்டு நீங்கி, அழகுள்ள கபாலிதீர்த்தத்தி லன்புடன் சேர்ந்து வாசனைபொருந்திய அந்தத்தீர்த்தத்திலும் ஸ்நானஞ்செய்து,பின்பு திருக்கோயிலுக்குட்போய்க் கபாலீசருடைய திருவடித்தாமரைகளைத் தரிசித்து,சாஷ்டாங்கமாகத்தண்டனிட்டுப்பணிந்து எழுந்துநின்று துதிசெய்து அவருக்கு விதிப்படி பூசைசெய்தார்.

ஒரு புண்ணியதீர்த்தத்திற் போகின்றவர்கள் சாதாரணமாகிய மற்றொரு தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, புனிதர்களாய்ப்போய் ஸ்நானஞ்செய்யவேண்டுமென்னு முறைமையைப்பற்றி, தானொரு தடாகமேற்படுத்தி அதில் ஸ்நானஞ்செய்து விபூதிருத்திராக்ஷ முதலானவைகள் தரித்துக்கொண்டு, புனிதமுள்ளவராய்ச்சென்று கபாலிதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்தார். (௩௬)

முன்னவன்றனக்குப்பூசைமுடிந்தபின்சிலைபாற்றந்த
வின்னியதீர்த்தந்தன்னிலிலிங்கமொன்றமைத்தருச்சித்
துன்னிமுப்போதும்பூசித்துற்றனனணிகந்தன்றோ
டங்கர்தன்னினன்னாளைப்பசித்திங்களுற்ற.

(இ-ள்.) கபாலீசருக்குப் பூசைசெய்து நிறைவேறினபின், தன் வில்லினாலே ஏற்படுத்திய இனிதாகிய நல்ல தீர்த்தக்கரையில் ஒரு சிவலிங்கம் தாபித்து

அருச்சனைசெய்து, பின்னுந் திரிகாலமும் பூசைசெய்துகொண்டு அந்தக்ஷேத்திரத்தில் தன் சேனையுடனிருந்தான். அப்படியிருந்தநாளில் ஐப்பசிமாதம் வந்தது.—எ-று. (ருரு)

மேயவம்மாதந்தன்னின்வெவ்வினைத்தொகைகண்மாய்க்கு
நாயகன்றனக்கிராமனல்விழாநடத்தமுன்னித்
தூயபொன்மணிகண்முன்னாச்சொற்றிடும்பொருள்களெல்லா
நேயமோடரசரவ்வூர்நிறைத்தனர்கொணர்ந்தநென்றும்.

(இ-ள்.) பொருந்திய அந்தமாதத்தில் அடியார்களுடைய கொடிய வினைக்கூட்டத்தையெல்லாம் ஒழித்தருளும் கபாலீசருக்கு, நல்ல திருவிழா நடத்தும்படி இராமமூர்த்தி நினைத்து, அதற்கு உபகரணங்களாகச் சொல்லப்படுகிற நல்ல பொன் ரத்தினமுதலாகிய பொருள்களையெல்லாம், மற்ற தேசத்தரசர்கள் யாவரும் நாள்தோறும் கொண்டுவந்து சேர்த்தார்கள்.—எ-று. (ருசு)

வேறு.

அந்தவேலையிலிராகவன்சினகரமடைந்தே
யிந்துசேகரற்றொழுதவணோர்மருங்கிருந்தே
பந்தவெவ்வினைபாற்றுமந்நகருறும்பரன்பால்
வந்தவேதியர்தமைவிளித்தவருளமகிழ.

(இ-ள்.) அப்போது இராமமூர்த்தி திருக்கோயிலுட்போய் இளந்திங்களணிந்த திருமுடியினையுடைய கபாலீசரைப்பணிந்து, அங்கொருபக்கத்திலிருந்துகொண்டு, பந்தப்பட்ட கொடிய வினைகளை அடியார்க்கொழித்தருளும், அந்தக்கபாலீசருடைய நித்தியபூசைக்காகவந்த பிராமணர்களை யழைப்பித்து அவர்கள் மனமகிழும்படி.—எ-று. (ருஎ)

தாதுலாங்குழற்றையலுங்கோர்புறஞ்சமைத்த
நாதனுக்கிவணல்விழாச்சிறப்புடனடத்தக்
காதலுற்றனனதற்குவேண்டுவனநீர்கழறிற்
றீதறக்கொணர்ந்தியற்றுதும்புகலுமென்றியம்ப.

(இ-ள்.) சொல்லுகிறார்; அதென்னவெனில், மகரந்தப்பொடிகள் பொருந்திய அளகபாரத்தையுடைய பார்வதிதேவியாருக்கு இடப்பாகம் பிரசாதித்தருளிய கபாலீசருக்கு, இந்தமாதத்தில் சிறப்புடனே திருவிழா நடத்த நான் விருப்பங்கொண்டேன். ஆதலால் அதற்கு வேண்டிய பொருள்களைச்சொன்னால், பழுதறக் கொண்டுவந்து நடப்பிக்கிறேன் சொல்லுங்களென்று இராமமூர்த்திசொல்ல.—எ-று. (ருஅ)

என்றுசொற்றனனிராகவனவருமின்பெய்தி
மன்றுளானருளாகமவிதிசெய்மந்திரத்தா
னின்றுபூசனைகுயிற்றியமுறைவினைநிகழக்
குன்றின்மேற்செறிந்தணிநகர்சூழ்ந்துகொண்டணிந்தே.

(இ-ள்.) இராமமூர்த்தி யிவ்வாறுசொன்னார். அதைக்கேட்ட அந்தப்பிராமணர்களுஞ்சந்தோஷமடைந்து,ஞானசபையில் ஆனந்தநிர்த்தனஞ்செய்தருளும் பரமசிவனுடைய, அருள்வாக்காகிய ஆகமவிதிப்படி செய்கின்ற மந்திரங்களுடன்தொடங்கிப் பூசைசெய்த பூசைமுறைத்தொழில்கள்நடத்தி, அலங்காரத்திற்கு வேண்டிய திரவியங்களை மலைகளுக்கு மதிகமாகக் சேகரித்துக்கொண்டு, வீதிகள்தோறுங் கூட்டங்கூட்டமாகவிருந்த முன்னமே, அலங்காரமுள்ளதாகிய அந்த நகரத்தை அலங்காரஞ்செய்கின்றார்கள்.—எ-று. (௫௯)

மன்னுமம்முறைநோக்கியேசிவபரன்வகுத்த
நன்னலந்தரும்விதியெலாம்வரன்முறைநவிலத்
தன்னிகர்த்திடுமன்னவன்செம்பொனாற்சமைத்த
துன்னுசீர்நவகம்பமுன்னாட்டியேதுலங்க.

(இ-ள்.) இவ்வாறு அலங்காரஞ்செய்யுங் கிரமத்தைப்பார்த்து, பரமசிவன் கற்பித்தருளிய நன்மைபொருந்திய விதிகளை எல்லாம்,பிராமணர்கள் வரன்முறையாகச்சொல்லிய அதைக்கேட்டு,தன்னைத்தானொத்த அரசனாகிய இராமமூர்த்தி மாற்றுயர்ந்த பொன்னினாற்சமைத்த,சிறப்புப்பொருந்திய நவமயமாகிய தம்பம் விளங்கும்படி முன்னே நாட்டுவித்து.—எ-று. (௬௦)

வளமிகுந்ததோர்மண்டபத்தமலனைமருவித்
துளமிகுந்தபேரன்பினாலிராமனுமுலகுந்
தளவவெண்ணகைக்கொடிகளுமைந்தருந்ததைந்தே
யளவிலற்புதமெய்தினின்றிப்புவியமர்ந்தோர்.

(இ-ள்.) வளப்பமிகுந்த ரத்தினமண்டபத்திற் கபாலீசனை யெழுந்தருளப்பண்ணி, தங்களுள்ளத்தில் மிகுந்த பெரிய வன்பினாலே அந்த இராமமூர்த்தியும் அவருடன்வந்திருக்கும் பெரியோர்களும்,முல்லையரும்பினையொத்த வெண்மைநிறமுள்ள தந்தபந்திகளையுடைய பூங்கொடிபோன்ற மாதர்களு மைந்தர்களும் நெருங்கி, அளவில்லாத வற்புதத்தை யடைந்துநின்று இவர்களுமல்லாம லிவ்வுலகத்திலிருப்பவர்களும்.—எ-று. (௬௧)

மிக்கவானுளோர்பிலங்களில்வாழ்பவர்விரைந்தே
தக்கவிந்நகரடைந்தவர்வினைத்தொகைசாடு

நக்கன்மெய்விழாவிறைஞ்சவம்மின்னெனநலமே
தொக்கவாய்தன்முன்விடைக்கொடியேற்றினர்துலங்க.

(இ-ள்.) மேன்மைபொருந்திய விண்ணுலகத்திலுள்ள தேவர்களும் பாதாளலோகத்திலுள்ள நாகர்களும், பெருமைபொருந்திய இந்தத் திருமயிலையென்னும் க்ஷேத்திரத்தில் அடைந்தவர்களுடைய வினைக்கூட்டத்தை யொழித்தருளும்,கபாலீசருடைய பிரம்மஉற்சவத்தைத் தரிசித்து வணங்கும்படி வாருங்களென்று, ஒருவரை மற்றொருவ ரழைக்கும்படி வந்துசேர்ந்த கோபுரத்துவாரத்தின்முன் பொருந்திய துஜஸ்தம்பத்தில், எங்கும் பிரகாசிக்கும்படி ரிஷபக்கொடி ஏற்றினார்கள்.—எ-று. (கூஉ)

வேறு.

அப்பொழுதுவானுலகிலண்டரமரேச
ரொப்பருமருந்தவர்களோங்குபுகழ்வேதர்
செப்பரியநாரணர்கள்கின்னரர்கள்சித்த
ரெப்புவனமேயவர்களியாவருமங்குற்றார்.

(இ-ள்.) அப்பொழுது வானுலகத்திலுள்ள தேவர்களும் இந்திரன் முதலாகிய தேவராஜர்களும், ஒப்புச்சொல்லுதற்கரிய முனிவர்களும் புகழோங்கிய அனந்தம் பிரமர்களும் அனந்தம் விஷ்ணுக்களும் கின்னரர்களும் சித்தர்களும் எல்லா வுலகங்களிலும் பொருந்திய யாவர்களும் அங்குவந்து சேர்ந்தார்கள்.()

அந்நகரில்வந்தெவருமன்பினுறலாலே
பொன்னுலகுமன்னிமயபூதரமும்வேத
னன்னகருமாயனுறுநற்பதியும்வெள்ளிப்
பன்னகமுமிந்நகரெனப்பகரலாமால்.

(இ-ள்.) அந்தத் திருமயிலையென்னும் க்ஷேத்திரத்தில் மேற்கூறிய யாவர்களும் அன்புடன் வந்திருப்பதினாலே, தேவேந்திரனுடைய பட்டணமாகிய அமராவதியும் நிலைபெற்ற இமயமலைமுதலாகிய அஷ்டகுலபருவதங்களும், பிரமதேவனுலகமாகிய சத்தியலோகமும் விஷ்ணு வாசமாயிருக்கும் நல்ல நகரமாகிய வைகுந்தமும் வெள்ளிமலையாகிய கயிலாசகிரியும் இந்த நகரமேயென்று சொல்லலாம்.—எ-று. (கூச)

பண்ணவர்களந்நகர்பணிந்திடநெருங்கி
நண்ணியதினத்தவர்கணன்மகுடந்தாக்கி
மண்ணின்விழுமாமணியின்வர்க்கவகையாவு
மெண்ணின்மறுகெங்கணுமெழிற்குவைகளாய.

(இ-ள்.) தேவர்கள் யாவரும் அந்த க்ஷேத்திரத்தை வணங்கும்பொருட்டு நெருங்கிப் பொருந்தியநாளில், அவர்களுடைய நல்ல கிரீடங்கள் ஒன்றோடொன்று தாக்கப்பட்டுப் பூமியினிடத்து விழுகின்ற ரத்தினவகைகளெல்லாம், அளவில்லாத வீதிகளெங்கும் அழகுபொருந்திய குப்பல் குப்பல்களாயிருந்தன—எ-று. (சுரு)

மற்றவைகளந்நகரின்வாழ்பவர்கள்வாரித்
தெற்றெனவெறிந்தொளிகொள்செம்பொனலகிட்டே
யெற்றுபனிநீர்புழுகெழிற்களபநீவி
நற்கமுகுபூங்கதலிநாட்டினர்கணட்டார்.

(இ-ள்.) மேற்கூறிய ரத்தினக்குப்பைகளை அந்த நகரத்திலே வாழ்கின்றவர்கள் வாரிக்கொண்டுபோய், ஒருமணியுமில்லாமலெறிந்துவிட்டு, பிரகாசம்பொருந்திய செம்பொன்னாலாகிய திருவலகிட்டு, வீசுகின்ற பனிநீரும் புழுகும் கலந்த சந்தனக்குழம்புகளை, வீதிகளெங்குமெழுகி நல்ல கமுகமரங்களையும் வாழைமரங்களையும் தழைகள் தொங்கி யலையும்படி நாட்டிக்கட்டினார்கள்.

ஆடகமணித்தசும்பமைத்தசினகரமு
னீடியபதாகைகணிரைத்துமலர்மாலை
சூடியமணிக்கனகதோரணமுந்தூக்கி
மாடமலிவீதிகள்வளங்களிவைசெய்தார்.

(இ-ள்.) பொன்னாற்செய்து ரத்தினங்கள் பதித்துள்ள கலசங்கள் வைத்திருக்குங் கோயிலின்முன், நீட்சியாகிய கொடிகளை வரிசைவரிசையாகக்கட்டிப் பூமாலைகள் சூட்டப்பட்டு, ரத்தினங்களும் சொர்னங்களும் பொருந்திய தோரணங்களுந் தொங்கக்கட்டி, உப்பரிகைகள் நெருங்கிய வீதிகளெங்கும் இத்தகுதியாகிய அலங்காரஞ் செய்தார்கள்.—எ-று. (சுஎ)

அந்நகருளார்வளமிதாற்றுவகைநோக்கிப்
பின்னுதிரைவேலைகணைபெய்தவருள்வேந்தன்
பொன்னுலகில்வானவர்கள்பூதகணநாத
ரிந்நிலனுளாரெவருமின்பொடுதிரண்டே.

(இ-ள்.) அந்த க்ஷேத்திரத்தி லிருப்பவர்கள் இத்தகுதியான அலங்காரஞ் செய்த வகைநோக்கி, ஒன்றன்பின் ஒன்றாக மடங்கிவருகின்ற அலைகளையுடைய சமுத்திரத்தில் அணைகட்டினவராகிய சிவகாருண்ணியம்பொருந்திய ராமமூர்த்தியும், பொன்னுலகிலிருக்குந் தேவர்களும் பூதகணநாதரும் இந்த உலகத்திலிருக்கு மானிடர்களும் இன்பமுடனே கூட்டமாய்க்கூடி.—எ-று. (சுஅ)

மன்னுதிருமுன்னருமருங்கினிருபாலும்
பின்னருநிறைந்தலர்கள்பெய்துதொழவெந்தை
மின்னுமணியிந்திரவிமானமதிலேறிக்
கன்னியுடனற்பவனிகண்டருளச்செய்தார்.

(இ-ள்.) கபாலீசருடைய சந்நிதிக்குமுன்னும் இரண்டுபுறத்திலும் பின்புறத்திலும் நிறைந்து, மலர்களாலருச்சித்துத் தொழும்படி பிரகாசிக்கும் ரத்தினவிமானத்தின்மே லாரோகணித்துக்கொண்டு, கற்பகவல்லித்தாயாருடன் திருவோலக்கமாய் வருகிற உற்சவத்தை, மேற்கூறிய யாவருந் தரிசிக்கும்படிக்குக் கிருபைபாலித்தருளினர்.—எ-று. (௬௯)

இன்னமுறைவேலையினெழுந்தருளும்வேலை
சின்னமொடுபேரிகைசிறந்தபடகஞ்சேர்
துன்னுவளைதாளமொடுதுந்துபிகண்மற்று
மன்னுகடலேழுமுனம்வந்தெனவொலிப்ப.

(இ-ள்.) இந்த முறைமைப்படி நல்ல லக்கினகாலத்தில் உற்சவங்கொண்டருளும்போது, திருச்சின்னங்கள் பேரிகைகள் சிறப்புள்ள படகங்கள் பெருமைபொருந்திய தவளச்சங்குகள் தாளங்கள் துந்துபிகள் என்னும் இவைகளுமேயன்றி, மற்றுமுள்ள வாத்தியங்களும் ஏழுசமுத்திரங்களும் சுவாமிக்கெதிரில் வந்ததுபோலக் கோஷிக்கவும்.—எ-று. (௭௦)

எண்ணிலர்கள்சாமரையெடுத்தருகிரட்ட
வெண்ணிலர்கள்பொற்குடைகளெங்கணுநிழற்ற
வெண்ணிலர்மணிக்கொடிகளேந்திமுனஞ்செல்ல
வெண்ணிலர்கள்சூழல்கொடிரும்புகழ்கள்கூற.

(இ-ள்.) அளவில்லாத தொண்டர்கள் வெண்சாமரைகளை யேந்திக்கொண்டு சுவாமியினிருபக்கத்திலும் வீசவும், அளவில்லாத தொண்டர்கள் பொலிவுள்ள குடைகளை யேந்திக்கொண்டு சுவாமிக்கு நிழலுண்டாகும்படி செய்யவும், அளவில்லாத தொண்டர்கள் அழகுள்ள பெரிய கொடிகளை யேந்திக்கொண்டு முன்னே செல்லவும், அளவில்லாத தொண்டர்கள் கூட்டமாய்க் கூடிக்கொண்டு சுவாமியினுடையமகத்தாகிய புகழ்களை யெடுத்துச்சொல்லவும்.—எ-று. (௭௧)

பூமிசையினுங்ககனமீதுபுடையெங்கு
மேமமிகுபண்ணவர்களிப்புவியினோர்கள்

காமர்மலர்பெய்தரகராவெனவிசைக்கு
மாமொழியினேதையநாட்டிடைவயங்க.

(இ-ள்.) பூமியினிடத்தும் ஆகாயத்தினிடத்தும், மற்றத் திசைகளினிடத்தும், அன்புள்ள தேவர்களும் இவ்வுலகத்திலிருக்கு மானிடர்களு மற்றத்திசையினுள்ளவர்களுங் கூட்டமாய்க்கூடி யழகுள்ள மலர்களைப்பெய்து அரகராவென்று தோத்திரஞ்செய்யவும், வேதவாக்கியங்களால் தோத்திரஞ்செய்கின்றவரும், அந்த நாட்டினிடத்துப் பிரகாசிக்கவும்.—எ-று. (எஉ)

கண்டுருகிநெஞ்சொடிருகண்கள்களிகொள்ளத்
தொண்டர்களிறைஞ்சவிறைதூயமறுகெங்கு
மண்டரொடுலாவியருளியாவர்களுமெய்த
மண்டுமொளியம்பொன்மணிமந்திரமணைந்தான்.

(இ-ள்.) அடியார்களெல்லாந் தரிசித்து மனமுருகிச் சந்தோஷித்துக் கண்களிக்கவும், பூமியில் சாஷ்டாங்கமாக வீழ்ந்து பணியவும், கபாலீசரானவர் அலங்காரமுள்ள திருவீதிகளெங்கும் தேவர்களுடன் பவனிவந்து, தரிசித்தவர்களெல்லாம் தம்முடைய கிருபையைப் பெற்றுக்கொள்ளும்படி பிரசாதித்தருளி, மிகுந்த பிரகாசமுள்ள சொர்ணமயமாகிய ஆலயத்திற்குள் எழுந்தருளினார்.

இந்தமுறைநாள்கடொறுமெட்டளவுமெய்யின்
வந்தவினைநீக்கிநலம்வழங்கியிடுமெந்தை
சுந்தரியுடன்பவனிபோந்துமணிச்சோதி
மந்திரமடைந்துறவிராகவன்வகுத்தான்.

(இ-ள்.) இந்த முறைமைப்படி தினந்தோறும் எட்டுநாள்வரைக்குந் தரிசிப்பவர்களுடைய சரீரத்தைப்பற்றி வருகின்ற வினைகளை நீக்கிப், பேரின்பத்தைப் பாலித்தருள்கின்ற கபாலீசரானவர், கற்பகவல்லித்தாயாருடன் நான்கு வீதிகளிலும் பவனிவந்து ரத்தினசோதியையுடைய திருக்கோயிலுக்குள்ளெழுந்தருளும்படி இராமமூர்த்தியானவர் திருவிழா நடப்பித்தார்.—எ-று. (எச)

பின்னருயர்தென்றிசையின்மேருவெனப்பேச
வெந்நிலமுமுள்ளவளமீதெனவொர்பொற்றேர்
மன்னவன்வகுத்தெவருமவந்துதொழவெந்தை
யன்னையுடனூர்ந்திடவளித்துளங்களித்தான்.

(இ-ள்.) பின்பு தென்றிசையிலும் ஒருமகமேருமலை யிருக்கிறதென்று சொல்லவும், எந்த உலகங்களிலுமிருக்கிற வளப்பங்களிவைகளேயென்று சொல்ல

வும், பொன்மயமாகிய ஒரு திருத்தேர் இராமமூர்த்தி செய்வித்து யாவரும் வந்து தொழவும், கபாலீசர் கற்பகவல்லித்தாயாருடன் ஆரோகணித்துக்கொண்டு உற்சவங்கொண்டருளும்படி சமர்ப்பித்து உள்ளக்களிப்படைந்தார்.—எ-று. ()

உற்றிது வியற்றியபின் னோணமொருபானு
டுற்றவதின் மிக்கபுகழ்சொற்றிடுகபாலி
நற்றடமதிற்கொடுசென் றாடியிறைநல்கப்
பெற்றெவருமாடியருள்பெற்றிடவளித்தான்.

(இ-ள்.) இவ்வண்ணம் இரத உற்சவஞ்செய்தபின்பு பத்தாம்நாள் திருவோணநக்ஷத்திரம்பொருந்தியகாலத்தில், கபாலீசனை யெழுந்தருளப்பண்ணிக்கொண்டுபோய், கபாலிதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, சுவாமிதீர்த்தங்கொடுத்தருளப்பெற்று, அடியார்கள் யாவரும் அந்தத்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து திருவருளைப்பெற்றுக்கொள்ளும்படி அருள்புரிந்தார்.—எ-று. (எசு)

ஏவருமரன் திருவெழுச்சிநலமார்ந்தே
தாவில்விழியால்விடைதனித்தனிகொண்டேகிக்
காவலனன் மந்திரமணைந்துகழல்போற்றித்
தேவதருவின் மலரின்மாரிமுனஞ்சிந்தி.

(இ-ள்.) அங்குவந்த எல்லாரும் கபாலீசருடைய திருவிழாவின் புறப்பாட்டினால்வரு மின்பத்தையடைந்து, ஸ்வாமியினுடைய குற்றமில்லாத திருநோக்கத்தினால் தனித்தனி விடைபெற்றுக்கொண்டு செல்ல, இராமமூர்த்தியானவர் சுவாமியுடன் திருக்கோயிலுக்குட்சென்று திருவடிகளைப் போற்றிசெய்து கற்பகப்பூவின் மழையைப்பொழிந்து.—எ-று. (எஎ)

தூமறைகளாற்றுதிகள்சொற்றுமுனநிற்ப
மாமலரின்மாரிமுனம்வானவர்கள்பெய்ய
வேமமிகுபூதகணமெங்கணுநெருங்கக்
காமர்விடைமேன்மருவுகண்ணுதன்முனின்றான்.

(இ-ள்.) பரிசுத்தமான வேதங்களால் துதிகள் கூறித் திருமுன்னே நிற்க, கற்பகமலர்மழையைத் தேவர்கள் பொழியவும், மேன்மைமிக்க பூதகணங்கள் எவ்விடத்தும் நெருங்கவும், அழகிய இடபவாகனத்தின்மே லாரோகணித்திருக்கும் நெற்றிக்கண்ணராகிய சிவபெருமான் அரசனெதிரிற் காட்சிதந்தருளினார்.—எ-று. (எஅ)

மன்னனதுகண்டுளமகிழ்ந்தருளென்றேத்த
முன்னவனும்மேவணிசையென்னமுதல்வாநின்

பொன்னடிகளன்புமெனைப்போல்விழவுகண்டோ
ரொன்னலர்களைத்தெறுதலுந்தருதியென்றான்.

(இ-ள்.) இராமமூர்த்தி அவ்வாறு சிவபெருமான் காட்சிதந்ததைத் தரிசித்து மனங்களித்துத் திருவருள் பாலிக்கவேண்டுமென்று துதித்தலும், யாவர்க்கும் முதல்வராகிய சிவபெருமானும் உனக்கு வேண்டியதைச் சொல்லென்று திருவாய்மலர்ந்தருள, முதல்வரே! தேவரீரது பொன்போன்ற திருவடிகளில் இடைவிடாத மெய்யன்பும், அடியேனைப்போல இத்திருவிழாவைத் தரிசித்தோர், தமது பகைவர்களை வெல்லும் வல்லமையும் பாலித்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தனர்.—எ-று. (௭௯)

நாதனவையீந்தபினிராகவவிங்ககிரிற்
போதகமுரைத்தபொருவேன்முருகருக்கு
நீதிருவிழாமகரமாதமதினித்ய
வாதரவினோடுசெய்தயோத்திநகர்சேர்தி.

(இ-ள்.) சிவபெருமான் அவ்வரங்களைப் பாலித்தபின்பு, இராகவனே! இத்திருமயிலையில் நமக்குப் பிரணவப்பொருளுரைத்த போர்புரியும் வேலாயுதமேந்திய முருகனுக்கு, தைமாதத்தில் அழியாத மெய்யன்புடன் திருவிழா நடாத்தி, பிறகு நீ அயோத்திக்குப்போகக்கடவாய்.—எ-று. (௮௰)

என்றுபரமேச்சுரனுரைத்திடவிராம
னன்றெனவிசைந்துமைதனுதனைவணங்கிக்
குன்றுதொறுமாடல்புரியுங்குமரவேளுக்
கென்றியல்விழாவினுக்கியாவும்வருவித்தே.

(இ-ள்.) என்று பரமசிவம் திருவாய்மலர்ந்தருளலும், இராமரும் நல்லதென்று சம்மதித்துப் பார்வதிபாகனாகிய பரமசிவத்தைத்தொழுது, குன்றுகள்தோறும் ஆனந்தவிளையாடல் புரியும் குமாரக்கடவுளுக்கென்று பொருந்தும் திருவிழாவுக்கு, வேண்டிய உபகரணங்களனைத்தையும் வரவழைத்து.—எ-று. (௮௧)

வேறு.

சந்ததந்திருக்கபாலிமாநகர்தழைக்கவந்த
கந்தவேடனக்குத்தைமாதந்தனிற்களிப்பாம்பூசத்
தந்தநாட்டீர்த்தமீந்தேயணிவிழாப்பத்துநாளு
மிந்திரன்முதலோர்போற்றவிராகவனெழிலாற்செய்தான்.

(இ-ள்) எக்காலமும் திருமயிலைத்தலம் விளங்க எழுந்தருளிய முருகக்கடவுளாகிய சிங்காரவேலருக்கு, தைமாசத்தில் வரும் களிப்பைத்தருகின்ற பூசநட்சத்திரத்தில் தீர்த்தோற்சவம் நடாத்தி, அழகமைந்த திருவிழாக்களைப் பத்துநாளும் தேவேந்திரன் முதலிய தேவர்கள் துதிக்கும்படி இராமர் அழகுடன் செய்து முடித்தார்.—எ-று. (௮௨)

செய்தபின்றிருக்கபாலீச்சரத்தனையுமையைச்செவ்வே
ளையனைவணங்கிராமனணிவிடைகொண்டேவீறுந்
துய்யசுற்பதாதியானைதுரகந்தேர்சூழச்சென்று
மெய்தருமயோத்தியெய்திமேவிவாழ்ந்தருளேயுற்றான்.

(இ-ள்.) அவ்வாறு திருவிழா முடித்தபின்பு, கபாலீஸ்வரரையும் கற்பக வல்லியையும், சிங்காரவேலரையும் இராமர் தொழுது விடைபெற்றுக்கொண்டு, மிக்கிருக்கும் வீரத்தன்மையுள்ள நல்ல சேனைகள் யானைகள் குதிரைகள் தேர்கள் ஆகிய இவைகள் தம்மைச்சூழச்சென்று, உண்மைப்பயனைப் பாவிக்கும் அயோத்தியையடைந்து முன்போல வாழ்வடைந்து, திருவருள் பெற்றனர்.

வேறு.

மன்னுமுனிகாளவணிராகவன்வகுத்த
நன்னலமதென்னவொளிர்ஞாலமும்போற்றுந்
தென்மலையிருந்தமுனிசெப்பினன்மகிழ்ந்தே
துன்னுபுகழ்மாதவர்கள்சூழ்ந்தனர்துதித்தார்.

(இ-ள்.) நிலைபெற்ற முனிவர்களே! அவ்விடத்தில் இராமர் அமைத்த திருவிழா இதுவாமென்று, விளங்குகின்ற பூவுலகமுந் துதிக்கின்ற பொதியமலையில் வீற்றிருக்கும் அகத்தியமுனிவர் கூறினர். அதுகேட்ட மிகுபுகழுடைய முனிவர்கள் மனமகிழ்ந்தவர்களாய்ச் சூழ்ந்து துதித்தார்கள்.—எ-று. (அச)

பொன்னடிகண்மேலவர்பொழிந்தவிழிநீர்க
ணன்னிலமதுற்றநதியாகமுன்னடித்தே
மன்னவெவையாம்புரிகைமாறெனநின்றேத்தி
யந்நகரின்மேவவருளின்றெனவறைந்தார்.

(இ-ள்.) அகத்தியமுனிவரது பொன்போலுந் திருவடிகளின்மேல் அம்முனிவர்கள் பொழிந்த ஆனந்தக்கண்ணீரானது, நல்ல நிலத்திலோடும் ஆற்றுக்காலைப்போற் பெருகும்படி, அவர் திருமுன்னே ஆனந்தக்கூத்தாடி, எங்கள் தலைவரே! அடியேங்கள் தேவரீருக்குப் புரியத்தக்க கைம்மாறுகளெவையென்று துதித்து, அத்திருமயிலைக்கு அடியேங்கள் இன்றே செல்லும்படி திருவருள் பாலியும் என்று பிரார்த்தித்தனர்.—எ-று. (அரு)

வேறு.

அறைந்தவந்தணரானனநோக்கியாநந்த
நிறைந்தநித்தியமாங்குறுமுனியிவைநிகழ்த்தும்
வரந்தழைத்திடுமன்றலங்குன்றமாமயிலை
யுறைந்தநங்குருச்சுந்தரவேலனையிறைஞ்சி.

(இ-ள்.) அவ்வாறு விண்ணப்பித்த முனிவர்களது முகத்தைப் பார்த்தருளி, பேரானந்தம் பூரணமாகப்பெற்றுள்ள அழிவற்ற அகத்தியமுனிவர் கூறுகி

ன்முர். அவ்விடத்தில் வந்தவர்களுக்கு வேண்டிய வரங்களைப் பாலிக்கும் மன்றலங்குன்றமென்னுந் திருமயிலையில் வீற்றிருந்தருளும் நமது குல்குருவாகிய சிங்காரவேலனைத்தொழுது.—எ-று. (அசு)

அருடருங்கபாலீசனையன்புடனிறைஞ்சி
மருளகற்றிடுங்கற்பகவல்லியைவணங்கிக்
கருநிறத்திருமேனிகூத்தாடுகற்பகத்தைத்
தருமலர்க்கொடுதாழ்ந்துமுன்போற்றினர்தடமாம்.

(இ-ள். திருவருள் பாலிக்கின்ற கபாலீஸ்வரனை மெய்யன்புடன் தொழுது, அஞ்ஞானத்தைப் போக்குகின்ற கற்பகவல்லியம்மையைப்பணிந்து, கருநிறமமைந்த திருமேனியையுடைய கூத்தாடும் விநாயகனைக் கற்பகமலர்களா லருச்சித்து வணங்கி முன்னர்த் துதித்துச்சொல்லுகின்றனர். தடாகமாகிய.-எ-று.

வேறு.

வெவ்வினைக்குழுக்களியாவும்வேறுகூறுக்கிமாய்க்குஞ்
செவ்வியகபாலிதீர்த்தத்திருச்சத்திகங்கைதோய்ந்து
நவ்விநீர்நித்தியகன்மநன்குறமுடித்துக்கொண்டே
யவ்வியமில்லாதீசனுலயமதனிற்சென்று.

(இ-ள்.) கொடிய தீவினைக்கூட்டங்களனைத்தையும் வேறுவேருக்கி யொழிக்கின்ற, செப்பமாகிய கபாலிதீர்த்தத்திலுள்ள சத்திகங்கையில் நீராடி, அழகுள்ள அத்தீர்த்தத்தில் நித்தியகன்மங்களை நன்முக முடித்துக்கொண்டு, மனக்கோட்டமற்றுக் கபாலீஸ்வரர் திருக்கோயிலுட்சென்று.—எ-று. (அஅ)

சுந்தரக்கந்தவேளைச்சுயம்புலிங்கமதேயான
நந்திருக்கபாலியீசநாதனையகிலமீன்ற
வெந்தைகற்பகவல்லித்தாயினைநிர்த்தமாடுகின்ற
விந்தையாங்கற்பத்தையிவர்களைப்பூசித்தன்பாய்.

(இ-ள்.) சிங்காரவேலனையும் சுயம்புமூர்த்தமாகிய நமது தந்தையாராகிய கபாலீஸ்வரனையும், உலகமெல்லாமீன்றருளிய எமது மாதாவாகிய கற்பகவல்லியம்மையையும், கூத்தாடுகின்ற விநோதராகிய விநாயகனையும் மெய்யன்புடன் பூசித்து.—எ-று. (அகூ)

சந்தகிற்றூபதீபஞ்சமைத்தசட்சுவையாமன்ன
முந்துறுநிவேதனங்கள்முதலதாயுபசரித்துச்
சுந்தரச்சத்திமானைத்தொழுதுமுன்போற்றிசெய்து
சந்ததமத்தலத்தைத்தணந்திடாதிருமினென்றே.

(இ-ள்.) சந்தனக்கட்டையாலும் அகிற்கட்டையாலுமாகிய தூபத்தையும், தீபத்தையும், அறுசுவையுடன் சமைத்த அன்னமுதலாகிய நிவேதனங்களையும் மற்றுமுள்ளவைகளையுங் கொண்டுபசரித்து, அழகுள்ள பார்வதிபாகராகிய க

பாலீஸ்வரரைப்பணிந்து, திருமுன்னே நின்று துதித்து, எக்காலமும் அத்தல த்தைவிட்டு நீங்காமலிருக்கக்கடவீர்களென்று சொல்லி.—எ-று. (கூ௦)

வேறு.

கும்பமுனிசேறுமெனக்கூறவிடைகொண்டே
யம்புவிவிளங்கவருமந்தணர்களெல்லாம்
வம்புலவுசோலைமதுராபுரியையாதி
நம்பனுறையுந்தலமுநண்ணிமுன்வணங்கி.

(இ-ள்.) அகத்தியமுனிவர் போய்வாருங்களென்று கூறலும், அவரிடத் தில் விடைபெற்றுக்கொண்டு, மண்ணுலகம் விளக்கமடையும்படி யவதரித்த அம்முனிவர்களனைவரும், வாசனைவீசும் சோலைகள் சூழ்ந்த திருவாலவாய் மு தலாகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் சிவதலங்களையுமடைந்து முன்னே பணிந்து—எ-று. (கூக)

வேதகிரிநாதனையிறைஞ்சிவிடைகொண்டே
யேதமறுவான்மிநகரீசனை வணங்கிச்
சீதமலர்வாவிசெறிசீர்மயிலைமேவி
யாதுமிந்நகர்க்குநிகராவதிலையென்றே.

(இ-ள்.) கழுக்குன்றமென்னுந் திருப்பதியில் வீற்றிருந்தருளும் வேதகிரீ ஸ்வரரைப்பணிந்து விடைபெற்றுக்கொண்டு, குற்றமற்று விளங்கும் திருவான் மியூரில் வீற்றிருந்தருளும் வன்மீகநாதரைப்பணிந்து, குளிர்ந்த தாமரைமலர்க ணிறைந்த தடாகங்கள் நெருங்கிய சிறப்பமைந்த திருமயிலையையடைந்து, எந் நகரமும் இதற்கொத்ததாயில்லையென்று.—எ-று. (கூ௨)

பொன்னகரமோவிதிபொருந்துதலமோமால்
தன்னகரமோகயிலைதானிதெனலாமோ
வெந்நகருமிந்நகர்தனக்கிணையதாகப்
பன்னுதலடாதெனமுன்பான்மையிற்பணிந்தே.

(இ-ள்.) இந்திரனுலகமோ, பிரமதேவன் வாழும் சத்தியவுலகமோ, திரு மால் வீற்றிருந்தருளும் வைகுந்தமோ,திருக்கயிலைதானென்று சொல்லலாமோ, எந்த உலகமும் இந்த நகரத்திற்கொப்பாகச்சொல்லுதல் கூடாதென்று அத்தி ருக்கோயிலின் முன்னர், பத்தியுடன் தொழுது.—எ-று, (கூ௩)

வேறு.

வந்தமாதவரியாவருமன்னுசீர்க்கபாலி
யந்தணுறையாலயந்தன்னிலேயடைந்து
கந்தவேள்தனைமுறைமுறையாற்கனிந்தேத்தி
யெந்தையாங்கபாலீசனைத்தொழுதுநின்றிறைஞ்சி.

(இ-ள்.) அவ்வாறு வந்த முனிவர்களெல்லாம் நிலைபெற்ற சிறப்பமைந்த கபாலீஸ்வரர் வீற்றிருந்தருளும் திருக்கோயிலிலே சேர்ந்து, சிங்காரவேலனை முறைமுறையாக மனக்கனிவுடன் தொழுது, எமது தந்தையாகிய கபாலீஸ்வரரைச் சிரமேற் கரங்கூப்பி நின்று பின் சாஷ்டாங்கமாக வணங்கி.—எ-று.()

வேறு.

கற்பகவல்லித்தாயைக்கனிவுடன்பணிந்துபோற்றிக்
கற்பகமாங்கூத்தாடுங்கற்பகத்தினை வணங்கி
யற்புதமெய்திப்பொன்னாலயந்தனை வலஞ்செய்தேத்தி
நற்கதிதருங்கபாலிதீர்த்தத்தின்கரையினண்ணி.

(இ-ள்.) கற்பகவல்லியம்மையையும் மனமுருகி வணங்கித்துதித்து, கற்பகத்தைப்போன்று வேண்டியவர்க்கு வேண்டியவாறே வரம்பாலிக்கும், கூத்தாடும் விநாயகரைப்பணிந்து, விம்மிதமடைந்து அழகிய திருக்கோயிலைப்,பிரதக்ஷணஞ்செய்து துதித்து, முத்தியின்பத்தைப் பாலிக்கும் கபாலிதீர்த்தக்கரையையடைந்து.—எ-று. (௬௫)

வேறு.

சத்தநதியோவுயர்வுசாலுநதிதானோ
முத்திதருதீர்த்தமவையாவுமிவையாமால்
சத்தியுயர்கங்கையெனுநற்றடம்படிந்தே
யுற்றநியமாதிகளியாவுமுன்முடித்தே.

(இ-ள்.) சத்தநதிகள்தானோ? அவைகட்கு மேம்பட்ட விசேடநதியோ? என்று சிந்தித்து, முத்தியின்பத்தைத்தரும் தீர்த்தங்களெல்லா மிவைகளேயாம். என்றெண்ணி, சத்திகங்கையென்னும் அந்த நல்ல தீர்த்தத்தில் மூழ்கி, தத்தமக்குரிய நித்தியகருமங்களியாவையும் முன்பாக முடித்துக்கொண்டு.—எ-று(௬௬)

வேறு.

சுந்தரச்சத்திமானுஞ்சுவாமியைப்பூசித்தன்பா
யந்திருக்கபாலியீசனுதனை யருச்சித்தன்பா
யெந்தைகற்பகவல்லித்தாயிணையடிபூசித்தேத்தி
விந்தைமேவுறுஞ்சிங்காரவேலனைவாழ்த்தலுற்றார்.

(இ-ள்.) சுந்தரமமைந்த சந்திரசேகரரைப்பூசித்து, மெய்யன்புடன் அழகிய கபாலீஸ்வரரையு மருச்சித்து, அவ்வாறே மெய்யன்பினால் எமது தாயாகிய கற்பகவல்லியம்மையாரது இரண்டு திருவடிகளையும் அருச்சித்துத் துதித்து, விநோதமமைந்த சிங்காரவேலனைத் துதிக்கத்தொடங்கினார்கள்.—எ-று.(௬௭)

வேறு.

குகசரவணபவகுமராபோற்றிகுறுமுனிகுலகுருவானாய்போற்றி
செகமெவையுந்தருசிவமேபோற்றிசெயசெயவரகரதேவேபோற்றி
நகமருளுமைதருநந்தாபோற்றிநாரணவரிமருகோனேபோற்றி
திகழொளிதருகதிர்வேலாபோற்றிதிருமயிலைக்கிறைதேவாபோற்றி.

(இ-ள்.) குகனே சரவணபவனே குமரனே நமஸ்காரம். அகத்தியமுனிவருக்குக் குலகுருவானவனே நமஸ்காரம். உலகங்கள் யாவையும் படைத்த தெய்வமே நமஸ்காரம். ஜெயஜெய அரஹரதேவனே நமஸ்காரம். இமயவரையீன்ற உமாதேவிதந்த புத்திரனே நமஸ்காரம். நாராயணனென்னும் திருமால்மருகனே நமஸ்காரம். விளக்கமாகிய ஒளிமிக்க கதிர்வேலுடையவனே நமஸ்காரம். திருமயிலையென்னுந் தலத்திற்குத் தலைவனாகிய தேவனே நமஸ்காரம்.—எ-று. (கூது)

வேறு.

கங்காளற்குபதேசித்தகந்தகாங்கயனேபோற்றி
நங்காதலாம்பிராணநாயகாபோற்றிபோற்றி
சங்காரசூரசங்காராந்தகாபோற்றிபோற்றி
சிங்காரமாமயூரச்சிங்காரவேலாபோற்றி.

(இ-ள்.) கங்காளராகிய சிவபெருமானுக்குப் பிரணவமுபதேசித்த கந்தனே காங்கேயனே நமஸ்காரம். எங்களாசைக்கினிய பிராணநாயகனே நமஸ்காரம் நமஸ்காரம். சகலதேவர்களையும் வதைத்திருந்த சூரனைச் சங்கரித்த யமனையொத்தவனே நமஸ்காரம் நமஸ்காரம். அழகாகிய சிறந்த மயில்வாகனமுடைய சிங்காரவேலரே நமஸ்காரம்.—எ-று. (கூகூ)

சண்முகத்தரசேபோற்றிசடாக்ஷரவடிவேபோற்றி
யெண்குணப்பொருளேபோற்றியெம்மையாளுடையாய்போற்றி
பண்ணுறுதமிழ்ப்பல்லாண்டுபதித்தசற்குருவேபோற்றி
யெண்ணுறுமயிலைமூதூர்க்கிறைவனேபோற்றிபோற்றி.

(இ-ள்.) ஆறுதிருமுகங்களுள்ள தலைவரே நமஸ்காரம். சடாக்ஷரத்தின் வடிவமானவரே நமஸ்காரம். எண்குணங்களுள்ள அழியாப்பொருளே நமஸ்காரம். எங்களை யடிமையாகவுடையவரே நமஸ்காரம். பண்ணமைந்த தமிழ்ப்பாடையிற் பல்லாண்டுபாடிய சற்குருவே நமஸ்காரம். யாவரும் மதிக்கத்தக்க திருமயிலைக்குத்தலைவரே நமஸ்காரம் நமஸ்காரம்.—எ-று. (க00)

அத்தனுங்கபாலிநாதரளித்தருளரசேபோற்றி
சத்திகற்பகவல்லித்தாய்தனயனேபோற்றிபோற்றி
நித்தியாநந்தஞானநிகழ்திருவருளேபோற்றி
யுற்றமாமயிலைமூதூருடையனேபோற்றிபோற்றி.

(இ-ள்.) தலைவராகிய கபாலீஸ்வரர் பெற்றருளிய அரசனே நமஸ்காரம். சத்தியாகிய கற்பகவல்லியம்மையார் புத்திரனே நமஸ்காரம் நமஸ்காரம். அடியார்களுக்கு நித்தியானந்த ஞானத்தைப்பாலிக்கும் திருவருள்வடிவனே நமஸ்காரம். பெருமையமைந்த திருமயிலைத்தலத்தையுடையவனே நமஸ்காரம் நமஸ்காரம்.—எ-று. (க0க)

வேறு.

போற்றியோங்குமரவேளேபோற்றியோங்குகனேபோற்றி
போற்றியோஞ்சரவணேசபோற்றிமான்மருகபோற்றி

போற்றிமெய்ஞ்ஞானநாதபோற்றியோங்காரவேத
போற்றிமாமயிலைமூதூர்ப்புனிதனேபோற்றிபோற்றி.

(இ-ள்) ஓம் குமரக்கடவுளே நமஸ்காரம் நமஸ்காரம். ஓம் குகனே நமஸ்காரம். ஓம் சரவணேசனே நமஸ்காரம். திருமால்மருகனே நமஸ்காரம் நமஸ்காரம். மெய்ஞ்ஞானத்தலைவனே நமஸ்காரம். ஓங்காரத்தை முதலாகவுடைய வேதத்தலைவனே நமஸ்காரம். திருமயிலைத்தலத்தில் வீற்றிருந்தருளும் பரிசுத்தனே நமஸ்காரம் நமஸ்காரம்.—எ-று. (௧௦௨)

வேறு.

என்றுமாதவரியாவருமேத்தியேபோற்ற
மன்றலங்குன்றமாமயிலாபுரிக்குமரர்
நன்றிசேருயர்மாதவத்தீரிந்தநகரி
லென்றுநீவிர்களிருந்துவாழ்ந்திடுமெனவிசைத்தார்.

(இ-ள்.) என்று இவ்வாறாக முனிவர்களெல்லாம் துதித்து நமஸ்கரிக்க, மன்றலங்குன்றமென்னுந் திருமயிலையில் வீற்றிருந்தருளுஞ் சிங்காரவேலர், நன்மையமைந்த சிரேஷ்டராகிய முனிவர்களே! இத்திருமயிலையில் எக்காலமும் நீங்கள் வசித்து வாழ்ந்திருக்கக்கடவீர்களென்று கட்டளையிட்டனர்.—எ-று. ()

இசைத்தசுந்தரக்கந்தனைப்பணிந்துநின்றேத்தி
யிசைக்கருந்தவரியாவருந்தூய்மலர்கொண்டு
விசைப்புறும்விதைபாகமத்தின்விதிவ[illegible]வா
திசைத்தவண்ணநங்கபாலியைப்பூசிப்ப[illegible]சைந்தே.

(இ-ள்.) இவ்வாறு கட்டளையிட்ட சிங்காரவேலனை வணங்கித் திருமுன்னின்று துதித்து, யாவராலுஞ் சொல்லுதற்கரிய தவத்தையுடைய முனிவர்களனைவரும் பரிசுத்தமான மலர்களைக்கொண்டு, அதிதீவிரதரபக்குவத்திற்கு விதையாயுள்ள சிவாகமங்களில் விதித்த விதிகளிற் பிழையாது, அவைகளில் விதித்தவாறே நமது கபாலீஸ்வரனைப்பூசிக்க வொருப்பட்டு.—எ-று. (௧௦௪)

வேறு.

பின்னரருண்மாதவர்கள்பேறுதவுபெம்மான்
பொன்னடிகளுக்கினியபூசனைபுரிந்தே
முன்னரலர்தூய்மறைமொழிந்தனரெம்மண்ண
லன்னவர்முன்வெள்விடையினண்டர்தொழநின்றே.

(இ-ள்) அதன்பின்னர் காருண்யமுள்ள அம்முனிவர்கள், முத்தியின்பம் பாலிக்கும் கபாலீஸ்வரரது பொன்போன்ற திருவடிகளுக்கினிமையாகிய வழிபாடுகளைப்புரிந்து, அவர் திருமுன்னே நின்று மலர்களாலருச்சித்து வேதங்களாற்றுதித்தனர். எமது தலைவராகிய கபாலீஸ்வரர் அம்முனிவர்களுக்கெதிரில் வெள்ளை இடபத்தில் தேவர்கள் தொழும்படி எழுந்தருளி.—எ-று. (௧௦௫)

வன்பெறுமருந்தவர்கள்வம்மினிவண்மேவி
னன்பரமுத்தியினைநல்குதுமென்றுற்று

னன்புடனமர்ந்துநலமார்ந்துதவமன்ன
ரின்பவருநாட்டிடையிருந்தெவரும்வாழ்ந்தார்.

(இ-ள்.) வலிமைபெற்ற அருமையான தவத்தையுடைய முனிவர்களே! வாருங்கள். இத்தலத்தில் வசிப்பீர்களாகில் நல்ல உயர்வாகிய முத்தியின்பம் பாலிப்போமென்று திருவாய்மலர்ந்து கரந்தருளினர். அவ்வாறே அத்தலத்தில் வசித்து நன்மையெய்தி அம்முனிவர்கள் யாவரும், பேரின்பமயமாகும் முத்தியுலகத்தில் வாழ்ந்திருந்தனர்.—எ-று. (௧௦௬)

பொற்புமயிலைக்கிறைபுராணவருநூலைக்
கற்பவர்கள்செப்புமவர்காதலொடுகேட்போர்
நற்பொருள்விரிப்பவர்கணன்றுறவரைந்தோர்
சொற்கமிசைமேவியருடெய்த்தினிதுவாழ்வார்.

(இ-ள்.) அழகமைந்த திருமயிலைக்கிறைவராகிய கபாலீஸ்வரருடைய புராணமென்னும் இந்த அருமையாகிய நூலை, கற்பவர்களும், சொல்லிக் கொடுப்பவர்களும், அதை யாவலுடன் கேட்பவர்களும், இதிலுள்ள சிறந்த தாற்பரியங்களை விரித்துப் பிரசங்கிப்பவர்களும், நன்றாக எழுதினவர்களும், சொற்கலோகத்தையடைந்து திருவருள்பெற்று இனிமையாக வாழ்வார்கள் —எ-று (௧௦௭)

வாழ்கவருள்வாழ்கமறைவாழ்கவுலகெல்லாம்
வீழ்கமழைதிங்கடொறுமெய்ந்நெறிகளோங்க
வாழ்கவினைமன்னவனுமாற்றிடுகசெங்கோல்
சூழ்கநலமின்பெவருந்துய்த்திடுகவென்றும்.

(இ-ள்.) கபாலீசர் திருவருள் வாழக்கடவது. வேதங்கள் வாழக்கடவன. உலகங்களெல்லாம் வாழக்கடவன. மாதங்கடோறும் மும்மாரி பெய்யக்கடவன. உண்மைநெறிகளோங்கக்கடவன, தீவினைகளெல்லாம் அழியக்கடவன. அரசனும் செங்கோல் செலுத்தக்கடவன். உலகெங்கும் நன்மைகள் மிகக்கடவன. எக்காலத்திலும் உலகத்திலுள்ள யாவரும் இன்பத்தை யனுபவிக்கக்கடவர்கள்,—எ-று. (௧௦௮)

திருவிழாச்சருக்கம் முற்றிற்று.

ஆகச்சருக்கம் ௧௫ - க்கு திருவிருத்தம் - ௬௬௫.

---

# திருமயிலைப்புராணம்

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---